# வெற்றுப் படகு

## பாகம் இரண்டு

ஓஷோ

தமிழில் :

செல்வி சி.ஆர். செலின்

கண்ணதாசன் பதிப்பகம்

12, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.
தொலை பேசி : 433 26 82

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 214
முதற்பதிப்பு: செப்டம்பர் 1999

பதிப்பாசிரியர் : காந்தி கண்ணதாசன்

Price Rs: 81/-

- **Vetrup Padagu** Part II - Tamil
- Originally Published in English as **'The Empty Boat'** - (Chapters 5 to 11) under the author name 'Bhagwan Shree Rajneesh'

- Translated by : **Ms.C.R.Selin**
- First Edition : **September 1999**
- Co-ordination by : **Sw.Amano Manish**
- Publishing Editor : GANDHI KANNADHASAN
- Published by : KANNADHASAN PATHIPPAGAM
12, Kannadhasan Salai,
Thiyagaraya Nagar, Chennai-600 017.

Phone : 433 26 82
E-mail : kannadhasan@vsnl.com
Our Website : http//www.indian-publishers.com

Laser : **Prime Printers**, chennai-600 005. Ph.8589860

Printed by : **United Bind Graphics**, Chennai

# முகவுரை

வார்த்தைகளற்ற செய்தியை எப்படி வார்த்தைகள் மூலம் தெரியப்படுத்த முடியும்? ஞானமடைந்த ஆசானைப் பற்றி என்ன சொல்ல முடியும்? வார்த்தைகளுக்கப்பாற்பட்ட செய்தியின் சாரம் முன்னுக்குப் பின் முரணானதாக (Paradox) இருக்கிறது. ஓஷோவும், சுவாங்தஸூவும் நம் மனத்தையும், தர்க்கரீதியான வாதத்தையும் (Logic) ஒதுக்கிவைத்துவிட்டு இந்த முரண்பாடான தன்மையை ஏற்றுக் கொள்ளச் சொல்லுகிறார்கள். நினைவுகளற்று இருக்கச் சொல்லுகிறார்கள். நம்முடைய எண்ணங்கள், எதிர்ப்பார்ப்புகள், கட்டுப்பாடுகள், தன் முனைப்பு - இவற்றை மனதிலிருந்து துடைத்தெறிந்தால் தான் ஞானமடைதல் நமக்குச் சொந்தமாக முடியும்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சுவாங்தஸூவும், இன்று ஓஷோவும் நம்மை ஒன்றுமில்லாதவர்களாக ஆக்க, வார்த்தைகளற்ற செய்தியை ஏற்றுக் கொள்ளக்கூடிய வெறும் பாத்திரங்களாக ஆக்க இரகசிய திட்டங்கள் தீட்டுகின்றனர்.

இந்த விளக்கவுரையில், இப்பொழுது நாம் இருக்கின்ற நிலையில் இந்த வார்த்தைகளற்ற செய்தி நமக்குள் செல்ல நாம் இடம் அளிக்காமல் இருக்கிறோம் என்பதை, ஓஷோ அவர்கள் தெளிவாக எடுத்துக் கூறுகிறார். நமக்குள் வெற்றிடம் ஏற்படுவதற்காக அது காத்திருக்கிறது. திட்டங்கள், எண்ணங்களில் ஆழ்ந்திருந்தல் இவை கதவை மூடி விடுவதால் நாம் அதை இழந்து விடுகிறோம். ஆனால் மன வெறுமை அடைய எடுக்கும் எந்த முயற்சியும் முரண்பாடுடையதாகி விடுகிறது. முயற்சி, முன்னேறும் ஆசை தன் முனைப்பை உண்டு பண்ணி, நமக்கு தோல்வியையே தருகிறது. ஆக இதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

இதற்காக நாம் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என்று ஓஷோ சொல்லுகிறார். எல்லா செய்கைகளும் தன் முனைப்புத் தான். ஆனால் நாம் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளக்கூடிய நிலையில் இருக்க வேண்டும். நாம் திறந்த மனதுடன் எல்லாவற்றையும் அனுமதிக்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும். இந்த குற்றங் குறைகளைக் கண்டு பிடிக்கும் மனதை ஒதுக்கி வைத்து விட்டால், வார்த்தைகளற்ற செய்தி நம்முள் இறங்கி விடுகிறது. நாம் வெறறுப் படகு போன்று ஆகிவிடுகிறோம்.

வார்த்தைகளைப் பற்றி, அவற்றின் அர்த்தங்களைப் பற்றி ஆழ்ந்து யோசிப்பது குழப்பத்திற்கான வழியாக இருக்கிறது. ஓஷோ மறுப்பதையே அவருடைய தொழில் நுணுக்கமாகப் பயன்படுத்தி, அதன் மூலம் எல்லா வகையான மக்களிடமும் பேசுகிறார். அவர் தன்முனைப்பின் எல்லா நெளிவு, சுளிவுகளையும் அறிந்தவர். மனதின் விஷமத் தன்மையை அறிந்தவர். நம்மை விட அநேகப் படிகளைக் கடந்து முன்னிலையில் உள்ளவர் ஓஷோ. அவருடைய கொள்கைகளுக்கு நம்மை அடிமையாக்க முயற்சி செய்யவில்லை. அவர் நம்முடைய எதிரி அல்ல. அவர் நம் மீது கொண்டுள்ள அன்பின் காரணமாக நமக்கு, அடிமைத் தளைகளிலிருந்து விடுவித்துக் கொள்வதற்கான விழிப்புணர்வை ஏற்படுத்தவே, அவர் முழு முயற்சியும் எடுத்துக் கொள்ளுகிறார். அவர் நம்மை அதிரிச்சிக்குள்ளாக்குகிறார். நாம் நமக்கே அமைத்துக் கொண்ட வசதியான சிறையிலிருந்து விடுபட நம்மை அதிர வைக்கிறார். இதனால் நாம், விழிப்படைந்து விஷயங்களைப் புரிந்து கொண்டு அவற்றைக் கடந்து விடலாம்.

ஓஷோவைப் படிப்பதால் நாம் அதிகபட்சமாக செய்யக் கூடியது என்னவெனில், எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளும் தன்மையுடன் இருந்து, வார்த்தைகளால் சொல்லமுடியாத செய்தியை நம்முள் ஊடுருவிச் செல்ல அனுமதிப்பதுதான்.

"நான் உங்களுக்கு உதவமுடியுமென்று சொல்லுகின்றேன். ஏனெனில், நான் கை தேர்ந்தவன் என்று சொல்லவில்லை. நான் வெளிப்புற ஆளல்ல. நான் இதே பாதையைக் கடந்து வந்திருக்கிறேன். வேதனை, பரபரப்பு, பயங்கரக் கனவுகள் நிறைந்த இதே பாதையைக் கடந்து வந்திருக்கிறேன். நான் இங்கு சொல்வது செய்வது எல்லாம் உங்களை, உங்கள் பைத்தியக்காரத் தனத்திலிருந்து வெளியே வரத் தூண்டு வதற்காகத்தான்.

நீங்கள் எங்கிருக்கிறீர்களோ, அங்கே நான் இருந்திருக்கிறேன். நான் இப்பொழுது இருக்குமிடத்தில் நீங்களும் வர முடியும். என்னை எவ்வளவு ஆழமாகப் பார்க்க முடியுமோ அவ்வளவு ஆழமாகப் பாருங்கள். என்னை எவ்வளவு ஆழமாக உணர முடியுமோ அவ்வளவு ஆழமாக உணருங்கள். ஏனெனில், நான்தான் உங்களின் எதிர்காலம். நான்தான் உங்கள் சாத்தியக் கூறு."

– மா ப்ரேம் பரஸ்

# ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள் :
"வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்."



# படகுத்துறை

# வெற்றுப் படகு



## 1

## காலையில் மூன்று

காலையில் மூன்று என்பது என்ன ?

இது ஒரு குரங்குப் பயிற்சியாளனைப் பற்றியது.

அவன் தன் குரங்குகளிடம் சென்று சொன்னான் :

“இது உங்கள் செஸ்ட்நட்களைப் பற்றியது, உங்களுக்குக் காலையில் மூன்று வழங்கப்படும், மாலையில் நான்கு வழங்கப் படும்.” இதைக் கேட்ட குரங்குகள் மிகவும் கோபமடைந்தன.

அதனால் அந்தப் பயிற்சியாளன் சொன்னான் :

“அப்படியென்றால் சரி, நான் மாற்றிவிடுகிறேன் காலையில் நான்கு மாலையில் மூன்று என்று.”

இந்த ஏற்பாட்டில் அக்குரங்குகள் மகிழ்ச்சியடைந்தன.

இரண்டு ஏற்பாடுகளுமே ஒன்றுதான் –
செஸ்ட்நட்களின் எண்ணிக்கை மாறவில்லை.
ஆனால், ஒருமுறையில்
அந்தக் குரங்குகள் கவலையடைந்தன,
மற்றொரு ஏற்பாட்டில் திருப்தியடைந்தன.
அந்தப் பாதுகாவலன் தயாராயிருந்தான்,
அவன் ஏற்பாட்டை மாற்றிக் கொள்ள;
இரண்டாம் நிலையிலுள்ளவரின் நிபந்தனையை நிறைவேற்ற.
அதனால் அவன் எதையும் இழந்துவிடவில்லை.

உண்மையான அறிவாளி,
கேள்வியின் இரு பக்கங்களையும் பார்க்கிறான்.
எந்தப் பாகுபாடும் இல்லாமல்,
இரண்டையும்
தாவோயின் வெளிச்சத்தில் பார்க்கிறான்.
இதுதான் ஒரே நேரத்தில் இரண்டு மார்க்கங்களைப் பின்பற்றுதல்
எனப்படுகிறது.



# காலையில் மூன்று

'கா லையில் மூன்று' - சுவாங்தஸு மிகவும் விரும்பும் கதை இது. அடிக்கடி அவர் இந்தக் கதையைக் கூறுவார். இது மிகவும் அழகான, பலவகை அர்த்தங்களை உள்ளடக்கியுள்ள கதை. மிக எளிமையான கதை போல் தோன்றினாலும், மனித மனத்தைப் பற்றிய பல ஆழமான உண்மைகளை இக்கதை உள்ளடக்கியுள்ளது.

முதலில் புரிந்துகொள்ளப்பட வேண்டிய விஷயம் மனித மனம் குரங்குத்தன்மையுடையது என்பதைத்தான். மனிதன், குரங்கிலிருந்து வந்தவன் என டார்வின் கண்டுபிடித்தது அல்ல நான் குறிப்பிடுவது. நீண்டநாட்கள் கண்காணிக்கப்பட்டு, கண்டுபிடிக்கப்பட்ட உண்மை. மனித மனம் எப்படிச் செயல்படுகிறதோ, அதே விதத்தில்தான் குரங்கின் மனமும் இயங்குகிறது. ஆபூர்வமாக சில நேரங்களில் தான் நம் மனம் குரங்குத்தன்மையிலிருந்து

மேம்பட்டுக் காணப்படுகிறது. எப்பொழுது உங்கள் மனம் நிலையாக, அமைதியாக, அறிவு, மனம் ஏதுமில்லாமல் இருக்கிறதோ அப்பொழுது அங்கு குரங்குத்தன்மை இல்லை.

குரங்குத் தன்மை என்றால் என்ன ? ஒரு விஷயம், மனம் எப்பொழுதும் நிலையாக இருப்பதில்லை. நீங்கள் நிலையாக இல்லாவிட்டால், உங்களால் உண்மையைக் காணமுடியாது. நீங்கள் எப்போதும் மனதை அலைபாய விட்டால், யோசித்துக் கொண்டேயிருந்தால், உண்மையைக் காணவே முடியாது. ஒன்றைப் பற்றிய சரியான கோணம் சாத்திய மில்லாமல் போய்விடும். தியானத்தின் போது நீங்கள் என்ன செய்கிறீர்கள் ? குரங்கை நிலையான அமைப்பில் வைக்க முயல்கிறீர்கள். அதனால் தான் தியானம் செய்வது அவ்வளவு கடினம். மனதை ஒரு நிலைப் படுத்த எவ்வளவு முயற்சிக் கிறீர்களோ, அவ்வளவு எதிர்ப்பு உருவாகும். எவ்வளவு இடையூறுகளையும், குழப்பங்களையும் எதிர்கொள் கிறீர்களோ, அவ்வளவு சோர்வு உங்களுக்குத் தோன்றும்.

குரங்கு நிலையாக, அமைதியாக உட்கார்ந்திருப்பதை எங்கேயாவது, எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா ? சாத்தியமேயில்லை ! குரங்கு எப்போதும் எதையாவது தின்று கொண்டிருக்கும், எதையாவது செய்து கொண்டிருக்கும், கைகளைச் சுழற்றி ஆட்டிக் கொண்டிருக்கும், அல்லது ஏதாவது குரல் கொடுத்து கத்திக்கொண்டிருக்கும். இதையேதான் நீங்களும் செய்கிறீர்கள். மனிதன் பலவற்றைக் கண்டுபிடித்துவிட்டான். செய்வதற்கு வேலை ஏதும் இல்லையென்றால் புகைபிடிக்கத் தொடங்கி விடுவான். சுவிங்கம் மெல்லத் தொடங்கி விடுவான். இவையெல்லாம் நேரத்தை ஆக்கிரமிக்கும் முட்டாள்தனமான செயல்கள். குரங்குத்தனமான ஆக்கிரமிப்புகள். ஏதாவது தொடர்ந்து செய்வதன்மூலம் நம் நேரத்தை நிரப்ப வேண்டும்.

நீங்கள் மிகவும் ஒய்வற்ற நிலையில் இருக்கிறீர்கள். அந்த நிலையை மாற்றி சுறுசுறுப்பாக இருக்க ஏதாவது செய்ய நினைக்கிறீர்கள். அதனால்தான், புகைப்பிடித்தலுக்கு எதிராக ஏதேனும் சொல்லப்பட்டால் கூட, அதை நிறுத்த முடியவில்லை. தியான உலகில் மட்டுமே, புகைப் பிடித்தலை நிறுத்த முடியும். இல்லாவிட்டால் முடியாது.

சாவதற்கான, புற்றுநோய்க்கான, க்ஷயரோகத்திற்கான அபாயம் இருக்கிறது என்று தெரிந்தால் கூட புகைப்பிடிக்கும் பழக்கத்தை நிறுத்த முடிவதில்லை. ஏனெனில் புகைப்பிடிக்கும் பழக்கத்தைப் பற்றிய விஷயம் மட்டுமல்ல இது. ஒய்வில்லாத தன்மையை, எப்படிப் போக்குவது என்ற கேள்விக்கும் உரிய விஷயம்.

மந்திரங்களை ஓதும் மக்களால் புகைப் பிடித்தலை நிறுத்தி விட முடியும். ஏனெனில் அவர்கள் மாற்று வழியைக் கண்டுபிடித்து விட்டனர். தொடர்ந்து 'ராம், ராம், ராம்' என்று பாடிக் கொண்டேயிருங்கள். இதுவும் புகைப் பிடித்தல் போல் ஒருவகைப் பழக்கமாகிவிடும். உங்கள் உதடுகள் வேலை செய்கின்றன, உங்கள் வாய் அசைகிறது. எனவே உங்கள் ஒய்வற்ற தன்மை மறைந்துவிடும். எனவே, ஜெபம் கூட புகைப்பிடித்தல் போல் ஒரு பழக்கமாகிவிடும். உடல் நலத்திற்கு அதிகம் தீங்கு விளைவிக்காத பழக்கம்.

ஆனால் அடிப்படையில் இரண்டும் ஒன்றுதான். உங்கள் மனது ஓய்வாக இருக்காது. உங்கள் மனம் ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டும். நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது மட்டுமல்ல. தூங்கிக் கொண்டிருக்கும் போதும், சொல்லப்போனால் தூங்கும் போது மனம் இன்னும் அதிகம் சிந்திக்கிறது. அந்த மனிதன் ஆக்கிரமிக்கப்பட்டிருப்பான். இது ஆழ்ந்த தூக்கமாக

முடியாது. இது உண்மையான ஒய்வெடுத்தல் ஆகாது. ஏனெனில் வேலை நடந்து கொண்டே இருக்கிறது. அந்தநாள் இன்னும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது. முடிவடையவில்லை. மனதும் அதேவிதமாக செயல்பட்டுக் கொண்டேதான் இருக்கிறது. உள்ளுக்குள் நிலையாக அதே அர்த்தமில்லாத பேச்சு, அதே கணக்குத்தான். நீங்கள் சலிப்பாகக் காணப்படுவதில் ஆச்சரியமேயில்லை. உங்களுக்கு நீங்களே சலிப்பை உண்டாக்குகிறீர்கள். ஒவ்வொருவருமே சலிப்புடன் தான் காணப்படுகிறார்கள்.

முல்லா நஸ்ரூதின் தன் சீடர்களுக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தார். திடீரென்று மழை பெய்யத் தொடங்கியது - இதே போல் அந்த நாள் இருந்திருக்க வேண்டும். எனவே அந்த வழியாக சென்ற ஒரு வழிப்போக்கன் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முல்லாவும், அவர் சீடர்களும் பேசிக்கொண்டிருந்த இடத்தின் கூரைக்கடியில் வந்து நின்றான். மழை நிற்பதற்காகக் காத்திருந்தான். ஆனால், கவனித்தலை தவிர்க்க முடியவில்லை.

நஸ்ரூதின் கதைகளைச் சொல்லிக் கொண்டே யிருந்தார். பல சமயங்களில் இடையில் நுழைவதைத் தடுக்க சாத்திய மில்லாததாக அந்த மனிதன் கண்டறிந்தான். ஏனெனில் அவர் சில அசட்டுத்தனமான விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அந்த மனிதன் திரும்பத் திரும்ப ‘இது என் வேலை அல்ல. மழைக்கு ஒதுங்கவே நான் இங்கு வந்திருக்கிறேன். மழை நின்றவுடன் நான் சென்று விடுவேன். நான் இதில் தலையிடக் கூடாது’ என நினைத்துக் கொண்டான். ஆனாலும் சில சமயங்களில் அவனால் தவிர்க்க முடியவில்லை. அதிக நேரம் அவனால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. இடையில் புகுந்து ஏதாவது சொல்லத் தொடங்கினான்.

"போதும் என்றால் போதும். என்னைப் பொறுத்துக் கொள்ளுங்கள், இது என் வேலை அல்ல, ஆனால் இப்பொழுது நீங்கள் மிகைப்படுத்தி விட்டீர்கள்."

நான் அந்தக் கதையையும், எந்தக் கட்டத்தில் அந்த மனிதனால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும்.

நஸ்ரூதின் சொன்னார் : "என் இளமை காலத்தில் ஒரு நாள். ஆப்பிரிக்க காடுகளில் பயணம் செய்து கொண்டிருந்தேன். இருட்டான பகுதி அது. திடீரென ஒரு நாள், எனக்கு பதினைந்து அடிக்கு முன்னால் ஒரு சிங்கம் குதித்து வந்து நின்றது. என்னிடம் எந்த ஆயுதமோ, பாதுகாப்போ இல்லை. அந்தக் காட்டில் தன்னந்தனியாக இருந்தேன். அந்த சிங்கம் என்னை நோக்கி நடந்து வரத் தொடங்கியது."

அவர் சீடர்கள் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுக் காணப்பட்டார்கள். நஸ்ரூதின் ஒரு சில கணங்கள் கதையை நிறுத்திவிட்டு அனைவரது முகங்களையும் நோக்கினார். ஒரு சீடர் சொன்னார் : "எங்களைக் காத்திருக்க வைக்காதீர்கள், பிறகு என்ன நடந்தது ?"

நஸ்ரூதின் சொன்னார் : "சிங்கம் பக்கத்தில் வந்தது. இன்னும் அருகில் வந்து, நெருங்கி, நெருங்கி.... எனக்கு ஐந்து அடி இடைவெளியில் வந்து நின்றது."

இன்னொரு சீடர் சொன்னார் : "இனி மேல் காத்திருக்க முடியாது. என்ன நடந்தது என்று சொல்லுங்கள்."

நஸ்ரூதின் சொன்னார் : "இது மிகவும் எளிமையானது. அதுதான் நடந்திருக்கக் கூடும் என ஊகிக்கக் கூடியது. உங்களுக்குள் யோசித்துப் பாருங்கள். அந்த சிங்கம் என் மேல் பாய்ந்து, என்னைக் கொன்று சாப்பிட்டு விட்டது."

இந்த கட்டத்தில்தான் அந்த வழிப்போக்கனுக்கு இது அதிகப்படியாகத் தோன்றியது. அவன் சொன்னான், "சிங்கம் உங்களைக் கொன்று சாப்பிட்டதாகச் சொல்கிறீர்கள், ஆனால் உயிருடன் உட்கார்ந்துள்ளீர்களே ?"

நஸ்ருதின் அந்த மனிதனை நேருக்கு நேராகப் பார்த்து கூறினார் : "ஹாஹா, இதை நீங்கள் உயிருடன் இருப்பது என்றா கூறுகிறீர்கள் ?"

மக்களின் முகங்களைப் பாருங்கள், பிறகு முல்லா நஸ்ருதின் அவ்வாறு எதைக் குறிப்பிட்டார் எனப் புரிந்து கொள்வீர்கள். உயிருடனிருப்பது என்றா இதைக் குறிப்பிடுகிறீர்கள் ? சலிப்பாக, சாவை நோக்கி இழுத்துச் செல்வது போல ?

ஒருநாள், ஒரு மனிதன் முல்லாவிடம் கூறினான் : "நான் மிகவும் ஏழை. வாழவே சாத்தியமில்லாத நிலைபோல் இப்போது ஆகிவிட்டது. நாங்கள் தற்கொலை செய்து கொள்ளலாமா ? எனக்கு ஆறு குழந்தைகளும், மனைவியும், விதவையான சகோதரியும், வயதான அப்பா, அம்மாவும் இருக்கிறார்கள். வாழ்க்கை மிக, மிகக் கடினமானதாக இருக்கிறது. நீங்கள் ஏதாவது ஆலோசனை சொல்ல முடியுமா?"

நஸ்ருதின் சொன்னார் : "நீ இரண்டு காரியங்கள் செய்யலாம், அவை இரண்டுமே மிகவும் உதவியாக இருக்கும். முதலில் ரொட்டி சுடும் முறையைக் கற்று, ரொட்டி தயாரிக்கத் தொடங்கு. ஏனெனில் மக்கள் வாழவேண்டும். அவர்கள் கட்டாயம் சாப்பிட வேண்டும். எனவே உனக்கு நன்றாக தொழில் நடக்கும்."

அந்த மனிதன் கேட்டான் : "இன்னொன்று ?"

நஸ்ருதின் சொன்னார் : "இறந்தவர்களுக்குப் போர்த்தும் சவச்சீலையை உற்பத்தி செய். ஏனெனில் மக்கள்

உயிருடன் இருக்கிறார்கள். அவர்களுக்கு சாவும் வரும். எனவே இதுவும் நல்ல தொழில்தான். இரண்டு நல்ல தொழில்கள் இவை - நல்ல ரொட்டி செய்வது, இறந்தவர்களுக்கு சவச்சீலை செய்வது."

சில மாதங்களுக்குப் பிறகு அந்த மனிதன் திரும்பி வந்தான். அப்போது அவன் மேலும் நம்பிக்கையற்றவனாக, மிகவும் கவலையுடன் காணப்பட்டான். மேலும் அவன் சொன்னான் : "எந்த வேலையும் பயனளிப்பதாகத் தோன்ற வில்லை. அனைத்தையும் முதலீடு செய்து தொழில் துவங்கினேன், நீங்கள் சொன்னதைப் போலவே. ஆனால், எல்லாம் எனக்கு எதிராக இருப்பதைப் போலதான் தோன்றுகிறது."

நஸ்ருதின் கேட்டார் : "எப்படி அது நடந்தது ? மக்கள் உயிருடனிருக்கும் போது ரொட்டி சாப்பிட்டாக வேண்டும், அவர்கள் இறக்கும் போது அவர்களின் உறவினர்கள், சவச்சீலை வாங்கித்தான் ஆக வேண்டும்."

அந்த மனிதன் சொன்னான் : "ஆனால், உங்களுக்கு ஒன்று புரியவில்லை. இந்த கிராமத்தில் யாரும் உயிரோடு இருப்பதுமில்லை, யாரும் சாவதுமில்லை. எல்லாரும் சாகாமல், இழுத்துக் கொண்டுதானிருக்கிறார்கள்."

மக்கள் இழுத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். நீங்கள் அடுத்தவர் முகத்தைப் பார்க்க வேண்டும் என்று கூட அவசியமில்லை. கண்ணாடி முன்நின்று பாருங்கள். நீங்கள் கண்டுபிடித்து விடுவீர்கள், இழுத்துக்கொண்டிருப்பது என்பதன் பொருள் என்ன என்பதை - வாழாமலும் இருப்பது, சாகாமலும் இருப்பது. வாழ்வது அழகானது, சாவது கூட அழகானது. ஆனால் இழுத்துக் கொண்டிருப்பது அசிங்கமானது.

ஆனால் ஏன் மிகுந்த சுமையுடையவர்கள் போல் நீங்கள் காணப்படுகிறீர்கள் ? மனதின் தொடர்ந்த அர்த்தமில்லாத

பேச்சு, உங்கள் சக்தியை விரயமாக்குகிறது. மனதின் நிலையான, அர்த்தமில்லாத பேச்சு, உங்கள் வாழ்வின் நிலையான விரயமாகும். சக்தி விரயமாகிறது. நீங்கள் உயிருடன் இருப்பதை, புத்துணர்வோடு, இளமையாக இருப்பதை உணரக்கூட போதுமான சக்தி உங்களிடம் இருக்காது. நீங்கள் இளமையாக, புத்துணர்வோடும், உயிர்ப்போடும் இல்லையென்றால், உங்கள் சாவும் மிக சலிப்பான ஒரு விஷயமாகத்தான் இருக்கும்.

முழுமையாக வாழ்பவன், முழுமையாக சாகிறான். சாவு முழுமையானதாக இருக்கும் போது, அதற்கென்று ஒரு அழகு இருக்கும். முழுமையாக வாழ்பவன் எவனோ, அவன்தான் முழுமையாகச் சாகிறான். எங்கெல்லாம் முழுமை இருக்கிறதோ அங்கெல்லாம் அழகும் இருக்கிறது. சாவு அசிங்கமானது, அது சாவினால் அல்ல, நீங்கள் சரியாக வாழவில்லை என்பதால். நீங்கள் ஒருபோதும் வாழவேயில்லை என்றால், உங்களால் அழகான சாவை சம்பாதிக்க முடியாது. அது சம்பாதிக்கப் படவேண்டியது. அந்த விதத்தில் தான் ஒருவன் வாழ வேண்டும். அவ்வளவு நிறைவாக, அத்தனை முழுமையாக. அப்போது அவன் நிறைவாக சாக முடியும். உடைந்த துண்டுகளாக அல்ல. நீங்கள் துண்டுதுண்டாக வாழ்கிறீர்கள். எனவே உங்கள் சாவும் அவ்வாறே இருக்கிறது. ஒரு பகுதி இறக்கிறது, பிறகு மற்றொன்று, பிறகு மற்றொன்று, இவ்வாறு நீங்கள் சாவதற்குப் பல வருடங்களை எடுத்துக் கொள்கிறீர்கள். பிறகு முழுவதுமே அசிங்கமாகிவிடுகிறது. சாவு அழகானதாக இருக்கும், மக்கள் உயிருடன் இருந்தால். உள்ளிருக்கும் குரங்கு உங்களை வாழ விடாது. இந்தக் குரங்கு உங்களை அழகாக சாகவும் விடாது. இந்த நிலையான, அர்த்தமில்லாத பேச்சு நிறுத்தப்பட வேண்டும்.

அர்த்தமில்லாத பேச்சு என்றால் என்ன ? இந்த விஷயம் எதைக் குறிப்பிடுகிறது ? இது குறிப்பிடுவது : காலையில், நம் மனதிற்குள் தொடர்ந்து செல்லும் மூன்றைத்தான்.

மனதிற்குள் நீங்கள் என்ன செய்கிறீர்கள் ? தொடர்ந்து ஏற்பாடுகளைச் செய்து கொண்டேயிருக்கிறீர்கள் ! இதைச் செய்வது, இதைச் செய்யாமலிருப்பது, இந்த வீட்டைக் கட்டுவது, அந்த வீட்டை இடிப்பது, இந்தத் தொழிலிருந்து இன்னொன்றுக்கு மாறுவது. ஏனெனில் அதில்தான் நிறைய லாபம் கிடைக்கும் ; இந்த மனைவியை மாற்றுவது, இந்தக் கணவனை மாற்றுவது. என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஏற்பாடுகளை மாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்.

சுவாங்தஸூ அதை கடைசியாக, முடிவாகக் கூறுகிறார். மொத்தமாகப் பார்த்தீர்கள் என்றால், கூட்டுத் தொகை எப்போதும் ஒன்றுதான், ஏழு. மூன்று செஸ்ட் நட்கள் காலையில், நான்கு மாலையில் என்று கொடுத்தாலும். அல்லது மற்றொரு விதத்தில், நான்கு செஸ்ட்நட்கள் காலையிலும், மூன்று மாலையிலும் என்று கொடுத்தாலும், கூட்டுத் தொகை மொத்தம் ஏழுதான். இது ரகசியமான விதிகளில் ஒன்று - மொத்தம், எப்போதும் ஒன்றாகத் தர்ன் இருக்கும்.

இதை உங்களால் கிரகித்துக் கொள்ள முடியாமல் கூட இருக்கலாம். ஆனால் ஒரு பிச்சைக்காரன், பேரரசன் யார் இறந்தாலும் மொத்தத்தில் அது ஒன்று தான். பிச்சைக்காரன் தெருக்களில் வாழ்ந்தான். பேரரசன் அரண்மனைகளில் வாழ்ந்தான். ஆனால் மொத்தம் ஒன்றுதான். பணக்கார மனிதன், ஏழை மனிதன், வெற்றி பெற்ற மனிதன், தோல்வி யடைந்த மனிதன் எல்லாருக்கும் மொத்தம் ஒன்றுதான். நீங்கள் வாழ்வின் மொத்தத்தைப் பார்த்தீர்களானால், சுவாங்தஸூ காலையில் மூன்று என்று எதைக் குறிப்பிடுகிறார். என்பது உங்களுக்குத் தெரியவரும்.

என்ன நடக்கிறது ? வாழ்க்கை நடுநிலைமையானதல்ல, வாழ்க்கை பாரபட்சமானதல்ல. வாழ்க்கை உங்கள் விவாதங் களிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. நீங்கள் செய்யும் ஏற்பாடுகளை யெல்லாம் அது கண்டுகொள்வதில்லை.

வாழ்க்கை ஒரு பரிசு. நீங்கள் ஏற்பாடுகளை மாற்றினாலும், மொத்தம் மாறுவதில்லை.

பணக்காரன் உணவை அடைந்துவிட்டான். ஆனால் பசியை இழந்துவிட்டான். அவன் உண்மையாக, பசியின் தீவிரத்தை உணர்வதேயில்லை. விகிதபாகம் எப்போதும் ஒன்றுதான். அவன் அழகான படுக்கையை அடைந்து விட்டான். ஆனால், அந்தப் படுக்கையுடன் தூக்கமின்மையும் வந்து விடுகிறது. தூக்கத்திற்காக இன்னும் நல்ல ஏற்பாடு களைச் செய்கிறான். அவன் சுஷூப்திக்குள் சென்றுதான் தூங்க வேண்டும். இதைத்தான் இந்துக்கள் நினைவற்ற சமாதி என்கின்றனர். ஆனால் அது நிகழ்வதில்லை. அவனால் தூங்க முடியவில்லை. அவன் ஏற்பாடுகளை மட்டுமே மாற்றுகிறான்.

பிச்சைக்காரன் தெருவோரத்திலேயே தூங்கி விடுகிறான். வாகன நெரிசலிலும், சத்தத்திலும் கூட அவன் தூங்குகிறான். அவனுக்கு படுக்கை இல்லை. அவன் படுத்திருக்கும் இடம் கூட சமமில்லாத, கரடுமுரடான பகுதிதான். வசதியேயில்லாத இடம். ஆனால், அவன் தூங்குகிறான். பிச்சைக்காரனுக்கு உணவு கூட கிடைக்கப் பெறுவதில்லை. அது சாத்தியமில்லாததாக இருக்கிறது. ஏனெனில் அவன் பிச்சையெடுக்க வேண்டும். ஆனால் அவனுக்கு நல்ல பசி இருக்கும். மொத்தம் ஒன்றுதான். மொத்தக் கூட்டுத் தொகை ஏழுதான்.

வெற்றிபெற்ற மனிதன் வெற்றிபெற்றவன் மட்டும் அல்ல. அந்த வெற்றியுடன் எல்லாவித ஆபத்துக்களும் வருகின்றன. தோல்வி என்பது வெறும் தோல்வி மட்டுமல்ல. அந்தத் தோல்வியுடன் பல ஆசிர்வாதங்களும் கிடைக்கின்றன. மொத்தம் எப்போதும் ஒன்றுதான். அந்த மொத்தம் ஊடுருவிப் பார்க்கப்பட வேண்டும். தெளிவான பார்வை அவசியம். கண் அந்த மொத்தத்தைப் பார்க்கத்தான் அவசியம். ஏனெனில் மனத்தால் துண்டு துண்டாகப் பார்க்க மட்டுமே

முடிகிறது. மனது காலையைப் பார்த்தால், அதனால் மாலை வேளையைப் பார்க்க முடியாது. அது மாலையைப் பார்த்துக் கொண்டிருந்தால், காலை மறக்கப்பட்டு விடுகிறது. மனத்தால் ஒரு முழு நாளைப் பார்க்க முடியவதில்லை. மனம் துண்டுதுண்டானது.

தியான நினைவால் மட்டுமே முழுமையாகப் பார்க்க முடியும். பிறப்பிலிருந்து, இறப்பு வரை. பிறகு மொத்தம் எப்போதும் ஏழுதான். அதனால்தான் அறிவாளி மனிதர்கள், எப்பொழுதுமே ஏற்பாடுகளை மாற்ற முயல்வதில்லை. அதனால் தான் தென்பகுதியில் எந்தப் புரட்சியும் எப்போதும் ஏற்பட்டதில்லை. ஏனெனில் புரட்சி என்பதன் பொருள், ஏற்பாடுகளை மாற்றுவது.

சோவியத் ரஷ்யாவிற்கு என்ன நடந்து என்று பாருங்கள். 1917 -ல் பெரிய புரட்சி பூமியில் ஏற்பட்டது. ஏற்பாடு மாற்றப்பட்டது. லெனினோ, ஸ்டாலினோ, ட்ராட்ஸ்கியோ 'காலையில் மூன்று' கதையைக் கேட்டிருப் பார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. அவர்கள் சுவாங்தஸூவிடமிருந்து நிறையக் கற்றுக் கொண்டிருக்க வேண்டும். அப்பொழுது அங்கு எந்தப் புரட்சியும் ஏற்படாமல் போயிருக்கும். என்ன நடந்தது ? முதலாளிகள் மறைந்தார்கள், இப்பொழுது யாரும் பணக்காரர்களில்லை, யாரும் ஏழைகளில்லை. பழைய பிரிவுகள் ஒன்றுமேயில்லை. ஆனால், பெயர்கள் மட்டுமே மாற்றப்பட்டுள்ளன. புதிய வகுப்புகள் தோன்றியுள்ளன. முன்பு ஏழை, பணக்காரன், முதலாளி, தொழிலாளி என்ற பிரிவுகள் இருந்தன. இப்பொழுது நிர்வாகி, நிர்வாகிப்படுபவர்; ஆனால், வித்தியாசம், இடைவெளி எல்லாம் ஒன்றுதான். எதுவுமே மாறவில்லை. அதே இடைவெளி, அதே தூரம் இருபிரிவு களுக்கிடையே, பிரிவுகளே இல்லாத சமூகம் இன்னமும் ஏற்படவில்லை.

சுவாங்தஸூ சிரித்திருப்பார். இந்தக் கதையைச் சொல்லியிருப்பார். என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ? நிர்வாகி பலம் வாய்ந்தவராக, மீதமிருக்கும். நிர்வகிக்கப் படுவர்கள் பல மற்றவர்களாகவும் இருக்கிறார்கள்.

இந்துக்கள் சொல்வார்கள், எப்போதும் சிலபேர் ஆள்பவர்களாகவும், சிலர் ஆளப்படுபவர்களாகவுமே இருப்பார்கள் என்று. அவர்கள் சூத்திரர்களும், சத்ரியர்களும். இவை வெறும் அடையாளம் மட்டுமல்ல, மக்களின் வகைகள். இந்துக்கள் சமூகத்தை நான்கு வகையாகப் பிரித்து, சமூகத்தில் பிரிவுகளே இல்லாமல் இருக்காது என்கிறார்கள். இது சமூக அமைப்பு முறை பற்றி மட்டும் அல்ல, நான்கு வகையான மக்கள் வாழ்கிறார்கள். இந்த வகையை நீங்கள் மாற்றா விட்டால், எந்தப் புரட்சியும் பயன்தராது.

அவர்கள் சொல்கிறார்கள், தொழிலாளர் வகை, சூத்திரர்கள், எப்பொழுதுமே நிர்வகிக்கப்படுவார்கள். யாருமே இவர்களை நிர்வகிக்கவில்லையெனில், இவர்களுக்கு இழப்புதான், இவர்கள் மகிழ்ச்சியாக இருக்க மாட்டார்கள். இவர்களுக்குக் கட்டளையிட யாராவது தேவை. இவர்களைக் கீழ்ப்படியவைக்கும் ஒருவர் இவர்களுக்குத் தேவை. இவர் களின் அனைத்துப் பொறுப்புக்களையும் ஏற்றுக்கொள்ளும் ஒருவர், இவர்களுக்குத் தேவை. இவர்களின் பொறுப்புகளை, தாங்களே சுமந்து கொள்ள இவர்கள் தயாராயிருப்பதில்லை. இது ஒரு வகை. நிர்வகிப்பவர்கள் சுற்றிலும் இருந்தால்தான், இவ்வகை மனிதர்களால் வேலை செய்யவே முடியும். நிர்வாகி அருகில் இல்லையென்றால், சும்மா உட்கார்ந்து விடுவார்கள்.

நிர்வாகி நுண்ணிய சாதனமாக, கண்ணிற்குத் தெரியாமல் கூட இருக்கலாம். எடுத்துக்காட்டாக, நிர்வாக சமூகத்தில் 'பணம் சம்பாதிப்பது' என்பது கூட நிர்வாகியாக இருக்கலாம். சூத்திரர்கள் வேலை செய்வதை விரும்புவதால், பொழுதுபோக்காக, கற்பனையை வெளிக்கொணர வேலை

செய்வதில்லை. அவனையும், அவன் குடும்பத்தையும் காப்பாற்றத் தேவையான உணவுக்காக மட்டுமே உழைக்கிறான். அவன் உழைக்காவிட்டால் யார் அவனுக்கு உணவிடுவார்கள் ? இது லாபத்தைக் காரணமாகக் கொண்டது. பசியை, உடம்பை, வயிறை, அது நிர்வகிக்கிறது.

கம்யூனிஸ்ட் நாடுகளில் இத்தகைய காரணம், நிர்வாகியாக இருப்பதில்லை. அங்கே ஒரு பார்வையாளன நிர்வகிக்க வேண்டும். இதைக்குறிப்பிடத்தான், ஸ்டாலினின் ரஷ்யாவில் ஒவ்வொரு குடிமனுக்கும், ஒரு போலீஸ் வேண்டும் என்பார்கள். இல்லாவிட்டால், அவர்களை நிர்வகிப்பது மிகவும் கடினம். ஏனெனில், பணத்தின் பொருட்டு வேலை செய்வது அவர்களால் முடியாது. யாராவது வற்புறுத்த வேண்டும். கட்டளை இட வேண்டும். யாராவது தொடர்ந்து குற்றம் கண்டு பிடித்துத் தொந்தரவு கொடுத்துக் கொண்டேயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் சூத்திரர்கள் வேலை செய்வார்கள்.

அங்கே எப்போதும் தொழிலதிபர்கள் போல்தான் பணத்தை மகிழ்ச்சியாக செலவழிப்பார்கள். செல்வத்தை, திரட்டியுள்ளவற்றைக் கொண்டாடுவார்கள். எவ்வாறு செய்வான் - எப்படி செய்வான் என்பது பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தப் போவதில்லை. பணம் கிடைக்கிறது என்றால், பணத்தைத் திரட்டுவான். பணம் இல்லாதபோது அவன் தபால் முத்திரைகளைத் திரட்டுவான். அதுவும் இல்லாதபோது ஆட்களை. ஆனால் அவன் திரட்டுவான், சேகரிப்பான். எண்களுடன் அவன் ஏதாவது செய்தாக வேண்டும். அவன், பத்தாயிரம், இருபதாயிரம் ஆதரவாளர்களை, ஒரு மில்லியன் ஆதரவாளர்களைத் திரட்டுவான். அது ஒரு மில்லியன் ரூபாயைச் சேர்த்தான் என்று நாம் சொல்வதற்குச் சமமானது!

உங்கள் சாதுக்களிடம் செல்லுங்கள் : அதிக எண்ணிக்கையிலான ஆதரவாளர்கள், மிக அதிமானவர்கள்

அவர்கள். அதனால் ஆதரவாளர்கள் என்பது ஒன்றுமில்லை. வங்கிவைப்புக் கணக்கு போல் தான். உங்களை யாரும் பின்பற்றவில்லை என்றால், நீங்கள் ஒன்றுமில்லை. பிறகு நீங்கள் ஒரு ஏழை குரு. உங்களை, அதிக மக்கள் பின்பற்றினார்கள் எனில், நீங்கள் பணக்கார குரு. என்னதான் நடந்தாலும் தொழிலதிபன் சேகரிப்பான். அவன் எண்ணுவான். மூலப்பொருள், அற்பமாகிவிடும்.

அங்கே ஒரு வீரன் இருக்கிறான். அவன் சண்டை யிடுவான். எந்த சமாதானமும் செய்யப்படும். அவன் சண்டை யிடுவான், சண்டை அவன் இரத்தத்திலிருக்கிறது, எலும்புகளி லிருக்கிறது. இவ்வகை மனிதர்களால் தான் உலகில் அமைதி யாகவே வாழ முடியவில்லை. அது சாத்தியமில்லாததாகி விடுகிறது. ஒவ்வொரு பத்து வருடங்களுக்கு ஒருமுறையும், ஒரு பெரிய சண்டைக்கான எல்லை வருகிறது. நீங்கள் பெரிய சண்டைகளைத் தவிர்க்க விரும்பினீர்கள் என்றால், பிறகு நாம் நிறைய சின்ன சண்டைகளைச் சந்திப்போம். ஆனால், மொத்தம் ஒன்றுதான். அணு, மற்றும் ஹைட்ரஜன் குண்டுகளின் காரணமாக, இப்பொழுது மிகப் பெரிய யுத்தம் என்பது கிட்டத்தட்ட சாத்தியமில்லாததாகி விட்டது. அதனால் உலகம் முழுவதும் நிறைய சின்னச் சின்ன சண்டைகள். வியட்நாமில், காஷ்மீரில் பங்களாதேசத்தில், இஸ்ரேலில், நிறையச் சின்ன சண்டைகள், ஆனால் மொத்தம் ஒன்றாகத்தான் இருக்கும். ஐந்தாயிரம் வருடங்களில் மனிதன் பதினைந்தாயிரம் சண்டைகளைப் பார்த்துவிட்டான். ஒரு வருடத்திற்கு மூன்று சண்டைகள்.

ஒருவகையினர், வாழும் போது கட்டாயம் சண்டைபோட வேண்டும். இந்தப் பிரிவை நீங்கள் மாற்றலாம். ஆனால் இந்த மாற்றம் மேலெழுந்தவாரியாகத்தான் இருக்கும். இந்த வீரன் போரில் சண்டையிட அனுமதிக்கப்பட வில்லையென்றால், அவன் மற்ற வழிகளில் சண்டையிடுவான். தேர்தலில் சண்டையிடலாம். அல்லது விளையாட்டு வீரனாக

மாறலாம். கிரிக்கெட்டில் அல்லது கால்பந்தில் அவன் சண்டையிடலாம். ஆனால், அவன் சண்டையிடுவான். அவன் போட்டியிடுவான். அவனுக்கு சவால் விட யாராவது தேவை. ஒரு வகையில் இல்லாவிட்டாலும், இன்னொரு விதத்தில் அவன் திருப்தியடைய, அவன் சண்டையிட்டாக வேண்டும். அதனால்தான் சமூகம் முன்னேற்றமடைந்து, மாறும் போது புதிய, புதிய விளையாட்டுக்களம் கண்டுபிடிக்கப்பட்டன. 'வீரன்' வகையைச் சேர்ந்தவனுக்கு, விளையாட்டும் அளிக்கப் படவில்லையெனில், அவன் என்னதான் செய்வான் ?

கிரிக்கெட், கால்பந்து அல்லது ஹாக்கி போட்டி நடக்கும் போது சென்று பாருங்கள். மக்கள் பைத்திமாக இருப்பார்கள், ஏதோ மிக முக்கியமானது நடந்து கொண்டிருப்பதைப் போல. ஏதோ நிஜமான சண்டை நடந்து கொண்டிருப்பதைப்போல. வீரர்கள் மிகவும் கவனமாக, தீவிரமாக இருப்பார்கள். ரசிகர்கள் அவர்களைச் சுற்றிப் பைத்தியங்களைப் போல் செல்வார்கள். சண்டை தொடங்கி, கட்டுக்கடங்காமல் நடக்கும். விளையாட்டரங்கம் எப்போதும் ஆபத்தானது, ஏனெனில் அங்கு கூடுபவர்கள் போர் குணமுடையவர்கள். எந்தக் கணத்திலும், எந்த அசம்பா விதமும் நிகழலாம்.

பிராமண வகை என்று ஒன்றுண்டு. இவர்கள் வேதங் களில் உள்ள வார்த்தைகளில் வாழ்பவர்கள். மேற்கத்திய நாடுகளில், இத்தகைய பிராமண வகை என்று ஒன்று இல்லவேயில்லை. இந்தப் பெயர் முக்கியமல்ல. ஆனால், இந்தப் பிராமணம் எங்கேயும் இருக்கிறது. உங்கள் விஞ்ஞானி களிடத்தில், பேராசிரியர்களிடத்தில், பல்கலைக் கழகங்கள் இவர்களாலேயே நிறைந்துள்ளன. அவர்கள் தொடர்ந்து வார்த்தைகளில், குறியீடுகளில், கோட்பாடுகளை உருவாக்குவதில், ஆதரிப்பதில், விவாதிப்பதில் இவற்றிலேயே வேலை செய்வார்கள். இதையேதான் இவர்கள் சில நேரங்களில் அறிவியல் என்ற பெயரில், சில நேரங்களில் மதம்

என்ற பெயரில், சில நேரங்களில் இலக்கியம் என்ற பெயரில் செய்து கொண்டிருக்கிறார்கள். பெயர்கள் மாறுகின்றன. ஆனால் பிரமாணம் நடந்து கொண்டேதான் இருக்கிறது.

இந்த நான்கு வகைகள் காணப்படுகின்றன. நீங்கள் பிரிவுகளே இல்லாத சமுதாயத்தை உருவாக்க முடியாது. இந்த நான்கு பேரும் கட்டாயம் இருப்பார்கள். மொத்த ஏற்பாடு ஒன்றாகத்தானிருக்கும். துண்டுகள் மாறலாம். காலையில் நீங்கள் ஒன்று செய்யலாம். மாலையில் வித்தியாசமாக வேறொன்று. ஆனால் மொத்தமாக, அந்த நாள் ஒன்றுதான். ஒரே மாதிரிதான் இருக்கும்.

நான் ஒரு இளம் விஞ்ஞானியைப் பற்றிக் கேள்விப் பட்டேன். அவன் அப்பா விஞ்ஞான ஆராய்ச்சியை எதிர்ப்பவர். அவன் அப்பா எப்பொழுதுமே அது பயனற்றது என்றுதான் நினைப்பார். அவர், தன் மகனிடம் சொன்னார் : "உன் நேரத்தை வீணாக்காதே. ஒரு மருத்துவராக வருவதே நல்லது. அது பயிற்சியை அடிப்படையாகக் கொண்டது. மக்களுக்கும் உதவக் கூடியது. வெறும் கோட்பாடுகள், இயற்பியலின் சுருக்கக் கோட் பாடுகள், இவற்றால் எந்தப் பயனுமில்லை." கடைசியில் ஒருவழியாக அவர் மகனை சம்மதிக்கச் செய்து அவனை ஒரு மருத்துவராக்கி விட்டார்.

முதலில் அவனிடம் வந்தவருக்குத் தீவிரமான நிமோனியா காய்ச்சல். மருத்துவர் பல புத்தகங்களை ஒப்பிட்டு ஆலோசித்தார். ஏனெனில் அவர் கோட்பாட்டுச் சிந்தனைவாதி. பிராமணர். அவர் முயற்சித்து, முயற்சித்து மிகவும் சோர்வடையும் நிலைக்கு வந்துவிட்டார். அந்த நோயாளியோ, பொறுமை இழந்துவிட்டார். அவர் கேட்டார்: "இன்னும் எவ்வளவு நேரம் நான் காத்திருக்க வேண்டும் ?"

அந்த விஞ்ஞானியான மருத்துவர் கூறினார் : "எதுவும் நம்பிக்கை இல்லை என்றுதான் தோன்றுகிறது. நீங்கள்

இறந்துதான் ஆக வேண்டும். இந்த நோய்க்கு எந்த சிகிச்சையும் இல்லை. குணப்படுத்தும் நிலையையெல்லாம் தாண்டியாகிவிட்டது." அந்த நோயாளி துணிதைப்பவர். மருத்துவர் கூறியதைக் கேட்டுவிட்டு, வீட்டிற்குச் சென்று விட்டார்.

இரண்டு வாரங்கள் கழித்து அந்த மருத்துவர் நடந்து செல்லும் போது அந்த நோயாளி துணி தைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். மிகவும் ஆரோக்கியமாக, சக்தியுடன். அவர் கேட்டார் : "என்ன நீங்கள் இன்னும் உயிருடன் இருக்கிறீர்கள் ? நீங்கள் அப்பொழுதே இறந்திருக்க வேண்டுமே, நான் பல புத்தகங்களை ஒப்பிட்டேன். இது சாத்தியமில்லையே. உயிருடன் இருந்து எப்படி சமாளிக்கிறீர்கள் ?"

அந்த துணிதைப்பவர் சொன்னார் : "நீங்கள் சொன்னீர்கள் ஒரு வாரத்திற்குள் நான் இறந்து விடுவேன் என்று. அதனால் நான் நினைத்தேன், பிறகு ஏன் இப்பொழுது வாழக்கூடாது ? இன்னும் ஒரு வாரம் மட்டுமே இருக்கிறது... எனக்கு உருளைக்கிழங்கு தோசை மிகவும் பிடிக்கும். அது என்னுடைய பலவீனம் என்றே சொல்லலாம். எனவே உங்கள் மருத்துவமனையை விட்டு வெளியே வந்தவுடன், ஒரு உணவகத்திற்குள் நுழைந்து, முப்பத்தி இரண்டு உருளைக்கிழங்கு தோசைகளைச் சாப்பிட்டேன். உடனே, என் உடலில் ஏதோ சக்தி பாய்ந்ததைப் போல் உணர்ந்தேன். இப்பொழுது நான் நன்றாக இருக்கிறேன்."

உடனே மருத்துவர் தன் குறிப்புத் புத்தகத்தில், 'முப்பத்தியிரண்டு உருளைக்கிழங்கு தோசைகள் நிமோனியாவைக் குணப்படுத்தும்' என்று குறித்துக் கொண்டார்.

அடுத்தாக அவரிடம் வந்த நோயாளியும், சந்தர்ப்பவசமாக நிமோனியவால் பாதிக்கப்பட்டிருந்தார். அவர் செருப்பு மற்றும் ஷூக்கள் தயாரிப்பவர். மருத்துவர் சொன்னார் : "கவலைப்படாதீர்கள். இதைச் சரி செய்யும் முறை கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. உடனடியாக உணவகம்

சென்று, முப்பத்திரண்டு உருளைக்கிழங்கு தோசைகளைச் சாப்பிடுங்கள். முப்பத்தியிரண்டுக்குக் குறைவாக உண்ணக் கூடாது. உடனே சரியாகி விரைவில் குணமாகி விடுவீர்கள். இல்லையெனில், ஒருவாரத்தில் இறந்து விடுவீர்கள்," என்றார்.

ஒரு வாரத்திற்குப் பிறகு, மருத்துவர் ஷூ தயாரிப்பவரின் வீட்டுக் கதவைத் தட்டினார். அது பூட்டப் பட்டிருந்தது. பக்கத்து வீட்டுக்காரர் சொன்னார் : "அவர் இறந்துவிட்டார். உங்கள் உருளைக்கிழங்கு தோசைகள் அவரைக் கொன்று விட்டன." உடனே மருத்துவர் தன் குறிப்புப் புத்தகத்தில் இவ்வாறு எழுதினார் : 'முப்பத்திரண்டு உருளைக்கிழங்கு தோசைகள் துணி துவைப்பவர்களைக் காப்பாற்றும், ஷூ தயாரிப்பவர்களைக் கொன்றுவிடும்.'

இதுதான் கணக்கிடும் மனநிலை. அவனால் எதார்த்தமாக இருக்க முடியாது. அவன் பிராமணன்.

நீங்கள் மேற்பரப்பை மாற்ற முடியும். முகங்களை வரைய முடியும். அனால் உள்ளிருக்கும் வகை அதே போல் தான் இருக்கும். இது நாள் வரை தென்பகுதி புரட்சிகள் என்ற பெயரில் தன்னைத் துன்புறுத்திக் கொள்ள வில்லை. தென் பகுதி காத்துக்கொண்டிருக்கிறது. தென்பகுதியில் இருப்பவர்கள் அறிவாளிகள், அவர்கள் மேற்குப் பகுதியைப் பார்க்கிறார்கள். அவர்களுக்குத் தெரியும், நீங்கள் பொம்மைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள் என்று. உங்களின் எல்லாப் புரட்சிகளும், பொம்மைகள்தான். மிக விரைவில் அல்லது கொஞ்சம் தாமதமாக நீங்கள் உணர்வீர்கள், "காலையில் மூன்று என்ற விதியை."

"காலையில் மூன்று என்றால் என்ன ?" ஒரு சீடர் நிச்சயம் சுவாங்தஸூவைக் கேட்டிருக்க வேண்டும் ; ஏனெனில், எப்பொழுதெல்லாம் யாராவது புரட்சி அல்லது மாற்றம் என்று குறிப்பிடுகிறார்களோ, அப்பொழுதெல்லாம் சுவாங்தஸூ சிரித்துக் கொண்டே சொல்வார் : "காலையில்

மூன்று என்ற விதி.'' அதனால் ஒரு சீடர் கேட்டிருக்க வேண்டும், நீங்கள் எப்பொழுதும் பேசிக் கொண்டிருக்கும் "காலையில் மூன்று" என்பது என்ன ?

சுவாங்தஸூ சொன்னார் :

இது குரங்கு பயிற்சியாளரைப் பற்றியது.
அவன் குரங்குகளிடம் சென்று அவற்றிடம் :
"உங்கள் செஸ்ட் நட்களைப் பற்றிதான்,
உங்களுக்கு
காலையில் மூன்று கிடைக்கும், மதியம் நான்கு."
இதைக் கேட்டுக் கொண்டிருந்த குரங்குகள் கோபமடைந்தன...

ஏனெனில் இதற்கு முன்பு அவை காலையில் நான்கும், மாலையில் மூன்றும் பெற்றுக்கொண்டிருந்தன. எனவே அவை கோபமடைந்தன. "என்ன சொல்கிறீர்கள் ? இதற்கு என்ன பொருள் ? நாங்கள் எப்பொழுதும் காலையில் நான்கு செஸ்ட் நட்களைப் பெற்றுவந்தோம். இப்போது மூன்று என்கிறீர்கள். எங்களால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியாது."

பயிற்சியாளன் சொன்னான் :
"சரி, நான் மாற்றி விடுகிறேன்.
காலையில் நான்கு ; மாலையில் மூன்று."
இந்த ஏற்பாட்டில் அவை திருப்தியடைந்தன.

மொத்தம் ஒன்றுதான். ஆனால், குரங்குகளால் மொத்தத்தைப் பார்க்க முடியாது. அது காலை. எனவே காலை என்பதை மட்டும்தான் அவற்றால் பார்க்க முடியும். ஒவ்வொரு காலையும் நான்கு பருப்புகளைப் பெறுவது அவற்றின் வழக்கமாகி விட்டது, எனவே அதையே எதிர் பார்க்கின்றன. அந்த மனிதன் இப்பொழுது, 'காலையில் மூன்று' என்று சொல்கிறான். ஒன்றைக் குறைக்கிறான். எனவே அதை அவற்றால் சகிக்க முடியவில்லை. கோபமடை கின்றன. அவை எதிர்த்து, கலகம் செய்கின்றன.

ஆனால் இந்தக் குரங்குகளின் பயிற்சியாளன் அறிவாளியாக இருக்க வேண்டும். நீங்கள் அவ்வாறு இல்லாவிட்டால், குரங்குகளுக்குப் பியற்சியாளனாக இருப்பது மிகவும் கடினம். இதை என் சொந்த அனுபவத்திலிருந்து நான் தெரிந்து கொண்டேன். நான் ஒரு குரங்குப் பயிற்சியாளன்.

குரங்குப் பயிற்சியாளன் சொல்கிறான் : "சரி, கவலைப் படாதீர்கள். நான் பழைய முறையையே பிற்பற்றுகிறேன்." நீங்கள் காலையில் நான்கும், மாலையில் மூன்றும் கிடைக்கப் பெறுவீர்கள். உடனே குரங்குகள் மகிழ்ச்சியடைகின்றன. பாவம் பட்ட குரங்குகள் ! அவை ஏதாவது ஒரு காரணத்திற் காக மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். அல்லது கவலைப்பட வேண்டும். ஆனால் இந்த மனிதன் பரந்த பார்வையுடைவன். அவனால் காண முடியும், நான்கையும் மூன்றையும் கூட்டிப் பார்க்க முடியும். அப்பொழுதும் அது ஒன்றேதான். ஏழு எண்ணிக்கை அவற்றிக்குப் போய்ச் சேர வேண்டும். எப்படி அவை பெறுகின்றன, எந்த ஏற்பாட்டில் என்பவையெல்லாம் அவசியமில்லாதது. இரண்டு ஏற்பாடுகளுமே ஒன்றுதான். செஸ்ட் நட்களின் எண்ணிக்கை மாறவில்லை. ஆனால் ஒரு வகையில் அந்தக் குரங்குகள் மகிழ்ச்சியடைகின்றன. இன்னொரு வகையில் கவலைப் படுகின்றன.

இப்படித்தான் உங்கள் மனதும் வேலை செய்கிறது. நீங்கள் எப்பொழுதும் ஏற்பாடுகளை மாற்றிக் கொண்டேயிருக்கிறீர்கள். ஒரு ஏற்பாட்டில் மகிழ்ச்சியடைகிறீர்கள். இன்னொரு ஏற்பாட்டில் திருப்பதியடையாமலிருக்கிறீர்கள். ஆனால் எஞ்சியிருக்கும் மொத்தம் ஒன்றுதான். தியானத்தினால் மட்டுமே மொத்தத்தைக் காணமுடியும். மனம் துண்டுகளைத்தான் பார்க்கும். இருபக்கப் பார்வை. மிகவும் பக்கமாகப் பார்த்தல். எனவே தான், நீங்கள் எப்பொழுதெல்லாம் மகிழ்ச்சியாக உணர்கிறீர்களோ, அப்பொழுதெல்லாம் உடனே அதில் குதித்து விடுகிறீர்கள். நீங்கள் எப்போதும் மாலையைப் பார்ப்பதில்லை. எப்போதெல்லாம்

மகிழ்ச்சி இருக்கிறதோ, அங்கு வலியும் மறைந்திருக்கிறது. இது உங்கள் அனுபவமாகக் கூட இருக்கலாம். ஆனால் அதைப் பற்றிய விழிப்புணர்வு உங்களிடமில்லை. வலி மாலையில் வரும், ஆனால், மகிழ்ச்சி இங்கே இருக்கிறது, காலையில்.

நீங்கள் எப்போதும், எது மறைந்திருக்கிறதென்று பார்ப்பதில்லை. அதனுள் கண்ணிற்குப் புலப்படாமல் இருப்பதை, அதனுள் மறைந்திருப்பதை. மேற்புறத்தை மட்டும் நீங்கள் பார்த்துவிட்டு, அதன் மேல் பைத்தியமாகிறீர்கள். இதை உங்கள் வாழ்க்கை முழுவதும் செய்கிறீர்கள். துண்டுகள் உங்களைப் பிடித்துக் கொள்கின்றன. பலபேர் என்னிடம் வந்து சொல்வார்கள் : "இந்தப்பெண்ணை நான் மணந்து கொண்ட புதிதில், எல்லாமே மிக அழகாக இருந்தன. ஆனால் இந்த நாட்களில் எல்லாம் மறைந்துவிட்டன. இப்பொழுது எல்லாம் அசிங்கமாகிவிட்டன. இப்போது எல்லாமே துன்பமாகிவிட்டன."

ஒருநாள் ஒரு கார்விபத்து நடந்தது. அந்தக் கார் சாலை ஓரத்திலுள்ள சாக்கடையில் விழுந்தது. அந்த மனிதன் தரையில் விழுந்து, முழுமையாக நடக்க முடியாதவனாகி, கிட்டத்தட்ட நினைவையே இழந்து விட்டான். ஒரு போலீஸ் உடனே வந்து டைரியில் குறிக்க ஆரம்பித்தார். அந்த மனிதனைப் பார்த்து "நீங்கள் திருமணமானவரா ?" என்று கேட்டார்.

அந்த மனிதன் சொன்னான் : "நான் திருமணமாகாதவன். இதுதான் என் மிகப்பெரிய குழப்பம்."

இது எப்பொழுதுமே மணமாகாமல் இருப்பவருக்கு சொல்லப்படுவது. ஆனால் மணமாகாத போது உங்களுக்கு எப்படித் தெரியும் திருமணத்திற்குப் பிறகு என்ன நடக்குமென்று ? நீங்கள் ஒரு மனிதனைப் பார்க்கிறீர்கள், துண்டாக. சில சமயங்களில் அந்தத்துண்டு மிகவும் முட்டாள்

தனமாகத் தெரியும், நீங்கள் அதன் முடிவைப் பற்றி சிந்திக்கும் போது.

கண்களின் நிறம் - என்ன ஒரு முட்டாள்தனம் ! எப்படி உங்கள் வாழ்க்கை, உங்கள், அல்லது மற்றவரின் கண்களின் நிறத்தைச் சார்ந்திருக்கும் ? எப்படி உங்கள் வாழ்க்கை, கண்களின் நிறத்தால் அழகாகும் ? ஒரு சிறிய நிறமி, வர்ணப்பசை. மூன்று அல்லது நான்கு ஆண்குறிகளின் மதிப்புடையது. ஆனால் நீங்கள் காதல் வயப்படுகிறீர்கள். 'ஓ, அந்த கண்கள், கண்களின் நிறம்.' பிறகு நீங்கள் பைத்திமயாகி. இவ்வாறு நினைக்கிறீர்கள் : "நான் இந்தப் பெண்ணை மணக்கா விட்டால், என் வாழ்வை இழந்து விடுவேன், தற்கொலை செய்து கொள்வேன் !"

ஆனால், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று நீங்கள் பார்ப்பதில்லை. ஒருவர் எப்பொழுதும் கண்களின் நிறத்தால் வாழ்ந்துவிட முடியாது. இரண்டு நாட்களுக்குள் அந்தக் கண்களுடன் நீங்கள் பழக்கமாகி விடுகிறீர்கள். பிறகு அதை நீங்கள் மறந்து விடுகிறீர்கள். பிறகு, வாழ்க்கையின் முழுமை உங்கள் கண்முன் வந்து தெரிகிறது. பிறகு துன்பம் வாழ்க்கை முழுதும் தொடங்குகிறது. தேனிலவு முடிவதற்கு முன்பே, துன்பம் தொடங்கிவிடுகிறது. முமையான மனிதன் கணக்கில் எடுத்துக்கொள்ளப் படுவதில்லை. மனத்தால் முழுமையைக் காணமுடியாது. அது மேற்பரப்பை மட்டுமே பார்க்கிறது. உடல் அமைப்பை, முகத்தை, முடியை, கண்களின் நிறத்தை, பெண் நடக்கும் விதத்தை, அவள் பேசும் விதத்தை, குரலின் தன்மை. இவை எல்லாம் பாகங்கள் தான். முழுமையான ஆள் எங்கே ?

மனத்தால் மொத்தத்தைக் காண்முடியாது. மனம் துண்டுகளைப் பார்க்கிறது. துண்டுகள் கொக்கியில் மாட்டப் பட வேண்டும். ஒருமுறை இது மாட்டப்பட்டுவிட்டால் மொத்தம் உள்ளே வந்துவிடும். மொத்தம் தூரத்திலில்லை.

கண்கள் ஒரு தனியான அம்சமாக இருப்பதில்லை. அவை ஒரு முழு மனிதனின் பாகம்தான். நீங்கள் கண்களால் மாட்டப்பட்டு விட்டீர்கள் எனில், நீங்கள் முழு மனிதனுடன் மாட்டிவிடப்பட்டு விட்டீர்கள். முழுமை வெளிப்படும் போது எல்லாம் அவலட்சணமாகத்தான் தோன்றுகின்றன.

அதனால், யார் பொறுப்பு ? நீங்கள் முழுமையையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் காலையாக இருக்கும் போது, மனது காலையை மட்டும் பார்க்கிறது, மாலையை முழுவதுமாக மறந்து விடுகிறது. நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் - ஒவ்வொரு காலையிலும், மாலை மறைந்திருக்கிறது. காலை இடையறாது, மாலையாக மாறிக்கொண்டிருக்கிறது. இதை ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் இதை நிறுத்திவிட முடியாது.

சுவாங்தஸு கூறுகிறார் :

இரண்டு ஏற்பாடுகளும் ஒன்றுதான் –
செஸ்ட் நட்களின் எண்ணிக்கை மாறவில்லை,
ஆனால் ஒரு ஏற்பாட்டில் குரங்குகள் கவலையடைந்தன.
இன்னொரு வகையில் திருப்தியடைந்தன.

குரங்குகள் உங்கள் மனங்கள்தான், நீங்கள் முழுவதையும் ஊடுருவிப் பார்ப்பதில்லை. இது ஒரு துன்பம். நீங்கள் எப்பொழுதும் தவறவிடுகிறீர்கள். நீங்கள் எப்போதும் இழப்பது துண்டு துண்டாக இருப்பதால்தான். நீங்கள் முழுமையையும் பார்த்து விட்டு, பிறகு செயல்பட்டீர்களெனில், உங்கள் வாழ்க்கை ஒருபோதும் நரகமாக இருக்காது. பிறகு, நீங்கள் மேலெழுந்த வாரியான, ஏற்பாடுகளைப் பற்றிக் கவலைப்பட மாட்டீர்கள், காலை, மாலை பற்றி. ஏனெனில், அப்பொழுது உங்களால் கணக்கிட முடியும். அது எப்பொழுதும் ஏழுதான். நீங்கள் காலையில் நான்கு பெற்றுக் கொண்டாலும், மூன்று

பெற்றுக் கொண்டாலும், அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை - மொத்தம் ஏழுதான்.

நான் ஒன்று கேள்விப்பட்டேன். ஒரு சிறுவன் பள்ளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பும்போது மிகவும் பதற்றத்துடன், கடின பிரச்சினை இருப்பது போல் காணப்பட்டான். அவன் அம்மா கேட்டாள் : "ஏன் மிகவும் கவலையுடன் காணப்படுகிறாய் ?"

அந்த சிறுவன் சொன்னான் : "நான் மிகவும் குழப்பத்திலிருக்கிறேன். என் ஆசிரியை பைத்தியமாகி விட்டார் என்று அந்த சிறுவன் சொன்னான் : "நான் மிகவும் குழப்பத்திலிருக்கிறேன். என் ஆசிரியை பைத்தியமாகி விட்டார் என்று நினைக்கிறேன். நேற்று நான்கும், ஒன்றும் ஐந்து என்றார். இன்று மூன்றும், இரண்டும் ஐந்து என்கிறார். நிச்சயம் அவர் பைத்தியமாகியிருக்க வேண்டும். ஏனெனில் ஏற்கெனவே நான்கும், ஒன்றும் ஐந்தாக இருக்கும் போது, எப்படி மூன்றும் இரண்டும் ஐந்தாகும் ?"

குழந்தையால், ஐந்து என்ற எண், பல ஏற்பாடுகளில் வரும் என்பதைப் பார்க்க முடியாது. ஐந்தை கூட்டுத் தொகையாகக் கொடுக்கும் எண் அமைப்பு, ஒன்று மட்டும் இல்லை. கூட்டுத் தொகையாக ஐந்தைக்கொடுக்க, கோடிக்கும் அதிகமான எண் அமைப்புகள் உள்ளன.

நீங்கள் எப்படித்தான் உங்கள் வாழ்க்கையை ஏற்பாடு செய்தாலும், மத நம்பிக்கையுடைய மனிதன் மொத்தத்தைத் தான் பார்ப்பான். லௌகிகமான மனிதனோ எப்பொழுதும் துண்டுகளைத்தான் பார்ப்பான். அதுதான் வேறுபாடு. லௌகிகம் எப்பொழுதும், எது பக்கத்தில் இருக்கிறதோ, அதைத்தான் பார்க்கும். தூரத்திலுள்ள மறைக்கப் பட்டிருக்கும் பகுதிகளைப் பார்க்காது. தூரம் உண்மையாக, வெகு தூரத்திலில்லை, அது பக்கமாக மாறும், விரைவில் இது நடக்கும். மாலை வந்து கொண்டிருக்கிறது.

வாழ்க்கையின் முழுமை எதில் காணப்படுகிறதோ அதைப் பற்றிய தோற்றம் உங்களிடம் இருக்கிறதா ? இது நம்பப்பட்டது. இது உண்மையும் கூட என்று நான் நினைக்கிறேன். ஒரு மனிதன் நீரில் மூழ்கி இறக்கப் போகிறான் என்றால், திடீரென்று அவன் முழு வாழ்க்கையும், மொத்தமும் நினைவுக்கு வருகிறது. நீங்கள் செத்துக் கொண்டிருக்கிறீர்கள், ஆற்று நீரில் மூழ்கிக்கொண்டிருக்கிறீர்கள் ; நேரமே இல்லை. உடனே உங்கள் மனக்கண்கள் ஆரம்பத்திலிருந்து, கடைசி வரை உங்கள் முழு வாழ்க்கையையே பார்க்கிறது. அது உங்கள் மனத்திரையின் வழியே திரைப்படம் கடந்து செல்வது போல் இருக்கும். ஆனால் நீங்கள் இறந்து கொண்டிருக்கும் போது இதனால் என்ன பயன் ?

மத நம்பிக்கையுடைய மனிதன், ஒவ்வொரு கணத்திலும், முழுமையைக் காண்பான். வாழ்க்கையின் முழுமை அங்கு இருக்கிறது. பிறகு அவன் முழுமையின் தோற்றத்தைப் பார்க்கிறான். நீங்கள் எப்போதும் வருத்தப்படுவது போல, அவன் இருப்பதில்லை. இது தவிர்க்க முடியாதது என்ன செய்தாலும், நீங்கள் வருத்தப்படுவீர்கள்.

ஒருநாள் அரசர் பைத்தியக்காரர்களின் குடியிருப்பைப் பார்வையிடச் சென்றார். அந்த குடியிருப்பின் மேற்பார்வையாளர், அரசருக்குத் துணையாகச் சென்றார். ஒவ்வொரு அறைக்கும், அரசரை அழைத்துச் சென்றார். அரசருக்கு மனநலமருத்துவத்தில் மிகுந்த ஆர்வம். ஏனெனில் அவர் அதைப் பற்றிக் கற்றிருந்தார். ஒவ்வொருவருமே ஆர்வமாய் இருக்க வேண்டும். ஏனெனில் இது ஒவ்வொருவருக்குமுள்ள பிரச்சினை. நீங்கள் பைத்தியக்கார விடுதிக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை. எங்கு வேண்டு மானாலும் சென்று மக்களின் முகங்களைப் படியுங்கள். நீங்கள் பைத்தியக்கார விடுதியைப் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒரு மனிதன் சத்தம் போட்டு அழுதுகொண்டிருந்தான். தூண்களில் அவன் தலையை இடித்துக் கொண்டான். அவன் வேதனை மிக ஆழமாய் இருந்தது. அவன் வருத்தம் ஊடுருவக் கூடியதாயிருந்தது. அரசர் அந்த மனிதனின் முழுக் கதையையும், அவன் எப்படி பைத்தியமானான் என்பதைப் பற்றியும் சொல்லச் சொன்னார். அந்த மேற்பார்வையாளர் சொன்னார் : "இவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். அவளை அடைய முடியவில்லை. அதனால் பைத்தியமாகி விட்டான்."

பிறகு அவர்கள் அதைக் கடந்து இன்னொரு அறைக்குச் சென்றார்கள். அங்கே ஒருவன் ஒரு பெண்ணின் படத்தின் மேல் காறி உமிழ்ந்து கொண்டிருந்தான். அரசன் கேட்டார்: "இந்த மனிதனின் கதை என்ன ? இவனும் ஒரு பெண்ணுடன் சம்பந்தப்பட்டிருப்பது போல் தோன்றுகிறதே ?"

மேற்பார்வையாளர் சொன்னார் : "இதுவும் அதே பெண்தான். இந்த மனிதன் அவள் மேல் காதல் வயப்பட்டான். அவளை அடைந்தும் விட்டான். அதனால் பைத்தியமாகி விட்டான் !"

நீங்கள் பைத்தியமாவதற்குக் காரணமானவற்றைப் பெற்றாலும், நீங்கள் பைத்தியமாவதற்குக் காரணமானதைப் பெறாவிட்டாலும், மிஞ்சியிருக்கும் மொத்தம் ஒன்றுதான். என்னதான் நீங்கள் செய்தாலும் நீங்கள் வருத்தமடைவீர்கள். துண்டு துண்டானது, எப்போதும் நிரம்பாது. முழுமை மிகப் பெரியது, துண்டு மிகவும் சிறியது. நீங்கள் துண்டிலிருந்து, முழுமையை முடிவு செய்ய முடியாது. நீங்கள் துண்டைச் சார்ந்திருந்தால், உங்கள் வாழ்க்கையை அதைப் பொறுத்துத் தீர்மானித்தால், எப்பொழுதும் இழப்பீர்கள். உங்கள் முழுவாழ்க்கையுமே வீணாகி விடும்.

அதனால் நாம் என்ன செய்ய வேண்டும் ? சுவாங்தஸு நாம் என்ன செய்ய வேண்டுமென விரும்புகிறார் ? நாம்

துண்டு துண்டாக இருக்கக் கூடாது என்று அவர் விரும்புகிறார். நாம் முழுமையாக இருக்க வேண்டுமென விரும்புகிறார். ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், நீங்கள் முழுமையாக இருக்கும் போதுதான், முழுமையைப் பார்க்க முடியும். ஏனெனில் ஒரே மாதிரி இருக்கும் ஒன்றால்தான், அதே போல் இருக்கும் இன்னொன்றைத் தெரிந்து கொள்ளமுடியும். நீங்கள் துண்டாக இருந்தால், உங்களால் மொத்தத்தைத் தெரிந்து கொள்ள முடியாது. எப்படி மொத்தத்தைத் தெரிந்து கொள்ள முடியும் , நீங்கள் துண்டாக இருக்கும் போது ? நீங்கள் பாகங்களாகப் பிரிக்கப்பட்டீர்கள் எனில், மொத்தம் உங்களுக்குள் பிரதிபலிக்க முடியாது. நான் தியானத்தைப் பற்றிப் பேசும் போது, இனி பிரிக்கப் பட முடியாத மனத்தையே குறிப்பிடு கிறேன். எல்லா துண்டுகளும் மறைந்து விட்டிருக்கும் மனம் பிரிக்கப்படாதது, முழுமை, ஒன்று.

இந்த ஒன்றான மனம் ஆழமாகப் பார்க்கிறது, முடிவு வரை. இறப்பிலிருந்து, பிறப்புவரை பார்க்கிறது. இரண்டு எல்லைகளும் அதன் முன் தெரிகிறது. இந்தப் பார்வையி லிருந்து, ஊடுருவிப் பார்க்கும் கண்ணோட்டத்திலிருந்து தான் செயல் பிறக்கிறது. பாவம் எது என்று என்னிடம் நீங்கள் கேட்டால், நான் சொல்வேன், ‘துண்டான மனத்தை அடிப்படையாக வைத்து செயலில் ஈடுபடுவது’ என்று. புண்ணியம் எது என்று நீங்கள் என்னிடம் கேட்டால், நான் சொல்வேன், ‘மொத்த, முழுமையான மனத்திலிருந்து வரும் செயல்தான் புண்ணியம்.’ அதனால்தான் பாவம் செய்பவர் எப்போதும் வருத்தப்பட்டுக் கொண்டே இருக்கிறார்.

உங்கள் வாழ்க்கையை நினைவுபடுத்திப் பாருங்கள். அதை ஆழ்ந்து நோக்க வேண்டும். எதெல்லாம் நீங்கள் செய்தீர்களோ, எதையெல்லாம் தேர்ந்தெடுத்தீர்களோ, இது அல்லது அது, எல்லாமே தவறாகியிருக்கும். நீங்கள் ஒரு

பெண்ணை அடைந்தாலும், இழந்தாலும், இரண்டு வகையிலுமே நீங்கள் பைத்தியமாகிறீர்கள். நீங்கள் எதைத் தேர்ந்தெடுத்தாலும், தவறாகத்தான் தேர்ந்தெடுக்கிறீர்கள். அதனால் தான் கிருஷ்ணமூர்த்தி எப்பொழுதும், தேர்ந்தெடுத்தல் இல்லாமலிருத்தலைக் குறிப்பிடுவார்.

இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். இங்கே நீங்கள் என்னைக் கவனிக்கவே இருக்கிறீர்கள். இது ஓர் தேர்வு. ஏனெனில் நீங்கள் சில வேலைகளைச் செய்யாமலிருக்க வேண்டும். சில வேலைகள் முழுவதும் முடிக்கப் படாமல் போகும். நீங்கள் அலுவலகத்திற்குச் செல்ல வேண்டும், கடைக்கு, குடும்பத்திற்கு, சந்தைக்கு ; ஆனால் நீங்கள் என்னைக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். இன்று காலை நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று முடிவெடுத்திருக்கக் கூடும். இந்த மனிதனைக் கவனிக்கச் செல்வதா, அல்லது வேலைக்கு அலுவலகத்திற்கு, சந்தைக்கு செல்வதா என்று. பிறகு நீங்கள் இங்கு வருவதைத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள்.

இங்கு வரும் தேர்வை நீங்கள் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள். நீங்கள் உங்கள் தேர்வை நினைத்து வருந்துவீர்கள். ஏனெனில் இங்கிருக்கும் போது கூட, முழுமையாக உங்களால் இங்கேயிருக்க முடியாது. பாதிமனம் அங்கே இருக்கும். பின்னர் நீங்கள் சாதாரணமாக நான் முடிக்கும் வரை காத்திருந்து விட்டு, நான் முடித்தவுடன் சென்று விடுவீர்கள். ஆனால் வேறு ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்திருந்தால், கடைக்குச் சென்றிருந்தால், அலுவலகத்திற்குச் சென்றிருந்தால், அங்கே முழுமையாக இருந்திருப்பீர்கள் என்று நினைக்கிறீர்களா ? இல்லை. ஏனெனில் அதுவும் மறுபடி ஒரு தேர்வுதான். அதனால், நீங்கள் அங்கே இருப்பீர்கள், உங்கள் மனம் இங்கிருக்கும். நீங்கள் கவலைப் படுவீர்கள். நான் எதை இழந்திருக்கிறேன் ? யாருக்குத் தெரியும் அங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறதென்று, எதைப்பற்றிப் பேசிக்

கொண்டிருப்பார்கள் ? யாருக்குத் தெரியும் என்ன ரகசியம் இடம் மாற்றப்பட்டதென்று ?

அதனால் நீங்கள் எதைத் தேர்ந்தெடுத்தாலும், நீங்கள் இங்கே வந்தாலும், அல்லது வரவேண்டாம் என்று முடிவெடுத்தாலும், தேர்வாக இருந்தால், அதற்கு பாதி மனம் என்று பொருள். அல்லது கொஞ்சம் அதிகம், தேர்ந்தெடுக்கப் பட்டது. இது ஒரு ஜனநாயக முடிவு, பாராளுமன்ற முடிவு போன்றது. மனத்தின் பெரும்பான்மையைப் பொறுத்து நீங்கள் முடிவெடுக்கிறீர்கள். ஆனால் சிறுபான்மை இன்னும் அங்கிருக்கிறது. எந்த சிறு பான்மையும் நிலையானதல்ல, எந்தப் பெரும்பான்மையும் நிலையானதல்ல. யாருக்கும் அதன் அளவு தெரியாது. உறுப்பினர்கள் மாறிக் கொண்டே இருப்பார்கள்.

நீங்கள் இங்கே வரும் போது நீங்கள் முடிவு செய்திருப்பீர்கள். உங்கள் மனதின் ஐம்பத்தொரு சதவீதம் இங்கு வரவிரும்புகிறது. நாற்பத்தொன்பது சதவீதம் அலுவலகம் செல்ல விரும்புகிறது. ஆனால் நீங்கள் இங்கு வந்து சேரும்போது அந்த ஏற்பாடு மாறிவிடுகிறது. மற்றொரு முடிவு வந்து இங்கு வந்து தொந்தரவுகளை ஏற்படுத்துகிறது.

நீங்கள் இங்கு வந்து சேரும்போது சிறுபான்மை, பெரும் பான்மையாக மாறி விடுகிறது. அது இன்னும் பெரும் பான்மையாகாவிட்டால், நீங்கள் இங்கிருந்து கிளம்பும் போது அது மாறிவிடும். நீங்கள் நினைப்பீர்கள்: "இரண்டு மணி நேரம் வீணாகி விட்டதா ? நான் இப்பொழுது எப்படி அதைச் சரி செய்வேன் ? வராமலிருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் - ஆன்மிக விஷயங்களைக் கொஞ்சம் தள்ளிப் போடமுடியும், ஆனால் இந்த உலகத்தைத் தள்ளிப் போட முடியாது. வாழ்க்கை பெரியது. தியானத்தைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

இந்திய மக்கள் சொல்கிறார்கள், தியானம் என்பது வயதானவர்களுக்குத்தான் என்று. சாவின் விளிம்பில் இருக்கும் போதுதான் அவர்கள் தியானம் செய்ய வேண்டும். இது இளையவர்களுக்கானது அல்ல. தியானம் என்பது பட்டியலின் இறுதியில் இருப்பது, மற்ற எல்லாவற்றையும் முடித்தபின் செய்ய வேண்டியது. ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் எல்லாவற்றையும், முடித்து விடும் ஒருநாள் வரவே வராது. நீங்கள் மிகவும் வயதான வராகி, அப்பொழுதும் செய்வதற்கு ஏதாவது இருந்து, உங்கள் எல்லா சக்தியும் விரயமாகி விட்டபோது, எப்பொழுது நீங்கள் தியானம் செய்வீர்கள் ?

நீங்கள் எதுவும் செய்ய முடியாதவராக இருக்கும் போது, எப்படி உங்களால் தியானம் செய்ய முடியும் ? தியானத்திற்கு சக்தி தேவை, மிகவும் தூய்மையான, ஜீவாதாரமான தியானத்திற்கு பொங்கி வழியும் சக்தி தேவை. குழந்தையால் தியானம் செய்ய முடியும், ஆனால் வயதானவரால் எப்படி தியானம் செய்ய முடியும் ? ஒரு குழந்தையால் எளிதாகத் தியானம் செய்ய முடியும், வயதானவர்-இல்லை அவர் வீணாக்கி விட்டார். அவருக்குள் சக்தியின் ஓட்டமே இல்லை. அவர் ஆறாய் வழிய முடியாது. அவர் உறைந்து போய் விட்டார். அவர் உயிரின் பல பாகங்கள் ஏற்கெனவே செத்துப் போய்விட்டன.

நீங்கள் கோயிலுக்கு வருவதைத் தேர்ந்தெடுத்தால், துன்பப்படுவீர்கள், வருத்தப்படுவீர்கள். நீங்கள் சந்தைக்கோ அலுவலகத்துக்கோ சென்றாலும் வருத்தப்படுவீர்கள், துன்பப்படுவீர்கள்.

ஒருநாள் ஓர் குரு இறக்க நேர்ந்தது. அந்த துறவி மிகவும் பிரபலமானவர். உலகம் முழுவதற்கும் தெரிந்தவர். பல மக்கள் அவரை வணங்கினார்கள். அவர் ஞானமடைந்து விட்டார்

என்று நினைத்தார்கள். அதே நாளில் ஒரு விபசாரியும் இறந்தாள். அவள் அந்த துறவியின் கோயிலுக்கு முன்னால் தான் வாழ்ந்து வந்தாள். அவளும் ஒரு பிரபலமான விபசாரி. அந்த துறவி எவ்வளவு பிரபலமோ அவ்வளவு. இரண்டு துருவங்களான இவர்கள் அருகருகே வாழ்ந்து, ஒரே நாளில் இறந்தும் போனார்கள்.

இறப்பின் தேவதைகள் வந்து, துறவியின் உடலை சொர்க்கத்திற்கு எடுத்துச் சென்றன. இறப்பின் மற்ற தேவதைகள் வந்து விபசாரியை நரகத்திற்குக் கொண்டு சென்றன. அந்த தேவதைகள் சொர்க்கத்தை அடைந்து சாத்தப்பட்டு இருந்த கதவை அவை தட்டிய போது, அதற்குப் பொறுப்பான ஒருவன், "நீங்கள் குழப்பி விட்டீர்கள், இந்தத் துறவி நரகத்திற்குச் செல்ல வேண்டும். அந்த விபசாரி சொர்க்கத்திற்குக் கொண்டு வரப்ப படவேண்டும்" என்றான்.

அந்த தேவதைகள் கேட்டன : "என்ன சொல்கிறாய் ? இந்த மனிதன் மிகப் பிரபலமான ஒரு துறவி. தொடர்ந்து தியானமும், பிரார்த்தனையும் செய்து கொண்டிருந்தவன். அதனால் தான் நாங்கள் விசாரணை கூட செய்யவில்லை. நாங்கள் சென்று இவரை இங்கு எடுத்துக் கொண்டு வந்துவிட்டோம். அந்த விபசாரி ஏற்கெனவே நரகத்தில்தான் இருக்கிறாள். வேறு சில தேவதைகள் அவளை அங்கு எடுத்துக் கொண்டு போய்விட்டன. நாங்கள் கேட்க வேண்டும் என்று நினைக்கவேயில்லை. அதுதான் வெளிப்படையாகத் தெரிகிறதே."

கதவிற்குப் பொறுப்பானவன் சொன்னான் : "நீங்கள் குழம்பி விட்டீர்கள் ; ஏனெனில் நீங்கள் வெளிப்புறத்தை மட்டுமே பார்த்தீர்கள். அந்தத் துறவி மற்றவர்களின் பொருட்டுதான் தியானம் செய்தான், ஆனால் அவனுக்குள் எப்போதும், 'நான் வாழ்க்கையை இழந்து விட்டேன். அந்த விபசாரி எவ்வளவு அழகாக இருக்கிறாள். அதுவும்

கைக்கெட்டும் தூரத்தில். நான் தெருவைக் கடக்கும் எந்தக் கணத்திலும் அவள் எனக்குக் கிடைக்கும் வாய்ப்பு உள்ளது. நான் நிறைய தேவையில்லாதவற்றைத் தான் செய்து கொண்டிருக்கிறேன். பிரார்த்தனை, புத்தரின் சிலைக்கு முன்னால் உட்கார்ந்திருத்தல், பலன்தான் ஒன்றுமில்லை' என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவனுக்கிருக்கும் நற்பெயரால் இதைச் செய்யும் துணிச்சல் இல்லாமலிருந்தான்."

பல மக்கள் ஒழுக்கமாக இருப்பதற்குக் காரணம், இவனைப் போல் பயந்தாங்கொள்ளியாக இருப்பதால் தான். அவன் ஒழுக்கமாக இருந்தான் - ஏனெனில் அவன் பயந்தாங்கொள்ளி - அவனால் அந்தத் தெருவைக் கடக்க முடியாது. மக்களுக்கு அவனைத் தெரியும் ; எப்படி அவனால் விபசாரியிடம் செல்ல முடியும் ? மக்கள் என்ன சொல்வார்கள் ?

பயந்தாங்கொள்ளிகள் எப்போதும், அடுத்தவர்கள் என்ன நினைப்பார்களோ என்று மற்றவர்களின் கருத்தைப் பற்றியே பயந்து கொண்டிருப்பார்கள். அதனால்தான் அவன் கடைசி வரை துறவியாகவே, விரதமிருந்து கொண்டே இருந்தான். ஆனால் அவன் மனம் எப்போதும் விபசாரியுடனே இருந்தது. அங்கே பாட்டு, நடனம் எனக் கேட்டபோதெல்லாம், கவனித்துக் கொண்டிருந்தான். புத்தர் சிலைக்கு முன் உட்கார்ந்திருந்தான், ஆனால் அங்கு புத்தர் இல்லை. அவன் வணங்கிக் கொண்டிருக்கவில்லை ; கனவு கண்டு கொண்டிருந்தான். விழாக் கோலத்தின் சத்தத்தை ரசித்துக் கொண்டிருந்தான். அவன் கனவில் அந்த விபசாரியுடன் காதலில் ஈடுபட்டுக் கொண்டிருந்திருப்பான்.

அந்த விபசாரியை பற்றி ? அவள் எப்போதும் வருந்தினாள், வருந்தினாள், வருந்திக் கொண்டுதானிருந்தாள். அவளுக்குத் தெரிந்தது, தன் வாழ்வை வீணடித்து விட்டோம்

என்று, பொன்னான வாய்ப்பை அவள் வீணாக்கிவிட்டாள். எதற்காக? பணத்திற்காக அவளின் உடலையும், ஆன்மாவை யும் விற்றுக் கொண்டிருந்தாள். அவள் எப்போதும் அந்த துறவியின் கோயிலையே பார்த்துக் கொண்டிருந்தாள். அங் கிருந்த அமைதியான வாழ்க்கையைக் கண்டு பொறாமைப் பட்டாள். அங்கு என்ன தியானம் நடந்து கொண்டிருந்தது?

அந்தக் கோயிலினுள் சென்று பார்க்க வேண்டும். எனக் கடவுளிடம் வேண்டினாள். ஆனால் அவள் நினைத்துக் கொண்டாள் : "நான் ஒரு விபசாரி, புனித மற்றவள், நான் அந்தக் கோயிலுக்குள் நுழையக்கூடாது." அதனால் அவள் கோயிலின் வெளிப்புறத்தைச் சுற்றி நடந்தாள். வெளியில், தெருவில் இருந்த படியே அதைப் பார்த்தாள். என்ன அழகு, என்ன அமைதி, என்ன ஆசிர்வாதம் உள்ளே! அங்கே கீர்த்தனையும், பஜனையும், பாட்டும், நடனமும் இருக்கும் போதெல்லாம், அவள் புலம்பி, கதறி, அழுவாள். அவள் இழந்தைப் பற்றி யோசிப்பாள்.

அதனால், அந்த வாயிற் காவலன் சொன்னான் : "அந்த விபசாரியை சொர்க்கத்திற்குக் கொண்டு வாருங்கள், இந்தத் துறவியை நரகத்திற்கு இட்டுச் செல்லுங்கள். அவர்கள் வெளி வாழ்க்கை வேறுவிதமானது. உள்ளிருந்த வாழ்க்கை வேறு விதமானது. ஆனால் மற்ற அனைவரையும் போலவே அவர் கள் இருவரும் ஏதோ ஒரு வகையில் வருத்தப் பட்டார்கள்.

இந்தியர்களாகிய நாம் வேறு எந்த நாட்டிலும் இல்லாத ஒரு வார்த்தையைக் கண்டுபிடித்துள்ளோம். சொர்க்கம், நரகம் ஆகிய வார்த்தைகள் எல்லா இடத்திலுமுள்ளன. அனைத்து மொழிகளிலும் சொர்க்கம், நரகம் என்று குறிப்பிட வார்த்தைகள் உள்ளன. நாம் ஒரு வித்தியாசமான வார்த்தையைக் கொண்டுள்ளோம். அதுதான் மோட்சம் அல்லது நிர்வாணம் அல்லது கைவல்யம். முழுமையான சுதந்திரம், சொர்க்கமும் அல்லாமல் நரகமும் அல்லாமல்.

உங்கள் வெளிவாழ்க்கை நரகமாக இருந்து, அதற்காக நீங்கள் வருத்தப்பட்டீர்கள் எனில், நீங்கள் சொர்க்கத்தை அடைவீர்கள், தியானமும், பிரார்த்தனையும் அடங்கிய வாழ்க்கைக்குத் தொடர்ந்து ஆசைப்பட்டு, ஏங்கிய அந்த விபசாரியைப் போல. உங்கள் வெளி வாழ்க்கை சொர்க்கமாவும் மறைமுக வாழ்க்கை நரமாகவும் இருந்தால், அதாவது விபசாரிக்கு ஆசைப்பட்ட அந்தத் துறவியைப் போல, நீங்கள் நரகத்திற்குச் செல்வீர்கள். ஆனால் நீங்கள் எதிர்பார்ப்பே இல்லாதவராக, கவலைகளே இல்லாதவராக, தேர்ந்தெடுக்கும் வழக்கமே இல்லாதவராக இருந்தால், நீங்கள் 'மோட்ச' நிலையை அடைவீர்கள்.

தேர்ந்தெடுத்தலே இல்லாத விழிப்புணர்வுதான் மோட்சம், முழுமையான சுதந்திரம். நரகம் என்பது ஒரு அடிமைத்தனம். சொர்க்கம் கூட அடிமைத் தனம்தான். சொர்க்கம் அழகான சிறையாக இருக்கலாம், நரகம் அசிங்கமான சிறை ; ஆனால் இரண்டும் சிறைகள்தான். கிறிஸ்தவர்களானாலும், முகமதியர்களானாலும் இந்தக் கருத்தைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில், அவர் களைப் பொறுத்தவரையில் சொர்க்கம்தான் மிக உயர்ந்த நிலை. அவர்களிடம், இயேசு எங்கே இருக்கிறார் என்று கேட்டீர்களெனில் அவர்கள் விடை தவறாகத் தானிருக்கும். சொர்க்கத்தில் கடவுளுடன் இருக்கிறார் என்பார்கள். இது முற்றிலும் தவறு. இயேசு சொர்க்கத்தில் இருக்கிறாரென்றால், அவர் ஞானமடைவில்லை என்று பொருள். சொர்க்கம் மிக அழகானதாக இருக்கலாம். ஆனால் அப்போதும் அது சிறைதான். அது அழகானதாக இருக்கலாம். மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கலாம். ஆனாலும் அதுவும் ஒரு தேர்வுதான். நரகத்திற்கு எதிரான தேர்வு. பாவத்திற்கு எதிரான நல்லொழுக்கத்தைப் பெரும்பாலானோர் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள், ஆனால் சிலர் தீர்மானிக்கும் வாய்ப்பிற்குக்காகக் காத்திருக்கிறார்கள்.

இயேசு 'மோட்சத்தில்' இருக்கிறார். இதைத் தான் நான் சொல்கிறேன். அவர் சொர்க்கத்தில் இல்லை, அவர் நரகத்தில் இல்லை. எல்லாவித கட்டுக்களிலிருந்தும் அவர் விடுபட்டு விட்டார் : நல்லது - கெட்டது, பாவம் - பரிசுத்தம், ஒழுக்கம் - ஒழுக்கமின்மை. அவர் தேர்ந்தெடுக்கவில்லை. தேர்ந்தெடுத்தலே இல்லாத வாழ்க்கையை அவர் வாழ்ந்தார். அதைத்தான் நான் தொடர்ந்து உங்களுக்குக் கூறிக்கொண்டே இருக்கிறேன். தேர்ந்தெடுத்தலே இல்லாத வாழ்க்கை வாழுங்கள்.

ஆனால் தேர்ந்தெடுத்தலே இல்லாத வாழ்க்கை எப்படி சாத்தியமாகும் ? அது சாத்தியம். நீங்கள் முழு மொத்தமான ஏழைக் காணும் போது, இல்லாவிட்டால் நீங்கள் தேர்ந்தெடுப்பீர்கள். இது காலையில் நடக்க வேண்டும், அது மாலையில் நடக்க வேண்டும் என்று சொல்வீர்கள். ஏற்பாடுகளை மாற்றுவதன் மூலம். மொத்தத்தையே மாற்றி விட்டதாக நீங்கள் நினைத்துக் கொள்வீர்கள். மொத்தத்தை மாற்ற முடியாது. மொத்தம் ஒரே மாதிரி தான் இருக்கும் - அனைவரின் மொத்தமும் ஒன்றுதான்.

பிச்சைக்காரனுக்கும், பேரரசனுக்கும் இடையே வித்தியாசம் ஒன்றுமில்லை என்று சொன்னேன். காலையில் நீங்கள் பேரரசன், மாலையில் பிச்சைக்காரன். மொத்தம் ஒன்றுதான். மொத்தத்தைப் பாருங்கள், மொத்தமாக இருங்கள், பிறகு தேர்ந்தெடுத்தலே இல்லாமல் போய்விடும்.

குரங்குப் பயிற்சியாளன் மொத்தத்தைப் பார்த்து விட்டுத்தான் சொன்னான் : "சரி, முட்டாள் குரங்குகளே, இதில் நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள் என்றால், இந்த ஏற்பாடே இருக்கட்டும்." ஆனால் அவனும் அந்தக் குரங்கு களைப் போலவே, மற்றவர்களைப் போலவே இருந்திருந்தான் என்றால் அங்கு சண்டை மூண்டிருக்கும். அவன் சொல்லி யிருப்பான் : "இதுதான் ஏற்பாடு. யார் கட்டளையிடுவது, யார்

முடிவெடுப்பது ? யார் எஜமான் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் ? நீங்களா, நான் ?"

'நான்' என்ற தன்னுணர்ச்சி அப்பொழுது தேர்ந்தெடுக்கிறது, தீர்மானிக்கிறது, வலியுறுத்துகிறது. அந்தக் குரங்குகள் கலகம் செய்து கொண்டிருந்தன. இந்த மனிதனும் குரங்குகளைப் போல் இருந்திருந்தானெனில், அவை அவனைப் பைத்தியமாக்கியிருக்கும். அவன் அக்குரங்குகளின் நிலைக்கு உரித்தாகியிருப்பான். "இனிமேல் காலையில் நான்கு இல்லை. நான் முடிவு செய்து விட்டேன்" என்று கூறியிருப்பான்.

ஒரு மனிதனின் அறுபதாவது பிறந்தநாள் அது. அன்றிரவு, நாற்பது ஆண்டுகால சண்டை, சச்சரவு நிறைந்த திருமண வாழ்க்கைக்குப் பிறகு, வீட்டிற்கு வந்தான். அவன் வீட்டிற்கு வரும் போது தன்னுடைய மனைவி பரிசுப் பொருளாக அழகிய 'டை'களுடன் தனக்காகக் காத்திருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தான். இதைத் தன் மனைவியிடமிருந்து அவன் எதிர்பார்த்தேயிருக்கவில்லை. பரிசுப்பொருளான 'டை'களுடன் அவள் காத்திருப்பது என்பது சாத்தியமேயில்லை. அவன் மிகமகிழ்ச்சியுடன் சொன்னான் : "இரவு உணவு தயாரிக்காதே, நான் சில நிமிடங்களில் தயாராகி விடுகிறேன், இருவரும் நகரிலுள்ள ஹோட்டலுக்குச் செல்வோம்."

அவன் குளித்து, தயாராகி, தன் மனைவி அன்பளிப்பாகக் கொடுத்த 'டை'களில் ஒன்றையும் அணிந்து கொண்டான். அவன் மனைவி அவனை உற்றுப் பார்த்து விட்டுக் கேட்டாள் : "என்ன ? இன்னொரு 'டை'யை நீங்கள் விரும்பவில்லையா ? அப்படியானால் அது நல்ல 'டை' இல்லை என்று நினைக்கிறீர்கள். அப்படித்தானே ?" ஒரு மனிதன் ஒரு நேரத்தில் ஒரு 'டை'யைத்தான் அணிந்து கொள்ள முடியும். ஆனால் எந்த 'டை'யை அவன் தேர்ந்தெடுத்தாலும் அதுதான் நிகழ்ந்தது : "அப்படியானால்

என்ன நினைக்கிறீர்கள் ? இன்னொரு 'டை' அழகாக இல்லை அப்படித்தானே ?"

இது சண்டை யிடுவதற்கான, வாக்குவாதம் செய்வதற்கான பழைய வழக்கம். ஒரே பெண் தினமும் சண்டையிடுவதற்காக புதுப்புதுக் காரணங்களைக் கண்டுபிடிப்பாள் என்பதைக் குறிப்பிடும் கதை. அவள் எப்போதும் வெற்றியும் அடைந்து விடுவாள், ஏனெனில் நீங்கள் தேடும் போது, கண்டடைவீர்கள். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : எதையெல்லாம் நீங்கள் தேடுகிறீர்களோ, அவற்றைக் கண்டுபிடிப்பீர்கள். உலகம் மிகப் பரந்தது, இரு உயிர்வாழ்தல் என்பதே செழுமையானது. அதனால் கண்டுபிடிக்க வேண்டும் என நீங்கள் தீவிரமாக நினைத்தால், நிச்சயம் கண்டுபிடிப்பீர்கள்.

சில சமயங்களில், கணவன் 'கோட்'டில் முடி இருப்பதைக் கண்டுபிடிப்பாள், பிறகு கணவன் வேறு எந்தப் பெண்ணுடன் சென்றான் என்பதைப் பற்றி சண்டை போடுவாள். ஆனால் ஒருமுறை இந்த சண்டை நிகழ்ந்தபின், அடுத்த ஏழு நாட்களுக்கு எந்தத் தவறும் கண்டுபிடிக்க முடியாது. அவள் முயற்சி செய்து, முயற்சி செய்து பார்த்தாலும், சண்டை போட ஒரு காரணமும் கிடைக்காது. அதனால் ஏழாவது நாள், அவள் கணவன் வீட்டிற்கு வரும்போது, அவள் கத்திக் கொண்டு, அழுது, தன் கணவனின் மார்பில் அடிப்பாள். கணவன் கேட்பான், "இப்பொழுது என்ன செய்கிறாய் ? என்ன விஷயம் ? என்ன நடந்தது ?"

மனைவி சொல்வாள், "ராஸ்கல், அந்தப் பெண்ணுடன் உன் உறவை முடித்துக் கொண்டுவிட்டாய், இப்பொழுது தலை வழுக்கையான ஒரு பெண்ணுடனா சென்று கொண்டிருக்கிறாய் ?"

மனம் எப்பொழுதும் பிரச்சினைகளையே தேடிக் கொண்டிருக்கிறது. சிரிக்காதீர்கள், ஏனெனில் இது உங்கள் மனத்தைப் பற்றியது. சிரிப்பதன் மூலம் உங்களை நீங்களே

ஏமாற்றிக் கொள்ளலாம். இது வேறு யாரோ ஒருவரைப் பற்றியது என நீங்கள் நினைக்கலாம். இது உங்களைப் பற்றியது. நான் என்ன சொன்னாலும், அவை உங்களைப் பற்றித்தான்.

மனது தேர்ந்தெடுக்கிறது, எப்போதும் பிரச்சினைகளையே தேர்ந்தெடுக்கிறது, ஏனெனில் தேர்ந்தெடுத்தலுடன், பிரச்சினையும் சேர்ந்தே வருகிறது. உங்களால் கடவுளைத் தேர்ந்தெடுக்க முடியாது. நீங்கள் தேர்ந்தெடுத்தால், அங்கு பிரச்சினை வரும். உங்களால் சன்னியாசத்தைத் தேர்ந்தெடுக்க முடியாது. நீங்கள் தேர்ந்தெடுத்தால், அங்கு பிரச்சினை வரும். உங்களால் சுதந்தரத்தைத் தேர்ந்தெடுக்க முடியாது. அப்படித் தேர்ந்தெடுத்தாலும், அது சுதந்தரமாக இருக்காது.

பிறகு எப்படித்தான் இது நிகழ்கிறது ? 'கடவுள்' என்பது எப்படி நிகழ்கிறது, சன்யாசம் எப்படி நிகழ்கிறது, சுதந்தரம், மோட்சம் எப்படி நிகழ்கிறது ? நீங்கள் தேர்ந்தெடுத்தலின் முட்டாள்தனத்தை உணரும் போதுதான் இவை நிகழ்கின்றன. இது புதுவகையான தேர்ந்தெடுத்தல் அல்ல. அனைத்து தேர்வுகளையும் துறப்பதே. மொத்தத்தைப் பார்த்தீர்களெனில், சிரிக்கத் தொடங்கி விடுவீர்கள். தேர்ந்தெடுப்பதற்கு ஒன்றுமே இருக்காது. மொத்தம் ஒன்றாகத்தான் இருக்கும். பிறகு காலையில் நீங்கள் பேரரசனா, பிச்சைக்காரனா என்பதைக் குறித்துக் கவலைப்பட மாட்டீர்கள். மகிழ்ச்சியாயிருப்பீர்கள். ஏனெனில் மாலைக்குள் எல்லாம் ஒன்றாகத்தான் முடிய வேண்டும். எல்லாம் சமமாகத்தான் வேண்டும்.

சாவு சமப்படுத்துகிறது. சாவில் யாரும் பேரரசனுமல்ல. எவரும் பிச்சைக்காரனுமல்ல. சாவு மொத்தத்தை வெளிப்படுத்துகிறது. அது எப்பொழுதும் ஏழுதான்.

இரண்டு ஏற்பாடுகளுமே ஒன்றுதான். நினைவுபடுத்திக் கொள்ளுங்கள், செஸ்ட்நட்களின் மொத்த எண்ணிக்கை மாறவில்லை. ஆனால் ஒருவகையில் அந்தக் குரங்குகள் மகிழ்ச்சியடையவில்லை. இன்னொரு ஏற்பாட்டில் திருப்தியடைந்தன.

அந்தப் பாதுகாவலன் தயாராயிருந்தான்,
அவன் ஏற்பாட்டை மாற்றிக்கொள்ள –
இரண்டாம் நிலையிலுள்ளவரின் நிபந்தனையை நிறைவேற்ற.
அதனால் அவன் எதையும் இழந்துவிடவில்லை.

புரிந்து கொள்ளுதலுள்ள மனிதன் எப்பொழுதும் அடுத்தவர் கருத்துக்களையே பார்க்கிறான். தன்னையே மையப்படுத்திப் பார்ப்பதில்லை. குரங்குகள் இல்லை என்று கத்தியபோது, நீங்கள் குரங்குப் பயிற்சியாளராக இருந்திருந்தால், வெறுப்படைந்திருப்பீர்கள். இந்தக் குரங்குகள் கலகம் செய்ய முயற்சிக்கின்றன. கீழ்ப்படியாமல் இருக்கின்றன. இதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. இந்தச் செயல் உங்கள் உள் மனத்தைக் காயப்படுத்தியிருக்கலாம்.

ஒன்றுமேயில்லாத விஷயத்திற்கெல்லாம் நீங்கள் கோபப்படுகிறீர்கள். நீங்கள் கதவைத் திறக்க முயற்சித்து, அது திறக்கவில்லை என்றால், பைத்தியமாகி விடுகிறீர்கள். கடிதம் எழுத முயற்சிக்கும் போது, பேனா மென்மையாக, நன்றாக எழுதாவிட்டால், கோபப்படுகிறீர்கள். வேதனையடைகிறீர்கள், ஏதோ அந்தப் பேனா வேண்டுமென்றே செய்வதைப் போல், வேறு யாரோ அந்தப் படகிலிருப்பதைப் போல. அந்தப் பேனாவில் யாரோ அமர்ந்து கொண்டு, உங்களைத் தொந்தரவு செய்ய முயற்சிப்பதாகக் கூட நினைக்கிறீர்கள்.

இது சிறு குழந்தைகளின் எண்ணம் மட்டுமல்ல, உங்களுடையதும் தான். ஒரு குழந்தை மேஜையில் இடித்துக் கொண்டது என்றால், தவறை சரிசெய்ய அந்த மேஜையை அடித்துவிடும். பிறகு எப்பொழுதும், அந்த மேஜையை

எதிரியாகவே பார்க்கும். ஆனால், நீங்களும் இப்படித்தான் உயிரில்லாதவற்றுடன், பொருட்களுடன் கூட கோபமடைந்து சண்டையிடுகிறீர்கள், பைத்தியமாகிறீர்கள்.

இது தன்னை முன்னிலைப் படுத்துதல். அறிவாளி இதுபோல் தன்னையே மையமாக நினைக்க மாட்டான். அறிவாளி எப்பொழுதும் அடுத்தவர் நிலையிலிருந்து. தான் பார்ப்பான். கதவைப் பார்ப்பான். அது திறக்க வில்லை என்றால் அதைத் திறக்க முயற்சிப்பான். ஆனால் அவனால் அந்தக் கதவுடன் சண்டைபோட முடியாது, ஏனெனில் அந்தப் படகு வெறுமையாய் இருக்கிறது. அங்கே யாரும் கதவை மூட முயற்சிக்கவில்லை, உங்கள் முயற்சியைத் தடுக்கவில்லை.

மற்றவர்களின் நிபந்தனைகளைச் செயல்படுத்துவற்காக அந்தப் பயிற்சியாளன் தன்னுடைய ஏற்பாட்டை மாற்றிக் கொண்டான். அவன் குரங்குகளைப் பார்த்தான். அவற்றின் மனதைப் பார்த்தான். அவன் வெறுப்படைந்து விடவில்லை. அவன் ஒரு குரங்குப் பயிற்சியாளன், குரங்கு அல்ல. அவற்றைப் பார்த்து மனதுள் அவன் சிரித்திருக்க வேண்டும். ஏனெனில் அவனுக்கு மொத்தம் தெரியும். அவன் கீழ்ப்படிந்தான். அறிவாளி மட்டுமே கீழ்ப்படிவான். முட்டாள் எப்போதும் எதிர்த்துக் கொண்டேதான் இருப்பான். முட்டாள்கள் சொல்வார்கள், வளைந்து கொடுப்பதைவிட சாவது மேல், வளைவதை விட உடைந்து விடுவது மேல் என்று.

லாவோதஸூவும் சுவாங்தஸூவும் எப்போதும் இவ்வாறு சொல்வார்கள் : வேகமான காற்றடிக்கும் போது, முட்டாள் தனமாக ‘நான்’ என்ற தன்னுணர்ச்சி மரம் உடைந்து விழுந்து இறந்து விடும். புத்திசாலியான புல் வளைந்து கொடுக்கும். புயல்காற்று மறுபடியும் புல்லிடம் செல்லும். அந்தப் புல் நேராக நின்று சிரித்துக் கொண்டும், அனுபவித்துக் கொண்டுமிருக்கும். அந்தப் புல் அடுத்தவர்

நிலையிலிருந்து பார்க்கிறது. அந்த மரமோ தன்னையே முன்னிலைப் படுத்திப் பார்க்கிறது. அந்தப் பெரிய மரம் தனக்குத்தானே இவ்வாறு நினைத்துக் கொள்ளும் : "நான் தனிப்பட்டவன், யார் என்னை வளைக்க முடியும் ? யார் கீழ்ப்படியும் படி என்னை வற்புறுத்த முடியும்?" அந்தப் பெரியமரம், புயல் காற்றுடன் சண்டை போடும். புயலுடன் சண்டைபோடுவது முட்டாள் தனம், ஏனெனில் புயல் உனக்காக வரவில்லை. இதில் சிறப்பு ஏதுமில்லை. புயல் கடந்து செல்லும் போது நீ அங்கு இருக்கிறாய், இரண்டும் எதிர்பாராமல் ஒத்து நிகழ்கிறது, அவ்வளவுதான்.

குரங்குகள் மிருக இனம். அவை தம்மைத்தாமே மிக உயர்ந்த மிருகங்கள் என நினைத்துக் கொள்ளும். அவை அந்தக் குரங்குப் பயிற்சியாளனை வெறுப்படைச் செய்ய வில்லை. குரங்குகள், வெறும் குரங்குகள்தான். அவை அப்படித்தான் நடந்து கொள்ளும். அருகில் இருப்பதை மட்டுமே அவற்றால் பார்க்க முடியும், தூரத்தில் இருப்பதை அல்ல - தூரம் என்பது அவற்றைப் பொறுத்தவரை மிக அதிக தூரம். மாலையைப் பற்றி எண்ணிப் பார்ப்பது என்பது அவற்றுக்கு சாத்தியமேயில்லை. அவை காலையைப் பற்றி மட்டுமே அறிந்திருக்கின்றன.

அதனால் குரங்குகள், குரங்குகள்தான் ; புயல், புயல் தான். ஏன் வெறுப்படைய வேண்டும் ? அவை உங்களுடன் சண்டை போடவில்லை. அ்வை அவற்றின் வழியைப் பார்த்து போகின்றன, அவற்றின் பழக்க வழக்கங்களைச் செய்கின்றன. அதனால் அந்தக் குரங்குப் பயிற்சியாளன் வெறுப்படைய வில்லை. அவன் அறிவாளி, அதனால் கீழ்ப்படிந்தான், அந்த புல்லைப் போல. உங்களையே மையப்படுத்திப் பார்க்கும் போது இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். யாராவது, ஏதாவது சொன்னால், உடனே வேதனைப்படுகிறீர்கள், ஏதோ அது உங்களைப் பார்த்து சொல்லப்பட்டதைப் போல.

அந்தப் படகில் ஏராளமானோர் இருக்கிறீர்கள். அது உங்களைக் குறித்து சொல்லப்படாததாக இருக்கலாம். வேறொருவர் தன் முதன்மைத் தன்மையை வெளிப்படுத்தி யிருக்கலாம்.

யாராவது சொல்லும் போது, "நீ என்னை அவமரியாதை செய்கிறாய்" என்பார்கள். உண்மையாகக் குறிப்பிடப்படுவது வேறொன்று. அவன் இன்னும் கொஞ்சம் புத்திசாலியாக இருந்தால், இன்னொரு விதத்தில் அதைச் சொல்லியிருப்பான். அவன் சொல்லுவான் : "நான் அவமரியாதையாக உணர்கிறேன். நீங்கள் என்னை அவமரியாதை செய்யாமல் இருந்திருக்கலாம். ஆனால் நீங்கள் எதைச் சொன்னாலும், நான் அவமரியாதை செய்யப்படுவதாக உணர்கிறேன்." இதுதான் மற்றவரை முன்னிலைப் படுத்திப் பார்த்தல்.

ஆனால், யாரும் மற்றவரைப் பற்றி உணர்வதேயில்லை. மற்றவர்களின் கருத்தை தன் நிபந்தனையுடன் சேர்த்துத்தான் பார்க்கிறார்கள். மற்றவன் எப்போதும் சொல்கிறான்: "நீ என்னை அவமரியாதை செய்துவிட்டாய்." இதைக் கேட்கும் போது, நீங்களும் உங்களை மையப்படுத்திப் பார்க்கத் தொடங்கி விடுகிறீர்கள். இரண்டு படகுகளும் நிரம்பி விட்டன, மிக அதிகமான கூட்டம். இரண்டும் மோதலுக்கு, பகைமைக்கு, வன்முறைக்குத் தயாராகின்றன.

நீங்கள் அறிவாளியாக இருந்தால், மற்றவர், "நீ என்னை அவமரியாதை செய்து விட்டாய்," என்று சொல்லும் போது, அந்த விஷயத்தை அவர் நிலையிலிருந்து நீங்கள் பார்த்து இவ்வாறு நினைப்பீர்கள் : "ஏன் அவர் அவமரியாதையாக உணர்கிறார் ?" அவர் உணர்வுகளைப் புரிந்து கொள்ள முயற்சிப்பீர்கள், சரியாகப் புரிந்து கொண்டு கீழ்ப்படிவீர்கள். குரங்குகள் குரங்குகள்தான். ஏன் கோபப்பட வேண்டும், ஏன் வெறுப்படைய வேண்டும் ?

இது முல்லா நஸ்ருதினால் சொல்லப்பட்டது. வயதான காலத்தில் அவர் சம்பளமில்லாத நீதிபதியாக இருந்த

சமயத்தில், முதலில் அவரிடம் வந்த வழக்கு ஒரு திருட்டுக் கொடுத்த மனிதனின் வழக்கு. நஸ்ருதின் அவனுடைய கதையைக் கேட்டுவிட்டு "நீ சொல்வது சரிதான்" என்றார். இன்னொருவரின் கதையை அவர் கேட்கவில்லை.

நீதிமன்றத்திலிருக்கும் பணியாளர் அவர் காதில் முணுமுணுத்தார் : "நீங்கள் இவ்விடத்திற்குப் புதிது, நஸ்ருதின். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியவில்லை. தீர்ப்பு சொல்வதற்கு முன் அடுத்த பக்கத்தில் உள்ளவரின் வாதத்தையும் கவனிக்க வேண்டும்."

நஸ்ருதின் 'சரி' என்றார்.

மற்றவன், அதாவது அந்தத் திருடன் அவன் கதையைக் கூறினான். நஸ்ருதின் அதைக் கவனித்து விட்டு "நீ சொல்வது சரிதான்" என்றார்.

நீதிமன்றப் பணியாளர் குழப்பிப் போய்விட்டார் : 'இந்தப் புதிய நீதிபதி அனுபவம் இல்லாதவர் மட்டுமல்ல, சித்தசுவாதீனமும் இல்லாதவர்.' மறுபடியும் அவர் காதில் முணுமுணுத்தார் : "என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ? இருவருமே சரியாக இருக்க முடியாது!"

நஸ்ருதீன் சொன்னார் : "ஆமாம், நீ சொல்வது சரிதான்."

இதுதான் அடுத்தவர் நிலையிலிருந்து பார்க்கும் அறிவாளி மனிதனின் நிலை. அவன் கீழ்ப்படிவான். எப்போதுமே அவன் கீழ்ப்படிகிறான், எப்பொழுதுமே 'ஆமாம்' என்றுதான் சொல்கிறான். ஏனெனில், நீங்கள் இல்லை என்று சொன்னீர்கள் எனில், உங்கள் படகு வெறுமையாக இல்லை. 'இல்லை' என்பது எப்போதும் 'நான்' என்ற தன்னுணர்ச்சியிலிருந்துதான் வரும். அதனால் அறிவாளி மனிதன் இல்லை

என்று சொல்ல வேண்டுமானால் கூட, 'ஆமாம்' என்ற பதம் வரும்படியே சொல்லுவான். அவன் முழுவதுமாக, உடனடியாக இல்லை என்று சொல்லமாட்டான். 'ஆம்' என்ற பதம் வரும்படிதான் பயன்படுத்துவான். முட்டாள் மனிதன் 'ஆம்' என்று சொல்ல வேண்டுமானால் கூட, 'இல்லை' என்று சொல்ல முடியாததன் வருத்தத்தை உணர் வான். 'இல்லை' என்ற பதம் வரும்படி தான் சொல்வான், கீழ்ப்படிய வேண்டும் கட்டாயம் வந்தால் கூட, எரிச்சலுடன் தான் கீழ்ப்படிவான். எதிர்ப்போடும், வெறுப்போடும் தான் கீழ்ப்படிவான். குரங்குப் பயிற்சியாளன் கீழ்ப்படிந்தான்.

அந்தப் பாதுகாவலன் தயாராயிருந்தான்,
அவன் ஏற்பாட்டை மாற்றிக் கொள்ள –
இரண்டாம் நிலையிலுள்ளவரின் நிபந்தனையை நிறைவேற்ற.
அதனால் அவன் எதையும் இழந்துவிடவில்லை.

எந்த அறிவாளியும், முட்டாள் மனிதர்களிடம் 'ஆம்' என்று சொல்வதால் எதையும் இழந்து விடுவதில்லை. எந்த அறிவாளியும் கீழ்ப்படிவதால் எதையும் இழந்து விடுவதில்லை. அனைத்தையும் வெற்றி கொள்கிறான். அங்கு 'நான்' என்ற எண்ணம் இல்லை. அதனால் அங்கு எந்த இழப்பும் இருக்க முடியாது. இழப்பு என்பதே 'நான்' என்ற எண்ணத்தால்தான் உணரப்படுகிறது. நான் இழந்து விட்டேன். இழந்துவிட்டீர்கள் என ஏன் உணர்கிறீர்கள் ? - ஏனெனில் இழக்க வேண்டும் என எப்போதும் நீங்கள் விரும்பியதில்லை. நீங்கள் தோல்வியடைந்து விட்டதாக ஏன் உணர்கிறீர்கள் ? ஏனெனில் எப்பொழுதும் வெற்றிபெறவே நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் ஏன் உங்களைப் பிச்சைக்காரனாக உணர்கிறீர்கள் ? ஏனெனில் எப்பொழுதும் பேரரசனாக இருக்கவே நீங்கள் விரும்புகிறீர்கள்.

அறிவாளி மனிதன் ஏதாயிருப்பினும் எளிதாக அதை எடுத்துக் கொள்வான். அவன் மொத்தத்தை ஏற்றுக் கொள்வான். அவனுக்குத் தெரியும். காலையில் பிச்சைக் காரன், மாலையில் பேரரசன் அல்லது காலையில் பேரரசன், மாலையில் பிச்சைக்காரன் என்பது. எது நல்ல ஏற்பாடு ?

ஏற்பாடு செய்யும் படி அறிவாளி மனிதனை வலியுறுத்தினால், அவன் காலையில் பிச்சைக்காரனாகவும், மாலையில் பேரரசனாகவும் இருப்பதையே தேர்ந்தெடுப்பான். அறிவாளி எப்போதுமே தேர்ந்தெடுப்பதில்லை. ஆனால் நீங்கள் வற்புறுத்தினால், காலையில் பிச்சைக்காரனாகவும், மாலையில் பேரரசனாகவும் இருப்பதே பரவாயில்லை என்று சொல்லுவான். ஏன் ? ஏனெனில், காலையில் பேரரசனாக இருந்துவிட்டு, மாலையில் பிச்சைக்காரனாக மாறும் போது, மிகவும் கஷ்டமாயிருக்கும். ஆனால் வேறு வழியில்லை.

அறிவாளி மனிதன் வலியை முதலிலும், இறுதியில் மகிழ்ச்சியையும் தேர்ந்தெடுப்பான். ஏனெனில் ஆரம்பத்தில் வலியான சூழலை உணர்வீர்கள், பிறகு வலிக்கு எதிரான மகிழ்ச்சியை அடையும் போது அது மிகுந்த சந்தோஷ மளிக்கும். முதலில் மகிழ்ச்சியாக இருந்தால், அப்போது ஒரு மென்மையான சூழலை உணர்வீர்கள், அதன் பின் வரும் வலி மிக அதிதமானதாக, தாள முடியாததாக இருக்கும்.

மேற்கும், கிழக்கும் வித்தியாசமான ஏற்பாடுகளை உருவாக்கியுள்ளன. கிழக்கில், முதல் இருப்பதைந்து வருடங்களில் ஒரு குழந்தை மிகக் கடினமான பாதையைக் கடக்க வேண்டியிருக்கும். இதுதான் ஆயிரக்கணக்கான வருடங்களாக பின்பற்றப்பட்டு வரும் ஒழுங்குமுறை, மேற்கு, கிழக்குப் பகுதிக்கு வந்து அதிகாரம் செய்யும் வரை.

குழந்தை காட்டுப் பகுதியிலுள்ள குருவின் வீட்டிற்குச் செல்ல வேண்டும், எவ்வளவு கஷ்டப்பட வேண்டுமோ அவ்வளவு கடினமான வாழ்வை வாழ வேண்டும். பிச்சைக் காரனைப் போல தரையில் கிடக்கும் பாயில் உறங்க வேண்டும். எந்த வசதியும் இருக்காது. பிச்சைக்காரனைப் போல சாப்பிட வேண்டும் ; நகரத்திற்குச் சென்று குருவிற்கும் சேர்த்து பிச்சை எடுக்க வேண்டும், மரம் வெட்ட வேண்டும், தண்ணீர் குடிக்க மிருகங்களை ஆற்றிற்கு அழைத்துச் செல்ல வேண்டும், உணவுக்காகக் காட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டும்.

இருபத்தைந்து வயதில் மிக எளிமையான, கடின வாழ்க்கைக்குப் பழகிக்கொள்வான், அவன் பிச்சைக் காரனாகப் பிறந்திருந்தாலும் சரி, ஏழையாகப் பிறந்திருந் தாலும் சரி - எந்த வேறுபாடும் இருக்காது. பேரரசனின் மகனாக இருந்தால் கூட, அவன் இதே வழக்கத்தைத்தான் பின்பற்ற வேண்டும், எந்த உயர்வு வித்தியாசமும் இருக்காது. பிறகு அவனுக்கு உலக வாழ்க்கை தெரியவரும் போது, அது பேரானந்தமாக இருக்கும்.

கிழக்குப்பகுதி எப்போதும் திருப்தியாக இருந்த தென்றால், இதுதான் அந்த சுதந்தரம், ஏற்பாடு. ஏனெனில் வாழ்க்கை எதையெல்லாம் கொடுக்கிறதோ, அவையெல்லாம் நீங்கள் ஆரம்பித்த நிலையைவிட உயர்வானதாகவேயிருக்கும். ஒரு குழந்தை குடிசையில் வாழ வருகிறது. கூரையேயில்லாத தரையில் படுத்திருப்பதை ஒப்பிட்டுப் பாாக்கும் போது அவனுக்கு அது பெரிய அரண்மனையாகத் தெரியும். சாதாரண படுக்கை, சொர்க்கமாக இருக்கும். சாதாரண உணவு, ரொட்டி, வெண்ணெய், உப்பு ஆகியவை பரமானந் தமாக இருக்கும். ஏனெனில் குருவின் வீட்டில் வெண்ணெய் இல்லை. வாழ்க்கை எதைக் கொடுத்தாலும் அது அவனுக்கு மகிழ்ச்சியாகத்தானிருக்கும்.

மேற்கத்திய முறை, இதற்கு எதிர்ப்பதமாகத் தான் இருக்கும். நீங்கள் மாணவராக இருக்கும் போது, அனைத்து வசதிகளும் கொடுக்கப்பட்டு விடுகின்றன. தங்கும் விடுதிகள், அழகான பல்கலைக் கழகம், மிக அழகான அறைகள், வகுப் பறைகள், ஆசிரியர்கள் - அனைத்து ஏற்பாடுகளும் உங்களுக் காகச் செய்யப்படுகின்றன - மருத்துவ வசதிகள், உணவு, சுகாதாரம், அனைத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, கவனிக்கப் படுகின்றன. இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு, வாழ்க்கையின் போராட்டத்திற்குள் தள்ளப்படுகிறீர் கள். நீங்கள் வீட்டிற்குள் வளரும் செடிபோல் இருந்து விட்டீர்கள் - போராட்டம் என்றால் என்ன என்று உங்களுக் குத் தெரியாது. பிறகு ஒரு அலுவலகத்தில் பணியாளராகவோ, பள்ளிக்கூடத்தின் ஆசிரியராகவோ ஆகிறீர்கள். வாழ்க்கை நரகமாக இருக்கும். பிறகு உங்கள் வாழ்க்கை முழுவதும், உறுமிக் கொண்டுதானிருப்பீர்கள். பிறகு உங்கள் முழு வாழ்க்கையும், நீண்ட முணுமுணுப்பாக, குறைசொல்லி, குறைசொல்லி எல்லாமே தவறாகவே இருக்கும். இவ்வாறு தான் நடக்கும்.

குரங்குப் பயிற்சியாளன் சொன்னான் : "காலையில் மூன்று, மாலையில் நான்கு."

ஆனால் குரங்குகள் வலியுறுத்தின : "காலையில் நான்கு வேண்டும், மாலையில் மூன்று வேண்டும்."

காலையில் நான்கு, மாலையில் மூன்று. பிறகு மாலை மேகமூட்டமாகக் காணப்படப் போகிறது. இறந்த காலத் துடன் ஒப்பிட்டுப் பார்ப்பீர்கள். காலையுடன். காலையில் பேரரசன், மாலையில் பிச்சைக்காரன்... பிறகு மாலை மிகவும் பரிதாபகரமானதாயிருக்கும். மாலை உச்ச நிலையாக இருக்க வேண்டும், பரிதாபகரமானதாய் அல்ல.

அந்தக் குரங்குகள் புத்திசாலித்தனமான ஏற்பாட்டைத் தேர்ந்தெடுக்கவில்லை. முதலாவது, அறிவாளி மனிதன்

எப்போதும் தேர்ந்தெடுக்கமாட்டான். தேர்ந்தெடுத்தலே இல்லாத வாழ்க்கைதான் வாழ்வான். ஏனெனில், அவனுக்குத் தெரியும், என்ன நடந்தாலும் மொத்தம் ஒன்றுதான் என்று. ஒருவேளை, மற்றவர்களின் வலியுறுத்தல்களின் பொருட்டு அவன் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டாயம் வந்திருந்தால், காலையில் மூன்று, மாலையில் நான்கு என்றே தேர்ந்தெடுத்திருப்பான். ஆனால் அந்தக் குரங்குகள் சொல்லின : "இல்லை, நாங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம். காலையில் நான்கு எடுத்துக் கொள்கிறோம்." அந்தக் குரங்குப் பயிற்சியாளர், பாதுகாவலர் இந்த ஏற்பாட்டிற்கு ஒத்துக் கொண்டார். இதனால் அவர் எதையும் இழக்கப் போவதில்லை. ஆனால் அந்தக் குரங்குகளுக்கு என்ன நேர்ந்தது ? அவை ஏதோ ஒன்றை இழந்தன.

அதனால், நீங்கள் எப்பொழுதெல்லாம் அறிவாளிகளின் அருகில் இருக்கிறீர்களோ, அப்பொழு தெல்லாம் ஏற்பாடுகளை அவனே செய்து கொள்ள விட்டு விடுங்கள். அவன் ஏற்பாட்டில் தலையிடாதீர்கள். முதலில், தேர்ந்தெடுப்பது என்பதே அடிப்படையில் தவறு. இரண்டாவது, அந்தக் குரங்குகள் எதைத் தேர்ந்தெடுத்தாலும், அது தவறாகத் தானிருக்கும். குரங்கின் மனம் உடனடியாக நடப்பதைத்தான் கவனிக்கும். உடனடியான மகிழ்ச்சியை. போகப் போக என்ன நடக்கும் என்ற கவலையெல்லாம் குரங்கிற்கில்லை. அவனுக்குத் தெரியாத, முழுமையான கண்ணோட்டம் அவனுக்கில்லை. அதனால் தேர்ந்தெடுப்பதை அறிவாளி மனிதனின் பொறுப்பில் விட்டுவிட வேண்டும்.

ஆனால் மொத்த ஏற்பாடும் மாறிவிட்டன. கிழக்கில் அறிவாளி மனிதர்கள் முடிவெடுத்தனர். மேற்கத்திய நாடுகளில் குடியரசுமுறை இருக்கிறது. குரங்குகள் ஓட்டுப் போட்டுத் தேர்ந்தெடுக்கின்றன. இப்பொழுது, கிழக்கத்திய பகுதிகளையும் குடியரசாக மாற்றி விட்டன - குடியரசு என்பது குரங்குகள் ஓட்டுப் போட்டு தேர்ந்தெடுப்பதைக் குறிக்கிறது.

மன்னராட்சி முறை என்றால், அறிவாளிகள் ஏற்பாடு களைச் செய்வார்கள், குரங்குகள் கீழ்ப்படிந்து அவற்றைப் பின்பற்றும். மன்னராட்சி முறையைச் சரியாக செயல் படுத்தி னால் அதைவிடச் சிறந்தது வேறு ஒன்றும் இருக்காது. குடியரசு என்பதே ஒரு குழப்பநிலைதான். அந்தக் குரங்குகள் மிகவும் மகிழ்ச்சியாயிருந்தன. ஏனெனில் அவைகளே ஏற்பாட்டைத் தேர்ந்தெடுத்தன. ஆனால், தேர்ந்தெடுக்கும் பொறுப்பு அறிவாளி யின் கைகளில் இருக்கும் போது உலகம் மகிழ்ச்சியாகக் காணப்படும்.

நினைவுபடுத்திப் பாருங்கள், அரசர்கள் எப்பொழுதும் முக்கியமான விஷயங்களில் தீர்மானம் எடுப்பதற்கு முன் பல அறிஞர்களைத் கலந்தாலோசிப்பார்கள். அறிவாளி மனிதர் கள் எல்லாம் அரசர்கள் அல்ல. ஏனெனில் அவர்களுக்கு அதைப் பற்றியக் கவலை இல்லை, அவர்கள் பிச்சைக் காரர்கள், குடிசைகளிலும், காடுகளிலும் வாழ்பவர்கள். எப்பொழுதெல்லாம் பிரச்சினைவருகிறதோ, அப்பொழு தெல்லாம் பிரதிநிதிகளை மக்களிடம் அனுப்பி "என்ன செய்ய வேண்டும் ?" என்று ஆலோசனை கேட்க மாட்டான். காட்டிற்கு ஓடிச்சென்று அனைத்தையும் துறந்தவர்களிடம் ஆலோசனை கேட்பான். ஏனெனில், அவர்களுக்கு முழுமை யான கண்ணோட்டம் இருக்கும், எந்த ஒட்டுதலுமில்லை, பிணைப்பு மில்லை, எதுவுமேயில்லை. எந்தத் தேர்ந்தெடுத்தலுமில்லை. அவர்கள் தேர்ந்தெடுத்தலே இல்லாத நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் முழுமையைப் பார்த்தே தீர்மானிக்கிறார்கள்.

உண்மையான அறிவாளி, கேள்வியின் இரு பக்கங்களையும்
பார்க்கிறான் எந்தப் பாகுபாடும் இல்லாமல்,
இரண்டையும் தாவோவின் வெளிச்சத்தில் பார்க்கிறான்.
இதுதான் ஒரே நேரத்தில் இரண்டு மார்க்கங்களைப்
பின்பற்றுதல் எனப்படுகிறது.

மொத்தத்தைப் பார்த்தல் என்பதன் பொருள், ஒரே நேரத்தில் இரண்டு மார்க்கங்களைப் பின்பற்றுதலே ஆகும்.

பிறகு, காலையில் நான்கு, மாலையில் மூன்று என்பதைப் பற்றிய கேள்வியே இருக்காது. முழுவாழ்க்கைப் பற்றி, ஏஃ..? பற்றிய கேள்வி மட்டுமே இருக்கும்.

ஏற்பாடு என்பதே அற்பமானது. ஏற்பாடுகள் தன்னை முன்னிலைப் படுத்தியே அமைக்கப்படுகின்றன. ஆனால், மொத்தத்தில் ஏழு இருக்கும், இரண்டு மார்க்கங்கள் இணைகின்றன. அறிவாளி எல்லாவற்றிலும் முழுமையைத் தான் பார்க்கிறான். உடலுறவு உங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. ஆனால் அதிலிருந்து வரும் வலியையும் அவன் பார்க்கிறான். செல்வம் உங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக் கிறது, ஆனால், அதனுடன் வரும் மூச்சுத் திணறலையும் அவன் உணர்கிறான். வெற்றி உங்களை மகிழ்ச்சியாக்குகிறது. ஆனால், அதன் உச்சத்திலிருக்கும் அதள பாதாளத்தையும் அவன் பார்க்கிறான், தோல்வி உச்ச நிலையை அடையும் போது, அது தாங்கமுடியாத வலியாகி விடுகிறது.

அறிவாளி முழுமையைப் பார்க்கிறான். நீங்கள் முழுமையைப் பார்க்கும் போது, எந்தத் தேர்ந்தெடுத்தலும் இல்லாமல் போகிறது. பிறகு ஒரே சமயத்தில் இரு மார்க்கங்களைப் பெறுகிறீர்கள். காலை, மாலை இரண்டும் இப்போது ஒன்றாக இருக்கின்றன. நான்கும், மூன்றும் இப்போது சேர்ந்திருக்கின்றன. இப்பொழுது எதுவுமே துண்டுகளாக இல்லை, அனைத்துமே முழுமையாகிவிட்டன. இந்த முழுமையைப் பின்பற்றுதல்தான் 'தாவோ.' இந்த முழுமையைப் பின்பற்றுதலே உங்கள் மதமாகிவிடும். இந்த முழுமையைப் பின்பற்றுதலே 'யோகா.'

இன்றைக்கு இது போதும்.

## வெற்றுப் படகு



# 2

## வெற்றி அடைதலின் அவசியம்

ஒரு வில்லாளன் வேடிக்கைக்காக எய்யும் பொழுது
அவனிடம் முழுத்திறமையும் இருக்கிறது.

அவன் ஒரு பித்தளைத் தகடுக்காக எய்யும் போது
ஏற்கெனவே மிகுந்த கலவரத்துடனிருப்பான்.

தங்கப் பரிசுக்காக அவன் எய்கிறானெனில்.
அவன் பார்வையே இழந்த நிலைக்குள்ளாவான்.
அல்லது இரண்டு இலக்குகளைப் பார்ப்பான்.
அவன் மனநிலை தவறுகிறான்.
அவன் திறமை மாறிவிடவில்லை.
ஆனால் அந்தப் பரிசு அவனைப் பிரித்து விடுகிறது.

அவன் கவனமாய் இருக்கிறான்.
வெற்றி பெறுவதைப் பற்றியே அதிகமாய் சிந்திக்கிறான்.
எய்வதைக் காட்டிலும் –
வெற்றி அடைதலின் அவசியம்
அவன் சக்தியை நீக்கிவிடுகிறது.

# வெற்றி அடைதலின் அவசியம்



மனம் முழுவதும் கனவுகளால் நிரம்பியிருந்தால் உங்களால் சரியாகப் பார்க்க முடியாது. இதயம் முழுவதும் ஆசைகளால் நிரம்பியிருந்தால் நீங்கள் சரியாக உணர .முடியாது. ஆசைகள், கனவுகள் மற்றும் நம்பிக்கைகள் - எதிர்காலம் உங்களைத் தொந்தரவு செய்கிறது, திசைமாற்றுகிறது. ஆனால் இது என்னவாயிருந்தாலும், இது நிகழ்காலம்தான். ஆசை உங்களை எதிர் காலத்திற்கு இட்டுச் செல்கிறது. வாழ்க்கை என்பது இங்கேதான், இப்போதுதான். உண்மை என்பது இங்கேதான், இப்போதுதான். ஆசை உங்களை எதிர்காலத்திற்கு இட்டுச் செல்கிறது. பிறகு நீங்கள் இங்கே இருப்பதில்லை. நீங்கள் பார்க்கிறீர்கள், ஆனால் பார்ப்பதில்லை, நீங்கள் கேட்கிறீர்கள், ஆனால் கேட்பதில்லை. நீங்கள் உணர்கிறீர்கள், ஆனால் மந்தமாக, அது ஆழ்ந்த உணர்வாக இருக்காது, அது

ஊடுருவிச் செல்வதாக இருக்காது. இப்படித்தான் உண்மை நழுவவிடப்படுகிறது.

மக்கள் கேட்டுக்கொண்டே தான் இருக்கிறார்கள். தெய்விகம் எங்கிருக்கிறது ? உண்மை எங்கேயிருக்கிறது ? தெய்விகத்தையும், உண்மையையும் கண்டுபிடிக்கக் கேட்கப்படும் கேள்வி இதுவல்ல. இது எப்பொழுதும் இங்கு தானிருக்கிறது. வேறெங்கும் இருப்பதில்லை, இருக்க முடியாது. நீங்கள் எங்கேயிருக்கிறீர்களோ, அங்குதானிருக் கிறது. ஆனால் நீங்கள் அங்கில்லை, உங்கள் மனம் எங்கோ உள்ளது. உங்கள் கண்கள் கனவுகளால் நிரம்பியுள்ளன. உங்கள் இதயம் ஆசைகளால் நிரம்பியுள்ளது. எதிர்காலத்தை நோக்கி நீங்கள் நகர்கிறீர்கள். எதிர்காலம் என்பது என்ன, மாயையைத் தவிர ? அல்லது, இறந்த காலத்தை நோக்கி நகர்கிறீர்கள், இறந்த காலம் ஏற்கெனவே செத்துப் போய்விட்ட ஒன்று. இறந்த காலம் இனிமேல் இல்லை, எதிர்காலம் இனிமேல்தான். இவை இரண்டிற்கு மிடையே உள்ளதுதான் நிகழ்காலம். இந்தக்கணம் மிகக் குறுகியது, அணுவைப் போன்றது, உங்களால் பிரிக்க முடியாது, இது வகுக்க முடியாத ஒன்று. இந்தக் கணம் கண் இமைக்கும் பொழுதில் கடந்து சென்று விடும். ஆசை நுழையும் போது, நீங்கள் அக்கணத்தைத் தவற விடுகிறீர்கள் ; அங்கு கனவு இருந்தால், அந்தக் கணத்தை இழந்து விடுகிறீர்கள்.

மதத்தின் முழுமை உங்களை எங்கோ கொண்டு செல்வ தல்ல, உங்களை, இங்கே, இப்போதே கொண்டு வருவது, முழுமைக்கே உங்களைக் கொண்டு வருவது, நீங்கள் எப்போதும் எங்கேயிருக்கிறீர்களோ அங்கேயே திரும்புவது. ஆனால் தலை எங்கோ சென்று விட்டது, வெகுதூரத்திற்கு. இந்தத் தலை திரும்பக் கொண்டு வரப்பட வேண்டும். அதனால், கடவுள் வேறெங்கோ கண்டுபிடிக்கப்படுவது இல்லை. ஏனெனில் நீங்கள் எங்கேயோ தேடுகிறீர்கள்,

அதனால்தான் நீங்கள் அவரைத் தவறவிடுகிறீர்கள். அவர் இங்குதான் எல்லா நேரமும் இருக்கிறார், உங்களுக்காக் காத்துக் கொண்டு.

ஒருமுறை முல்லா நஸ்ரூதின் நன்றாகக் குடித்து விட்டுத் தடுமாறியபடியே வீட்டிற்கு வர நேர்ந்தது. அவர் வீட்டுக் கதவை பலமுறை தட்டினார். ஏற்கெனவே நள்ளிரவு கடந்து விட்டது என்று அவர் மனைவி கூறினார். முல்லா கேட்டார்: "முல்லா நஸ்ருதீன் எங்கே வசிக்கிறார் என்று சொல்ல முடியுமா அம்மா ?"

அவர் மனைவி சொன்னார் : "இது மிகவும் அதிகம். நீங்கள்தான் முல்லா நஸ்ரூதின்."

அவர் சொன்னார் : "அதுசரி, அது எனக்குத் தெரியும், ஆனால் இது என் கேள்விக்கான பதில் அல்ல. அவர் எங்கு வசிக்கிறார் ?"

இதுதான் சூழ்நிலை. ஆசைகளுடன் குடிக்கிறீர்கள், தடுமாறியபடிச் செல்கிறீர்கள், நீங்கள் உங்கள் கதவையே தட்டி உங்கள் வீடு எங்கே என்று கேட்கிறீர்கள், உண்மையாகவே நீங்கள் யாரென்று நீங்கள் கேட்கிறீர்கள். இது வீடு, அதை விட்டு நீங்கள் விலக மாட்டீர்கள், விட்டு விலகுவது என்பது சாத்தியமில்லை. அது ஏதோ வெளியிலிருக்கும் ஒன்றில்லை, நீங்கள் விட்டுச்செல்வதற்க்கு, அது உங்களுக்குள்ளிருப்பது, உங்களிலிருப்பது,

கடவுள் எங்கே என்று கேட்பது முட்டாள் தனம். ஏனெனில் உங்களால் கடவுளை இழக்க முடியாது. அது உங்களுக்குள் இருப்பது, உங்களின ஆழ்ந்த பகுதி, உங்களின் உள்ளகம். உங்கள் இருத்தல் ; அவரில் நீங்கள் மூச்சு விடுகிறீர்கள். அவருக்குள் வாழ்கிறீர்கள். இதைத்தவிர வேறு எப்படியும் இருக்கமுடியாது. என்ன நிகழ்கிறது என்றால்.

நீங்கள் அதிகமாகக் குடித்துவிட்டு உங்கள் முகத்தையே அறிந்து கொள்ள முடியாத நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். குடிமயக்கத்திலிருந்து நீங்கள் மீளாவிட்டால், தொடர்ந்து தேடிக்கொண்டும், தவறவிட்டுக் கொண்டும் தான் இருப்பீர்கள்.

தாவோ, ஜென், யோகா, சூஃபிஸம், ஹசிதிஸம் இவையெல்லாம் உங்களைத் திரும்பக் கொண்டு வரும் வழிமுறைகள், குடிமயக்கத்திலிருந்து மீட்கும் முறை, குடியை அழிக்கும் முறை. ஏன் மிகுந்த குடிபோதையில் இருக்கிறீர்கள் ? இந்த நிலைக்கு உங்களை ஆளாக்கியது எது ? ஏன் நீங்கள் விழிப்பாக இல்லை ? இவை அனைத்தின் ஆணிவேர் எது ? இவற்றின் ஆணி வேர் உங்கள் ஆசைதான்.

ஆசையின் தன்மையைப் புரிந்து கொள்ள முயற்சியுங்கள்.

ஆசை போதையூட்டக் கூடியது. ஆசைதான் மிகப் பெரிய போதை மருந்து. மரிஜுவானா எல்லாம் ஒன்றுமில்லை, எல்எஸ்டி எல்லாம் ஒன்றுமேயில்லை. ஆசைதான் மிகப்பெரிய எல்எஸ்டி - மிக உயர்ந்த போதை மருந்து.

ஆசையின் இயல்பு என்ன? நீங்கள் ஆசைப் படும்போது என்ன நடக்கிறது ? நீங்கள் ஆசைப்படும் போது, 'மனதில் ஓர் மாயையை உருவாக்குகிறீர்கள் ; நீங்கள் ஆசைப்படும் போது, ஏற்கெனவே இங்கிருந்து நகர்ந்துவிட்டீர்கள். ஏனெனில் மனது ஓர் கனவை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. இந்த விலகல் தன்மைதான் உங்கள் போதை. எப்போதும் இங்கேயே இருங்கள்.

ஒருமுறை ஒருவன் மிகவும் தொந்தரவுக்குள்ளான நிலையிலிருந்தான். அவன் இரவுகள் மூச்சுத்திணறலிலேயும், கெட்ட கனவுகளிலேயுமே கழிந்தன. இரவு முழுவதும்

அவனுக்குப் போராட்டமாகவே இருந்தது. மிகவும் வலியாக உணர்ந்தான். இரவு தூங்கச் செல்ல வேண்டும் என்றாலே மிகவும் பயந்தான். காலையில் விழிப்பதென்றாலே மகிழ்ச்சியடைவான். அவன் தூங்கத் துவங்கியவுடனேயே, கோடிக் கணக்கான சிங்கங்கள், பறக்கும் நாகம், புலிகள், முதலைகள் எல்லாம் அவன் சிறிய படுக்கையினடியில் உட்கார்ந்திருப்பதைப்போல் கனவு வரும். எனவே தூங்கக் கூடாது, எந்த நிமிடத்திலும் அவை நம்மைக்கொன்று விடும் என்ற எண்ணம் அவனுள் எழும்.

இரவு முழுவதுமே நீண்ட தொந்தரவாக சித்ர வதையாக, நரகமாக அவனுக்குத் தோன்றியது. இதற்காக சில மருந்துகளும் சாப்பிட்டான். அப்படியும் பயன் ஒன்று மில்லை. அனைத்துமே தோல்வியடைந்தன. அவன் பல மனநல நிபுணர்களாலும், மனநல மருத்துவர்களாலும் சோதிக்கப்பட்டான். ஆனால் எதுவும் பயனளிக்கவில்லை. பிறகு ஒருநாள் அவன் வீட்டிலிருந்து வெளியேறி சிரித்தான்.

பல வருடங்களாக அவன் சிரிப்பதையே யாரும் பார்த்ததில்லை. அவன் முகம் நரகம் போல் மாறிவிட்டது. எப்பொழுதும் கவலையான, பயந்த முகத்துடனேதான் காணப்பட்டான். அதனால் அவன் பக்கத்து வீட்டுக்காரர்கள் கேட்டார்கள் : "என்ன விஷயம் ? ஏன் சிரிக்கிறாய் ? நாங்கள் உன் சிரிப்பைப் பார்த்து நீண்ட நாட்களாகி விட்டன, நீ சிரிப்பாய் என்பதையே நாங்கள் மறந்து விட்டோம். உன் இரவுக் கனவுகளெல்லாம் என்ன ஆயிற்று ?"

அந்த மனிதன் சொன்னான் : "நான் என் மைத்துனனிடம் சொன்னேன், அவர் குணப்படுத்திவிட்டார்."

பக்கத்து வீட்டுக்காரர்கள் கேட்டார்கள் : "அவர் பெரிய மனநல நிபுணரா ? எப்படிக் குணப்படுத்தினார் ?"

அவன் கூறினான் : "அவர் ஒரு தச்சன். அவர் என் படுக்கையின் ஒரு காலை ரம்பத்தால் அறுத்தெடுத்து விட்டார். இப்பொழுது என் படுக்கைக்கடியில் இடமில்லை. அதனால், முதன்முறையாக நிம்மதியாய் தூங்குகிறேன்."

நீங்கள் ஒரு இடத்தை உருவாக்குகிறீர்கள். ஆசைதான் அந்த இடத்தை உருவாக்கும் வழி. ஆசை அதிகமாக, அதிகமாக அந்த இடமும் பெரிதாக உருவாகும். அதற்குள் நீங்கள் நகர முடியும். பல ஊர்ந்துசெல்லும் ஜந்துக்கள், பறக்கும் நாகம் போன்றவற்றை நீங்கள் கடந்து செல்ல வேண்டிவரும். ஆசையால் உருவாக்கப்பட்ட இந்த இடத்தை, நீங்கள் காலம் என்று அழைக்கிறீர்கள். ஆசை இல்லாத போது, காலத்திற்கு அவசியமே இல்லை.

ஒரு கணம் இருத்தல் வேண்டும். இரண்டு கணங்கள் கூட அல்ல, ஏனெனில் அந்த இரண்டாவது கணமே ஆசை யால் வருவதுதான். உங்கள் இருத்தலுக்கு அது அவசியமல்ல. இருத்தல் என்பது முழு நிறைவானது, முழுமையானது, ஒரே ஒரு கணத்தில்.

காலம் என்பது உங்களுக்கு வெளியே உள்ளது என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக் கிறீர்கள் என்று நினைவு படுத்திக் கொள்ளுங்கள். நேரம் என்பது உங்களுக்கு வெளியே இருப்பது அல்ல.

மனிதன் பூமியிலிருந்து மறைந்து விட்டான் எனில், அங்கு காலம், நேரம் இருக்குமா ? மரங்கள் வளரும், ஆறுகள் ஓடும், மேகங்கள் வானத்தில் மிதக்கும், ஆனால் நான் கேட்கிறேன், அங்கு நேரம் இருக்குமா ? இருக்காது. அங்கே கணங்கள் இருக்கும், அதுவும் ஒரு கணம்தான் இருக்கும். அந்தக் கணம் மறையும் போது, அடுத்தது வந்து விடும். இப்படித்தான் இருக்கும். ஆனால் நாம் குறிப்பிடுவது போன்ற நேரம் இருக்காது. அணுவைப் போன்ற கணங்களே இருக்கும்.

மரங்கள் எதற்குமே ஆசைப்படுவதில்லை. அவை மலர்களுக்கு ஆசைப்படுவதில்லை. மலர்கள் தானாகவே வருகின்றன. மலர்கள் வருவதென்பது அந்த மரத்தின் இயல்பின் ஒரு பகுதி. ஆனால் அந்த மரம் கனவு காண்பதில்லை ; அந்த மரம் நகர்வதில்லை, அது யோசிப்பதில்லை, அது ஆசைப்படுவதில்லை.

அங்கு நேரம் என்பதே இல்லை, நிலையான கணங்கள் மட்டுமே, மனிதன் இல்லாத போது. உங்கள் ஆசைகளால் தான் நேரத்தை உருவாக்குகிறீர்கள். ஆசை எவ்வளவு பெரிதோ, அவ்வளவு அதிகமான நேரம் தேவைப்படுகிறது.

லௌகிகமான ஆசைகளுக்கு அதிகக் காலம் தேவைப் படாது. அதனால் தான் மேற்கத்திய நாடுகளில் ஒரே ஒரு வாழ்க்கைதான் உண்டு என்கிறார்கள். கிழக்கில், மோட்சத் திற்கு நாம் ஆசைப்படுகிறோம். மோட்சத்தை எப்படி ஒரே ஒரு வாழ்க்கையில் நம்மால் பெற்றுக் கொள்ள முடியும் ? ஒரு வாழ்க்கை போதாது. நீங்கள் அரண்மனையை அடையலாம், ஒரு ராஜாங்கத்தை உருவாக்கலாம் ; மிகப்பணக்காரராக பலம் வாய்ந்தவராக உருவாகலாம், ஹிட்லராக, போர்டாக, உலகத் தில் ஏதாவது ஒன்றை அடைந்து விடலாம். ஆனால் 'மோட்சம்' மிக உயர்ந்த ஆசை; அதற்கு ஒரு வாழ்க்கை போதாது.

அதனால்தான் கிழக்கு நாடுகளில், நாம் பல பிறப்புகளை, மறுபிறவியை நம்புகிறோம். ஏனெனில் அதிக நேரமும் பல பிறவிகளும் தேவைப் படுகின்றன. 'மோட்ச'த்தை அடையும் ஆசையை நிறை வேற்றிக்கொள்ள பல பிறவிகள் இருக்கின்றனவா இல்லை ஒன்றே ஒன்றுதானா என்பதைப் பற்றியெல்லாம் நாம் இப்போது பேசவில்லை. ஆனால் கிழக்குப் பகுதியில் மக்கள் பல பிறவிகள் இருக்கின்றன என நம்புகிறார்கள். ஏனெனில் அவர்கள் 'மோட்ச'த்திற்கு ஆசைப்படுகிறார்கள்.

ஒரே ஒரு வாழ்க்கை மட்டும் இருந்தால், எப்படி நீங்கள் மோட்சத்தை அடைய முடியும் ? லௌகிக விஷயங்களை மட்டுமே ஒரு வாழ்க்கையில் நீங்கள் அடையமுடியும். ஆன்மிக மாற்றங்கள் சாத்தியமில்லை. அந்த ஆசை மிகப் பெரியது, அதற்கு கோடிக் கணக்கான பிறப்புகள் அவசியம். அதனால் தான் தென்பகுதி மக்கள் சோம்பேறித்தனமாக வாழ்கிறார்கள். எந்த அவசரமும் இல்லை, ஏனெனில் நேரம் பற்றாமை அங்கில்லை. நீங்கள் மீண்டும் பிறக்கப் போகிறீர்கள். பிறகு எதற்கு அவசரம் ? நீங்கள் எல்லையில்லாத நேரத்தைப் பெற்றிருக்கிறீர்கள்.

அதனால், தென்பகுதி சோம்பேறியாக இருக்கிறது என்றால், நேரத்தைப் பற்றிய விழிப்புணர்வே இல்லை என்றால், செயல்கள் மிக மெதுவாகவே நடக்கின்றன என்றால் அதற்குக் காரணம் பல பிறப்புகள் உள்ளன என்ற கோட்பாடுதான். மேற்கத்தியப் பகுதிகளில் நேரத்தைப் பற்றிய விழிப்பு அதிகம் உள்ளது என்றால், அதற்குக் காரணம் அங்கு, ஒரே ஒரு வாழ்க்கைதான் உள்ளது. அதற்குள் அனைத்தையும் அடைந்துவிட வேண்டும் என்ற எண்ணம் தான். இதை நீங்கள் இழந்து விட்டால், எப்போதைக்குமே இழந்து விட்டீர்கள். இரண்டாவது வாய்ப்பு என்பது சாத்தியமில்லை. இந்தக் குறுகிய காலத்தின் காரணமாகத்தான், அங்கு மிகுந்த பரபரப்புக் காணப்படுகிறது. அவர்களைப் பொறுத்த வரையில் நிறையக் காரியங்கள் செய்ய வேண்டி உள்ளன. ஆனால் மிகக்குறைந்த நேரம் தான் உள்ளது. அந்த நேரம் போதவே போதாது, ஏனெனில் ஏராளமான ஆசைகள் உள்ளன.

மக்கள் எப்போதுமே பரபரப்பாக இருக்கிறார்கள். வேகமாக ஓடுகிறார்கள். யாரும் மெதுவாக நகர்வதில்லை. அனைவருமே ஓடுகிறார்கள். இன்னும் அதிக வேகம் தேவைப்படுகிறது. அதனால், தான் மேற்கத்திய நாடுகள் வேகமாகச் செல்லும் பல வாகனங்களைக் கண்டுபிடித்துக்

கொண்டேயிருக்கிறார்கள். அவற்றாலும் திருப்தி கிடைப்ப தில்லை. மேற்கத்தியப் பகுதிகள் மனிதனின் வாழ்க்கையை அதிகரித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள இன்னும் கொஞ்சம் நேரம் கொடுக்கலாமே என்றுதான்.

ஆனால் நேரம் ஏன் தேவைப்படுகிறது ? நேரமே இல்லாமல் இங்கே, இப்போது இருக்க உங்களால் முடியாதா? இது போதாதா, இந்தக் கணம் என் அருகில் உட்கார்ந்திருக் கிறீர்கள், இறந்த காலமில்லை, எதிர்காலமில்லை - இந்தக் கணம் நடுவில் இருப்பது, அணுவைப் போல், உயிரின்றி மிதப்பது போல் ? இது மிகவும் சிறியது, உங்களால் அதைப் பிடிக்கக்கூட முடியாது, அதைப் பிடித்துவிட்டீர்கள் என்றால், அது ஏற்கெனவே கடந்து சென்று விட்டது என்று பொருள். சந்தித்தீர்கள் என்றால், அது எதிர்காலம். நீங்கள் அதில் இருக்காலம். ஆனால் அதைப் பிடித்துக் கொள்ள முடியாது. அதைப் பிடித்து வைக்கும் பொழுது, அது கடந்து விட்டதாகிறது. அதைப் பற்றி நினைக்கும் பொழுது, சிந்திக்கும் பொழுது, அது அங்கே இருப்பதில்லை.

அது அங்கேயிருக்கும் போது, ஒன்றே ஒன்று வேண்டுமானால் செய்ய முடியும் - அதில் நீங்கள் வாழலாம், அவ்வளவுதான். அது மிகவும் சிறியது, அதில் நீங்கள் வாழ மட்டும் தான் முடியும், ஆனால் அது மிக முக்கியமானது. ஏனெனில் அதுதான் உங்களுக்கு வாழ்க்கையைத் தருகிறது.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், அது அணுவைப் போன்றது தான், மிகவும் சிறியது, நம்மால் பார்க்கக்கூட முடியாது. யாராலும் விஞ்ஞானிகளால்கூட இன்னும் அதைப் பார்க்க முடியவில்லை. அதன் பலன்களையும், முக்கியத்து வத்தையும் மட்டுமே உங்களால் பார்க்க முடியும். அவற்றால் வெடித்துச் சிதறவைக்க முடியும். ஹிரோஷிமாவும், நாகசாகி

யும் அதன் விளைவுகள்தான். ஹிரோஷிமா எரிந்ததை நாம் பார்த்தோம், நூறாயிரம் மக்களுக்கு மேல் இறந்து போனார் கள். இதுதான் பலன், விளைவு. ஆனால் யாரும் அணு வெடிப்பு எப்படி நிகழ்ந்தது என்பதைப் பார்த்திருக்கவில்லை. யாரும் அணுவை அவர்கள் கண்களால் பார்க்கவில்லை. அதைப் பார்க்க இன்று வரை எந்தக் கருவியும் கண்டுபிடிக்கப் படவில்லை.

நேரம் அணு. இந்தக் கணம்கூட அணுதான். யாரும் இதைப் பார்க்க முடியாது. ஏனெனில் நீங்கள் பார்க்கும் கணத்தில், அது கடந்து சென்று விடுகிறது. ஆறு ஓடி விடுகிறது. அம்பு நகர்ந்து விடுகிறது, ஆனால் யாராலும் நேரத்தைப் பார்க்க முடியவதில்லை. நீங்கள் நேரம் என்ற வார்த்தையைப் பயன்படுத்திக் கொண்டேயிருக்கிறீர்கள். ஆனால் யாராவது அதை வரையறுக்கச் சொன்னால் உங்களால் அது முடியாது. தோல்வியடைந்து விடுவீர்கள்.

சிலர் புனித அகஸ்டினைக் கேட்டார்கள் : "கடவுளை வரையறுத்துக் கூறுங்கள். நீங்கள் கடவுள் என்ற வார்த்தை யைப் பயன்படுத்தும் போது எதைக் குறிப்பிடுகிறீர்கள் ?"

அகஸ்டின் கூறினார் : "இது நேரத்தைப் போன்றது தான். என்னால் அதைப்பற்றிப் பேசமுடியும். ஆனால் அதை வரையறுக்கச் சொல்லி வற்புறுத்தினீர்கள் என்றால், அது தோல்வியில்தான் முடியும்."

நீங்கள் மக்களிடம் தொடர்ந்து, "நேரம் என்ன ?" அன்று கேட்டுக் கொண்டுதான் இருக்கிறீர்கள். அவர்களும் தங்கள் கடிகாரத்தைப் பார்த்து, பதில் சொல்லிக் கொண்டே தானிருக்கிறார்கள். ஆனால், உண்மையாகவே, 'நேரம் என்றால் என்ன ?' என்று கேட்டால், அதை வரையறுக்கச் சொன்னால், அப்பொழுது கடிகாரம் உபயோகப்படாது.

உங்களால் நேரத்தை வரையறுக்க முடியுமா ? யாரும், எப்போதும் அதைப் பார்த்ததில்லை, அதைப் பார்க்க ஒரு வழியும் இல்லை. நீங்கள் அதைப் பார்த்தால், அது சென்று விட்டிருக்கும். நீங்கள் நினைக்கும் பொழுது, அது அங்கிருப் பதில்லை. எப்பொழுது நீங்கள் சிந்திக்காமலிருக்கிறீர்களோ, எப்பொழுது பார்க்காமலிருக்கிறீர்களோ, எப்பொழுது இங்கிருக்கிறீர்களோ, அப்பொழுது அதுவும் அங்கிருக்கிறது. நீங்கள் அதில் வாழ்கிறீர்கள். புனித அகஸ்டின் சொன்னது சரிதான். கடவுளால் வாழ முடியும், ஆனால் கண்ணிற்குப் புலப்பட முடியாது. நேரம் என்பது ஒரு தத்துவார்த்தமான பிரச்சினை அல்ல, அது இருத்தலியல். கடவுளும் தத்துவயியல் அல்ல, அவர் இருத்தலியல். மக்கள் அவருடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதை வரையறுக்கச் சொல்லி, அவர்களை வற்புறுத்தினீர்கள் என்றால், அவர்கள் அமைதியாகத்தான் இருப்பார்கள், அவர்களால் பதில் சொல்ல முடியாது. ஆனால் நீங்கள் இந்தக் கணத்தில் இருக்கிறீர்கள் என்றால், அனைத்து சூட்சுமங்களின் கதவுகளும் திறந்து கொள்ளும்.

அதனால் அனைத்து ஆசைகளையும் தூர எறிந்து விடுங்கள். உங்கள் கண்களிலிருக்கும் அழுக்குகளை அகற்றுங் கள். உள்ளுக்குள் ஓய்வாக இருங்கள். ஏதோ ஒன்றுக்கு ஏங்காமல், கடவுளுக்காகக்கூட. எல்லா ஏக்கமும் ஒன்றுதான். பெரிய காருக்காக ஏங்கினாலும், கடவுளுக்காக ஏங்கினாலும், பெரிய வீட்டிற்காக ஏங்கினாலும், ஒரு வித்தியாசமுமில்லை. ஏக்கம் ஒன்றுதான். ஏங்காதீர்கள் - சும்மாயிருங்கள். கவனிக்க கூட செய்யாதீர்கள். சும்மாயிருங்கள் ! சிந்திக்காதீர்கள் ! இந்தக் கணத்தை இங்கேயே இருக்க விடுங்கள். நீங்கள் அதிலிருங்கள், திடீரென்று, நீங்கள் எல்லாம் பெற்றிருப்பீர் கள் - ஏனெனில் அங்குதான் வாழ்க்கையிருக்கிறது. திடீரென்று எல்லாம் உங்கள் மேல் பொழிய ஆரம்பிக்கும்,

இந்தக் கணம் நிலையானதாயிருக்கும். அதன் பின் நேரம் எல்லாம் ஒன்றுமில்லை. பிறகு எப்பொழுதுமே இப்போது தான். இது ஒருபோதும் முடிந்து போகாது, ஒருபோதும் ஆரம்பமாகாது. ஆனால் நீங்கள் அதற்குள்ளிருக்கிறீர்கள், வெளியே அல்ல. முழுமைக்குள் நீங்கள் நுழைந்து விட்டீர்கள். நீங்கள் யார் என்பதை புரிந்து கொண்டுவிட்டீர்கள்.

இப்பொழுது வெற்றியின் அவசியம் பற்றிய சுவாங்தஸுவின் சூத்திரத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். எங்கேயிருந்து இந்த அவசியம் உதிக்கிறது - வெற்றி பெறுதலின் அவசியம்? ஒவ்வொருவரும் வெற்றியை நாடிச்செல்கிறார்கள், வெற்றி பெறுதலைத் தேடுகிறார்கள். ஆனால் இந்த வெற்றி பெறலின் அவசியம் ஏன் தோன்றியது?

நீங்கள் ஏற்கெனவே வெற்றிபெற்றாகிவிட்டது என்பதை நீங்கள் உணர்வதேயில்லை, அந்த வாழ்க்கை உங்களுக்கு நிகழ்ந்தாகி விட்டது. நீங்கள் ஏற்கெனவே வெற்றி அடைந்தவர்தான், இதற்கு மேல் எதுவும் சாத்தியமில்லை, என்னவெல்லாம் நிகழ முடியுமோ, அவையெல்லாம் உங்களுக்கு நிகழ்ந்துவிட்டன. நீங்கள் ஏற்கெனவே ஒரு பேரரசன் தான், நீங்கள் வெற்றிபெற வேண்டிய ராஜாங்கம் வேறெதுவுமில்லை. ஆனால் இதை நீங்கள் உணர்ந்து கொள்ளவில்லை, ஏற்கெனவே உங்களுக்குக் கிடைத்து விட்ட அழகான வாழ்க்கையைப் பற்றி உங்களுக்கு ஏதும் தெரிந்திருக்கவில்லை. ஏற்கெனவே இருக்கும் அமைதியை, சமாதானத்தை, பேரானந்தத்தைப் பற்றியெல்லாம் நீங்கள் ஏதும் அறிந்திருக்கவில்லை.

உள்ளுக்குள்ளிருக்கும் ராஜாங்கத்தைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இல்லாத காரணத்தினால் தான், இன்னும் ஏதோ ஒன்று தேவை, நான் பிச்சைக்காரன் இல்லை

என்று நிரூபிக்க ஒரு வெற்றி அவசியம் என்ற உணர்வு உங்களுக்குத் தொடர்ந்து இருந்து கொண்டேயிருக்கிறது.

ஒருமுறை பேரரசர் அலெக்ஸாண்டர் இந்தியா வந்தார். ஆம், வெற்றிக் கொள்ளத்தான். உங்களுக்கு வெற்றிபெறுதல் அவசியமில்லாதபோது, நீங்கள் எங்கேயும் செல்ல வேண்டிய தேவையில்லை. ஏன் துயரப்பட வேண்டும்? ஏதென்ஸ் மிக அழகாயிருந்தது. அங்கே அப்படி ஒரு நீண்ட பயணத்திற்குத் துயரப்பட்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

அவன் சென்று கொண்டிருந்த போது டயோஜீன்ஸ் என்ற ஞானி ஆற்றங்கரையில் வாழ்ந்து கொண்டிருந்தார் எனக் கேள்விப்பட்டான். அவரைப் பற்றிய பல கதைகளை அவன் கேட்டிருக்கிறான். அந்நாட்களில், ஏதென்ஸில் இரண்டு பெயர்கள்தான் குறிப்பிட்டுப் பேசப்பட்டு வந்தன. ஒன்று அலெக்ஸாண்டர், இன்னொன்று டயோஜீன்ஸ். இருவரும் எதிர்ப்பதமானவர்கள், இருதுருவங்கள். அலெக்ஸாண்டர் பேரரசன், உலகின் ஒரு முனையிலிருந்து, மறுமுனைவரை உள்ள பகுதிகளை இணைத்துக் கொண்டு சாம்ராஜ்யம் அமைக்க விரும்பியவன். முழு உலகத்தையும் சொந்தமாக்கிக் கொள்ள ஆசைப்பட்டவன் ; ஒரு வெற்றி வீரன், வெற்றியைத் தேடும் மனிதன்.

டயோஜீன்ஸ் அதற்கு முற்றிலும் எதிர்பதமானவர், நிர்வாணமாக வாழ்ந்தவர். ஒரு பொருளைக் கூட தனக்குச் சொந்தமாக வைத்திருக்கவில்லை. ஆரம்பத்தில் தண்ணீர் குடிப்பதற்காக ஒரு திருவோடு வைத்திருந்தார். சில சமயங்களில் உணவுப் பிச்சை எடுக்கவும் அதைப் பயன்படுத்துவார். பிறகு ஒருநாள், ஒரு நாய், ஆற்றிலேயே தண்ணீர் குடிப்பதைப் பார்த்த பிறகு, அதையும் தூர எறிந்து விட்டார். அவர் சொன்னார் : "இந்தப் பாத்திரம் இல்லாமல்

நாய்களாலே முடிகிறதென்றால், ஏன் நான் இருக்கக் கூடாது? நாய்கள் மிகவும் புத்திசாலியானவை, அதனால்தான் அத்திருவோடு இல்லாமலேயே குடிக்கின்றன. இந்தத் திருவோடை என்னுடனேயே சுமந்து கொண்டிருக்கும் நான் ஒரு முட்டாளாக இருக்க வேண்டும். இது ஒரு சுமை."

அந்த நாயை அவர் தன் குருவாக ஏற்றுக் கொண்டார். அந்த நாயைத் தன்னுடன் வந்திருக்கும்படி அழைத்தார், ஏனெனில் அது மிகவும் புத்திசாலி. அவரது திருவோடு தேவையில்லாத சுமை என்று அந்த நாய்தான் அவருக்கு உணர்த்தியது. அன்றிலிருந்து அந்தநாய் அவருடன் இருந்தது. இருவரும் ஒன்றாகத் தூங்கினார்கள், ஒன்றாக சாப்பிட்டார்கள். அந்த நாய்தான் அவரின் ஒரே துணையாயிருந்தது.

சிலர் டயோஜீன்ஸிடம் கேட்டார்கள் : "ஏன் நாயுடன் எல்லாம் நட்பு வைத்துக் கொண்டிருக்கிறீர்கள் ?"

அவர் சொன்னார் : "இது மனிதர்களைவிட அறிவுடையதாயிருக்கிறது. இதைச் சந்திப்பதற்கு முன் நான் அவ்வளவு அறிவாளியாய் இல்லை. இதைப் பார்த்து, கவனித்து, நான் இப்போது விழிப்பாகி விட்டேன். இது இங்கே, இப்போதே வாழ்கிறது, எதைப் பற்றியும் கவலைப்படாமல், எதையும் சொந்தமாக்கிக் கொள்ளாமல், எதுவுமே இல்லாமல். ஆனால் எல்லாம் கிடைக்கப் பெற்று இது மிகவும் மகிழ்ச்சியாயிருக்கிறது. நான் இன்னும் முழு திருப்தியடையவில்லை. எனக்குள் ஏதோ சஞ்சலமிருக்கிறது. இதைப் போல் நான் ஆகிவிடும் போது, என் இலக்கை நான் அடைந்து விடுவேன்."

அலெக்ஸாண்டர், டயோஜீன்ஸ் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறார். அவரின் தன்னை மறந்த பேரானந்தத்தை, அவரின் அமைதியை, கண்ணாடி போன்ற அவர் கண்களை, எந்த மேகமுமில்லாமல் இருக்கும் வானத்தைப் போன்ற நிலை

பற்றியெல்லாம். இந்த மனிதர் நிர்வாணமாக வாழ்ந்தார். அவருக்குத் துணிகள் கூட அவசியமில்லாமலிருந்தன. சிலர் சொன்னார்கள் : "ஆற்றங்கரையின் அருகில்தான் அவர் வாழ்கிறார், நாம் அவரைக் கடந்துதான் செல்கிறோம், நாம் மிகத் தொலைவில் இல்லை..." அலெக்ஸாண்டர் அவரைப் பார்க்க விரும்பினார், அதனால் அவர்கள் சென்றார்கள்.

அது காலை நேரம், குளிர்காலக் காலைப் பொழுது. டயோஜீன்ஸ் சூரியக்குளியல் எடுத்துக் கொண்டிருந்தார். மணலில் நிர்வாணமாக படுத்துக் கொண்டு, காலை வேளையை அனுபவித்து ரசித்துக் கொண்டிருந்தார். சூரிய ஒளி அவர் மேல் விழுந்து கொண்டிருந்தது, எல்லாம் மிக அழகாக இருந்தன. அமைதியாக, ஆறு ஓடிக் கொண்டிருந்தது...

அலெக்ஸாண்டர் என்ன சொல்வது என்று தெரியாமல் வியந்து கொண்டிருந்தார். அலெக்ஸாண்டர் போன்ற மனிதனால் பொருட்களையும், சொத்துக்களையும் தவிர வேறு எதைப் பற்றியும் யோசித்துப் பார்க்க முடியாது. அதனால், அவர் டயோஜீன்ஸைப் பார்த்தார், பிறகு சொன்னார் : "நான் பேரரசன் அலெக்ஸாண்டர். உங்களுக்கு ஏதாவது தேவை என்றால் என்னிடம் சொல்லுங்கள். என்னால் முடிந்த உதவி செய்கிறேன். நான் உங்களுக்கு உதவி செய்ய விரும்புகிறேன்."

டயோஜீன்ஸ் சிரித்து விட்டுக் கூறினார் : "எனக்கு எதுவும் தேவையில்லை. கொஞ்சம் தள்ளி நின்று கொள்ளுங்கள், சூரிய ஒளியைத் தடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். இதைத்தான் நீங்கள் எனக்குச் செய்ய முடியும். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், யாருடைய சூரியனையும் மறைக்காதீர்கள், இதைத்தான் உங்களால் செய்ய முடியும். என் வழியில் நிற்காதீர்கள், வேறொன்றும் நீங்கள் செய்யத் தேவையில்லை."

அலெக்ஸாண்டர் அந்த மனிதனைப் பார்த்தார். அவர் முன்னால் அலெக்ஸாண்டர் தன்னை ஒரு பிச்சைக்காரன் போல் உணர்ந்திருக்க வேண்டும். "இவருக்கு எதுவுமே தேவைப்படவில்லை. எனக்கு இந்த முழு உலகமும் தேவை, அப்பொழுதும் கூட நான் திருப்தியடையமாட்டேன், இந்த உலகம் கூட எனக்குப் போதாது.' அலெக்ஸாண்டர் கூறினார், "உங்களைப் பார்த்ததில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி, நான் இதுவரை இவ்வளவு திருப்தியான ஒரு மனிதனைப் பார்த்ததே இல்லை."

டயோஜீன்ஸ் சொன்னார் : "ஒரு பிரச்சினையுமில்லை! என்னைப் போல் நீங்களும் திருப்தியான மனிதனாயிருக்க விரும்பினால், வந்து என்னருகில் படுத்துக் கொள்ளுங்கள், சூரியக் குளியல் எடுங்கள், எதிர்காலத்தை மறந்துவிடுங்கள், இறந்த காலத்தை எறிந்து விடுங்கள். யாரும் உங்களைத் தடுக்கவில்லை."

அலெக்ஸாண்டர் சிரித்தார், நிச்சயமாய் அது மேலெழுந்தவாரியான சிரிப்புதான். பிறகு சொன்னார் : "நீங்கள் சொல்வது சரிதான் - ஆனால் அதற்குத் தகுந்த நேரம் இன்னும் வரவில்லை. ஒருநாள் நானும் உங்களைப் போல ஓய்வெடுக்க விரும்புவேன்."

டயோஜீன்ஸ் மறுமொழி கூறினார் : "அந்த ஒரு நாள் எப்போதும் வராது. நீங்கள் ஓய்வெடுப்பதற்கு இன்னும் என்ன தேவை ? என்னால், ஒரு பிச்சைக்காரனானால் ஓய்வெடுக்க முடிகிறதென்றால், என்ன தேவை இருக்கிறது ? ஏன் இந்தப் போராட்டம், இந்த முயற்சி, இத்தனைப் போர் கள், இந்தத் தோற்கடித்தல், ஏன் இந்த வெற்றியின் அவசியம்?"

அலெக்ஸாண்டர் கூறினார் : "நான் வெற்றி பெற்ற பிறகு, இந்த உலகம் முழுவதையும் வெற்றி கொண்டவுடன், நான் வந்து, உங்களிடம் கற்றுக் கொள்கிறேன். இந்த ஆற்றங்கரையில், உங்கள் அருகில் அமர்ந்து கொள்கிறேன்."

டயோஜீன்ஸ் சொன்னார் : "ஆனால், என்னால் இங்கு படுத்து, இப்போது ஓய்வெடுக்க முடிகிறதென்றால், ஏன் எதிர்காலத்திற்காகக் காத்திருக்க வேண்டும் ? எதற்கு உலகம் முழுவதும் சுற்றி உனக்கும், மற்றவர்களுக்கும் துன்பம் விளைவிக்க வேண்டும் ? என்னிடம் வந்து ஓய்வெடுத்துக் கொள்வதற்கு ஏன் உன் வாழ்க்கையின் கடைசிக் கட்டம் வரைக் காத்திருக்க வேண்டும் ? நான் ஏற்கெனவே ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறேன்."

வெற்றி பெறுவதன் அவசியம் என்ன ? உங்களை நீங்கள் நிரூபித்தாக வேண்டும். உங்களுக்குள் நீங்கள் மிகத் தாழ்வாக உணர்கிறீர்கள். ஒன்று மற்றதாக, மிகவும் வெறுமையாக உணர்கிறீர்கள், ஒருவருமே இல்லாதது போல் தனிமையாக உணர்கிறீர்கள். இப்போது தான் உங்களை நிரூபித்தாக வேண்டிய அவசியம் எழுகிறது. நீங்கள் யாரென்பதை நிரூபித்தாக வேண்டும். அதை நீங்கள் நிரூபிக்காத வரை, எப்படி இளைப்பாற முடியும் ?

இரண்டு வழிகள் உள்ளன, இவை தவிர வேறு வழிகளே இல்லை என்பதைப் புரிந்து கொள்ள முயற்சியுங்கள். ஒன்று, வெளியே சென்று, நீங்கள் யாரோ ஒருவர் என்பதை நிரூபிப்பது ; இன்னொரு வழி, உள்சென்று நீங்கள் யாருமேயில்லை என்பதை உணர்ந்து கொள்வது. நீங்கள் வெளிப்புறமாகச் சென்றால் நீங்கள் யாரோ ஒருவர் என்பதை நிரூபிக்க ஒருபோதும் உங்களால் முடியாது. தேவை அப்படியே இருக்கும், அல்லது அதிகரிக்கும். நீங்கள் அதிகமாய் நிரூபிக்கும் போது, அதிகமாய் ஒரு பிச்சைக்காரன் போல் உணர்வீர்கள், அலெக்ஸாண்டர் டயோஜீன்ஸின் முன்னால் நிற்பதைப் போல. யாரோ ஒருவர் என மற்றவர்களுக்கு நீங்கள் நிரூபிப்பதால் நீங்கள் யாரோ ஒருவராகி விடுவதில்லை. அடி ஆழத்தில் யாருமில்லை என்னும் எண்ணம் இருந்து கொண்டேதானிருக்கிறது. இதயத்தில் அது குத்திக்

கொண்டேதானிருக்கும். அப்போது நீங்கள் யாருமேயில்லை என்பது உங்களுக்குத் தெரியும்.

இராஜ்ஜியம் உதவாது. ஏனெனில் இராஜ்ஜியத்தால் உள்ளே சென்று, உங்களுக்குள் இருக்கும் வெற்றிடத்தை நிரப்ப முடியாது. எதுவும் உள்ளே செல்ல முடியாது. வெற்றிடம், வெற்றிடமாகவேதான் இருக்கும் ; உள், உள்ளாகவே தானிருக்கும். அங்கே எந்த சந்திப்புமில்லை. உங்களுக்கு உலகத்திலுள்ள அனைத்து செல்வங்களும் இருக் கலாம், ஆனால் அதைக் கொண்டு எப்படி வெற்றிடத்தை நிரப்ப முடியும் ? இல்லை, நீங்கள் எல்லா செல்வங்களையும் பெற்றிருந்தால் கூட வெறுமையாகத்தான் உணர்வீர்கள் - அதிக வெறுமையாக. ஏனெனில் இப்போது வித்தியாசம் , எதிர்மறை அங்கேயிருக்கும். அதனால்தான் புத்தர் அரண் மனையை விட்டு வெளியேறினார் ; அனைத்து செல்வங் களைப் பார்த்தபிறகும் உள்ளே வெறுமையை உணர்ந்தார். எல்லாமே பயனற்றது என்பதை உணர்ந்தார்.

இன்னொரு வழி உட்செல்வது. யாருமே இல்லை என்ற வெறுமையிலிருந்து வெளியேவர, தப்பிக்க முயலாதீர்கள், அதை உணர்ந்து அனுபவியுங்கள். இதைத்தான் சுவாங்தஸூ கூறுகிறார் : வெற்றுப் படகாக மாறுங்கள், உள்ளே சென்று, நீங்கள் யாருமேயில்லை என்பதை உணருங்கள். நீங்கள் யாருமேயில்லை என்பதை உணரும் கணத்தில் ஒரு புதிய பரிணாமத்திற்குள் நுழைகிறீர்கள். ஏனெனில், எப்போது ஒரு மனிதன் தான் யாருமேயில்லை என்பதை உணர்கிறானோ, அப்போது தான் எல்லாமும் என்பதையும் உணர்கிறான்.

நீங்கள் யாரோ ஒருவரல்ல, ஏனெனில் நீங்கள்தான் எல்லாமும். எப்படி எல்லாமும் ஏதோ ஒன்றாக முடியும் ? யாரோ ஒருவர் என்பது ஒரு பகுதிதான். கடவுள் ஒருவராக இருக்க முடியாது. ஏனெனில் அவர் எல்லாமுமாய்

இருக்கிறார். அவரால் எதையும் சொந்தமாக்கிக் கொள்ள முடியாது, ஏனெனில் அவர்தான் முழுமை. பிச்சைக்காரர் கள்தான், பற்றுடையவர்களாய் இருக்க முடியும், ஏனெனில் பற்று வரையறை உடையதாயிருக்கிறது. வரையறை இல்லாத தாய், எல்லையில்லாததாயிருக்க முடியாது. யாரோ ஒருவராயிருத்தல் எல்லையுடைய தாயிருக்கிறது. ஒருவரா யிருந்தல் எல்லையில்லாததாக இருக்க முடியாது, முடிவே இல்லாததாக இருக்க முடியாது. யாராகவுமில்லா திருத்தல் முடிவேயில்லாதது, எல்லாமுமாயிருத்தலைப் போல.

உண்மையாகவே, இரண்டு வழிகளுமே ஒன்றுதான். எதுவுமே யில்லாமல், நீங்கள் இயங்கும் போது, உங்களின் உள் உருவம் எதுவுமே யில்லாதிருப்பதுபோல் உணர்வீர்கள். உள்ளுக்குள் நீங்கள் நகரும் போது, அதே யாராகவு மில்லாததிருத்தலை, எல்லாமுமாயிருத்தலைப் போலுள்ளதை உணர்கிறீர்கள். அதனால்தான் புத்தர் 'ஷன்யா' என்றார், முழுமையான வெற்றிடம், பிராமணம். யாராகவு மில்லாதிருத்தலாக, எல்லாமுமாயிருத்தல் உணரவேண்டும். யாராகவோ இருத்தலை உணர, நீங்கள் எதுவுமே யில்லாதிருத் தலை உணர வேண்டும். வேறு எதுவும் செய்ய முடியாது.

ஆகவே, அடுத்த வழி உள்ளே நகர்வது. உட்செல்வது, யாராகவுமில்லாதிருத்தலுடன் சண்டையிடுவதற்காக அல்ல, இந்த வெறுமையை நிரப்புவதற்காக அல்ல, ஆனால் அதை உணர்வதற்கு, அதனுடன் ஒன்றாக மாறுவதற்கு. வெற்றுப் படகாக இருங்கள், பிறகு கடல் முழுமையும் உங்களுக்கே சொந்தமாகும். பிறகு எல்லைப் படத்தில் இல்லாத இடத்திற் குள்ளும் செல்லலாம், பிறகு படகிற்கு எந்தத் தடையுமிருக் காது, யாரும் அதன் பாதையைத் தடை செய்ய முடியாது. எந்த வரைபடமும் தேவைப்படாது. இந்தப் படகு எல்லையே இல்லாத பகுதிக்குள் செல்லும், இப்பொழுது எல்லா இட முமே இலக்காகும். ஆனால் ஒருவர் அதற்குள் நகர வேண்டும்.

வெற்றிபெறலின் அவசியம் நீங்கள் யாரென்பதை நிரூபித்தலுக்குத் தான். நம்மை நிரூப்பதற்கு உள்ள ஒரே வழி என்று நாம் நினைப்பது, மற்றவரின் கண்களுக்கு நிரூபிப் பதைத்தான். ஏனெனில் அவர்களின் கண்கள் பிரதிபலிப் பாகும்.

மற்றவரிகளின் கண்களுக்குள் பார்த்து, தான் யாரோ ஒருவன் என்பதை அலெக்ஸாண்டரால் புரிந்து கொண் டிருக்க முடியும். டயோஜீன்ஸின் அருகில் நின்று கொண்டிருந்தபோது, தான் யாருமேயில்லை என்பதை உணர்ந்திருக்க முடியும். டயோஜீன்ஸால் வெளிப்புற உயர்வுகளை அங்கீகரித்துக் கொள்ள முடியவில்லை. அவரின் முன்னால், அலெக்ஸாண்டர் முட்டாளாக உணர்ந்திருக்க வேண்டும். அலெக்ஸாண்டர் டயோஜீன்ஸிடம் இவ்வாறு சொன்னதாகக் கூறப்பட்டிருக்கிறது. கடவுள் இன்னொரு பிறவியை அளித்தால், டயாஜீன்ஸாகப் பிறக்க விரும்புவேன். அலெக்ஸாண்டராக அல்ல - அடுத்த முறை !

மனம் எப்போதும் எதிர்காலத்திற்குத்தான் நகருகிறது ! இந்த நேரத்தில் அவன் டயோஜீன்ஸாகி விடமுடியும். எந்தத் தடைகளும் இருக்காது, யாரும் அவனைத் தடைசெய்ய மாட்டார்கள். பேரரசர் அலெக்ஸாண்டராக கோடிக் கணக்கானத் தடைகள் இருக்கும். ஏனெனில் அனைவருமே உன்னைத் தடுக்கத்தான் விரும்புவார்கள். நீங்கள் யாரோ ஒருவர் என்பதை நிரூபிக்க விரும்பும் போது, ஒவ்வொரு வரிடமுள்ள 'நான்' என்ற தன்னுணர்ச்சியை காயப்படுத்து கிறீர்கள், அவர்கள் அனைவரும் நீங்கள் யாருமில்லை என்பதை நிரூபித்துக் காட்ட முயற்சிப்பார்கள். நீங்கள் யாரென்று, என்னவென்று நினைக்கிறீர்கள் ? நீங்கள் நிரூபித்துக் காட்ட வேண்டும். இது மிகவும் கடினமான வழி, மிகவும் வன்முறையானது, அழிக்கக்கூடயது.

டயோஜீனிஸாக இருப்பதில் எந்தவித் தடை களுமில்லை. அலெக்ஸாண்டர் அந்த அழகை உணர்ந்தார்,

அந்த மனிதனின் கருணையை. அவர் சொன்னார் : "கடவுள் எனக்கு இன்னொரு பிறப்பைக் கொடுத்தால் நான் டயோஜீன்ஸாக விரும்புவேன் - ஆனால் அடுத்த முறை."

டயோஜீன்ஸ் சிரித்துவிட்டுக் கூறினார் : "என்னைக் கேட்டால், ஒன்றே ஒன்று மட்டும் சொல்வது நிச்சயம் : நான் ஒரு போதும் பேரரசர் அலெக்ஸாண்டராக விரும்ப மாட்டேன் !"

டயோஜீன்ஸின் கண்களில், தன்னுடைய வெற்றியைப் பற்றிய எந்த அங்கீகாரத்தையும் அலெக்ஸாண்டர் பார்த்திருக்க முடியாது. திடீரென ஓர் மூழ்கடிக்கும் உணர்ச்சியை அவரால் உணர்ந்திருக்க முடியும், யாராகவு மில்லாத ஒரு இறப்பைப் போன்ற உணர்வை. அவர் தப்பிச் சென்றிருக்க வேண்டும், எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அங்கிருந்து ஓடியிருக்க வேண்டும். அவர் ஒரு ஆபத்தான மனிதர்.

டயோஜீன்ஸ் அலெக்ஸாண்டருடன், அவருடைய வாழ்க்கை முழுவதும் பேய் அலைவதைப்போல் சுற்றினார். டயோஜீன்ஸ் ஒரு நிழலைப் போல் அவருடனிருந்தார். இரவில், கனவுகளில் கூட டயோஜீன்ஸ் சிரித்துக் கொண்டிருந்தார் என்று சொல்லப்படுகிறது. ஒரு அழகான கதை அவர்கள் ஒரே நாளில் இறந்ததாகச் சொல்கிறது.

இருவரும் ஒரே நாளில் இறந்துபோனார்கள். ஆனால் டயோஜீன்ஸ் சிறிது நேரம் காத்திருந்திருக்க வேண்டும், அப்பொழுதுதானே அலெக்ஸாண்டரைத் தொடரமுடியும். ஆற்றைக் கடக்கும் போது இந்த உலகிலிருந்து அந்த உலகைப் பிரிக்கிறது, அலெக்ஸாண்டர் மீண்டும் டயோஜீன்ஸைச் சந்தித்தார். இந்த இரண்டாவது சந்திப்பு முன்னதைவிட அபாயகரமானதாயிருந்தது. அலெக்ஸாண்டர் இப்பொழுது முன்னாலிருந்தார், ஏனெனில் அவர் சில நிமிடங்கள் முன்னதாகவே இறந்து விட்டார். அவரைத் தொடர்வதற்காக

டயோஜீன்ஸ் காத்துக் கொண்டிருந்தார். அலெக் ஸாண்டருக்கு ஆற்றில் தனக்குப் பின்னாலிருந்து யாரோ ஒருவரின் குரல் கேட்டது, திரும்பிப் பார்த்தபோது அங்கே டயோஜீன்ஸ் சிரித்துக் கொண்டிருந்தார். அவர் கொஞ்சம் ஊமையாய் கூட ஆகியிருக்க வேண்டும். ஏனெனில் இந்த முறை எல்லாமே முழுமையாக மாறி விட்டிருந்தன. அவரும் டயோஜீன்ஸைப் போல் நிர்வாணமாயிருந்தார், ஏனெனில் உங்களால் இன்னொரு உலகத்திற்கு உடைகளைக் கொண்டு சொல்ல முடியாது. இந்த முறை அவர் முற்றிலும் யாராகவுமில்லை, பேரரசனாக இல்லை.

ஆனால் டயோஜீன்ஸ் அதேபோல் தானிருந்தார். சாவு எதையெல்லாம் எடுத்துச் சொல்லுமோ, அவற்றை எல்லாம் அவர் ஏற்கெனவே கைவிட்டிருந்தார். அதனால் சாவால் அவரிடமிருந்து எதையும் எடுத்துக் கொள்ள முடியவில்லை. ஆற்றங்கரையில் இருந்ததைப் போலவே தான் அவரிருந்தார்; இங்கே இந்த ஆற்றங்கரையில் இருக்கிறார், முன்பிருந்ததைப் போலவே.

அதனால் கவலையற்று, அமைதியாயிருக்க தனக்குத் தானே நம்பிக்கையும் கொடுத்துக் கொள்ள, அலெக்ஸாண்டரும் சிரித்துக் கொண்டே கூறினார் : "மிகவும் நன்று, என்ன ஆச்சரியம் ! மறுபடியும் பேரரசனுக்கும் பிச்சைக்காரனுக்குமிடையே ஒரு சந்திப்பு."

டயோஜீன்ஸ் சொன்னார் : "நீ சொல்வது முற்றிலும் சரி, ஆனால் யார் பேரரசன், யார் பிச்சைக்காரன் என்பதைப் பற்றித்தான் நீ சற்று குழப்பமாயிருக்கிறாய். இது மிகஉயர்ந்த பேரரசனுக்கும், மிகப்பெரிய பிச்சைக்காரனுக்கு மிடையே யான சந்திப்புதான். ஆனால், பிச்சைக்காரன் முன்னாலிருக் கிறான், பேரரசன் பின்னாலிருக்கிறான். மேலும் நான் சொல்கிறேன், அலெக்ஸாண்டர், இது நம் முதல் சந்திப்பைப் போன்றதுதான். நீ பிச்சைக்காரனாக இருந்தாய், ஆனால்

நான் அப்படியிருந்ததாக நினைத்துக் கொண்டாய். இப்பொழுது உன்னையே நீ பார்த்துக் கொள் ! முழு உலகத்தையும் வெற்றி கொள்வதன் மூலம் நீ எதை சம்பாதித்திருக்கிறாய்?"

வெற்றி பெறுவதன் அவசியம் என்ன ? எதை நீ நிரூபிக்க விரும்புகிறாய் ? நீ எந்தப் பொருளுமற்று இருப்பதை உன் சொந்தக் கண்களாலேயே நீ காண்கிறாய், நீ ஒன்றுமேயில்லை, இந்த ஒன்று மில்லாத்தன்மை இதயத்தில் ஒரு வலியாகும். நீ துன்பப்படுகிறாய் ஏனெனில் நீ ஒன்றுமில்லை. அதனால் நீ மற்றவர்களின் கண்களுக்கு உன்னை நிரூபித்துக் காட்ட வேண்டும். நீ யாரோ ஒருவன் என்ற எண்ணத்தை அடுத்த வரின் மனதில் நீ உருவாக்க வேண்டும். அதாவது நீ ஒன்றுமே இல்லாமல் இல்லை என்பதை அவர்களின் கண்களைப் பார்த்து அவர்களின் எண்ணங்களை சேகரிப்பாய், பொது மக்கள் கருத்து, இந்தப் பொதுக் கருத்தின் மூலம் ஒரு பிம்பத்தை உருவாக்குவாய். அதுதான் 'நான்' என்ற தன்னுணர்ச்சி. அது உண்மையான 'நீ' அல்ல. அது பிரதிபலிக்கப்பட்ட ஒன்று. உண்மையான 'நீ' அல்ல. இது அடுத்தவர்களின் கண்களிலிருந்து சேகரிக்கப்பட்டது.

அலெக்ஸாண்டரைப் போன்ற மனிதர்கள் எப்பொழுதும் அடுத்தவர்களுக்குப் பயப்படுவார்கள். ஏனெனில் எதையெல்லாம் அவர்கள் கொடுத்தார்களோ அவற்றெயெல்லாம் அவர்களால் திருப்பி எடுத்துக் கொள்ள முடியும். ஒரு அரசியல்வாதி எப்பொழுதுமே மக்களுக்குப் பயப்படுவான், ஏனெனில் எவற்றை யெல்லாம் கொடுத்தார்களோ, அவற்றையெல்லாம் திரும்பி எடுத்துக் கொள்ள அவர்களால் முடியும். அவனுடைய 'தான்' அடுத்த வரிடமிருந்து வாங்கப்பட்ட ஒன்று. நீங்கள் மற்றவர்களைப் பார்த்துப் பயந்தால், நீங்கள் ஒரு அடிமைதான், எஜமான் அல்ல.

டயோஜீன்ஸ் யாரைக் கண்டும் பயப்படவில்லை. அவரிடமிருந்து எதையும் எடுத்துச்செல்ல உங்களால் முடியாது, ஏனெனில் எதையும் யாரிடமிருந்தும் அவர் பெறவில்லை. தன்னையே அவர் கொண்டுள்ளார். ஆனால் உங்களுக்கு 'நான்' என்ற தன்னுணர்ச்சி மட்டுமே உள்ளது. இதுதான் 'தான்' என்ற தன்மைக்கும், 'நான்' என்ற தன்னுணர்ச்சிக்குமிடையேயுள்ள வேறுபாடு. 'நான்' என்ற உணர்ச்சி அடுத்தவரிடமிருந்து வாங்கப்பட்ட 'தான்.'

'நான்' என்ற தன்னுணர்ச்சி அடுத்தவரையே சார்ந்துள்ளது, பொதுமக்கள் எண்ணத்தை. 'தான்' என்பது உங்கள் போலியில்லாத தன்மை. அது வாங்கப்பட்டதல்ல, அது உங்களுடையது. யாரும் அதைத் திருப்பி எடுத்துச் செல்ல முடியாது.

பாருங்கள் சுவாங்தஸூ எவ்வளவு அழகாக இந்த வரிகளில் கூறியிருக்கிறார் என்று :

ஒரு வில்லாளன்
வேடிக்கைக்காக எய்யும் பொழுது
அவனிடம்
முழுத்திறனும் இருக்கிறது.
ஒரு வில்லாளன்
வேடிக்கைக்காக எய்யும் பொழுது
அவனிடம் முழுத் திறமையுமிருக்கிறது–
வேடிக்கைக்காக !

நீங்கள் விளையாடிக் கொண்டிருக்கும் போது, நீங்கள் யாரோ ஒருவர் என்பதை நிரூபிக்க முயற்சி செய்வதில்லை. நீங்கள் ஓய்விலிருக்கிறீர்கள், வீட்டிலிருக்கிறீர்கள். விளையாடிக் கொண்டிருக்கும் போது, வேடிக்கைக்காக, மற்றவர்கள் உங்களைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பதைப் பற்றி நீங்கள் கவலைப் படுவதில்லை.

தந்தை தன் குழந்தையுடன் வேடிக்கையாகச் சண்டை போட்டு விளையாடுவதைப் பார்த்திருக்கிறீர்களா ? அவர் தோற்கடிக்கப்படுவார். அவர் கீழே விழுந்தவுடன், குழந்தை அவர் மார்பில் உட்கார்ந்து கொண்டு, சிரித்துக் கொண்டே சொல்லும் : "நான் தான் வெற்றி பெற்றவன் !" - தந்தை மகிழ்ச்சியாயிருப்பார். இது ஒரு வேடிக்கைதான். இந்த வேடிக்கையில் தோற்கடிக்கப்படும் போது நீங்கள் மகிழ்ச்சியா யிருக்கிறீர்கள். வேடிக்கை, தீவிரமானதல்ல. இது 'நான்' என்ற உணர்ச்சியோடுத் தொடர்புடையதல்ல. 'நான்' என்ற தன் னுணர்ச்சி எப்பொழுதுமே தீவிரமானதாக, கடுமையான தாகத் தானிருக்கும்.

அதனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : நீங்கள் கடுமையானவராயிருந்தால், எப்பொழுதுமே குழப்பத்துடன் தானிருப்பீர்கள், உள் மனக்குழப்பம். புனிதர் எப்போதுமே விளையாட்டுத் தன்மையுடனே தானிருப்பார், வேடிக்கைக் காகச் சுடுவதைப் போல. ஒரு குறிப்பிட்ட இலக்கைச் சுடுவதில் எல்லாம் அவருக்கு ஆர்வம் இல்லை, தன்னையே அனுபவித்து ரசித்துக் கொண்டிருப்பார்.

ஜெர்மன் தத்துவஞானி, யூஜின்ஹெரிகல், தியானம் கற்றுக் கொள்ள ஜப்பானுக்குச் சென்றார். ஜப்பானில், எந்தெந்த விதத்தில் எல்லாம் தியானத்தைக் கற்றுத் தர முடியுமோ எந்த விதத்திலெல்லாம் கற்றுத் தர முயல்வார்கள் - அவற்றில் அம்பெய்தலும் ஒன்று. ஹெரிகல் அம்பெய்தலில் சிறந்தவர். நூறு சதவீதம் மிகச் சரியானவர், ஒரு போதும் அவருக்குக் குறி தவறியதில்லை. அதனால் அம்பெய்தல் மூலம் தியானம் கற்றுக் கொள்வதற்காகக் குருவிடம் சென்றார், ஏனெனில் ஏற்கெனவே அவருக்கு அதில் திறமை இருந்தது.

மூன்று வருடக் கல்வி முடிந்து விட்டது. ஹெரிகல் தான் நேரத்தை வீணடித்து விட்டதாக உணர்ந்தார். அவர்

ஆசிரியர் அவர் அம்பெய்யக் கூடாது என்று தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டேயிருந்தார். ஹெரிகலிடம் அவர் கூறினார், "அம்பு தானாகவே செல்லட்டும், குறிபார்க்கும் போது நீ அங்கேயிருக்கக் கூடாது, அம்பு தானாகவே குறிபார்க்க விட்டுவிடு."

இது அபத்தமாக இருந்தது, குறிப்பாக ஒரு மேற்கத்திய மனிதனுக்கு, இது மிகவும் அபத்தமானதாக இருந்தது ; எதைக் குறிப்பிடுகிறீர்கள்? 'அம்புதானாகவே குறிபார்த்துக் கொள்ளும் படி விட்டுவிட வேண்டுமா ? எப்படி அம்பு தானாகவே குறிபார்த்துக் கொள்ள முடியும் ? நான் ஏதாவது செய்தாக வேண்டும்.' பிறகு எய்தத் தொடங்கினார், ஒருபோதும் இலக்கைத் தவறவிடவில்லை.

ஆனால் ஆசிரியர் சொன்னார் : "இலக்கு ஒரு போதும் இலக்கல்ல. நீதான் இலக்கு. நீ இலக்கை அடைகிறாயா இல்லையா என்பதை எல்லாம் நான் பார்ப்பதில்லை, நீ அங்கிருக்கிறாயா இல்லையா என்பதை மட்டுமே பார்க்கிறேன். வேடிக்கைக்காக எய் ! அதை அனுபவி, நீ ஒரு போதும் இலக்கைத் தவறவிடுவதில்லை என்று நிரூபிக்க முயற்சி செய்யாதே - உன்னுடைய 'நான்' என்ற தன்னுணர்ச்சியை நிரூபிக்க முயற்சிக்காதே. அது ஏற்கெனவே அங்கிருக்கிறது. நீ அங்கேயிருக்கிறாய். அதை நிரூபிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஓய்வாக இரு, அம்பு தானாகவே எய்து கொள்ளும் படி விட்டுவிடு."

ஹெரிகல்லால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் மீண்டும் மீண்டும் முயற்சித்து, மீண்டும் மீண்டும் கூறினார் : "என்னுடைய இலக்கு நூறு சதவீதம் மிகச்சரியாக இருந்தால், ஏன் எனக்கு நீங்கள் சான்றிதழ் அளிக்கக் கூடாது ?"

மேற்கத்தியர்களின் மனம் எப்போதும் கடைசி தீர்ப்பிற்குத்தான் காத்துக் கொண்டிருக்கும், ஆர்வம் காட்டும்.

கிழக்கோ ஆரம்பத்தைப் பற்றித் தான் அதிக ஆர்வம் காட்டும், முடிவைப் பற்றி அல்ல. கிழக்கத்தியர்களின் மனதிற்கு முடிவு என்பது பயனற்ற ஒன்று. முக்கியத்துவம் ஆரம்பத்திற்குத்தான் உண்டு. அம்பெய்துபவனுக்கு, இலக்கு முக்கியம் அல்ல. அதனால்தான் அந்த ஆசிரியர் சொன்னார் : "இல்லை."

பிறகு முழுமையாக ஏமாற்றமடைந்த, ஹெரிகல் அங்கிருந்து விலகிவிட அனுமதி கேட்டார். அவர் சொன்னார்: "சரி, நான் சென்றாக வேண்டும். இந்த மூன்று வருடங்களில் நான் எதையும் பெற்றுக் கொள்ளவில்லை. நீங்கள் 'இல்லை' என்றுதான் சொல்லிக்கொண்டேயிருக்கிறீர்கள்... நான் அதே போல்தான் இப்போதுமிருக்கிறேன்."

அவர் அங்கிருந்து செல்ல வேண்டிய நாள் அன்று அவர் ஆசிரியரிடம் விடைபெறுவதற்காகச் சென்றார். அங்கு அவர் மற்ற மாணவர்களுக்குக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டார். இந்தக் கலையில் ஹெரிகல் எதிலும் விருப்பம் காட்டவில்லை ; அவர் செல்லப் போகிறார். அந்தப் படிப்பையே விட்டுவிடப்போகிறார். அதனால் அவர் ஆசிரியர் முடிப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது தானே அவரிடம் விடைபெற்றுக் கொண்டு செல்ல முடியும்.

ஆசனத்தில் அமர்ந்து கொண்டு முதல் முறையாகத் தன் ஆசிரியரைக் கவனித்தார். மூன்று வருடங்களில் முதன் முறையாகத் தன் ஆசிரியரைக் கவனித்தார். நிஜமாகவே, அவர் எதுவும் செய்யவில்லை. அந்த அம்பு தானாகவே எய்து கொண்டது. ஆசிரியர் அதை முக்கியமானதாகவே கருத வில்லை, அவர் விளையாடிக் கொண்டிருந்தார், அவர் வேடிக்கையில் திளைத்திருந்தார். அங்கே யாரும் இலக்கை அடைவதில் விருப்பம் காண்பிக்கவில்லை.

'நான்' என்ற தன்னுணர்ச்சி எப்போதுமே இலக்கை அடிப்படையாகக் கொண்டது. ஆனால் வேடிக்கைக்கு அடைய வேண்டிய இலக்கு என்று ஒன்றுமில்லை. அம்பு வில் லிருந்து செல்லும் அந்த ஆரம்ப நிலையில் தான் வேடிக்கை இருக்கிறது. அது ஒரு வேளை சரியாக எய்தப்பட்டு விட்டால், அது ஒரு விபத்துதான். எதிர்பாராமல் நிகழ்ந்தது தான். அது இலக்கை அடைந்தால் கூட அது பொருத்தமில்லாததுதான். இலக்கை அடைகிறதா இல்லையா என்பதெல்லாம் இங்கு ஒரு விஷயமே அல்ல. ஆனால், அம்பு வில்லிலிருந்து செல லும் போது, வில்லாளன் வேடிக்கையாக இருக்க வேண்டும், ரசித்துக் கொண்டிருக்க வேண்டும், தீவிரமான சிந்தனை யோடு அல்ல. நீங்கள் தீவிர சிந்தனையோடு இருக்கும் போது மிகவும் கடினமாக, பரபரப்பாக இருக்கிறீர்கள். தீவிர யோசனையில் இல்லாத போது ஓய்வாக இருக்கிறீர்கள். எப்பொழுது ஓய்வாக இருக்கிறீர்களோ, அப்போதுதான் நீங்களாக இருக்கிறீர்கள். நீங்கள் பரபரப்பாக இருக்கும் போது. 'நான்' என்ற தன்னுணர்ச்சி தான் அங்கிருக்கிறது ; நீங்கள் மறைக்கப்பட்டு விடுகிறீர்கள்.

முதல் முறையாக ஹெரிகல் கவனித்தார்... ஏனெனில் அவர் அப்போது விருப்பமாயில்லை. இப்பொழுது எதுவும் அவருடைய வேலை இல்லை, அவர் முழுவதையும் விட்டு விட்டார். அவர் விலகிச் சென்று கொண்டிருக்கிறார். அத னால் தீவிரமான எண்ணம் என்ற கேள்விக்கே இட மில்லை. அவர் தோல்வியை ஒப்புக்கொண்டு விட்டார், நிரூபிக்க வேண்டியது எதுவுமேயில்லை. அவர் கவனித்தார், முதல் முறையாக அவரது கண்கள் இலக்கைக் கவனிக்காமலிருந்தன.

அவர் ஆசிரியரைக் கவனித்தார், வில்லிலிருந்து அம்பு தானாகவே குறிபார்த்துக் கொள்வதைப்போல. ஆசிரியர் அதற்கு சக்தியை மட்டும்தான் தருகிறார், அவர் எய்தவில்லை.

அவர் எதுவுமே செய்யவில்லை, முழு செயலுமே முயற்சி இல்லாத, சக்தியை விரயமாக்காததாகித்தான் இருக்கிறது. ஹெரிகல் கவனித்தார், முதன்முறையாக அவர் புரிந்து கொண்டார்.

மந்திரத்தால் வசியப்படுத்தப்பட்டவர் போல் ஆசிரியரை அணுகினார், வில்லைக் கைகளில் எடுத்துக் கொண்டு அம்பை விட்டார். ஆசிரியர் சொன்னார் : "நீ சென்றடைந்துவிட்டாய். இதைத்தான் நீ செய்ய வேண்டுமென்று மூன்று வருடங்களாக நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்." அம்பு, வில்லிருந்து செல்லக் கூட இல்லை. அதற்குள் ஆசிரியர் கூறினார் : "முடிந்து விட்டது. இலக்கை அடைந்தாகி விட்டது." இப்பொழுது அவர் வேடிக்கையாயிருக்கிறார், தீவிர சிந்தனையோடு அல்ல, இலக்கை அடிப்படையாகக் கொண்டு அல்ல.

இதுதான் வித்தியாசம். வேடிக்கை, இலக்கை அடிப்படையாகக் கொண்டதல்ல. அதற்கு இலக்கு என்பதே இல்லை. வேடிக்கை என்பதே இலக்குதான், உண்மையான மதிப்பு, எதுவும் வெளியே இல்லை. நீங்கள் ரசிக்கிறீர்கள், அவ்வளவுதான். எந்தவித நோக்கமும் அதில் இல்லை, நீங்கள் அதனுடன் விளையாடுகிறீர்கள், அவ்வளவுதான்.

ஒரு வில்லாளன் வேடிக்கைகாக எய்யும் பொழுது
அவனிடம் முழுத்திறமையும் இருக்கிறது.

நீங்கள் வேடிக்கைக்காக எய்யும் பொழுது, நீங்கள் முரண்படமாட்டீர்கள், அங்கே இரண்டு இல்லை, அங்கு பரபரப்பு இல்லை ; உங்கள் மனம் எங்கேயும் செல்வதில்லை. உங்கள் மனம் எப்போதும் எங்கேயும் செல்வதில்லை - அதனால் நீங்கள் முழுமையாக இருக்கிறீர்கள். அப்பொழுது அங்கே திறனிருக்கும்.

ஒரு ஜென் குருவைப் பற்றிய இதை ஒன்று உண்டு. அவர் ஒரு ஓவியர். புதிய கோயில்கள், கோபுரங்கள் போன்றவற்றை வடிவமைப்பவர். தன் பக்கத்தில் ஒரு உதவியாளனை வைத்துக் கொள்வது அவர் வழக்கம். உதவியாளனைப் பார்த்து, "நீ என்ன நினைக்கிறாய் ?" என்று கேட்டுக் கொண்டே வடிவங்களை வரைவதைத் தன் வழக்கமாகக் கொண்டிருந்தார்.

அந்த உதவியாளன், "உங்கள் அளவிற்கு, மதிக்கத் தகுந்ததாக ஒன்றும் இல்லை" என்று கூறுவான். உடனே அதை ஒதுக்கி வைத்துவிடுவார்.

இதைப்போல் தொண்ணூற்று ஒன்பது முறை நிகழ்ந்து விட்டது. மூன்று மாதங்கள் கடந்து விட்டன. எப்பொழுது வடிவமைத்தல் முடியும், அப்பொழுது தானே கட்டடம் கட்டத் தொடங்க முடியும் என்று அரசர் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருந்தார். ஒருநாள் இது நிகழ்ந்தது, அவர் வரைந்து கொண்டிருக்கும் போது மை காய்ந்து விட்டது. அதனால் தன் உதவியாளனைப் பார்த்து இன்னும் கொஞ்சம் மை தயாரித்து எடுத்து வரும்படி கேட்டார்.

உதவியாளன் வெளியே சென்று விட்டு, திரும்ப வந்தவுடன் பார்த்து விட்டு கேட்டார் : "என்ன ? வரைந்து முடித்து விட்டீர்கள் ! ஆனால் இந்த மூன்று மாதத்தில் உங்களால் இதைச் செய்ய முடியவில்லையே ?"

அந்த ஓவியர் சொன்னார் : "அது உன்னால் தான். நீ என் அருகில் உட்கார்ந்திருந்ததால் நான் கவனம் சிதறி விட்டேன். நீ என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாய், அதனால் நான் இலக்கை அடிப்படையாகக் கொண்டவனாகி விட்டேன், அது ஒரு வேடிக்கையாக இல்லை. நீ இங்கே இல்லாத போது, நான் ஓய்வாக இருந்தேன். என்னை யாருமே கவனிக்காததை உணர்ந்தேன். முழுமையானேன். இந்த வடிவமைப்பை நான் வரையவில்லை. அது தானாகவே

வந்தது. இந்த மூன்று மாதங்களாக இது வரவில்லை, ஏனெனில் நான் செய்பவனாக, காரணமானவாக இருந்தேன்."

ஒரு வில்லாளன் வேடிக்கைக்காக எய்யும் பொழுது
அவனிடம் முழுத்திறமையும் இருக்கிறது.

... ஏனெனில் முழு இருத்தலும் அங்கிருக்கிறது. முழுமை யான இருத்தலும் அங்கிருக்கும் போது, ஒரு அழகைப் பெறுகிறீர்கள், கருணையை. முற்றிலும் வேறுபட்டத் தன்மையுடைய ஒருவராக, நீங்கள் பிரிக்கப்படும் பொழுது, தீவிர சிந்தனையுடைய, பரபரப்பான, அசிங்கமானவ ராகிறீர்கள். ஒருவேளை, நீங்கள் வெற்றி பெறலாம், ஆனால் அந்த வெற்றி அசிங்கமானதாக இருக்கும். நீங்கள் யாரோ ஒருவர் என்பதை நிரூபித்து விடலாம், ஆனால் நீங்கள் எதையும் நிரூபித்து விடுவதில்லை, நீங்கள் ஒரு தவறான பிம்பத்தைத்தான் உருவாக்குகிறீர்கள். ஆனால், நீங்கள் மொத்தமாய் இருக்கும் போது, ஓய்வாக, முழுமையாக இருக்கும் போது, யாருக்கும் உங்களைத் தெரியாமல் இருக்கலாம் ; ஆனால் நீங்கள் இருக்கிறீர்கள்.

இந்த முழுமைத் தன்மை ஒரு ஆசிர்வாதம், அழகான விஷயம், ஒரு தியான மனதிற்கு நிகழ்வது, தியானத்தில் நிகழ்வது.

தியானம் என்பதற்குப் பொருள் முழுமைத்தன்மை. அதனால் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள், தியானம் வேடிக்கையானதாயிருக்க வேண்டும். அது ஒரு வேலையாக இருக்கக்கூடாது. ஒரு மதவாதியைப் போல் நீங்கள் தியானம் செய்யக் கூடாது. ஒரு விளையாட்டைப் போல் செய்ய வேண்டும். விளையாடுங்கள், வேடிக்கையாக செய்யுங்கள். ஒரு விளையாட்டு வீரனைப் போல, தொழிலதிபனைப் போல் அல்ல. அது வேடிக்கையானதாய் இருக்க வேண்டும், அப்பொழுது எல்லாத் திறனும் கிடைக்கப் பெறுவதாய்

இருக்கும், பிறகு அதுதானாகவே மலரும். நீங்கள் கூட தேவைப்பட மாட்டீர்கள். எந்த முயற்சியும் தேவைப்படாது. உங்கள் முழு இருத்தலும் கிடைக்கப்பெற வேண்டும், உங்கள் முழு சக்தியும் அவசியம். பிறகு அந்த மலர் தானாகவே வந்து விடும். அவன் ஒரு பித்தளைக் கொக்கிக்காக எய்யும் பொழுது, ஏற்கெனவே மிகுந்த கலவரத்துடனிருப்பான்.

ஒரு பித்தளைக் கொக்கிக்காக அவன் போட்டியில் இருந்தான் என்றால், ஏதாவது சாதிக்க வேண்டிய கட்டாயம் இருந்தால், ஏதாவது தீர்வு காணப்பட வேண்டியிருந்தால், ஏற்கெனவே அவன் மிகுந்த பதட்டத்துடனிருப்பான், பயத்துடனிருப்பான். பயம் வந்து விடும் ; "நான் வெற்றி பெறுவனோ, மாட்டேனா ?" அவன் பிரிக்கப்பட்டு விடுகிறான். அவன் மனதில் ஒரு பகுதி சொல்லும் : "நீ ஒரு வேளை வெற்றிபெறலாம்." மற்றொரு பகுதி சொல்லும் : "ஒருவேளை நீ தோற்றுப் போகலம்." இப்பொழுது அவனிடம் முழுத் திறமையுமில்லை. இப்பொழுது அவன் பாதிப்பாதிப்பாய் இருக்கிறான். எப்பொழுதெல்லாம், நீங்கள் பிரிக்கப்பட்டிருக்கிறீர்களோ, அப்பொழுதெல்லாம் உங்கள் முழுமையும் அசிங்கமாகி, நோய்வாய்ப்படுகிறது. நீங்கள் நோய் உடையவராகிறீர்கள்.

தங்கப் பரிசுக்காக அவன் எய்கிறானெனில்,
அவன் பார்வையே இழந்த நிலைக்குள்ளாவான்
அல்லது இரண்டு இலக்குகளைப் பார்ப்பான்.
அவன் மனம் சிதறி அலைபாயும்.

கடைவீதிக்குச் சென்று தங்கத்தை வாங்கத் துடிக்கும் மக்களைப் பாருங்கள். அவர்கள் குருடர்கள். வேறு எதாலும் செய்ய முடியாதபடி, தங்கம் மனிதர்களைக் குருடாக்குகிறது. அவர்களின் கண்களைத் தங்கம் முழுமையாக மூடிவிடுகிறது. நீங்கள் வெற்றிக்கு மிகவும் ஆசைப்படும் போது, பலனை மிக ஆவலாய் எதிர்பார்க்கும் போது, தீவிரமான குறிக்கோளுடன்

இருக்கும் போது, தங்க விருதுக்கு அதிக ஆசைப்படும் போது, இத்தகைய சமயங்களிலெல்லாம் நீங்கள் குருடாகி விடுகிறீர்கள், இரண்டு இலக்குகளைப் பார்க்கத் தொடங்கி விடுகிறீர்கள். அதிகமாய் நீங்கள் குடித்துவிடும் போது இரண்டு இரண்டாய் பார்க்கிறீர்கள்.

நஸ்ருதின் மதுபான விடுதியில் தன் மகனுடன் பேசிக் கொண்டிருந்தார் : "எப்பொழுது குடிப்பதை நிறுத்த வேண்டும் என்பதை எப்போதும் நினைவில் வைத்துக்கொள். ஆல்கஹால் உடலுக்கு நல்லதுதான். ஆனாலும் எப்பொழுது நிறுத்த வேண்டும் என்பது ஒருவனுக்குத் தெரிய வேண்டியது அவசியம். நான் என் அனுபவத்திலிருந்து சொல்கிறேன். அந்த மூலையைப் பார். அங்கு உட்கார்ந்திருக்கும் நான்கு பேரும் எட்டு போல் காணப்படுகிறார்கள். நிறுத்து !"

மகன் சொன்னான் : "ஆனால் அப்பா; நான் அங்கு இரண்டுபேர் உட்கார்ந்திருப்பதைத்தானே காண்கிறேன்!"

மனம் குடித்திருக்கும் போது, காட்சி இரண்டாகிறது. தங்கம் உங்களை நினைவிழக்கச் செய்கிறது. மயங்கச் செய்கிறது. இப்போது இரண்டு இலக்குகள் உள்ளன. அவற்றை அடைவதில் நீங்கள் அவசரம் காட்டுவதால் பரபரப்படைகிறீர்கள், உள்ளுக்குள் நடுங்குகிறீர்கள்.

சுவாங்தஸூ இதைத்தான் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்... 'அவன் மனநிலை தவறுகிறான்.'

ஒவ்வொருவருமே மனநிலை இழந்துதான் காணப்படு கிறோம். பைத்தியக்காரர்களுக்கு மட்டுமே மனநிலை சிதறிக் காணப்படும் என்பதில்லை. நீங்கள் கூட மனதை இழந்து தான் உள்ளீர்கள். வித்தியாசம் சில கோணங்களில் வேண்டு மானால் இருக்கலாம். குணத்தில் அல்ல. எந்தக் கணத்திலும், இன்னும் கொஞ்சம் கடந்தால் நீங்களும் எல்லையைத் தாண்டி விடுவீர்கள். அதாவது நீங்கள் தொண்ணூற்று ஒன்பது டிகிரி

கோணத்திலிருக்கிறீர்கள். நூறு டிகிரியில் நீங்கள் கொதிப்படைந்து, எல்லையைக் கடந்து விடுவீர்கள். மனநல மருத்துவ மனையில் இருப்பவர்களுக்கும், வெளியே இருப்பவர்களுக்கு மிடையே உள்ள வேறுபாடு குணத்தில் அல்ல, எண்ணிகையில்தான். ஒவ்வொருவரும் மனநிலை தவறிய நிலையில் தானிருக்கிறோம். ஏனெனில் ஒவ்வொருவரும் தீர்வு, இலக்கு, நோக்கம் இவற்றுக்குப் பின்னால்தான் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். ஏதாவது ஒன்றைச் சாதித்தே ஆக வேண்டும்.

பிறகு பரபரப்பு வருகிறது, உள்ளுக்குள் நடுக்கம் ஏற்படுகிறது, இலக்கு இரண்டாகிறது, அல்லது நான்கு அல்லது எட்டாகிறது - பிறகு ஒரு வில்லாளன் ஆவது என்பது சாத்தியமில்லாமல் போகிறது.

மிகச்சரியான வில்லாளன் எப்போதும் வேடிக்கை உணர்வோடு தானிருப்பான்.

சரியான மனிதன் வாழ்க்கையை வேடிக்கையாய் வாழ்வான், விளையாட்டாக.

கிருஷ்ணரின் வாழ்க்கையைப் பாருங்கள். சுவாங்தஸு கிருஷ்ணரின் வாழ்க்கையைப் பற்றி அறிந்திருந்தாரெனில், மிகவும் அழகாயிருந்திருக்கும். கிருஷ்ணரின் வாழ்க்கை வேடிக்கையானது. புத்தர், மகாவீரர், இயேசு ஆகியோரெல்லாம் ஒரு விதத்தில் இல்லையென்றாலும் இன்னொரு விதத்தில் சிறிது தீவிரமானவர்களாகத்தான் இருக்கிறார்கள். ஏதோ ஒன்று சாதிக்கப்பட வேண்டும் என்பதைப் போல். மோட்சம், நிர்வாணம் ஆசையில்லாத் தன்மை. ஆனால் கிருஷ்ணர் முற்றிலும் இலக்கே இல்லாமல் இருந்தார். புல்லாங்குழல் வாசிப்பவன் வேடிக்கைக்காக மட்டுமே வாழ்கிறான், பெண்களுடன் நடனமாடி மகிழ்கிறான், பாடுகிறான். அவனுக்குச் செல்வதற்கு எந்த இடமும் இல்லை. எல்லாமே இங்கு தானிருக்கிறது. அதனால் முடிவைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும், எல்லாமே இங்கே, இப்போதே இருக்கிறது. ஏன் மகிழ்ச்சியாய் அனுபவிக்கக்கூடாது ?

வேடிக்கைதான் மிகச்சரியான மனிதனுக்கான அடையாளம் எனில், கிருஷ்ணர் மிகச்சரியான மனிதர். இந்தியாவில், கிருஷ்ணரின் வாழ்க்கைச் சரித்திரம் என்று நாம் கூறுவதேயில்லை. அவர் குணத்தை, கிருஷ்ணரின் லீலை, விளையாட்டு என்றே கூறுகிறோம். அது ஒரு குணமல்ல, இலக்கு உடையதல்ல. முழுக்க முழுக்க இலக்கு இல்லாதது.

ஒரு சிறு குழந்தையைப் போன்றது. "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் ?" என்று உங்களால் கேட்கமுடியாது. "இதன் பொருள் என்ன ?" என்று உங்களால் கேட்கமுடியாது. அது தானாகவே ரசித்துக் கொண்டு பட்டாம் பூச்சிகளின் பின்னால் ஓடுகிறது. சூரியனைப் பார்த்துக் குதிப்பதால் அக்குழந்தை எதைச் சாதித்து விடப் போகிறது? இந்த முயற்சி அதை எங்கே அழைத்துச் செல்லும்? எங்கேயுமில்லை ! அது எங்கேயும் செல்லப்போவதில்லை. நாம் அதைக் குழந்தைத் தனம் என்கிறோம், நாம் முதிர்ச்சியடைந்தவர்கள் என நினைத்துக் கொள்கிறோம். ஆனால் நான் ஒன்று சொல் கிறேன் : நீங்கள் உண்மையிலேயே மனமுதிர்ச்சி அடைந்து விட்டவர்களாக ஆகும் போது, மீண்டும் குழந்தைத் தனமுடையவர்களாகிறீர்கள். பிறகு உங்கள் வாழ்க்கை மறுபடியும் வேடிக்கை நிறைந்ததாகி விடும். நீங்கள் அனுபவிக்கத் தொடங்கி விடுவீர்கள், ஒவ்வொரு பகுதியையும். நீங்கள் தீவிரமானவராயிருக்க மாட்டீர்கள். ஒரு ஆழ்ந்த சிரிப்பு உங்கள் வாழ்க்கை முழுவதும் பரவும். அதிகம் சிரிப்பைப் போலவும், சிறிது மட்டுமே வேலையைப் போலவும் இருக்கும் ; அதிகமாய் பாடுவதைப் போலவும், குளியலறையில் முணுமுணுப்பதைப் போலவும், மிகக் குறைவாகவே அலுவலகத்தில் கணக்குப் பார்ப்பது போலவும் இருக்கும். அது கணக்கைப் போல் இருக்காது, சந்தோஷமாக ரசிப்பதைப் போல்தான் இருக்கும்.

**அவன் திறமை மாறிவிடவில்லை**
**ஆனால் அந்தப்பரிசு அவனைப் பிரிக்கிறது.**

அவன் கவனமாய் இருக்கிறான்.
வெற்றிபெறுவதைப் பற்றியே அதிகமாய் சிந்திக்கிறான்.
எய்துவதைக் காட்டிலும் –
வெற்றி அடைதலின் அவசியம்
அவன் சக்தியை நீக்கி விடுகிறது.
செயல்தன்மை இல்லாதவர்களாக, சக்தி இல்லாமல்
இருப்பதாக, பயன் இல்லாமல் இருப்பதாக எல்லாம்.

நீங்கள் உணர்ந்தீர்கள் எனில், அது உங்களால்தான். யாரும் உங்கள் சக்தியை நீக்கிவிடவில்லை. எல்லையில்லாத சக்தி மூலத்தை நீங்கள் பெற்றுள்ளீர்கள், முடிவே இல்லாததை. ஆனால் சக்தியில்லாதவர் போல் நீங்கள் காணப்படுகிறீர்கள், எந்த நிமிடத்திலும் தடுமாறி கீழே விழுந்து விடுவீர்கள் என்பதைப் போல.

உங்கள் சக்தி எல்லாம் எங்கே சென்று விட்டது ? உங்கள் திறன் ஒரே மாதிரித் தான் இருக்கிறது என்றாலும், நீங்கள் உங்களுக்குள் குழம்பிக் கொண்டிருக்கிறீர்கள்.

அவன் திறமை மாறிவிடவில்லை
ஆனால் அந்தப்பரிசு அவனைப் பிரிக்கிறது.
அவன் கவனமாய் இருக்கிறான்.

நான் ஒரு கதை கேட்டிருக்கிறேன். கிராமத்திலுள்ள ஏழைப்பையன் ஒருவனுக்கு நேர்ந்தது அது. அவன் ஒரு பிச்சைக்காரனின் மகன். இளமையாகவும் ஆரோக்கிய மாகவும் இருப்பான். அவன் எந்த அளவுக்கு இளமையுடனும், ஆரோக்கியத்துடனும் திகழ்ந்தான் என்றால், அரசனின் யானை வீதியில் செல்லும் போது, அவனால் அதன் வாலைப் பிடித்து அந்த யானையை நகரவிடாமல் செய்ய முடியும்.

சில சமயங்களில் அரசனுக்கே தர்மசங்கடமாகி விடும். ஏனெனில் அவர் யானை மீது உட்கார்ந்து கொண்டிருப்பார்,

மந்தை முழுவதும் மக்கள் கூடி நின்று இக்காட்சியைப் பார்த்துச் சிரிப்பார்கள். எல்லாம் இந்த பிச்சைக்காரனின் மகனால் விளைவது.

அரசர் தன் மந்திரியை அழைத்தார். "ஏதாவது செய்தே ஆக வேண்டும். இது எனக்குப் பெரிய அவமானம். கிராமத்தின் வழியாகச் செல்வதற்கே நான் பயப்பட வேண்டியிருக்கிறது. அந்தப் பையன் சில சமயங்களில் வேறு கிராமங்களுக்கும் வந்துவிடுகிறான் ! எங்கே வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் அவன் யானையின் வாலைப் பிடித்து விடுகிறான், அதுவும் நகராமல் நின்று விடுகிறது. அந்தப் பையன் அதிக சக்தி வாய்ந்தவனாக இருக்கிறான். அவன் சக்தியை நீக்க ஏதாவது செய்தாக வேண்டும்."

மந்திரி கூறினார் : "நான் சென்று அறிவாளிகளுடன் கலந்தாலோசிக்க வேண்டும். ஏனெனில் அவன் சக்தியை எப்படி நீக்க வேண்டும் என்று எனக்குத் தெரியாது. அவன் ஒரு பிச்சைக்காரன். அவன் கடை வைத்திருப்பவன் என்றால், அது அவன் சக்தியை உறிஞ்சி விடும். தொடக்கப்பள்ளியில் அவன் ஒரு ஆசிரியராக இருந்தான் என்றால் அப்பொழுதும் அவன் சக்தி நீக்கப்பட்டு விடும். ஒரு அலுவலகத்தில் அவன் வேலை செய்தான் என்றாலும், அவன் சக்தி குறைந்து விடும். ஆனால் அவனுக்குச் செய்வதற்கு ஒன்றுமில்லை. அவன் வேடிக்கைக்காக வாழ்கிறான், மக்கள் அவனை விரும்புகிறார்கள், அவனுக்கு உணவிடுகிறார்கள், அதனால் அவனுக்கு உணவிற்கும் பஞ்சமில்லை. அவன் மகிழ்ச்சியாயிருக்கிறான், சாப்பிட்டு விட்டுத் தூங்குகிறான். அதனால் இது மிகவும் கடினம். ஆனாலும், நான் செல்கிறேன்."

அதனால் ஒரு வயதான அறிவாளியிடம் சென்றார். அவர் கூறினார் : "ஒன்று செய்யுங்கள். அந்தப் பையனிடம் சென்று நீங்கள் அவனுக்குத் தினமும் ஒரு தங்கக்காசு

கொடுப்பதாகவும், அதற்காக அவன் ஒரு சிறிய வேலை செய்ய வேண்டும் என்றும் கூறுங்கள் - உண்மையிலேயே, அது மிகவும் சிறிய வேலைதான். அவன் கிராமத்திலுள்ள கோயிலுக்குச் சென்று விளக்கேற்றி வைக்க வேண்டும். மாலை வேளையில் சென்று அவன் விளக்கேற்றி வைக்க வேண்டும், அவ்வளவுதான். நீங்கள் தினமும் அவனுக்கு ஒரு தங்கக்காசு தருவீர்கள்."

மந்திரி கேட்டார் : "ஆனால் இது எப்படி உதவும்? இது அவனை இன்னும் அதிக சக்தி படைத்தவனாக வேண்டுமானால் மாற்றலாம். ஒரு பணம் கிடைத்தவுடன் அவன் இன்னும் அதிகமாகச் சாப்பிடுவான். பிச்சை எடுப்பதைப் பற்றிக் கூட கவலைப்பட மாட்டான்."

அந்த அறிவாளி கூறினார் : "கவலைப்படாதீர்கள், நான் சொன்னதை மட்டும் செய்யுங்கள்."

அவ்வாறே செய்யப் பட்டது, அடுத்தவாரம், அரசர் கடந்து செல்லும் போது, அந்தப் பையன் யானையை நிறுத்த முயற்சித்துத் தோல்வி யடைந்தான். அதனுடன் இழுத்துச் செல்லப்பட்டான்.

என்ன நடந்தது ? கவனம் நுழைந்துவிட்டது. கவலை நுழைந்துவிட்டது. அவன் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்- ஒரு நாளின் இருபத்து நான்கு மணி நேரமும், கோயிலுக்குச் சென்று, விளக்கேற்றி வைக்க வேண்டும் என்பதை, அவன் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். அது கவலையாக மாறி, அவன் முழு இருத்தலைப் பிரித்து விடுகிறது. தூங்கும் போது கூட அது மாலை என்பதைப் போல் கனவு காணத் தொடங்கி விடுகிறான். என்ன செய்து கொண்டிருக்கிறாய் ? கோயிலுக்குச் சென்று விளக்கேற்றி விட்டு, உன் ஒரு ரூபாயைப் பெற்றுக் கொள். பிறகு அவன் அந்தத் தங்க ரூபாய்களைச் சேகரிக்கத் தொடங்கி விடுகிறான். ஏழு வைத்திருந்தான், இப்போது

எட்டு, பிறகு இவ்வளவு நாட்களுக்குள் நூறு ரூபாய்களைப் பெற்று விடமுடியும் என்ற கணக்குப் போடத் துவங்கி விடுவான் - பிறகு அது இருநூறாகும். கணக்கு வந்தவுடன் அங்கு வேடிக்கை மறைந்து விடுகிறது. அதுவும் அவன் செய்ய வேண்டியது மிகச்சிறிய வேலைதான், விளக்கேற்ற வேண்டும். ஒரு நிமிட வேலைதான், அவ்வளவு கூட இல்லை, ஒரு கணத்தில் செய்துவிடக் கூடியது. ஆனால் அது கவலையாகி விட்டது. அது அவனது சக்தியை எல்லாம் நீக்கிவிட்டது.

நீங்கள் சக்தி இழந்தவர்களாக இருக்கும் போது, உங்கள் வாழ்க்கையில் வேடிக்கையில்லாமல் இருப்பது ஒன்றும் ஆச்சரியமில்லை. உங்களுக்கு எவ்வளவோ கோயில்கள் உள்ளன. ஏற்றவும், அணைக்கவும் உங்களுக்கு எவ்வளவோ விளக்குகள் உள்ளன. உங்கள் வாழ்க்கையில் நீங்கள் போட வேண்டிய கணக்குகள் எவ்வளவோ உள்ளன. நிச்சயம் அங்கு வேடிக்கை இருக்க முடியாது.

அந்த வில்லாளனின் திறமை மாறி விடவில்லை, அதே அளவு திறமைதான், ஆனால் அந்த வில்லாளன், அவன் வேடிக்கைக்காக எய்யும் போது, அனைத்து திறமைகளும் கிடைக்கப் பெறுகிறான். இப்பொழுது அவன் திறமை மாறாமல் இருந்தால் கூட அந்தப் பரிசு அவனைப் பிரித்து விடுகிறது. அவன் கவனமாய் இருக்கிறான். ஆசை நுழைந்து விடுகிறது, பரபரப்பு வந்துவிடுகிறது. வெற்றியைப் பற்றியே அதிகமாய் சிந்திக்கிறான், இப்பொழுது எய்வதைப் பற்றி அவன் நினைப்பதில்லை. இப்பொழுது கேள்வியெல்லாம் எப்படி வெற்றிபெறுவது என்றுதான், எப்படி எய்வது என்றுதான். ஆரம்பத்திலிருந்து, கடைசிவரை யோசிக்கிறான். இப்பொழுது, செல்லும்பாதை முக்கியமல்ல, முடிவுதான் முக்கியமாயிருக்கிறது. எப்பொழுதெல்லாம் முடிவு முக்கியமாகிறதோ, அப்பொழுதெல்லாம் சக்தி பிரிகிறது. ஏனெனில் என்னவெல்லாம் செய்ய முடியுமோ

அவற்றையெல்லாம் பொருளுடன் தான் செய்ய வேண்டும், முடிவிற்காக அல்ல. முடிவுகள் உங்கள் கைகளில் அல்ல.

கீதையில் கிருஷ்ணர், அர்ஜுனரிடம் சொல்கிறார் : "முடிவைப் பற்றிக் கவலைப்படாதே. இங்கே, இப்போதே என்னவெல்லாம் செய்ய முடியுமோ, அவற்றை மட்டும் செய்து விட்டு, முடிவைக் கடவுளிடம் விட்டுவிடு. இனிமேல் என்ன நடக்கும் என்று கேட்காதே, யாருக்கும் தெரியாது. இப்போது நடப்பதைப் பற்றி யோசி, முடிவைப் பற்றிக் கவலைப் படாதே, முடிவை அடிப்படையாகக் கொண்டவனாக இருக்காதே."

இந்த வாக்கியம் மிகவும் அழகானதாக இருப்பதோடு மட்டுமல்லாமல் சுவாங்தஸுவின் வார்த்தைகளுடன் தொடர்புடையதாகவும் இருக்கிறது, ஏனெனில் அர்ஜுனர் ஓர் வில்லாளர், இந்தியா கொடுத்துள்ள மிக உயர்ந்த மனிதர். அவர் ஒரு மிகச்சரியான வில்லாளர்.

ஆனால் முடிவு அவர் மனத்திற்குள் நுழைந்தது. அவர் எப்பொழுதும் கவலைப்பட்டதே இல்லை. இதற்குமுன் இவ்வாறு நிகழ்ந்ததேயில்லை. அவர் அம்பெய்வது மிகச் சரியாக இருக்கும், அவர் திறமை முழுமையாய் இருந்தது, மிகத்துல்லியமாக. ஆனால் குருக்ஷேத்திர யுத்தக் களத்தைப் பார்த்தபிறகு இரண்டு படைகள் ஒன்றையொன்று எதிர்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த பிறகு, அவர் மிகவும் கவலையடைந்தார். அவர் கவலை என்னவாயிருந்தது ? அதாவது, இரண்டு படைகளிலும் அவருக்கு நண்பர்களிருந்தனர். அது குடும்பங்களுக் கிடையேயான சண்டை. ஒன்று விட்ட சகோதரர்களுக்கிடையே நடக்கும் போர், அதனால் அனைவருமே ஒருவருக்கொருவர் தொடர்புடையவர்கள்தான், இரண்டு பக்கங்களிலுமே உறவினர்கள் இருந்தார்கள். எல்லாக் குடும்பங்களும் பிரிந்துவிட்டன. அது ஒரு அபூர்வமான போர், குடும்பப்போர்.

கிருஷ்ணரும், அர்ஜூனரும் ஒரு பக்கத்திலிருந்தனர். மற்றொரு பக்கத்தில் கிருஷ்ணரின் போர்ப் படை இருந்தது. கிருஷ்ணர் கூறினார் : “நீங்கள் இருவருமே என்னை அதிகமாய் நேசிக்கிறீர்கள். அதனால் என்னை நீங்கள் பாதிப் பாதியாகப் பிரித்துத்தான் ஆக வேண்டும். ஒரு பகுதி என்னை எடுத்துக் கொள்ளலாம். இன்னொரு பக்கத்திலிருப்பவர்கள் என் போர்ப் படையை எடுத்துக் கொள்ளலாம் !”

மற்றொரு பக்கத்தின் தலைவனாக இருந்த துரியோதனன் முட்டாள்தனமாய் ஒன்று செய்தார். அவர் நினைத்தார் : “கிருஷ்ணரை மட்டும் வைத்துக் கொண்டு என்னால் என்ன செய்ய முடியும் ? ஆனால் அவருக்கு ஒரு பெரிய போர்ப்படை இருக்கிறது...” என்று எண்ணி கிருஷ்ணரின் போர்ப் படையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

அதனால் கிருஷ்ணர், அர்ஜூனருடன் இருந்து கொண்டார், அர்ஜூனர் மகிழ்ச்சியடைந்தார். ஏனெனில் ஒரு கிருஷ்ணர் எல்லா உலகங்களையும் விடப் பெரியவர். படைகளால் என்ன செய்துவிட முடியும்? நினைவிழந்த, தூங்கு மூஞ்சி மக்கள் ? விழிப்புடனிருக்கும் ஒரு மனிதன் இவர்கள் அனைவருக்கும் சமம்.

அர்ஜுனர் குழப்பமடைந்து, அவர் மனம் பிரிந்து விட்ட நிலையில் கிருஷ்ணர் உண்மையாகவே, அவருக்கு மிகவும் உதவியாயிருந்தார். கீதையில் சொல்லப் பட்டிருக் கிறது. இந்த இரண்டு போர்ப்படைகளையும் பார்த்து அவர் குழப்பமடைந்து விட்டதாக அவர் கிருஷ்ணரிடம் பயன் படுத்திய வார்த்தைகள் இவைதான் :“என்னுடைய சக்தி நீக்கப் பட்டு விட்டது. நான் மிகவும் பதட்டமாய் உணர்கிறேன், சக்தியற்றவனைப் போல், செயல்பட முடியாதவன் போல் உணர்கிறேன், என்னுடைய சக்தி எல்லாம் என்னை விட்டு நீங்கி விட்டது.” அவர் மிகத் திறமையான மனிதர், மிகச்சரியான வில்லாளர்.

'காண்டிவம்' எனப்படும் வில் ஒன்று உண்டு. அவர் மேலும் கூறினார் : "இந்த காண்டிவம் மிகவும் கனமாக உள்ளது. நான் மிகவும் உறுதியற்றவனாகிவிட்டேன், என் உடல் மரத்துப் போய் விட்டது. என்னால் யோசிக்கவோ பார்க்கவோ முடியாது. எல்லாமே குழப்பமாகிவிட்டன. ஏனெனில் இவர்கள் எல்லாரும் உன் உறவினர்கள், இவர்களை நான் கொன்றாக வேண்டுமே. முடிவு என்னவாயிருக்கும்? கொலை, பலபேர் கொல்லப்படுவார்கள், இதன் மூலம் நான் எதைப் பெற்றுவிடப் போகிறேன் ? ஒன்றுக்கும் உதவாத அரசாட்சியையா ? அதனால் சண்டையிடுவதில் எனக்கு விருப்பமில்லை. நான் செலுத்த வேண்டியது மிகவும் அதிகம் என்பதைப் போல் உணர்கிறேன். நான் இதிலிருந்து தப்பித்து, சன்னியாசி ஆகிவிட விரும்புகிறேன். காட்டிற்குச் சென்று, தியானம் செய்ய ஆசைப்படுகிறேன். இது எனக்கானதில்லை, என்னுடைய சக்தி நீக்கப்பட்டு விட்டுவிட்டது."

கிருஷ்ணர் கூறினார் : "முடிவைப் பற்றி நினைக்க வேண்டாம். அது உன் கைகளில் இல்லை. நீ செய்பவன் என்று நினைத்துக் கொள்ளாதே. ஏனெனில் செய்பவன் எப்போதும் புனிதமானவர், நீ ஒரு கருவிதான். இங்கே, இப்போது பற்றி மட்டும் யோசி. இப்போது நடப்பதைப் பற்றி மட்டும். முடிவை என்னிடம் விட்டு விடு. நான் சொல்கிறேன், அர்ஜூனா, இந்த மக்கள் ஏற்கெனவே இறந்துவிட்டவர்கள், இறக்க வேண்டும் என விதிக்கப்பட்டவர்கள். நீ அவர்களைக் கொலை செய்யப்போவதில்லை. ஏற்கெனவே தாங்கள் கொலை செய்யப்பட்டுவிட்டோம் என்பதை அவர்கள் புரிந்து கொள்ள உதவும் ஒரு கருவிதான் நீ. நான் பார்த்தவரை, அவர்களை இறந்தவர்களாகத்தான் பார்க்கிறேன். சாவு நிகழும் பகுதியை அவர்கள் அடைந்து விட்டார்கள் - நீ ஒரு கருவிதான்."

சமஸ்கிருதம் அழகான வார்த்தையைக் கொண்டுள்ளது, அதற்குச் சமமான வார்த்தை ஆங்கிலத்தில்

இல்லை ; அது 'நிமிதா.' 'நிமிதா' என்பதற்குப் பொருள், நீ செய்பவன் அல்ல, நீ காரணகர்த்தா அல்ல, காரணமானவர்களுள் ஒருவானகக் கூட நீ இருப்பதில்லை, நீ ஒரு 'நிமிதா' தான். இதன் பொருள் காரணம், தெய்விகத் தன்மையின் கைகளில் உள்ளது. அந்தப் புனிதத்தன்மைதான் செய்பவர், நீங்கள் அதன் வாகனம் தான். நீங்கள் ஒரு தபால்காரர் போல்தான். தபால்காரர் ஒரு 'நிமிதா.' அவர் வந்து உங்களுக்குக் கடிதங்களைப் பட்டுவாடா செய்கிறார். அந்தக் கடிதம் உங்களை அவமரியாதை செய்தால், நீங்கள் தபால்காரர் மேல் கோபம் கொள்வதில்லை. "ஏன் இந்தக் கடிதத்தை எனக்குக் கொண்டு வந்தீர்கள் ?" என்று அவரைப் பார்த்துக் கேட்பதில்லை. அதற்குத் தபால்காரர் காரணமல்ல, அவர் 'நிமிதா.' அவர் அந்தக் கடிதத்தை எழுதவில்லை. அதற்கு அவர் பொறுப்பல்ல, எந்தவிதத்திலும் அவருக்குத் தொடர்பேயில்லை. அவர் தனது வேலையைச் சரிவரச் செய்தார். நீங்கள் அவர் மேல் கோபப்பட முடியாது. "இந்தக் கடிதத்தை ஏன் எனக்குக் கொண்டு வந்தாய் ?" என்று நீங்கள் கேட்கவே முடியாது.

கிருஷ்ணர் அர்ஜுனரிடம் சொன்னார் : "நீ ஒரு தபால்காரனைப் போல் தான், நீ அவர்களுக்குச் சாவைப் பட்டுவாடா செய்ய வேண்டும். நீ கொல்பவன் அல்ல. சாவு புனிதமான இடத்திலிருந்து வந்திருக்கிறது. அதை அவர்கள் ஏற்கெனவே சம்பாதித்து விட்டார்கள். அதனால் நீ கவலைப் படத் தேவையில்லை. நீ அவர்களைக் கொல்லாவிட்டால், வேறு யாராவது அந்தக் கடிதத்தைப் பட்டுவாடா செய்து விடுவார்கள். இந்தத் தபால்காரர் இதைச் செய்யாவிட்டால், வேறு யாராவது செய்து விடுவார்கள். நீங்கள் இல்லாவிட்டால், அல்லது விடுமுறையில் இருந்தால், அல்லது உடல் நலமின்றி இருந்தால், கடிதம் பட்டுவாடாவே செய்யப் படமாட்டாது என்று பொருள் இல்லை. வேறு ஒரு மாற்றுத் தபால்காரர் அவ்வேலையைச் செய்துவிடுவார். அதனால்

நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. தேவையே இல்லாமல் வருத்தப்பட வேண்டிய அவசியமில்லை; நீங்கள் ஒரு 'நிமிதா.' தான் காரணமோ, அல்லது செய்பவரோ அல்ல, ஒரு கருவி மட்டுமே. நடப்பதைப் பற்றி மட்டுமே யோசியுங்கள். முடிவுகளைப் பற்றி நினைக்கவே நினைக்காதீர்கள். ஏனெனில், முடிவைப் பற்றி நினைக்கத் தொடங்கி விட்டீர்கள் என்றாலே, உங்கள் திறமை அழிந்து விடும்.

"நீங்கள் பிரிக்கப்பட்டு விடுகிறீர்கள், அதனாலேயே சக்தியெல்லாம் நீக்கப்பட்டது போல் உணர்கிறீர்கள். அர்ஜுனா, உன் சக்தி எங்கேயும் சென்று விடவில்லை, அது குழப்பமாக இருக்கிறது - உள்ளுக்குள், நீ பிரிக்கப் பட்டு விட்டாய். நீ உன்னுடனேயே சண்டை யிட்டுக் கொள்கிறாய். ஒரு பகுதி 'தொடர்ந்து செல்' என்று சொல்கிறது, இன்னொரு பகுதி இது சரியல்ல என்று சொல்கிறது. உங்கள் முழுமை இழக்கப்படுகிறது. எப்பொழுதெல்லாம், முழுமைத் தன்மை இழக்கப்படுகிறதோ, அப்போதெல்லாம் செயல் தன்மை இழந்துவிட்டதாக ஒருவர் உணர்கிறார்."

அர்ஜுனரைப் போன்ற சக்திவாய்ந்த மனிதராலேயே சொல்ல முடிகிறது. "என்னால் இந்தக் 'காண்டிவ'த்தைச் சுமக்க முடியவில்லை. இந்த வில் எனக்கு மிகவும் கனமாய் இருக்கிறது. நான் பதட்டமாகிவிட்டேன். நான் ஆழ்ந்த பயத்தை உணர்கிறேன், அதிகக் கவலை எனக்குள் எழுகிறது. என்னால் சண்டை போடமுடியாது."

திறமை அதேதான், எதுவும் மாறிவிடவில்லை. ஆனால் மனம் தான் பிரிக்கப்பட்டு விட்டது. எப்பொழுதெல்லாம் நீங்கள் பிரிக்கப்பட்டு விடுகிறீர்களோ, அப்பொழுதெல்லாம் சக்தி இழந்து விடுகிறீர்கள் ; நீங்கள் பிரிக்கப்படாமலிக்கும் போது, மிகவும் உறுதியாயிருக்கிறீர்கள். ஆசை உங்களைப் பிரிக்கிறது, தியானம் பிரிக்காமல் இருக்கிறது. ஆசைகள் உங்களை எதிர்காலத்திற்கு அழைத்துச் செல்கின்றன, தியானம் உங்களுக்கு நிகழ்காலத்தைக் கொடுக்கிறது.

இதை ஒரு முடிவுரையாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : எதிர்காலத்தை நோக்கி நகராதீர்கள். எப்பொழுதெல்லாம் உங்கள் மனம் எதிர்காலத்தை நோக்கி நகவர்தாய் உணர்கிறீர்களோ அப்போது உடனே நிகழ்காலத்திற்குத் தாவிவிடுங்கள். அதை முடிக்க வேண்டும் என்று முயற்சிக்காதீர்கள். உடனடியாக, நினைத்த கணத் திலேயே, உங்கள் மனம் எதிர்காலத்திற்கு நகருகிறது என உணர்ந்த கணத்திலேயே, ஆசைக்குள் செல்லும் கணத் திலேயே, நிகழ்காலத்திற்குத் தாவிவிடுங்கள். வீட்டிற்குள் இருங்கள்.

நீங்கள் நிகழ்காலத்தை இழந்து விடுவீர்கள். மீண்டும் மீண்டும் அதை இழந்து விடுவீர்கள். ஏனெனில், அது நீண்ட பழக்கமாகிவிட்டது ; ஆனால் விரைவில், அல்லது கொஞ்சம் தாமதமாக அதிகம் அதிகமாக, உங்களால் வீட்டில் இருக்க முடியும். பிறகு வாழ்க்கை வேடிக்கையாய் இருக்கும், விளையாட்டாய் இருக்கும். அதன் பிறகு நீங்கள் முழுவதும் சக்தி நிரம்பியவராய் இருப்பீர்கள், வழிந்தோடும், உயிர்ப்புடன் கூடிய வெள்ளம்போல். அந்த வெள்ளம் பேரானந்தம் உடையதாயிருக்கும்.

செயலிழந்து, சக்தியில்லாது, உங்களால் மகிழ்ச்சி யாயிருக்க முடியாது. எப்படி உங்களால் நடனமாட முடியும்? நடனமாடுவதற்கு எல்லையில்லாத சக்தி உங்களுக்குத் தேவை. சக்தி நீக்கப்பட்ட நிலையில், எப்படி உங்களால் பாட முடியும்? பாடுவது என்பதே எப்போதும் வழிந்தோடுவதுதான். பிணத்தைப் போல் இருக்கும் உங்களால் எப்படி பிரார்த்தனை செய்ய முடியும் ? முழுமையான உயிர்ப்போடு நீங்கள் இருக்கும் போதுதான், உங்கள் இயதத்திலிருந்து நன்றி உதிக்கிறது, மிகுந்த நன்றி. அந்த நன்றிதான் பிரார்த்தனை.

இன்றைக்கு இது போதும்.

# வெற்றுப் படகு



## 3

## மூன்று நண்பர்கள்

மூன்று நண்பர்கள்
வாழ்க்கையைப் பற்றி விவாதித்துக்
கொண்டிருந்தனர்.

ஒருவன் சொன்னான் :
“ மனிதர்களால் ஒன்றாய் கூடி வாழமுடியுமா,
அதைப் பற்றி ஒன்றும் தெரியாமல் ?
ஒன்றாய் வேலை செய்ய முடியுமா, எதையும் உற்பத்தி
செய்யாமல் ?
வானவீதியில் அவர்களால் பறக்க முடியுமா
இருத்தலையே மறந்து, முடிவேயில்லாத உலகில் ?”
மூன்று நண்பர்களும் ஒருவரையொருவர்
பார்த்துக் கொண்டனர்.

சிரிப்பு வெடித்துச் சிதறியது.
ஒரு விளக்கமும் அவர்களிடமில்லை,
இவ்வாறு முன்பை விடச்
சிறந்த நண்பர்களாய் அவர்கள் இருந்தனர்.
பிறகு ஒரு நண்பன் இறந்து போனான்.

கன்ஃபூஷியஸ் தன் சீடனை அனுப்பினார்
இறந்தவர்களுக்குப் பாடும் பாடலில்
மற்ற இருவருக்கும் உதவுவதற்காக.

அந்த சீடன் கண்டார் –
ஒரு நண்பன் பாடலை இயற்றினான்;
இன்னொரு நண்பன் யாழ் வாசிக்கும்போது

அவர்கள் பாடினார்கள் :

"ஏய், சுங்ஹூ, எங்கே சென்று விட்டாய் ?
ஏய், சுங்ஹூ, எங்கே சென்று விட்டாய் ?
நீ உண்மையிலேயே எங்கிருந்தாயோ
அங்கேயே சென்று விட்டாய்.
நாங்கள் இங்கிருக்கிறோம் –
சே, நாங்கள் இங்கே இருக்கிறோம் !"

பிறகு கன்ஃபூஷியஸின் சீடன்
திடீரென அவர்கள் முன் தோன்றி
உரக்கக் கேட்டார் :

"இறந்தவர்களுக்குச் செய்ய வேண்டிய
கடமைகள்
பற்றிய புத்தகத்தில்
இந்தப் பாடலை எங்கே கண்டு
பிடித்தீர்கள் என நான் தெரிந்துக் கொள்ளலாமா ?

இந்த அற்பமான பாடல்
இறந்தவர்கள் முன்னிலையிலா ?"
அந்த இரண்டு நண்பர்களும்
ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு சிரித்தனர் :
"பாவப்பட்ட மனிதன்,
புதிதாக இயற்றப்பட்டுள்ள
பாடல் இவனுக்குத் தெரியவில்லை ?"



# மூன்று நண்பர்கள்

வாழ்க்கையைப் பற்றிய முதல் விஷயம் என்னவென்றால், அதற்கு விளக்கங்கள் கிடையாது. அது, அதன் முழுமையான மகிமையில் உள்ளது, ஆனால் அதற்கு எந்தவித விளக்கங்களும் இல்லை. அது ஒரு சூட்சும மாக உள்ளது. ஒருவேளை நீங்கள் விளக்க முயற்சித்தால், அதை இழந்து விடுவீர்கள். அது விளக்கப்பட முடியாதது, ஆனால் உங்கள் விளக்கங்களினால், நீங்கள் பார்வையில்லாத வராகி விடுவீர்கள்.

வாழ்க்கையின் விரோதியே தத்துவம் தான். மனிதனுக்கு நிகழும் பகைமையான செயலே, ஏதாவது ஒன்றைப் பிடித்துக் கொண்டு, விளக்கங்களால் மனதை நிரப்பிக் கொள்வதுதான். நீங்கள் சிந்திக்கத் தொடங்கும் கணத்தில், உங்களுக்கு விளக்கம் கிடைத்தாலும், வாழ்க்கையை இழக்கறீர்கள். ஏற்கெனவே இறந்து விட்டவர்கள் ஆகிறீர்கள்.

இது வஞ்சப் புகழ்ச்சி போன்று கூடத்தோணலாம். சாவு ஒருவேளை விளக்கப்படலாம். ஆனால் வாழ்க்கையை விளக்கமுடியாது - ஏனெனில், சாவு என்பது முடிந்து போன ஒன்று, முழுமையடைந்துவிட்டது. ஆனால் வாழ்க்கை நடந்து கொண்டிருக்கும் ஒரு விஷயம் ; வாழ்க்கை என்பதே ஒரு பயணம்தான், சாவு ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டது. ஏதாவது ஒன்று அடைந்துவிட்டது என்றாலே, அது முடிந்துபோய் விட்டதாகும். உங்களால் அதை விளக்க முடியும். அதை வரையறுக்க முடியும். ஏதாவது ஒன்று தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் போது, தெரியாத ஒன்று இன்னும் பயணப்பட்டுக் கொண்டிருக்கிறது என்று பொருள்.

உங்களுக்கு இறந்தகாலம் தெரியும். ஆனால் எதிர் காலத்தைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள முடியாது. இறந்த காலத்தை ஒரு கோட்பாக மட்டுமே வைத்துக் கொள்ளுங்கள், ஆனால் எதிர்காலத்தை எப்படி கோட்பாடாகக் கொள்ள முடியும் ? எதிர்காலம் எப்போதுமே ஒரு ஆரம்பம்தான், எல்லையில்லாத ஆரம்பம், அது தொடர்ந்து ஆரம்பமாகவே இருக்கிறது. அதனால் நீங்கள் விளக்கும் போது, அந்த விளக்கம் எப்போதுமே, எது சாவு என்பதைக் குறிக்கிறது.

தத்துவம் விளக்கங்களை உள்ளடக்கியது. அதனால் அது மிக உயிர்ப்போடு இருக்க முடியாது. தத்துவ ஞானி களை விட, அதிகமாய் இறந்து போனது போல் இருக்கும் மக்களை நீங்கள் கண்டு பிடிக்கவே முடியாது. வாழ்க்கையே வீழ்ச்சியடைகிறது. வாழ்க்கை அவர்களிடமிருந்து கசிந்து விடுகிறது, அவர்கள் குன்றிப் போன தலைகளுடன் இருக்கிறார்கள். இறந்து போன கற்களைப் போல. அவர்கள் அதிகமாய் சத்தம் போடலாம், ஆனால் அவர்கள் வாழ்க்கை யில் இசையே இல்லை. அவர்கள் அதிகமான விளக்கங்களைக் கொண்டிருக்கிறார்கள், ஆனால் விளக்கங்களை மட்டுமே தங்கள் கைகளில் கொண்டிருக்கிறோம் என்பதை அவர்கள் முற்றிலும் மறந்து விட்டிருக்கிறார்கள்.

விளக்கம் என்பது மூடப்பட்ட கையைப் போன்றது. வாழ்க்கை திறந்த கையைப் போன்றது. இரண்டுமே மிகவும் வேறுபட்டவை. கை முழுவதும் மூடப்பட்ட பிறகு, அதில் வானம் இருப்பதில்லை. அதற்குள் காற்று இல்லை, மூச்சுவிட இடமே இருப்பதில்லை. மூடிய கைகளுக்குள் நீங்கள் ஆகாயத்தைப் பிடிக்க முடியாது. மூடியிருக்கும் கை அதை இழந்து விடுகிறது. வானம் அங்கிருக்கிறது, கை திறந்திருக்கும் போது, அது கிடைக்கப் பெறுகிறது. விளக்கம் பிடித்து வைக்கப்படுகிறது, மூடிவைக்கிறது, வரையறுக்கப்படுகிறது - வாழ்க்கை கசிந்து விடுகிறது.

சிரிப்பு, அனைத்து தத்துவங்களையும் விடப்பெரியது, எப்பொழுது ஒருவன் வாழ்க்கையைப் பற்றி நினைத்து சிரிக்கிறானோ, அப்போது அவன் புரிந்து கொள்கிறான். அதனால், யார் உண்மையிலேயே புரிந்து கொள்கிறானோ, அவன்தான் சிரிக்கிறான். அவர்கள் சிரிப்பை பல நூற்றாண்டு களுக்குப் பிறகும் கேட்க முடியும். புத்தர் கைகளில், மலரைப் பிடித்திருப்பதைப் பார்த்து, மஹாகாஷ்யப்பா சிரித்தார். அவரது சிரிப்பை இப்போது கூட கேட்க முடியும். யாருக் கெல்லாம் கேட்பதற்குக் காது இருக்கிறதோ, அவர் களெல்லாம், அந்தச் சிரிப்பைக் கேட்பார்கள், நூற்றாண்டு களாக தொடர்ந்து ஆறு விழுந்து கொண்டிப்பதைப் போல.

ஜப்பானிலுள்ள ஜென் மடங்களில், சீடர்கள் குருவை எப்போதும் கேட்பார்கள் : "சொல்லுங்கள், குருவே, ஏன் மஹாகஷ்யப்பா சிரித்துக் கொண்டிருந்தார் ?" இன்னும் கொஞ்சம் விழிப்பானவர்கள் கேட்பார்கள் : "கூறுங்கள் குருவே, மஹாகஷ்யப்பா ஏன் இப்போதும் தொடர்ந்து சிரித்துக் கொண்டிருக்கிறார் ?" அவர்கள் நிகழ்காலத்தைக் குறிப்பிட்டுக் கேட்பார்கள், இறந்த காலத்தை காலத்தை அல்ல. அதற்குக் குரு சொல்லுவார் : "நீங்கள் சிரிப்பைக் கேட்கலாம் என அவர் நினைக்கும் பொழுது. அதை

உங்களால் கேட்க முடியவில்லை என்றால், அதைப் பற்றி உங்களிடம் ஒன்றும் சொல்ல முடியாது."

புத்தர் எப்போதும் சிரித்துக் கொண்டிருப்பவர். உங்களால் அதைக் கேட்க முடியாமல் போகலாம், ஏனெனில் உங்கள் கதவுகள் மூடப்பட்டுள்ளன. நீங்கள் ஒரு வேளை, புத்தர் சிலையைப் பார்த்துவிட்டு, அவர் தீவிரமானவர் என நினைத்துக் கொண்டிருக்கலாம், ஆனால் இந்த தீவிரத்தன்மை தான் மிகைப்படுத்தப்பட்டு விடுகிறது. இது உங்கள் தீவிரத் தன்மை. நீங்கள் புத்தரை ஒரு திரையைப் போல் பயன்படுத்திக் கொள்கிறீர்கள். கிறிஸ்தவர்கள் சொல்வார்கள், இயேசு ஒரு போதும் சிரித்ததேயில்லை என்று. இது மிகவும் முட்டாள் தனமானதாய் தோன்றுகிறது. இயேசு சிரித்திருக்க வேண்டும். அவர் கட்டாயம் சிரித்திருக்க வேண்டும். அதனால் அவரது முழுமையான இருத்தலுமே சிரிப்புடன் இருந்தது. ஆனால் அவரது சீடர்களால் அதைக் கேட்க முடியவில்லை, அதுதான் உண்மை. அவர்கள் மூடப்பட்டவர்களாய் இருந்திருக்க வேண்டும். அவர்களது சொந்தத் தீவிரத்தன்மையே மிகைப் படுத்தப் படுகிறது.

அவர்களால் இயேசுவை சிலுவையில் பார்க்க முடிந்தது. ஏனெனில், நீங்கள் அனைவரும் துன்பங்களில் வாழ்வதால், உங்களால் துன்பங்களை மட்டுமே பார்க்க முடிகிறது. இயேசு சிரிப்பதைக் கேட்டிருந்தால் கூட, அவர்கள் அதைத் தவிர்த்திருப்பார்கள். அது அவர்கள் வாழ்க்கைக்கு முரண்பட்டது. அது ஒத்துப் போகாது. இயேசு சிரிப்பதை உங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது, ஏனெனில் அவர் உங்களிலிருந்து மாறுபட்டவராக இருக்கிறார்.

ஆனால் கிழக்குப் பகுதியில், அது வேறுபட்டிருக்கிறது. ஜென்னில், தாவோவில் சிரிப்புதான் உச்சத்தை அடைகிறது. அது தத்துவத்தின் எதிர் துருவமாகிறது.

தத்துவஞானி தீவிரமானவன், ஏனெனில் அவன் வாழ்க்கையைப் புதிராக நினைக்கிறான். தீர்வைக் கண்டு பிடித்தாக வேண்டும் என விழைகிறான். அவன் மனதின் உதவியுடன், வாழ்க்கையைப் பற்றி நினைக்கிறான். அதானல் மேலும், மேலும் தீவிரமானவனாகிறான். அவன் எந்தளவிற்கு வாழ்க்கையை இழக்கிறானோ, அந்த அளவிற்குத் தீவிரமடைந்து, இறந்து விடுகிறான்.

தாவோவில், லாவோதஸூவும், சுவாங்தஸூவும் சொல்கிறார்கள், உங்களால் சிரிக்க முடிகிறது. எனில், உங்கள் உயிரின் அடியிலிருந்து வரும்; வயிறு வலிக்கும் சிரிப்பை நீங்கள் உணர்ந்தீர்கள் என்றால், அது மேற்புறத்தில் மட்டும் தீட்டப்பட்டுள்ள வண்ணம் அல்ல. உங்கள் அடி ஆழத்திலிருந்து, உயிரின் மத்தியிலிருந்து வரும் சிரிப்பை நீங்கள் உணர்ந்தீர்கள் எனில், அது உங்களுக்குள் முழுமையாகப் பரவும். பிரபஞ்சத்திற்குள் வழிந்தோடும். அந்த சிரிப்பு வாழ்க்கை என்றால் என்ன என்பதை கண நேரத் திற்குள் உங்களுக்கு உணர்த்தி விடும். அது ஒரு சூட்சுமம்.

சுவாங்தஸூ சொல்கிறார், இத்தகைய சிரிப்பு பிரார்த்தனை மயமானது, ஏனெனில் இப்பொழுது நீங்கள் வாழ்க்கையை ஏற்றுக்கொள்கிறீர்கள், விளக்கங்களுக்காக ஆசைப்படுவதில்லை. எப்படி ஒருவனால் விளக்கத்தைக் கண்டுபிடிக்க முடியும் ? நாம் அதன் ஒரு பகுதி. எப்படி ஒரு பகுதியால் முழுமைக்கு விளக்கம் காண முடியும் ? எப்படி பகுதியால், முழுமையைப் பிரிக்க முடியும், சோதிக்க முடியும்? எப்படி பகுதியால் முழுமைக்கு முன்னால் செல்ல முடியும் ?

விளக்கம் என்பதற்குப் பொருள், நீங்கள் விளக்கம் கொடுக்க விரும்புவதற்கு மேம்பட்டு இருத்தல்- அது நுழைவதற்கு முன்பே நீங்கள் அங்கிருக்க வேண்டும். அதைச் சுற்றி நீங்கள் நகர வேண்டும். அதனால் நீங்கள் அதை

வரையறுக்க முடியும், நீங்கள் பகுத்து ஆராய வேண்டும், அதனால் இதயத்தை அடைய முடியும். அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவரால் விளக்கம் கண்டுபிடிக்க முடியும், வாழ்க்கைக்கல்ல, இறந்த உடலுக்கு. மருத்துவர்கள் கொடுக்கும், வாழ்க்கையைப் பற்றிய அனைத்து விளக்கங்களுமே முட்டாள்தனமானவை. ஏனெனில் அறுவை சிகிச்சை நிபுணன் உடலை அறுத்து ஆராய்கிறான், அவன் ஒரு முடிவைக் கூறும் போது, அங்கு உயிரிருப்பதில்லை. பிணம்தான் இருக்கிறது. எல்லா விளக்கங்களும் பிரேதப் பரிசோதனைதான், அங்கு உயிர் இருப்பதில்லை.

இப்பொழுது விஞ்ஞானிகள் கூட மனித இரத்தத்தைப் பரிசோதனை செய்யும் விஷயத்தில் விழிப்புடன் இருக்கிறார்கள். அந்த இரத்தம் மனித உடலின் நரம்புகளுக்குள் செல்லும் போது அதே போல் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அப்பொழுது அது உயிருடன் இருக்கிறது, அதனால் வேறுபட்ட தரமுடையதாயிருக்கும் ; இப்பொழுது, சோதனைக் குழாயில் இருக்கும் போது, அது இறந்து விட்டது. அது முன்பிருந்த அதே இரத்தம் அல்ல, ஏனெனில் அடிப்படை குணம் - உயிர் - அதில் இப்போதில்லை. எல்லா விளக்கங்களும் இவ்வகையைச் சேர்ந்தவைதான்.

மரத்திலிருக்கும் மலர் வேறுபட்டுள்ளது, அதன் உயிர்ப்புத் தன்மையால், வாழ்க்கை வடிவத்தால், உயிர் அதன் மேல் பொழிகிறது. அதை நீங்கள் மரத்திலிருந்து வெட்டி விடும் போது, சோதனைச் சாலைக்கு எடுத்துச் சென்றுவிடும் போது, அதைச் சோதனை செய்யும்போது, அது ஒரு வேறுபட்ட மலர். அதன் தோற்றத்தை மட்டும் பார்த்து ஏமாந்து விடாதீர்கள். இப்போது, அதன்மேல் உயிர் பொழிவதில்லை. மலரில் உள்ள வேதியியல் தன்மைகளை வேண்டுமானால் உங்களால் அறிந்து கொள்ள முடியும், ஆனால், அது விளக்கமல்ல.

ஒரு கவிஞன் வேறுபட்ட அணுகுமுறையைப் பெற்றிருப்பான், ஆராய்ச்சி செய்வதன் மூலம் அல்ல, ஆனால் காதலின் மூலம். அந்த மலரை வேரோடு பிடுங்குவதால் அல்ல, அதனோடு கலந்து விடுவதால், அதனுடன் ஆழ்ந்த அன்பில் இருப்பதன் மூலம், அதனுடன் பங்கெடுப்பதன் மூலம். அவர் அதனுடன் பங்கெடுக்கிறார், பிறகு அதைப் பற்றி ஏதோ ஒன்றைத் தெரிந்து கொள்கிறார், அது விளக்கமல்ல. கவிதை ஒரு விளக்கமாக இருக்க முடியாது. ஆனால், அது உண்மையின் தரிசனத்தைக் கொண்டுள்ளது. அனைத்து அறிவியலையும் விட அது உண்மையானது.

கவனியுங்கள் . நீங்கள் யாருடனாவது காதலில் இருக்கும் போது உங்கள் இதயம் வித்தியாசமாய்த் துடிக்கிறது. உங்கள் காதலுக்குரியர், உங்கள் காதலர் உங்கள் இதயத்தைக் கவனிப்பார் ; அது வித்தியாசமாகத் துடிக்கிறது. உங்கள் காதலர் உங்கள் கரங்களை எடுத்துக் கொள்வார்... அந்த உற்சாகம் வேறுமாதிரியாக இருக்கும். இரத்தம் ஒரு வித்தியாசமான நடத்தை போல் நகர்கிறது, அது மிகவும் வித்தியாசமாக சுறுசுறுப்புடன் துடிக்கிறது.

மருத்துவர் உங்கள் கரத்தைக் கைகளில் எடுத்துக் கொள்ளும் போது, அதே மாதிரியான துடிப்பு இருப்ப தில்லை. அவரால் இதயத் துடிப்பைக் கேட்க முடியும். ஆனால் அது வேறுபட்டது. இதயம் காதலருக்காகத் துடித்த போது, அது தனக்கே உரிய ஓர் பாடலைக் கொண்டிருந்தது, ஆனால் காதலருக்கு மட்டும் அந்த தாளம் தெரியும், அந்தத் துடிப்பைக் காதலர் மட்டுமே அறிவார், அந்த இரத்தம், உயிரின் உற்சாகம். மருத்துவரால் தெரிந்து கொள்ள முடியாது.

என்ன மாறிவிட்டது ? மருத்துவர் ஓர் பார்வை யாளராக இருக்கிறார், நீங்கள் கவனிக்கப்படுவராயிருக்

கிறீர்கள். ஒரு பொருளைப் பார்ப்பது போல்தான் அவர் உங்களையும் பார்க்கிறார். அதுதான் வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது. காதலிப்பவரோ உங்களை ஒரு பொருளைப் போல் பார்ப்பதில்லை. அவர் உங்களுடன் ஒருவராகிறார், உங்களுடன் கலக்கிறார், உருகுகிறார். உங்கள் ஆழமான உயிரை அவர் தெரிந்து கொள்கிறார், ஆனால் அவர் எந்த விளக்கங்களையும் கொண்டிருப்பதில்லை. அவர் அதை உணர்கிறார், ஆனால் அந்த உணர்ச்சி வித்தியாசமானது. அதைப் பற்றி அவரால் யோசிக்கக்கூட முடியாது.

எதைப்பற்றியெல்லாம் நினைக்கிறோமோ, அவையெல்லாம் உயிருடன் இருக்காது. நினைப்பு, எண்ணம் என்பதே சாவுடன் தொடர்பு கொள்ளும் ஒன்றுதான், அது எப்போதும் இறந்த பொருட்களுடன் தான் பங்கெடுக்கிறது ; அதனால் தான் விஞ்ஞானத்தில் உணர்ச்சி என்பதற்கே இடமில்லை. உணர்ச்சி, வாழ்க்கையின் வேறுபட்ட கோணத்தைக் கொடுக்கிறது. உயிரின் கோணத்தை.

இந்த அழகான கதை உங்களுக்குச் சொல்லப் பல விஷயங்களைக் கொண்டுள்ளது. இதற்குள் படிப்படிப்பாக நகருங்கள். நீங்கள் முடிவை அடைந்து விட்டீர்கள் எனில், நீங்கள் அதை இழந்து விட்டீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் சிரிப்பை அடைந்தீர்கள் என்றால், நீங்கள் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்று அர்த்தம்.

**மூன்று நண்பர்கள் வாழ்க்கையைப் பற்றி**
**விவாதித்துக் கொண்டிருந்தனர்.**

சுவாங்தஸூ வார்த்தைகளை தந்திமொழி போல் உபயோகிப்பவர். எப்பொழுதுமே, விஷயம் தெரிந்வதர்கள், ஒரு வார்த்தையைக் கூட தேவையில்லாமல் உபயோகிக்க மாட்டார்கள். அடிப்படையோடு மட்டுமே வாழ்வார்கள்.

மூன்று நண்பர்கள் வாழ்க்கையைப் பற்றி
விவாதித்துக் கொண்டிருந்தனர்.

புரிந்து கொள்ளப்பட வேண்டிய முதல் விஷயம், நண்பர்களால் மட்டுமே வாழ்க்கையைப் பற்றி விவாதிக்க முடியும். எப்பொழுது விவாதம் எதிர்ப்பாக மாறுகிறதோ, எப்பொதெல்லாம் விவாதம் வாக்குவதாமாக மாறுகிறதோ, அப்போது உரையாடல் உடைந்து போய் விடுகிறது. வாழ்க்கை இவ்வாறு விவாதிக்கப்பட முடியாதது. நண்பர்களால் மட்டுமே விவாதிக்க முடியும் ; ஏனெனில் அப்போது விவாதம் வாக்குவாதம் அல்ல, அது ஒரு உரையாடல்.

வாக்குவாதத்திற்கும், உரையாடலுக்கும் என்ன வேறுபாடு ? வாக்குவாதத்தில் அடுத்தவர் சொல்வதைக் கேட்க நீங்கள் தயாராய் இருப்பதில்லை ; ஒருவேளை நீங்கள் கவனித்தால் கூட, உங்கள் கவனித்தல் தவறாகத்தானிருக்கும். உண்மையாகவே, நீங்கள் கவனிப்பதில்லை, உங்கள் விவாதத்திற்குத் தயாரித்துக் கொள்கிறீர்கள். மற்றவர் பேசிக் கொண்டிருக்கும் போது, நீங்கள் முரண்பாட்டிற்குத் தயாராகிறீர்கள். அடுத்தவர் பேசிக் கொண்டிருக்கும் போது, நீங்கள் உங்கள் வாய்ப்பிற்காக, மறுபடி விவாதிப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்குள் ஏற்கெனவே ஒரு எதிர்ப்புத் தன்மையைப் பெற்றுள்ளீர்கள், ஒரு கோட்பாடைக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தேடலில் இல்லை, அறியாமையில் இல்லை, வெகுளியாய் இல்லை ; ஏற்கனவே நிரப்பட்டிருக்கிறீர்கள், உங்கள் படகு வெறுமையாய் இல்லை. சில கோட்பாடுகளை உங்களுடன் எடுத்துச் செல்கிறீர்கள், அவற்றை உண்மை என்று நிரூபிக்க விரும்புகிறீர்கள்.

உண்மையைத் தேடிச் செல்பவர், எப்போதும் தன்னுடன் கோட்பாடுகளைச் சுமந்து செல்வதில்லை. அவன்

எப்போதும் திறந்த மனதுடன் இருக்கிறான், காயப்படத்தக்கவனாய். அவனால் கவனிக்க முடியும். ஒரு இந்துவால் கவனிக்க முடியாது, ஒரு முஸ்லிமால் கவனிக்க முடியாது. ஒரு இந்துவால் எப்படி கவனிக்க முடியும் ? அவனுக்கு ஏற்கெனவே உண்மைகள் தெரியும், அங்கே கவனிப்பதற்கு அவசியம் இல்லை. நீங்கள் அவனைக் கவனிக்க வைக்க முயற்சிக்கலாம், ஆனால் உங்களால் அது முடியாது ; அவன் மனம் ஏற்கெனவே நிரம்பிவிட்டது, எதுவும் அவனை ஊடுருவிச் செல்ல முடியாது. ஒரு கிறிஸ்தவனால் கவனிக்க முடியாது. அவன் ஏற்கனவே உண்மையை அறிந்துள்ளான். புதிய காற்றுக்குத் தன் கதவுகளை மூடிக் கொள்கிறான், புதிய சூரிய உதயத்திற்குத் தன் கண்களை மூடிக் கொள்கிறான், அவன் அடைந்துவிட்டான், வந்து சேர்ந்துவிட்டான்.

தாங்கள் வந்தடைந்துவிட்டதாக நினைப்பவர்கள் எல்லாராலும் வாக்குவாதம் செய்ய முடியும், ஆனால் அவர்களால் உரையாடலில் ஈடுபட முடியாது. அவர்களால் மோதிக் கொள்ளத்தான் முடியும். குழப்பம் வந்தவுடன் ஒருவரை யொருவர் எதிர்த்துக் கொள்கின்றனர். இந்த மாதிரியான விவாதத்தில் நீங்கள் எதையாவது நிரூபித்து விடலாம், ஆனால் எதுவும் நிரூபிக்கப்படுவதில்லை. நீங்கள் அடுத்தவரை அமைதியாக்கி விடலாம், ஆனால் அவர்களை மாற்றி விடமுடியாது. உங்களால் சமாதனாப் படுத்த முடியாது, ஏனெனில் இது ஓர் போர் போன்றது, ஒரு நாகரிகமான போர் - நீங்கள் ஆயுதங்களைக் கொண்டு சண்டை போடுவதில்லை, வார்த்தைகளால் சண்டையிடுகிறீர்கள்.

சுவாங்த்ஸூ சொல்கிறார் : மூன்று நண்பர்கள் வாழ்க்கையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். அதனால் அவர்களால் சிரிப்பை அடைய முடிந்தது ; இல்லையென்றால் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்திருப்பார்கள்.

ஒரு கோட்பாடு, இன்னொரு கோட்பாடைத் தோற்கடித்து விடலாம். ஒரு தத்துவம், மற்ற தத்துவங்களை அமைதியாக்கி விடலாம். அப்போது அங்கு ஒரு முடிவு வந்துவிடும். முடிவு என்றாலே இறந்து விட்டது என்று பொருள்.

வாழ்க்கைக்கு முடிவு இல்லை. வாழ்க்கை இத்தகைய முட்டாள்தனமான எண்ணங்களைப் பெற்றிருப்பதில்லை. அது முடிவில்லாமல் சென்று கொண்டுதானிருக்கிறது. அது எப்பொழுதுமே, நிலையாக நிகழ்ந்து கொண்டேயிருக்கும் ஒரு செயல். அதைப் பற்றிய ஒரு முடிவுக்கு உங்களால் எப்படி வரமுடியும் ? நீங்கள் முடிவு செய்யும் அந்தக் கணத்தில், அதிலிருந்து வெளியேறி விடுகிறீர்கள். வாழ்க்கை சென்று கொண்டிருக்கிறது, ஆனால் நீங்கள் அதிலிருந்து விலகி விட்டீர்கள். நீங்கள் உங்கள் முடிவையே தீவிரமாகப் பற்றிக் கொண்டிருக்கலாம், ஆனால் வாழ்க்கை உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்காது.

நண்பர்களால் விவாதிக்க முடியும். ஏன் ? உங்களால் ஒரு மனிதனை அன்பு செய்ய முடியும், தத்துவத்தைக் காதலிக்க முடியாது. தத்துவ ஞானிகளால் நண்பர்களாய் இருக்க முடியாது. நீங்கள் அவர்களின் சீடர்களாய் இருக்கலாம் அல்லது எதிரிகளாக; ஆனால் நீங்கள் அவர்களின் நண்பர்களாய் இருக்க முடியாது. நீங்கள் அவர்களால் வசப்படுத்தப்படுவீர்கள் அல்லது இல்லாமலும் போகலாம், நீங்கள் அவர்களைப் பின்பற்றலாம், அல்லது பின்பற்றாமலும் போகலாம், ஆனால் நீங்கள் அவர்கள் நண்பராய் இருக்க முடியாது. நட்பு என்பது இரண்டு வெற்றுப் படகுகளுக்கிடையே மட்டுமே சாத்தியம். அப்பொழுது நீங்கள் மற்றவர்களுக்குத் தெரிகிறீர்கள், மற்றவரை வரவேற்கிறீர்கள், பிறகு நீங்கள் தொடர்ந்து அழைப்பாகவே இருக்கிறீர்கள், என்னிடம் வா, என்னுடன் சேர், என்னுடன் இரு.

உங்களால் கோட்பாடுகளையும், தத்துவங்களையும் எடுத்து வீச முடியும்; ஆனால் நட்பை எறிய முடியாது. நீங்கள் தோழமையாக இருக்கும் போது மட்டுமே உரையாடல் சாத்தியமாகிறது. உரையாடலில் நீங்கள் கவனிக்கிறீர்கள், நீங்கள் பேச வேண்டிய அவசியம் வந்தாலும், மற்றவரை எதிர்க்க வேண்டும் என்று பேசுவதில்லை, தேடுதலுக்காக, விசாரிப்பதற்காகப் பேசுகிறீர்கள். ஏற்கெனவே ஒரு முடிவை வைத்துக் கொண்டு நீங்கள் பேசுவதில்லை, ஆனால் ஒரு விசாரணைக்காக, தொடர்ந்து கொண்டிருக்கும் தேடுதலுக்காக. ஏதாவது ஒன்றை நிரூபிக்க வேண்டும் என்று நீங்கள் முயற்சிப்பதில்லை. வெகுளித்தனத்திலிருந்து நீங்கள் பேசுகிறீர்கள், தத்துவத்திலிருந்து அல்ல. தத்துவம் ஒருபோதும் வெகுளித்தனமாயிருக்காது. கபடமுடையதாய் இருக்கும். அது அறிவின் அடையாளம்.

அந்த நண்பர்கள் வாழ்க்கையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். ஏனெனில், நண்பர்களுக்குள் உரையாடல் சாத்தியம். அதனால்தான் கிழக்கத்தியப்பகுதிகளில், நட்பு இல்லாவிட்டால், அன்பு இல்லாவிட்டால், மரியாதை இல்லா விட்டால், நம்பிக்கை இல்லாவிட்டால் எந்த விசாரணையும் சாத்தியமாகாது என்று ஒரு பரம்பரை வழக்கம் உள்ளது. நீங்கள் குருவிடம் செல்லும் போது, உங்கள் படகு பலவித கருத்துக்களால் நிரம்பியுள்ளது என்றால், அங்கு எந்தத் தொடர்பு மிருக்காது. எந்த உரையாடலுமிருக்காது. முதலில் நீங்கள் வெறுமையாய் இருக்க வேண்டும், அப்போதுதான் நட்பு சாத்தியம்; அப்போது தான் உங்கள் கண்களுக்குள் எந்தக் கருத்துக்களும் மிதக்காமலிருப்பதை நீங்கள் காண முடியும்; அப்போதுதான் எந்தத் தீர்மானங்களுமில்லாமல் உங்களால் பார்க்க முடியும். எப்போதெல்லாம் முடிவுகள் இல்லாமல் உங்களால் பார்க்க முடிகிறதோ அப்போது உங்கள் கோணம் மிகப் பெரிய பரப்பில் இருக்கும், அது ஒரு குறிப்பிட்ட சிறிய எல்லைக்குள் இருக்காது.

ஒரு இந்துவால் 'பைபிளை'ப் படிக்க முடியும், ஆனால் ஒருபோதும் அவனால் அதைப் புரிந்து கொள்ள முடியாது. உண்மையாக, ஒரு போதும் அவன் அதைப் படித்ததில்லை, அதைக் கவனிக்க அவனால் முடியாது. ஒரு கிறிஸ்தவனால் 'கீதை'யைப் படிக்க முடியும் ; ஆனால் அப்போதும் ஓர் வெளியாளாகத்தான். ஒரு போதும் அதன் உட்கருத்துக் களுக்குள் ஊடுருவிச் செல்ல முடியாது. அதன் உட் பொருளை ஒருபோதும் அடைய முடியாது, அதற்குள் சுற்றிச் சுற்றி வருவான். ஏற்கெனவே 'கிறிஸ்துவம்' மட்டுமே உண்மை என்பதை அவன் அறிந்திருக்கிறான். கிறிஸ்து மூலம் மட்டுமே மீட்படைய முடியும் என்று ஏற்கெனவே தெரிந்து வைத்திருக்கிறான். 'கிறிஸ்து' மட்டுமே கடவுளின் மகன் என்று ஏற்கெனவே அவனுக்குத் தெரியும். எப்படி கிருஷ்ணரைக் கவனிக்க முடியும் ? கிறிஸ்து மட்டுமே உண்மை. கிருஷ்ணர் உண்மையல்ல என்ற எல்லைக் குள்ளிருக்கிறான், மிக அதிகமாக, அழகான பொய்யாக, ஆனால் ஒரு போதும் உண்மையல்ல. ஒரு வேளை அவன் ஒப்புக் கொண்டால், அப்போது சொல்வான், ஏறக்குறைய ஒருவேளை உண்மையாயிருக்கலாம்.

ஏறக்குறைய உண்மையாயிருக்கலாம் என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள் ? அது உண்மையல்ல ! உண்மை அங்கும் இருக்கிறதா, இல்லையா? எதவும் 'கிட்டத்தட்ட' உண்மையாக இருக்க முடியாது. உண்மையாக இருக்கும், இல்லை இருக்காது. எப்போதும் முழுமைதான். அதை நீங்கள் பிரிக்க முடியாது. இது சில கோணங்கள் மட்டுமே, சரி என்று நீங்கள் கூற முடியாது. எந்த உண்மைக்கும், கோணங்கள் தெரியாது, அது இருக்கும். இல்லை இருக்காது.

எனவே, மனத்தில் கிறிஸ்து மட்டுமே ஒரே உண்மை என்ற கருத்து நிறைந்திருக்கும் போது, கிருஷ்ணரைக் கவனிப்பது என்பது சாத்தியமேயல்ல. ஒருவேளை அவருடன்

ஒரே பாதையில் வந்தால்கூட உங்களால் கவனிக்க முடியாது. ஒருவேளை நீங்கள் புத்தரை சந்தித்தால் கூட, நீங்கள் அவரைச் சந்திக்க மாட்டீர்கள்.

முழு உலகமே தீர்மானங்களால் நிறைந்துள்ளது. சிலர் கிறிஸ்தவர்கள், சிலர் இந்துக்கள், சிலர் சமணர்கள், சிலர் புத்தர்கள். அதனால்தான் உண்மை தவறி விடுகிறது! மதப் பற்றுள்ள மனிதன் கிறிஸ்தவனாக இருக்க முடியாது, இந்துவாக இருக்க முடியாது, புத்தனாக இருக்க முடியாது. மதப் பற்றுடைய மனிதனால் தீவிர விசாரிப்பாளனாக மட்டுமே இருக்க முடியும். அவன் விசாரிக்கிறான், எந்த முடிவுகளு மின்றி திறந்தபடி இருக்கிறான். அவன் படகு வெறுமையாக உள்ளது.

மூன்று நண்பர்கள் வாழ்க்கையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர்... நண்பர்களால் மட்டுமே விவாதிக்க முடியும். ஏனெனில் அப்போது அது உரையாடலாக இருக்கிறது. அப்போது நான், நீ என்ற உறவு இருக்கிறது. ஆனால் நீங்கள் வாக்குவாதம் செய்யும்போது, நான், அது என்ற உறவுதான் இருக்கிறது. அடுத்தவர் ஒரு பொருளாக மாற்றப்படுகிறார், சமாதானமடையச் செய்யப்படுகிறார், அடுத்தவர் 'நீ' அல்ல ; அடுத்தவருக்கு எந்த முக்கித்துவமும் இல்லை, அவர் ஒரு 'எண்' அவ்வளவுதான்.

நட்பில் அடுத்தவருக்கும் முக்கியத்துவம் இருக்கிறது, அடுத்தவர் இயற்கையான மதிப்பைப் பெறுகிறார், அடுத்தவர் தனக்குள் ஒரு முடிவு வைத்திருக்கிறார், அவரை மாற்ற நீங்கள். முயற்சிப்பதில்லை. எப்படி நீங்கள் ஒருவரை மாற்றி விட முடியும் ? என்ன ஒரு முட்டாள்தனம் ! அடுத்தவரை மாற்ற எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் முட்டாள்தனமானவை. மனிதன் ஒரு பொருள் அல்ல. மனிதன் மிகப் பெரியவன், பரந்தவன், அதாவது எந்தக் கோட்பாடும் மனிதனை விட

முக்கியத்துவம் வாய்ந்தவை அல்ல. ஒரு மனிதனை விட 'பைபிள்' முக்கியத்துவம் வாய்ந்ததல்ல, எந்தக் 'கீதை'யும் மனிதனைவிட முக்கியமானதல்ல. மனிதன் என்பவன் வாழ்க்கையின் மகிமை. உங்களால் ஒரு மனிதனை அன்பு செய்ய முடியும், ஆனால் ஒரு போதும் மாற்ற முடியாது. நீங்கள் மாற்ற முயற்சித்தால், நீங்கள் இயக்க விரும்புகிறீர்கள். பிறகு அந்த மனிதன் உங்கள் சுயநலத்திற்காகக் கையாளப்படுகிறான்.

உங்கள் 'நான்' 'நீ' என்று சொல்லும் போது தான் உரையாடல் சாத்தியமாகிறது, அடுத்தவர் அன்பு செய்யப் படும் போது, அதன் பின்னணியில் எந்தக் கருத்துகளும் இல்லாத போது. அடுத்தவர் அன்பு செய்யப்படுகிறார். அவன் கிறிஸ்தவனா, இந்துவா என்பதெல்லாம் ஒரு விஷயமே இல்லை. இதுதான் நட்பின் பொருள். நண்பர்களால் வாழ்க்கையைப் பற்றி விவாதிக்க முடியும், ஏனெனில் அங்கு உரையாடல் சாத்தியமாகிறது.

ஒருவன் சொன்னான் :
"மனிதர்களால் கூடி வாழமுடியுமா,
அதைப் பற்றி ஒன்றும் தெரியாமல் ?
ஒன்றாய் வேலை செய்யமுடியுமா,
எதையும் உற்பத்தி செய்யாமல் ?
வானவீதியில் அவர்களால்
பறக்க முடியுமா இருத்தலையே மறந்து,
முடிவே இல்லாத உலகில் ?"

அவர் ஒரு கோட்பாட்டை உங்களுக்குக் கொடுக்க வில்லை, ஒரு கேள்வியை எழுப்புகிறார், அவ்வளவுதான். ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், நீங்கள் இரண்டு வழிகளில் கேள்விபெழுப்ப முடியும். சில நேரங்களில், ஏற்கனவே உங்களிடமிருக்கும் பதிலை, அடுத்தவருக்குக்

கொடுக்க வேண்டும் என்பதற்காகவே கேள்வியெழுப்பு வீர்கள் - பதிலைக் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே எழுப்பப்படும் கேள்வி. அப்போது அந்தக் கேள்வி உண்மையானதல்ல, தவறானது. ஏற்கனவே அங்கு விடையிருக்கிறது, அந்தக் கேள்வி ஒரு தந்திரம், பேச்சுத் திறன்; அது உண்மையானதல்ல, நம்பத்தகுந்ததல்ல.

எப்போது உங்களிடம் பதில் இல்லையோ, அப்போது தான் அந்தக் கேள்வி உண்மையானது என்று பொருள். நீங்கள் கேள்வி கேட்கும்போது, பதிலிலிருந்து கேள்வி கேட்காதீர்கள். கேள்வி கேட்கும் போது கவனியுங்கள்; அந்தக் கேள்வி உங்களை ஒன்றுமற்றதாக விட்டு வைத்திருக்கட்டும், திறந்து, வரவேற்கக்கூடியதாய், விசாரிப்பிற்காய்.

ஒருவன் சொன்னான் :
“மனிதர்களால் ஒன்றாய்க் கூடி வாழமுடியுமா –
அதைப்பற்றி ஒன்றும் தெரியாமல்...?”

நாம் ஒன்றாய் வாழ்கிறோம், ஆனால் ஒற்றுமையைப் பற்றி, அப்படி என்றால் என்ன என்பதே தெரியாமல். பலவருடங்களாக ஒன்றாய் வாழமுடியும், ஒற்றுமை என்றால் என்னவென்றே தெரியாமல். உலகம் முழுவதையும் பாருங்கள் - மக்கள் ஒன்றாகத்தான் வாழ்கிறார்கள், யாரும் தனியாய் வாழவில்லை ; கணவர்கள் மனைவிகளுடன், மனைவிகள் கணவர்களுடன், குழந்தைகள் பெற்றோர்களுடன், பெற்றோர் கள் நண்பர்களுடன்; அனைவருமே கூடிதான் வாழ்கிறார்கள். வாழ்க்கையே ஒற்றுமையில் தானிருக்கிறது. ஆனால் ஒற்றுமை என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா ?

மனைவியுடன் நாற்பது வருடங்களாக வாழ்ந்து வரு கிறீர்கள், அவளுடன் ஒரு கணம் கூட நீங்கள் வாழாம லிருந்திருக்கலாம். காதல் உறவில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்

போது கூட, வேறு ஏதாவதொன்றைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்திருப்பீர்கள். அப்போது நீங்கள் அங்கில்லை, உங்கள் உடலுறவு இயந்திரத்தனமாய் இருந்திருக்கும்.

ஒருமுறை முல்லா நஸ்ரூதின் தன் மனைவியுடன் திரைப்படத்திற்குச் சென்றிருந்தார். அவர்களுக்குத் திருமணமாகிக் குறைந்தது இருபது ஆண்டுகளாவது ஆகியிருக்கும். அது சூடான ஆங்கிலப் படங்களில் ஒன்று ! அவர்கள் படம் முடிந்து திரும்பும் போது அவர் மனைவி கூறினார், "நஸ்ரூதின், அந்தப் படத்தில் நடிகர்கள் செய்தது போல் ஒரு முறைகூட நீ என்னைக் காதலித்ததில்லை. ஏன் ?"

நஸ்ரூதின் சொன்னார் : "உனக்கு என்ன பைத்தியமா ? இம்மாதிரியெல்லாம் செய்வதற்கு அவர்கள் எவ்வளவு பணம் வாங்கியிருப்பார்கள் என்று உனக்குத் தெரியுமா ?"

மக்கள் ஒருவருடன் ஒருவர் எந்தக் காதலுமே இல்லாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், ஏனெனில் அது உனக்கு ஏதாவது கொடுக்கும் போது தான் நீ காதலிக்கிறாய். காதல் உனக்குப் பணம் கொடுக்கும் போது மட்டும் உன்னால் காதலிக்க எப்படி முடிகிறது ? பிறகு சந்தையில் காதலும் ஒரு பொருளாகிவிடும் : பிறகு அது ஒரு உறவாக இருக்காது, கூடுதலாக இருக்காது, ஒரு கொண்டாட்டமாய் இருக்காது. அடுத்தவருடன் இருப்பதில் நீங்கள் மகிழ்ச்சியடைவதில்லை, நீங்கள் அவர்களைச் சகித்துக் கொள்கிறீர்கள், அவ்வளவு தான்.

முல்லா நஸ்ரூதினின் மனைவி மரணப் படுக்கையில் இருந்த போது மருத்துவர் கூறினார் : "நஸ்ரூதின் நான் உன்னிடம் வெளிப்படையாக இருந்தாக வேண்டும் ; சில கணங்கள் உண்மையாய் இருப்பதே நல்லது. உங்கள் மனைவியைக் காப்பாற்ற முடியாது. இந்த நோய் எங்களை

மீறிச் சென்றுவிட்டது. நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். உங்களை வருத்திக் கொள்ளாதீர்கள். ஏற்றுக் கொள்ளுங்கள், இது உங்கள் விதி. உங்கள் மனைவி இறக்கப் போகிறார்."

நஸ்ருதினின் சொன்னார் : "கவலைப்படாதீர்கள். பல வருடங்களாக அவளிடம் கஷ்டப்பட என்னால் முடிந்தது என்றால், இன்னும் சில மணி நேரங்கள் கஷ்டப்படுவது ஒன்றும்பெரிய விஷயமில்லை !"

அதிகபட்சம் நாம் சகித்துக் கொள்கிறோம். சகிப்புத் தன்மை என்ற வார்த்தையை எப்போதெல்லாம் நினைக்கிறீர் களோ, அப்பொழுதெல்லாம் நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள். உங்கள் சேர்ந்திருத்தல் உங்களுக்குத் துன்பமாயிருக்கிறது. இதைத்தான் ஜீன்-பால்-சாத்ரே சொல்கிறார் : 'மற்றவர் நரகம்...' ஏனெனில் இன்னொருவருடன் இருக்கும்போது நீங்கள் துன்பபப்படுகிறீர்கள், மற்றவர் உங்களை அடிமைப் படுத்துகிறார், ஆள்கிறார். மற்றவர் தொந்தரவு ஏற்படுத்தத் தொடங்குகிறார். உங்கள் சுதந்திரம் பறிபோய் விட்டது, உங்கள் மகிழ்ச்சியை இழந்துவிடுகிறீர்கள். பிறகு சகிப்புத் தன்மை ஒரு வழக்கமாகிவிடுகிறது. நீங்கள் மற்றவரை சகித்துக் கொண்டிருந்தால், ஒன்றாயிருத்தலின் அழகு எப்படி உங்களுக்குத்தெரியும் ? உண்மையிலேயே, அது ஒரு போதும் நடந்திருக்கவில்லை.

இதுவரையில் திருமணம் என்பதே ஒரு போதும் நடந்திருக்கவில்லை. ஏனெனில் திருமணம் என்பது 'கூடிவாழ்தலின் கொண்டாட்டம்:' அது ஒரு அனுமதிஅல்ல. எந்த 'பதிவு அலுவலக'மும் உங்களுக்குத் திருமணத்தைக் கொடுத்துவிட முடியாது. எந்தப் பாதிரியாரும் அதை ஒரு பரிசுப் பொருளாக உங்களுக்குக் கொடுத்து விடமுடியாது.

அது வாழ்வின் மிகப்பெரிய புரட்சி. உங்களது வாழ்க்கை முறையின் மிகப்பெரிய மாற்றாம். நீங்கள் ஒன்றாயிருத்தலைக் கொண்டாடும் போதுதான், இது நிகழ முடியும். மற்றவர் தன்னை மற்றவர் என்று உணராதவரை, நீங்கள் உங்களை 'நான்' என்று நினைக்காதவரை. இருவரும் உண்மையில் இருவராக இல்லாத போது, இந்தப் இணைப்பு நிகழ்ந் திருக்கும். ஒரு விதத்தில் இருவரும் ஒருவராகிவிடுவர். உடல் ரீதியாக அவர்கள் இருவராயிருக்கலாம், எந்த அளவிற்கு உள்மனம் பார்க்கப்படுகிறதோ, கருத்தில் எடுத்துக் கொள்ளப் படுகிறதோ, அப்போது அவர்கள் ஒருவராயிருப்பர். ஒரே வாழ்க்கையில் எதிரெதிர் துருவங்களாக இருக்கலாம். ஆனால் அவர்கள் இருவரல்ல. அங்கே பாலம் இருக்கிறது. அந்தப் பாலம் ஒன்றாயிருக்கும் கணங்களை உங்களுக்குக் கொடுக்கிறது.

திருமண வாழ்க்கையைக் காண்பது என்பதே அரிதாகிவிட்டது. மக்கள் சேர்ந்து வாழ்கிறார்கள். ஏனெனில் அவர்களால் தனியாக வாழமுடியாது. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் அவர்களால் தானியே வாழ முடியாது. அதனால் தான் சேர்ந்து வாழ்கிறார்கள். தனியாக வாழ்வது என்பது வசதியற்றது, பொருளாதார ரீதியிலும் கடினமானது, தனியாக வாழ்வது மிகவும் கடினமானசெயல். அதனால்தான் சேர்ந்து வாழ்கிறார்கள். காரணங்கள் அனைத்துமே எதிர்மறையாகவே உள்ளன.

ஒருவனுக்குத் திருமண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. அப்போது சிலர் அவனிடம் கேட்டார்கள். "நீ எப்போதுமே திருமணத்திற்கு எதிராகவே பேசுவாய், என் உன் மனம் திடீரென்று மாறிவிட்டது ?"

அவன் கூறினான் : "குளிர்காலம் வரப்போகிறது. மிகவும் குளிராக இருக்கும் என்று அனைவரும் சொல்

கிறார்கள். குளிர்கால முறைகள் எல்லாம் செய்து கொள்ள எனக்கு வசதியில்லை, மனைவி செலவு குறைந்தவளாக இருப்பாள் என நினைக்கிறேன்.”

இது தர்க்கரீதியானது. நீங்கள் மற்றவர்களுடன் சேர்ந்து வாழ்கிறீர்கள். ஏனெனில் அது வசதியானது, சௌகர்யமானது, பொருளாதார ரீதியாக செலவு குறைந்தது. தனியாக வாழ்வது உண்மையிலேயே கடினமான ஒன்றுதான்: மனைவி பலவற்றுக்குச் சமமானவள், வீட்டைக் கவனிப்பவள், சமையல்காரி, வேலைக்காரி, தாதிப்பெண் - பல பேருக்குச் சமமானவள். உலகத்திலேயே மலிவான தொழிலாளி அவள் தான்; எந்த சம்பளமும் பெறாமலேயே பல வேலைகளைச் செய்கிறாள். இது சுயநலத்திற்காகப் பயன்படுத்தப்படும் செயலாகும்.

அடுத்தவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலின் இயக்கம் தான் திருமணம், இது சேர்ந்திருத்தல் அல்ல. அதனால் எந்த மகிழ்ச்சியும் பொங்கிவருவதில்லை, மலர்வதில்லை. அது முடியாது. ‘உபயோகப்படுத்திக் கொள்ளல்’ என்ற வேரிலிருந்து எப்படி பேரின்பம் பிறக்கும் ?

உங்களால் புனிதர்கள் என்றழைக்கப்படும் சிலர் கூறுகிறார்கள். நீங்கள் பரிதாபகரமாய் இருக்கிறீர்கள், ஏனெனில் நீங்கள் குடும்பத்தில் வாழ்கிறீர்கள், நீங்கள் உலக்ததில் வாழ்கிறீர்கள் என்று. அவர்கள் மேலும் சொல்வார்கள், ‘எல்லாவற்றையும் விட்டுவிடுங்கள், கைவிட்டு விடுங்கள் !’ அவர்களின் தர்க்கம் சரியானது என்று தோன்றும், அது சரியானது என்பதால் அல்ல. நீங்கள் சேர்ந்திருத்தலை இழந்து விட்டீர்கள், அதனால். இல்லாவிட்டால், இந்தப் புனிதர்கள் சொல்வதெல்லாம் முற்றிலும் தவறானதாய் தோன்றியிருக்கும். சேர்ந்திருத்தலைப் பற்றித்தெரிந்திருப்பவன் தெய்விகத் தன்மையைப் பற்றியும் தெரிந்து

வைத்திருப்பான் ; உண்மையிலேயே மணவாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவனுக்கு, தெய்விகத் தன்மையைப் பற்றியும் தெரியும்; ஏனெனில் காதல்தான் மிகச்சிறந்த கதவு.

ஆனால் அங்கே சேர்ந்திருத்தல் என்பதே இல்லை. சேர்ந்திருத்தல் என்றால் என்ன என்பதையே அறியாமல் நீங்கள் சேர்ந்து வாழ்கிறீர்கள் ; அதே வழியில்தான் எழுபது, எண்பது வருடங்கள் வாழ்கிறீர்கள், வாழ்க்கை என்றால் என்ன என்பதே தெரியாமல். வாழ்க்கை எந்த வேர்களும் இல்லாமலேயே மிந்து செல்கிறீர்கள். வாழ்க்கை உங்களுக்குக் கொடுத்துள்ளவற்றை சுவைக்காமலேயே ஒரு கணத்திலிருந்து அடுத்ததற்கு நகர்ந்து விடுகிறீர்கள். அது உங்களுக்குப் பிறப்பிலேயே கொடுக்கப் படவில்லை. வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்ளுதல் என்பது பரம்பரையாக வருவதில்லை.

வாழ்க்கை உயிரின் மூலம் வருகிறது. ஆனால் ஞானம், அனுபவம், பேரின்பம் கற்றுக் கொள்ளப் படவேண்டும். தியானத்தின் பொருளும் இதுதான். நீங்கள் அதைச் சம் பாதிக்க வேண்டும். அதை நோக்கி வளர வேண்டும், குறிப் பிட்ட அளவு முதிர்ச்சியை நீங்கள் அடைய வேண்டும், அப் பொழுதுதான் அதை உங்களால் தெரிந்து கொள்ள முடியும்.

ஒரு குறிப்பிட்ட அளவு முதிர்ச்சியில் தான் வாழ்க்கை உங்களுக்காகத் திறந்திருக்கும். ஆனால் மக்கள் குழந்தைத் தனமாகவே வாழ்ந்து, சாகிறார்கள். அவர்கள் ஒருபோதும் உண்மையாக வளர்வதில்லை. அவர்கள் ஒருபோதும் முதிர்ச்சி அடைவதில்லை.

முதிர்ச்சி என்றால் என்ன ? உடல் ரீதியாக முதிர்ச்சி அடைந்து விட்டாலே, நீங்கள் முதிர்ச்சி அடைந்தவர் என்று பொருளல்ல. மனவியலாளர்களைக் கேளுங்கள். அவர்கள், சராசரியாக முதிர்ச்சியடையும் பருவம் பதிமூன்று, அல்லது

பதினான்கு வயது என்பார்கள். உங்கள் உடல் வளர்ச்சி யடைந்து கொண்டுதானிருக்கிறது, ஆனால் உங்கள் மனது பதிமூன்று வயதிற்கு மேல் நகராமல் நின்று விடுகிறது. அதனால் நீங்கள் முட்டாள்தனமாக நடந்து கொள்வதில் ஆச்சரியம் ஏதுமில்லை. ஏன் உங்கள் வாழ்க்கை தொடர்ந்து முட்டாள்தனமாகவே இருந்து வருகிறது. வளர்ச்சி அடையாத மனம், தொடர்ந்து ஏதாவது தவறு செய்து கொண்டே தானிருக்கும்.

முதிர்ச்சியடையாத மனம் எப்போதுமே பொறுப்பை அடுத்தவர்களிடம் தள்ளி விடும், நீங்கள் மகிழ்ச்சி இழந்து விட்டதாய் உணர்ந்து. அதற்குக் காரணம், யாரோ ஒருவர் உங்களுக்குத் துன்பத்தைக் கொடுத்துவிட்டதுதான் என்று நினைத்துக் கொள்கிறீர்கள். 'அடுத்தவரே நரகம்.' சாத்ரேவின் இந்த உறுதிமொழி முதிர்ச்சியற்றது என்று நான் சொல்லுவேன். நீங்கள் முதிர்ச்சியுள்ளவராயிருந்தால், மற்றவர் கூட சொர்க்கமாகிவிடுவார். அடுத்தவர் எப்படி யிருக்கிறாரோ, அதுதான் நீங்கள். ஏனெனில் அடுத்தவர் ஒரு கண்ணாடிதான், அவர் உங்களைப் பிரதிபலிக்கிறார்.

முதிர்ச்சி என்று நான் சொல்லும் போது, நான் குறிப் பிடுவது உள்ளேயிருக்கும் மேன்மையை. இந்த உள் மன மேன்மை, நீங்கள் அடுத்தவரிடம் பொறுப்பைக் கொடுப்பதை நிறுத்தியவுடன்தான் வருகிறது, அடுத்தவர்தான் உங்கள் கஷ்டங்களை உருவாக்குகிறார்கள் என்று சொல்வதை நீங்கள் நிறுத்தும் போது, நீங்கள் தான் உங்கள் துன்பங்களுக்குக் காரணம் என்பதை உணரத் தொடங்கும் போது. இதுதான் முதிர்ச்சி நோக்கிச் செல்வதற்கான முதல் வழி : நான்தான் பொறுப்பு, என்னவெல்லாம் நிகழ்கிறதோ, அவையெல்லாம் என் செயல்கள்தான்.

நீங்கள் கவலையாய் உணர்கிறீர்கள். இது நீங்கள் செய்யும் செயலா ? நீங்கள் மிகவும் விசனமாய் உணர்கிறீர்கள், இந்த உணர்ச்சியிலேயே நீங்கள் திளைத்துவிட்டால், இப்போதோ, எப்போதோ பல விஷயங்களை நிறுத்தி விடமுடியும். 'கர்மா' கோட்பாடு இதை அடிப்படையாகக் கொண்டதுதான். நீங்கள் தான் பொறுப்பு. சமுதாயத்தின் பொறுப்புதான் என்று சொல்லாதீர்கள், பெற்றோர்கள்தான் காரணம் என்று சொல்லாதீர்கள். பொருளாதாரச் சூழ்நிலை தான் காரணம் என்று சொல்லாதீர்கள். பொறுப்பை அடுத்தவர் மேல் தள்ளி விடாதீர்கள். நீங்கள் தான் பொறுப்பு.

ஆரம்பத்தில் இது மிகப்பெரிய சுமை போல் தோன்றலாம், ஏனெனில் இப்பொழுது நீங்கள் பொறுப்பை வேறு யார் மேலும் சுமத்த முடியாது. ஆனால் எடுத்துக் கொள்ளுங்கள்—

ஒருவர் முல்லா நஸ்ருதினிடம் கேட்டார் : "ஏன் மிகக் கவலையுடன் காணப்படுகிறீர்கள் ?"

அவர் சொன்னார் : "நான் சூதாடக்கூடாது, புகை பிடிக்கக் கூடாது, குடிக்கக்கூடாது, சீட்டாடக் கூடாது என்றெல்லாம் என் மனைவி தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டிருந்தாள். நான் அவற்றையெல்லாம் நிறுத்தி விட்டேன்."

அந்த மனிதன் சொன்னான் : "இப்பொழுது உங்கள் மனைவி மிகவும் மகிழ்ச்சியாய் இருப்பார்களே!"

நஸ்ருதின் சொன்னார் : "அதுதான் பிரச்சனையே. இப்பொழுது குற்றம் கண்டுபிடிக்க அவளுக்கு ஒரு விஷயமுமில்லை, அதனால் மகிழ்ச்சியில்லாமல் இருக்கிறாள். இப்பொழுது நீங்கள் தான் பொறுப்பு என்று என்னைக் குறை கூற முடியாததால், அவள் மகிழ்ச்சியுடன் இருப்பதை

என்னால் பார்க்கவே முடிவதில்லை. நான் இந்தப் பழக்கங்களையெல்லாம் விட்டுவிட்டால், அவள் மகிழ்ச்சியாக இருப்பாள் என்று நினைத்தேன், ஆனால் முன்பைவிட இப்போது தான் அதிகக் கவலையுடன் இருக்கிறாள்."

நீங்கள் அடுத்தவர் மேல் பொறுப்புகளைச் சுமத்திக் கொண்டேயிருந்தால், அவர்களும் நீங்கள் சொல்வதையெல்லாம் செய்வார்கள், கடைசியில் தற்கொலை செய்து கொள்வதில் கொண்டு வந்து நிறுத்துவீர்கள். இறுதியில் உங்கள் பொறுப்புக்களைத் தள்ளிவிட வேறு இடமே இல்லாமல் போகும்.

எனவே சில தவறுகளைக் கொண்டிருப்பது நல்லது தான். அது அடுத்தவர் மகிழ்ச்சியாயிருக்க உதவும். கணவன் மிகச்சரியானவனாய் இருந்தால், மனைவி அவனைவிட்டுப் பிரிகிறாள். சரியான மனிதனை நீங்கள் எப்படி ஆள முடியும்? அதனால் உங்களுக்குப் பிடிக்காவிட்டால் கூட, சில தவறுகளைச் செய்து கொண்டேயிருங்கள், அப்பொழுது தான் உங்கள் மனைவி உங்கள் மேல் அதிகாரம் செலுத்தி, மகிழ்ச்சியாயிருக்க முடியும் !

எங்கு மிகச்சரியான கணவன் இருக்கிறானோ, அங்கே விவாகரத்து கண்டிப்பாய் இருக்கும். மிகச்சரியான மனிதன் ஒருவனைப் பார்த்தால், நிச்சயமாய் நீங்கள் அனைவருமே அவனுக்கு எதிராவீர்கள், ஏனெனில் உங்களால் அவனைக் கண்டிக்க முடியாது. அவன் மேல் எந்தத் தவறையும் கண்டுபிடிக்க முடியாது. நம் மனம் எப்போதுமே அடுத்தவர் மேல் பொறுப்புகளை எறியவே விரும்பும். நம் மனம் எப்போதுமே குறைகூற விரும்பும். அப்போதுதான் நாம் மகிழ்ச்சியாய் உணர்வோம். ஏனெனில் நாம் பொறுப்பல்ல, நாம் சுமையற்றவர்கள். ஆனால் இந்தச் சுமையற்றத் தன்மை விலையுயர்ந்தது. உண்மையிலேயே நீங்கள் சுமையற்றவர்கள்

அல்ல, இன்னும் அதிகமாய் சுமையேற்கிறீர்கள். நீங்கள் விழிப்பாயில்லை, அவ்வளவுதான்.

மக்கள் எழுபது வருடங்களாக வாழ்கிறார்கள், பல வருடங்களாக, வாழ்க்கை என்றால் என்ன என்பதையே அறியாமல். அவர்கள் முதிர்ச்சியடையவில்லை, அவர்கள் இணைந்திருக்கவில்லை. அவர்கள் மையத்தைப் பற்றிக் கவலைகொள்ளவில்லை. வெளி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தனர்.

நீங்கள் வெளிவட்டத்தைச் சார்ந்தவராயிருக்கும்போது, உங்களைப் போலவேயுள்ள ஒருவரைச் சந்திக்கும்போது, அங்கே மோதல் ஏற்படுகிறது, மற்றவர் தவறு செய்யும் போது, நீங்கள் மேலோட்டமாய்த்தான் இருக்கிறீர்கள். எப்போழுது, "என் வாழ்க்கைக்கு நான்தான் பொறுப்பு, என்று உணர்கிறீர்களோ, என்ன நடந்தாலும் நான்தான் காரணம், இதைச் செய்தது நான்தான்" என்ற உணர்வு வருகிறதோ அப்பொழுது உங்கள் எண்ணம் வெளிவட்டத்திலிருந்து மையத்திற்கு வந்துவிடுகிறது. இப்பொழுதுதான், முதன் முதலாக, உலகின் மையமாகிறீர்கள்.

இப்பொழுது அதிகமாய் செயல்படுத்த முடியும். ஏனெனில் எவற்றையெல்லாம் நீங்கள் விரும்பவில்லையோ, அவற்றைத் தவிர்த்து விடலாம் ; எதையெல்லாம் விரும்புகிறீர்களோ அவற்றை எடுத்துக் கொள்ளலாம். எவற்றையெல்லாம் உண்மை என்று உணர்கிறீர்களோ, அவற்றைப் பின்பற்றலாம், எவையெல்லாம் உண்மையல்ல என்று நினைக்கிறீர்களோ, அவற்றைப் பின்பற்றத் தேவை இல்லை, ஏனெனில் இப்பொழுது நீங்கள் உங்களை மையமாய்க் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்குள் ஸ்திரமாயிருக்கிறீர்கள்.

ஒரு நண்பன் கேட்டான் :

"மனிதர்களால் கூடி வாழமுடியுமா,
அதைப்பற்றி ஒன்றுமே தெரியாமல் ?

ஒன்றாய் வேலை செய்ய முடியுமா,
எதையும் உற்பத்தி செய்யாமல் ?
வானவீதியில்
அவர்களால் பறக்க முடியுமா
இருத்தலை மறந்து,
முடிவே இல்லாத உலகில் ?''

மூன்று நண்பர்களும்
ஒருவரை யொருவர்
பார்த்துக் கொண்டனர்...

நண்பர்களால் மட்டுமே ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ள முடியும். யாராவது ஒருவரை நீங்கள் எதிரிபோல் உணர்ந்தால், அவரை ஒருபோதும் நீங்கள் பார்க்கமாட்டீர் கள். அவரது கண்களைத் தவிர்த்து விடுவீர்கள். ஒருவேளை அவரைப் பார்க்க வேண்டிய கட்டாயம் வந்தாலும், உங்கள் பார்வை வெறுமையாயிருக்கும், உங்கள் கண்கள் அவரை உள்வாங்க நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள். அவர் ஒரு வெளியாள் போன்றவர், நிராகரிக்கப்பட்டவர்.

கண்கள் கதவுகள் போன்றவை. நீங்கள் ஒருவரைப் பார்த்தால் மட்டும் போதும், உங்களால் அவரை உள்வாங்கி, உங்களுடன் கரையவிட்டு விடமுடியும்.

மூன்று நண்பர்களும்
ஒருவரையொருவர்
பார்த்துக் கொண்டனர்.

ஒரு நண்பன் விசாரித்தான், மற்ற இருவரும் விடை யளிக்க அவசரப்படவில்லை. அவர்கள் காத்திருந்தனர், பொறுமையாயிருந்தனர். அவர்கள் மனதில் ஏற்கெனவே ஒரு முடிவு, தீர்மானம் இருந்திருப்பின், அவர்கள் உடனே பேசி

யிருப்பார்கள். ஆனால், அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். அந்த சூழலை உணர்ந்தார்கள், விசாரிப்பு மையம், கேள்வியின் பொருள், அதன் ஆழம். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், கேள்வியின் ஆழத்தை நீங்கள் உணர்ந்தாலே பதில் ஏறக்குறையக் கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. ஆனால் யாருக்கும் பொறுமை இல்லை, யாரும் கேள்வியின் ஆழத்திற்குச் செல்லத் தயாராயிருப்பதில்லை. நீங்கள் கேட்பீர்கள், ஆனால் ஒருபோதும் விசாரிப்பின் ஆழத்திற்குள் நீங்கள் செல்வதில்லை, பதிலை உடனே கேட்கிறீர்கள்.

மூன்று நண்பர்களும்
ஒருவரை யொருவர்
பார்த்துக் கொண்டனர்...
சிரிப்பு வெடித்துச் சிதறியது.

உண்மை, கேள்வி, அதன் ஊடுருவல், ஆழம், மெய், அதன் உண்மைநிலை, அதற்கு எந்தப் பதிலும் தேவையில்லை என்பதை அவர்களுக்குக் காட்டியது. எந்தப் பதிலும் முட்டாள்தனமாகதாக இருந்திருக்கும். எந்தப் பதிலும் மேலெழுந்த வாரியானதாகவே இருந்திருக்கும்.

இது புத்தரைப் பற்றிச் சொல்லப்பட்டது. கோடிக் கணக்கான மக்கள் அவரிடம் தொடர்ந்து கேள்வி கேட்ட போதெல்லாம். அவர் பதில் சொல்லாமேதான் இருந்தார். அந்தக் கேள்வி ஒரு மேலெழுந்தவாரியான பதிலை எதிர் பார்த்துக் கேட்கப்படும் போதெல்லாம், அவர் பதிலே கூற மாட்டார். யாராவது "கடவுள் இருக்கிறாரா ?" என்று கேட்டால், அவர் அமைதியாகத்தானிருப்பார். மக்கள் முட்டாள் தனமாவர்கள். அவர் கடவுளை நம்பவில்லை என்று நினைக்கத் தொடங்கினர். அல்லது அவர் 'ஆமாம்' என்று சொல்லியிருக்க வேண்டும் ; அல்லது அவர் 'அறியாமை' உடையவர் என்று நினைத்துக் கொண்டனர். அவருக்குத் தெரியவில்லை, அல்லது அவர் 'ஆமாம்' என்றோ இல்லை என்றோ சொல்லியிருக்க வேண்டும் !

"கடவுள் இருக்கிறாரா !" என்பது போன்ற கேள்வி களைக் கேட்கும் போதெல்லாம், நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்று உங்களுக்தே தெரியவில்லை. இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லப் படக்கூடும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ? அப்படியென்றால் நீங்கள் முட்டாள். இத்தகைய ஜீவா தாரமான கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லமுடியுமா ? அப்படியென்றால், உங்களுக்கு அதன் ஆழம் தெரியவில்லை, அப்படியென்றால் இது ஆர்வம்தான், விசாரணை அல்ல.

புத்தரிடம் கேள்வி கேட்ட மனிதன், உண்மையை நாடுபவனாக இருந்திருந்தால், அவன் புத்தரின் அமைதியைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும் - ஏனெனில் அந்த அமைதிதான் பதில். அந்த அமைதியில் கேள்வியை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும், அந்த அமைதியில் அந்தக் கேள்வி தன்னையே உறுதியாக்கிக் கொண்டிருக்க வேண்டும். அமைதி யின் பின்னணிக்கு எதிரில் அந்தக் கேள்வி இன்னும் தெளி வாகியிருக்கும். அந்தத் தெளிவு அவனுக்குள் வந்திருக்கும்.

எப்போதெல்லாம் நீங்கள் ஆழமான கேள்விகளைக் கேட்கிறீர்களோ, அப்போது எந்தப் பதிலும் தேவையில்லை. தேவைப்படுதெல்லாம் அந்தக் கேள்வியைத் தகக் வைத்துக் கொள்வதே. அந்தக் கேள்வியே பதிலாகிவிடும். கேள்வி, அதன் ஆழத்திற்குள் நீங்கள் சென்றால், பதில் எங்கிருந்து கிடைக்குமோ அதே மூலத்திற்குள் உங்களைக் கொண்டு சென்று விடும். அது உங்களுக்குள் இருக்கிறது.

புத்தர் எந்த ஒரு உண்மையான கேள்விக்கும் பதிலளிக்க வில்லை - நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நானும் கூடத் தான். நான் உங்கள் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டேயிருக்கிறேன், ஆனால் என்னாலும் உங்கள் உண்மையான கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாது நீங்கள் இதுவரை கேட்கவில்லை. நீங்கள் எப்போதெல்லாம் உண்மையான கேள்விகளைக் கேட்கிறீர்களோ, அப்போது

நான் பதில் சொல்லப் போவதில்லை, ஏனெனில் எந்த உண்மையான கேள்விக்கும் பதில் கூற முடியாது, இது அறிவுப் பூர்வமானதல்ல. இதயத்திற்கும், இதயத்திற்குமிடையே நிகழும் பரிமாற்றம், தலைக்கும், தலைக்குமிடையேயானதல்ல.

மூன்று நண்பர்களும் ஒருவரை யொருவர்
பார்த்துக் கொண்டனர்...

அந்தப் பார்வையில் என்ன நிகழ்ந்தது ? அந்தப் பார்வையில் அவர்கள் தலைகளாய் அல்ல, இதயமானார்கள். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர், உணர்ந்தனர், அந்தக் கேள்வியைச் சுவைத்தனர் - அது மிகவும் உண்மையானது. அதனால்தான் அதற்குப் பதிலே இல்லை.

ஆமாம், வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியாமலேயே நாம் வாழ்கிறோம். ஆம், சேர்ந்திருத்தல் என்றால் என்னவென்று தெரியாமலேயே நாம் சேர்ந்திருக்கிறோம். ஆம், நாம் வாழ்கிறோம். வாழ்தல் என்பதையே சுத்தமாக மறந்து, வானில் சுற்றிச் சுற்றிப் பறக்கிறோம், எங்கே செல்கிறோம், ஏன் என்பதைப் பற்றித் தெரியாமல்.

அந்தக் கேள்வி மிகவும் உண்மையானது. எனவே அதற்கு ஏதாவது பதில் கொடுக்கப்பட்டாலும், அது முட்டாள்தனமானதாகத்தான் இருக்கும். முட்டாளால் மட்டுமே இத்தகைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியும். அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர், உண்மையிலேயே அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர், சிரிப்பு வெடித்துச் சிதறியது. ஏன் சிரிப்பு வெடித்தது ? அங்கு முழுச் சூழ்நிலையுமே வேடிக்கையாய்த் தானிருந்தது. உண்மையாகவே, வாழ்க்கை என்றால் என்ன என்பதை அறியாமலேயே நாம் வாழ்கிறோம் ; நாம் உயிர் வாழ்கிறோம். வாழ்தலைப் பற்றிய விழிப்புணர்வே இல்லாமல், நாம் பயணம் செய்கிறோம். எங்கிருந்து, எதற்காக, ஏன் என்றெல்லாம் தெரியாமலேயே.

வாழ்க்கை ஒரு சூட்சுமம். அந்த சூட்சுமத்தை, ரகசியத்தை எதிர்த்து நீங்கள் இருக்கும் போதெல்லாம் சிரிப்புதான் வரும். சூட்சுமத்திற்கு உங்களால் எவ்வாறு விடையளிக்க முடியும் ?

உங்களுக்குள்ளிருக்கும் மிக சூட்சுமமான, ரகசியமான விஷயம் எது ? சிரிப்புதான் உங்களுக்குள்ளிருக்கும் மிகவும் சூட்சுமமான விஷயம். எந்த மிருகங்களாலும் சிரிக்க முடியாது. மனிதால் மட்டுமே, இதுதான் மனிதனின் மிகப்பெரிய மகத்துவம். எந்த மிருகமும் சிரிப்பதில்லை. எந்த மரமும் சிரிப்பதில்லை - மனிதன் மட்டுமே சிரிக்கிறான். சிரிப்புதான் மனிதனுக்குள்ளிருக்கும் மிகச் சூட்சுமான விஷயம்.

அரிஸ்டாட்டில் மனிதனை விவேகமுள்ள உயிரினம் என்று குறிப்பிடுகிறார். இது சரியான விளக்கமல்ல. ஏனெனில் காரணங்கள் மற்ற விலங்குகளிலும் கூடத் தோன்றுகின்றன. வித்தியாசம் சில கோணங்கள் மட்டுமே இருக்கலாம், அதிகமில்லை. மனிதனை சிரிக்கும், அழும் ஒரு மிருகம் என்று வேண்டுமானால் குறிப்பிடலாம், வேறு எந்த விளக்கமும் சரியானதாயிருக்காது. ஏனெனில் எந்த மிருகத்தாலும் அழ முடியாது, எந்த மிருக்கதாலும் சிரிக்க முடியாது. இந்த இரு துருவங்களும் மனிதனுக்கு மட்டுமே சாத்தியம். இது தான் சூட்சுமமானது, மனிதனில் மிகவும் சூட்சுமமானது.

கோபம் எல்லா இடத்திலுமிருக்கிறது, அது ஒன்றுமில்லை. காமமும் எல்லா இடத்திலுமிருக்கிறது, அது ஒன்றும் பெரிய விஷயமில்லை, அதில் ஒரு சூட்சுமமுமில்லை. நீங்கள் காமத்தைப் புரிந்து கொள்ள விரும்பினால், உங்களால் மிருகங்களின் காமத்தையும் புரிந்து கொள்ள முடியும். அது மிருங்களின் காமத்திற்கும் பொருந்தும், அதுவே மனிதர்களுக்கும் பொருந்தும். இந்த வகையில் மனிதன் ஒன்றுமே இல்லை.

கோபம், வன்முறை, போர்க்குணம், சொந்தம் கொண்டாடுதல், பொறாமை, அனைத்தும் இருக்கின்றன. விலங்குகளைவிட உங்களுக்கும் அதிகமாகவும், எளிதாகவும் நுழைகின்றன. அனைத்தும் உங்களுக்குள் குழப்பமாயிருக்கின்றன. அதனால்தான் மனவியாலாளர்கள் மனிதர்களுக்குப் பதில் எலிகளை ஆராய்கிறார்கள். அவை எளிதானவை, தெளிவானவை, அதிகம் குழப்பமில்லாதவை, எலிகளை வைத்து எந்த முடிவை எடுத்தாலும் அவை உங்களுக்கும் பொருந்தும். அனைத்து மனோதத்துவ ஆராய்ச்சிக் கூடங்களும் எலிகளால் நிறைந்திருக்கின்றன. மனவியலாளர்களுக்கு இது மிகவும் முக்கியமான விலங்காக விளங்குகிறது. ஏனெனில் இது பல விதங்களில் மனிதனை ஒத்திருக்கிறது.

மனிதர்களை எல்லா இடத்திலும் தொடரும் ஒரே விலங்கு எலிதான். அது உலகம் முழுதும் உள்ளது. நீங்கள் சைபீரியாவில் ஒரு மனிதனைப் பார்த்தீர்களென்றால், அவனுக்குக் கொஞ்சு தூரத்திலேயே எலியுமிருக்கும். அவன் எங்கே சென்றாலும், எலியும் பின்தொடர்ந்து செல்லும். எலிகள் ஏற்கெனவே நிலாவையும் சென்றடைந்திருக்கும் என நினைக்கிறேன். வேறு எந்த மிருகங்களும் எலியைப் போல் எல்லா இடங்களிலும் இருப்பதில்லை. அதன் பழக்க வழக்கங்கள் கூட முற்றிலும் மனிதனைப் போலவே தானிருக்கிறது. எலிகளின் பழக்கங்களைப் புரிந்து கொண்டீர்கள் என்றால், மனிதனை எளிதாகப் புரிந்து கொள்வீர்கள்.

ஆனால் எலிகளாலும் சிரிக்கமுடியாது, எலிகளால் அழமுடியாது. அழுகையும், சிரிப்பும் மனிதனுக்குள் மட்டுமே தோன்றும் இரு நிலைகள். அழுகையையும், சிரிப்பையும் புரிந்து கொள்ள விரும்பினீர்கள் என்றால், நீங்கள் மனிதனைக் கவனிக்க வேண்டும் ; வேறு எந்த வழியிலும் இதைப் புரிந்து கொள்ள முடியாது. அதனால் இதை மனிதனிடம் மட்டுமுள்ள மேன்மையான குணம் என்று அழைக்கிறேன்.

எப்போதெல்லாம் சூட்சுமமாய் உணர்கிறீர்களோ, அப்போது இரண்டு மாறுபட்டவைகளையும் பெற்றிருக்கிறீர் கள் : அழுவீர்கள் அல்லது சிரிப்பீர்கள். அது உங்கள் குணநலன்களைப் பொறுத்தது, நீங்கள் எந்த வகையானவர் என்பதைப் பொறுத்தது. இது சாத்தியம். அவர்கள் வேறு பட்ட குணநலன்களைக் கொண்டிருந்தவர்கள் எனில், அந்த மூன்று நண்பர்களும் அழுதிருக்க வேண்டும். எப்பொழுது இது போன்ற ஒரு சூட்சுமம் உன்னைச் சுழ்ந்தது, எந்த விளக்கமுமே சாத்தியப்படாத, தெரிந்து கொள்ள முடியாத ஒரு சூட்சுமத்திற்குள் எப்படி நுழைந்தாய், உன்னால் என்ன செய்யமுடியும்? எப்படி நீ பொறுப்பேற்க முடியும் ?

ஆனால் அழுவதைவிட, சிரிப்பது நல்லது. ஏனெனில் உங்களைச் சுற்றியிருக்கும் சூட்சுமம் செத்துப்போன பிறகுதான் அழுகை வருகிறது. பிறகு நீங்கள் அழுகிறீர்கள். கேள்வி வாழ்க்கையைப் பற்றியது, அதனால் சிரிப்பதுதான் பொருத்தமால் இருக்கும். எப்போதெல்லாம் சூட்சுமத்தின் சாவிற்குள் நீங்கள் நுழைகிறீர்களோ, அப்போதெல்லாம் அழுகிறீர்கள்; எப்போதெல்லாம் சாவு இருக்கிறதோ, அப்போது அழுகையைப் பொருத்தமாய் உணர்கிறீர்கள்.

கேள்வி வாழ்வைப் பற்றியது, சாவைப் பற்றியதல்ல. எனவே அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந் தது பொருத்தமாய் தோன்றுகிறது. ஒவ்வொருவருக்குள்ளு முள்ள உயிர்த்தன்மைக்குள் இவையெல்லாம் இருக்கும். உயிர் தன்மை சுறுசுறுப்புடன் இயங்கக் கூடியது. எந்த விளக்கமும் இல்லாமல் எல்லா இடத்திலும் நடனமாடக்கூடியது, சூட்சுமமான இந்தச் சாவிக்கு விளக்கமே கிடையாது. வாழ்வு மிகவும் சூட்சுமமானது, அதன் முழு அறியாத் தன்மையில்.

அங்கே செய்வதற்கு என்ன இருக்கிறது ? அவர்கள் தத்துவஞானிகள் அல்ல; உண்மையான மனிதர்கள். புரிந்து கொள்ள முடியாததை உணர்ந்தவர்கள். அவர்கள் சிரித்தார்கள், அவர்களிடம் எந்த விளக்கமுமில்லை.

இவ்வாறு
முன்பைவிடச் சிறந்த நண்பர்களாய்
அவர்கள் இருந்தனர்.

இது அழகானது ! எப்போதெல்லாமல் விளக்கம் இருக்கிறதோ, அப்போது அங்கு பகைமை உருவாகிறது. எப்போ தெல்லாம் ஏதாவது ஒன்றில் நம்பிக்கை வைக்கிறீர்களோ, அப்போது நீங்கள் பிரிக்கப்படுகிறீர்கள். நம்பிக்கை போரை உருவாக்குகிறது. முழு உலகமுமே நம்பிக்கையால் தான் பிரிந்தது. நீங்கள் ஒரு இந்து; மற்றவர் முஸ்லிம்; நீங்கள் விரோதிகள். ஏன் நீங்கள் விரோதிகள் ? ஏனெனில், உங்கள் நம்பிக்கையால். நம் பிக்கை போரை ஏற்படுத்துகிறது, முட்டாள்தனமான விளக்கங்கள், சாஸ்திரங்கள், சண்டையை உருவாக்குகின்றன, போரை.

இதைக் கவனியுங்கள் ; எந்த விளக்கமும் இல்லா விட்டால், யார் இந்து ? யார் முஸ்லிம் ? எப்படி நீங்கள் சண்டையிட முடியும் ? எதற்காக ? மனிதன் எப்போதுமே தத்துவங்களுக்கு எதிராகச் சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறான், இரத்தம் சிந்துகிறான், ஒருவனையொருவன் கொலை செய்கிறான், எல்லாம் முட்டாள் தனமான நம்பிக்கைகளுக்காக. நீங்கள் அந்த நம்பிக்கைகளைக் கவனித்துப் பார்த்தால், அதன் முட்டாள்தனத்தைப் புரிந்து கொள்ள முடியும். உங்கள் நம்பிக்கைகளை அல்ல, ஆனால் அடுத்தவர்களின் நம்பிக்கைகளை ! உங்கள் நம்பிக்கை புனிதமான ஒன்றாய் இருக்கலாம், ஆனால் மற்ற அனைவரின் நம்பிக்கைகளும் முட்டாள் தனமானதாய்த் தெரியும்!

அனைவரின் நம்பிக்கைகளும் முட்டாள் தனமானவை. உங்களுடையதை, உங்களால் காணமுடியாது. ஏனெனில் அது மிக அருகில் உள்ளது. உண்மையிலேயே விளக்கங்கள் எல்லாம் முட்டாள்தனமானவை, அறிவற்றவை.

குளிர்காலத்திற்காக, தென்பகுதியை நோக்கி வந்து கொண்டிருந்த பறவைக் கூட்டத்தின் சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

பின்னாலிருந்த பறவை மற்றொன்றையும் பார்த்துக் கேட்டது : "எப்படி நாம் எப்பொழுதும் இந்த முட்டாள் தலைவரைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறோம்?"

அதற்கு அந்தப் பறவை சொன்னது: "முதலில் எல்லா தலைவர்களுமே முட்டாள்கள்தான்..." இல்லையென்றால் யார் தலைமை ஏற்க விரும்புவார்கள் ? எப்பொழுதுமே முட்டாள்கள் தான் தலைமை ஏற்கத் தயாராயிருப்பார்கள். அறிவாளி அதை வெறுப்பான். வாழ்க்கை மிகவும் சூட்சும மானது - அது தயாராயிருக்கும் பாதை அல்ல. எப்படி உங்களால் தலைமை ஏற்க முடியும்? அறிவாளி மனிதன் அதை வெறுப்பான், முட்டாளோ எப்போதும் தலைமை ஏற்கத் தயாராயிருப்பான்.

"..... இரண்டாவது, அவன் வரை படத்தைப் பெற்றிருக் கிறான், அதனால் ஒவ்வொரு வருடமும் நாம் அவனைப் பின்பற்றியாக வேண்டும்."

வாழ்க்கைக்கு வரைபடமே இல்லை, வரைபடத்தைத் தயாரிப்பதற்கான சாத்தியமும் இல்லை. அது பாதையில்லாத ஒரு பாதை. எந்த விளக்கமும் இல்லாமல் எப்படி நீங்கள் பிரிக்கப்பட முடியும் ? எந்த விளக்கமும் இல்லாமலிருந்தால், உலகம் ஒன்றாகவே இருக்கும். ஆனால், இங்கு கோடிக் கணக்கான விளக்கங்கள், கோடிக் கணக்கான பிளவுகள்.

சுவாங்தஸூ மிகவும் உண்மையான, ஊடுருவக் கூடிய விஷயத்தைச் சொல்கிறார் :

ஒரு விளக்கமும்
அவர்களிடம் இல்லை,
இவ்வாறு முன்பை
விடச் சிறந்த நண்பர்களாய் இருந்தனர்.

இப்பொழுது அவர்க்ள் விரோதிகளாவதற்குரிய எந்தக் காரணமுமில்லை, சண்டைபோடுவதற்கு ஒன்றுமில்லை. அவர்கள் சிரித்தனர், அந்தச் சிரிப்பு அவர்களை ஒன்றாக்கியது. அந்தச் சிரிப்பு அவர்களை சேர்ந்திருத்தலுக்கு இட்டுச் சென்றது. விளக்கம் சொல்லும் போது நீங்கள் பிரிக்கப்படுகிறீர்கள், தத்துவார்த்தமாகிறீர்கள், மற்றவர் களிடமிருந்து பிரிக்கப்படுகிறீர்கள், ஒரு இந்துவாகிறீர்கள், ஒரு முஸ்லிம் ஆகிறீர்கள், ஒரு புத்தமத்தவனாகிறீர்கள்; அப்பொழுது மற்றவர்கள் அனைவரும் உங்கள் பகைவர்களாகிறார்கள்.

சூட்சுமத்தைப் பார்த்து சிரியுங்கள், மனித இனம் ஒன்றுதான். பிறகு அங்கே கிறிஸ்தவர்கள் எல்லாம் இந்துக்களின் சகோதரர்கள்; இந்துக்கள் அனைவரும் முஸ்லிம்களின் சகோதரர்கள் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை. முதலில் அவர்களைப் பிரித்துவிட்டு, நம்பிக்கைகளால் அவர்களை வதைத்து, நோயுறவைத்து, பிறகு இந்த மருந்தையும் வினியோகிக்கிறீர்கள். நீங்கள் அனைவரும் சகோதரர்கள். நீங்கள் சகோதரர்களைப் பார்த்திருக்கிறீர்களா ? எதிரிகளை விட அதிகமாய் சண்டை போடுவார்கள் ! அதனால் அவர்களை சகோதரர்களாக்குவதால் என்ன பயன் ?

மனிதன் அவன் விளக்கங்களுக்காகச் சண்டை இடுகிறான். அனைத்துச் சண்டைகளும் முட்டாள் தனமானவை. மனிதன் அவன் கொடிகளுக்காகச் சண்டை இடுகிறான். அந்தக் கொடிகளைக் கவனியுங்கள் ! என்ன ஒரு முட்டாள்தனம் ! எத்தகைய ஒரு பைத்தியக்காரத்தனம் நம் உலகில் இருக்கிறது ? கொடிகளுக்காக, அடையாளங்களுக்காக, நம்பிக்கைகளுக்காக, சாஸ்திரங்களுக்காக ?

சுவாங்தஸூ சொல்கிறார் : எந்த விளக்கமும் அவர்களிடமில்லை. அவர்கள் சிரித்தனர். அந்த சூட்சுமமான கணத்தில் அவர்கள் ஒன்றானார்கள், முன்பிருந்ததைவிடச் சிறந்த நண்பர்கள்.

நீங்கள் உண்மையாகவே நண்பனாயிருக்க விரும்பினால், ஒரு விளக்கமுமில்லாமல், எந்தத் தீர்மானமுமில்லாமலிருங்கள், எதிலும் நம்பிக்கை வைக்காதீர்கள், பிறகு நீங்கள் பிரிந்திருக்க மாட்டீர், மனித இனம் ஒன்றாகும். பிறகு அங்கு எந்தத் தடையுமிருக்காது.

அன்பு அறிவின் வழியாய் தோன்றாது, அது உணர்வின் வழியாய் தோன்றுவது.

அவர்கள் சிரித்தார்கள். சிரிப்பு இதயத்திலிருந்து வருகிறது, சிரிப்பு வயிற்றிலிருந்து வருகிறது, சிரிப்பு உயிரின் மொத்தத்திலிருந்து வருகிறது. மூன்று பேர் சிரிக்கும் பொழுது, அவர்கள் நண்பர்களாகிறார்கள். மூன்று பேர் அழும் போது, அவர்கள் நண்பர்களாகிறார்கள். மூன்று பேர் வாக்குவாதம் செய்யும்போது, அவர்கள் எதிர்களாகிறார்கள்.

பிறகு ஒரு நண்பன் இறந்துப் போனான்.
கன்ஃபூஷியஸ் தன் சீடனை அனுப்பினார்,
இறந்தவர்களுக்குப் பாடும் பாடலில் மற்ற
இருவருக்கும் உதவுவதற்காக.

கன்ஃபூஷியஸ் நடத்தையில் தலைசிறந்தவர். யாரும் அவரை மிஞ்சமுடியாது. அதனால் அவர் சுவாங்தஸூவிற்கும், லாவோட்ஸூவிற்கும் இலக்காகவே இருந்தார். அவர்கள் கன்ஃபூஷியஸை எப்படியாவது தங்கள் கதைகளில் கொண்டு வந்துவிடுவார்கள். அவரது முட்டாள்தனங்களை வைத்துக் கேலி செய்ய.

எது அவரது முட்டாள்தனம்? அவர் மிகவும் ஒழுங்கு முறைகளோடு வாழ்ந்தார், அவர் ஒரு சூத்திரத்தின் அடிப்படையில் வாழ்ந்தார், கோட்பாடுகளின், நம்பிக்கைகளின் அடிப்படையில். அவர் மிகச் சரியான நடத்தைகளுடையவராயிருந்தார். உலகம் ஒருபோதும் பார்த்தேயிராத உயர்வான மனிதராய் அவர் இயங்கினார். விதிகளின் அடிப்படையிலேதான் இயங்கினார். அவர் பார்த்தார்.

விதிகளின் அடிப்படையில்தான் பார்த்தார். அவர் சிரித்தார். விதிகளின் அடிப்படையில் தான் சிரித்தார். அவர் ஒரு போதும் எல்லைகளைத் தாண்டிச் சென்றதில்லை. அவர் ஒரு நிலையான பிணைப்பிற்குள் தான், தானாக உருவாக்கிக் கொண்ட எல்லைக்குள்தான் வாழ்ந்தார். அதனால் அவர் அவர்களின் சிரிப்பிற்கு ஆளானார், சுவாங்தஸூவும், லாவோட்ஸூவும் அவரைத் தங்கள் கதைகளில் கொண்டு வருவதை மிகவும் விரும்பி ரசித்தனர்.

பிறகு ஒரு நண்பன் இறந்து போனான்.
கன்ஃபூஷியஸ் தன் சீடனை அனுப்பினார் ,
இறந்தவர்களுக்குப் பாடும் பாடலில் மற்ற
இருவருக்கும் உதவுவதற்காக.

வாழ்வும் சரி, சாவும் சரி அவருக்கு சூட்சுமமாக இருக்கவில்லை. அது ஒழுங்கு முறைகளில் இருக்கும் ஒரு பகுதி, சில கடமைகள் அதில் பின்பற்றப்பட வேண்டும். அதனால் அவர், இறந்த மனிதன் விதிகளின் படி அடக்கம் செய்யப்படுகிறானா, சரியான பிரார்த்தனைகள் செய்யப்படு கின்றனவா, புத்தகத்திலிருப்பதுபோல் சரியாகப் பாடல்கள் பாடப்படுகின்றனவா என்பதை எல்லாம் கவனித்துவர தன் சீடனை அனுப்பினார். சாவு மரியாதை செய்யப்பட வேண்டும்.

இதுதான் வித்தியாசம். ஒழுங்கு முறைகளின்படி வாழும் மனிதன் எப்போதும் மரியாதையைப் பற்றித்தான் சிந்திக்கிறான். ஒருபோதும் அன்பைப் பற்றி அல்ல. அன்புடன் ஒப்பிடும் போது மரியாதை என்பது என்ன ? அன்பு உயிருடனிருக்கும் ஒன்று ; மரியாதை முற்றிலும் இறந்து விட்ட ஒன்று.

அந்த சீடன் கண்டார்
ஒரு நண்பன் பாடலை இயற்றினான்,
இன்னொரு நண்பன் யாழ்வாசிக்கும் போது.

இது நம்பமுடியாத ஒன்று ! இது இறந்த மனிதனுக்குச் செலுத்தப்படும் அவமரியாதை ! பிணம் படுக்க வைக்கப் பட்டிருக்கிறது, ஒரு நண்பன் பாடலை இயற்றுகிறான். அவர்கள் தங்கள் நண்பனை அன்பு செய்தார்கள். நீங்கள் ஒருவரை அன்பு செய்யும் போது, அவருக்குக் கடைசி பிரிவுபசாரத்தை உங்கள் அன்பின் மூலம் தர விரும்புவீர்கள், புத்தகத்தின் வழியாக அல்ல, ஏற்கெனவே பலர் பாடிவிட்ட தயாராயிருக்கிற பாடல்கள் வழியாக அல்ல. ஏற்கெனவே பலர் பயன்படுத்திவிட்டதை, ஏற்கெனவே அழுகிப் போய் குப்பையான ஒன்றை. அதனால் அவர்கள் சொந்தமாய் ஒரு பாடலை இயற்றினார்கள், இளமையானதை, புதிதானதை. ஆம், அது வீட்டில் செய்யப்பட்டதுதான், தொழிற்சாலையில் அல்ல, பல ஆயிரக்கணக்கானவர்கள் தயாரிக்கப்பட்டதல்ல தான். வீட்டில் செய்யப்பட்டதுதான், மிகவும் பளபளப்பான தல்ல தான், ஏனெனில் அவர்கள் கவிஞர்கள் அல்ல, நண்பர்கள். கவிதை எப்படி உருவாக்கப்பட்டது என்பது அவர்களுக்குத் தெரியாது. அளவீடுகள் தவறாக இருந்திருக் கலாம். இலக்கணம் சரியில்லாமலிருந்திருக்கலாம், ஆனால் அன்பு இலக்கணத்தையெல்லாம் கவனிப்பதில்லை. அன்பு அளவுகளை எல்லாம் பார்ப்பதில்லை, அன்பு தாளத்தைப் பற்றியெல்லாம் யோசிப்பதில்லை, ஏனெனில் அன்பு ஜீவாதாரமான தாளத்தை தனக்குள்ளேயே கொண்டுள்ளது. அதற்குத் தனி கவனம் தேவையில்லை. அன்பே இல்லாத போது எல்லாவற்றிலும் கவனம் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஏனெனில் அன்பிற்குப் பதிலாக நீங்கள் ஏதாவது ஒன்றில் கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒருவன் யாழிசைத்துக் கொண்டிருந்தான். எனக்குத் தெரியும் அவன் யாழிசைப்பவன் அல்ல என்று. ஆனால் நண்பனுக்கு எப்படி நீங்கள் விடைகொடுக்க முடியும் ? அது உங்கள் இதயத்திலிருந்து வரவேண்டும். அது தன்னிச்சை

யானதாயிருக்க வேண்டும். ஏற்கெனவே தயாரிக்கப்பட்ட ஒன்றாய் இருக்க முடியாது. அதுதான் முக்கியம்.

அவர்கள் பாடினார்கள் :
"ஏய், சுங்ஹூ, எங்கே சென்று விட்டாய் ?"

சுட்சுமம் ! அவர்கள், "நீ சொர்க்கத்துக்கு சென்று கொண்டிருக்கிறாய்" என்று சொல்லவில்லை. அவர்களுக்குத் தெரியாது. இல்லாவிட்டால், யாராவது இறந்துவிடும் போது நீங்கள் சொல்கிறீர்கள், "அவர் சொர்க்கத்துக்குச் சென்று விட்டார்" என்று. பிறகு யார்தான் நரகத்திற்குச் செல்வார்கள்? யாருமே நரகத்திற்குச் செல்வதில்லை என்பது போல் தோன்றுகிறதே !

இந்தியாவில், இறந்தவரைக் குறிக்கப் பயன்படுத்தும் சொல், 'சுவர்கியா.' இதன் பொருள், சொர்க்கத்திற்குச் சென்று விட்டவர் என்பதுதான். பிறகு யார் நரகத்திற்குச் செல்பவர்கள் ? அவர்களுக்குத் தெரியாது, அதனால் தவறாகக் குறிப்பிடுவதில் என்ன இருக்கிறது ? இந்த மனிதன் எங்கே சென்றிருக்கிறான் என்று யாருக்குத் தெரியும் ; -இந்த சுங்ஹூ - சொர்க்கத்திற்கா, அல்லது நரகத்திற்கா ? யாருக்குத் தெரியும் சொர்க்கம், நகரமெல்லாம் இருக்கிறதா, இல்லையா என்று ? யாருக்கும் தெரியாது : அது சூட்சுமம், சூட்சுமத்தை யாராலும் மாசுபடுத்தக் கூடாது, அதை யாரும் நிந்திக்கக் கூடாது. பொய்யான ஒன்றை உறுதியாகச் சொல்லக்கூடாது. அது ஒரு புனிதமான விஷயம், நேரடியாகத் தெரியாத ஒன்றை யாரும், எப்படியும் சொல்லிவிடக் கூடாது.

"ஏய், சுங்ஹூ, எங்கே சென்று விட்டாய் ?"

அது ஒரு கேள்விக்குறி.

"ஏய், சுங்ஹூ, எங்கே சென்று விட்டாய் ?
நீ உண்மையிலேயே
எங்கிருந்தாயோ, அங்கேயே சென்று விட்டாய்,

நாங்கள் இங்கிருக்கிறோம் – சே, நாங்கள்
இங்கே இருக்கிறோம் !"

அவர்கள் சொல்கிறார்கள், "நீ எங்கிருந்து வந்தாயோ, அங்கேயே சென்று விட்டாய்." இது ஒரு இரகசிய விதி : மிகவும் உயர்ந்த, முடிவான ஒன்று, தொடக்கமாகவேதான் இருக்க முடியும். வட்டம், வட்டமாகச் சென்று, சரியானதாய் முடிகிறது, முழுமையானதாய், எங்கே தொடங்கியதோ, அதே இடத்தை அடைகிறது. முடிவு வேறெதுவாகவும் இருக்க முடியாது, ஆரம்பத்தைத்தவிர, இறப்பு வேறெதுவாகவும் இருக்க முடியாது, பிறப்பைத் தவிர. முடிவு, மூலமாக, உண்மையான தாகத்தான் இருக்க முடியும். ஒருவன் ஒன்றுமே இல்லாததிலிருந்து பிறக்கிறான், பிறகு இறந்து அதே ஒன்றுமே இல்லாத் தன்மைக்குள்ளேயே சென்று விடுகிறான். நீங்கள் பிறக்கும் போது படகு வெறுமையாயிருந்தது, நீங்கள் இறக்கும் போது, படகு மீண்டும் வெறுமையானதாய் ஆகும். ஒரு மின்னலின் வெளிச்சம்தான். சில கணங்கள் நீங்கள் உடலிலிருந்து விட்டு, பிறகு மறைந்து விடுகிறீர்கள். யாருக்கும் தெரியாது எங்கிருந்து நீங்கள் வந்தீர்கள், எங்கே செல்கிறீர் கள் என்று. எந்தப் புலமைக்கும் அவர்கள் உரிமை கொண் டாட முடியாது. அவர்கள் சொல்கிறார்கள், "இவ்வளவுதான் நாங்கள் உணர்கிறோம் : சுங்ஹூ, எங்கிருந்து வந்தாயோ, அதே இடத்திற்கு நீ சென்று விட்டாய், சே, நாங்கள் இன்னும் இங்கேயே இருக்கிறோமே." அதனால் அவர்கள் சுங்ஹூ விற்காக வருந்தவில்லை, தங்களுக்காகவே வருந்தினார்கள், அவனது வட்டம் முழுமையடைந்து விட்டது, இவர்கள் நடுவில் தொங்கிக் கொண்டிருக்கிறார்களே என்பதற்காக.

யாராவது இறக்கும் போது, நீங்கள் இவ்வாறு உணர்ந்திருக்கிறீர்களா ? நீங்கள் இறந்தவருக்கா வருந்துகிறீர் களா ? அல்லது உங்களுக்காக வருந்துகிறீர்களா ? உண்மையாகவே, யாராவது இறக்கும் போது, நீங்கள்

அவனுக்காக அல்லது அவளுக்காகக் கவலைப்படுகிறீர்களா, அல்லது உங்களை நினைத்துக் கவலைப் படுகிறீர்களா ? ஒவ்வொருவரும் தமக்குத் தாமே தான் கவலைப்படுகிறார்கள், ஏனெனினில் ஒவ்வொரு சாவும், நீயும் இறக்கப் போகிறாய் என்ற செய்தியைக் கொண்டு வருகிறது. ஆனால், வாழ்க்கையின் சூட்சுமத்தைப் பார்த்து சிரிக்கும் மனிதனுக்குத் தெரியும் அது என்னவென்று. ஏனெனில், உண்மையான ஞானத்தினால் மட்டுமே, அறிவினால் மட்டுமே சிரிக்க முடியும்.

"நீ உண்மையிலேயே எங்கிருந்தாயோ
அங்கேயே சென்று விட்டாய்...
நாங்கள் இங்கிருக்கிறோம் – சே,
நாங்கள் இங்கிருக்கிறோம் !"

நாங்கள் இன்னமும் நடுவிலேயே இருக்கிறோம். எங்கள் பயணம் முழுமையடையாமலேயே இருக்கிறது. ஆனால் உள் வட்டம் சரியானதாகிவிட்டது. எனவே, அவர்கள் தங்களுக்காக வருத்தப்பட்டார்கள். அவர்கள் அழுதால், தங்களுக்காக அழுதார்கள். நண்பன் விட்டுச் சென்றதற்குப் பாடலைத் தவிர அவர்களிடம் ஒன்றுமில்லை. இதயத்தின் கொண்டாட்டத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அவர்கள் கவலைப்பட்டார்கள் எனில், அவர்களுக்காகக் கவலைப் பட்டார்கள்.

இது மிகவும் ஆழமாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்று. நீங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொண்டால், அதைப் பார்த்து உங்களால் சிரிக்க முடிந்தால், பிறகு சாவு தான் முழுமை, பிறகு அது முடிவல்ல. நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், சாவு வாழ்க்கையின் முடிவு அல்ல, அது முழுமை, உச்சம், அலை, மூலத்திற்கே திரும்பிச் செல்லும் உச்சம்.

அவர்கள் தங்களுக்காகவே வருத்தப்படுகிறார்கள். அதாவது அவர்கள் அலை நடுவில் தொங்குகிறதே என்பதற்

காக. அவர்கள் உச்சத்தை, முழுமையை இன்னும் அடைய வில்லை, அவர்கள் நண்பன் அவன் இதற்கு முன் எங்கிருந் தானோ அவ்விடத்தை அடைந்து விட்டான். அவன் வீட்டை அடைந்துவிட்டான். வாழ்க்கையைப் புரிந்து கொண்டவர் கள் தான். சாவையையும் புரிந்துக் கொள்ள முடியும், ஏனெனில் வாழ்வும், சாவும் இரண்டல்ல. சாவு உச்சம், மிக உயர்நிலை, கடைசி மலர்தல், வாழ்வின் வாசம்.

சாவு உங்களுக்கு அசிங்கமானதாய்த் தோன்றலாம். ஏனெனில் நீங்கள் ஒருபோதும் வாழ்வை அறிந்ததில்லை. சாவு உங்களுக்குப் பயத்தைஉண்டாக்குகிறது; ஏனெனில் நீங்கள் வாழ்வைக் கண்டு பயப்படுகிறீர்கள் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்: வாழ்வை நோக்கி உங்கள் செயல்பாடுகள் எப்படி இருக்குமோ, அதே போல்தான் சாவை நோக்கியும் நீங்கள் செயல்படுவீர்கள். நீங்கள சாவைப் பார்த்துப் பயப்படுகிறீர்கள் எனில், வாழ்வைப் பார்த்தும் பயப்படுகிறீர்கள் ; நீங்கள் வாழ்வை விரும்பினால், சாவையும் விரும்வீர்கள், ஏனெனில் சாவு என்பது மிகவும் உச்சநிலை தான், வேறொன்றுமில்லை, முழுமை. பாடல் அதன் முடிவை அடைகிறது, ஆறு கடலுக்குள் சேர்கிறது. முதலில் ஆறு கடலிலிருந்துதான் வந்தது. இப்பொழுது அந்த வட்டம் முழுமையடைந்து விட்டது, ஆறு முழுமைக்கே திரும்பி விட்டது.

பிறகு கன்ஃபூஷியஸின் சீடன்
திடீரென அவர்கள் முன்தோற்றி உரக்கக் கேட்டார் :
"இறந்தவர்களுக்குச் செய்யவேண்டிய
கடமைகள் பற்றிய புத்தகத்தில்
இந்தப் பாடலை எங்கே கண்டுபிடித்தீர்கள் என
நான் தெரிந்து கொள்ளலாமா ?
இந்த அற்பமான பாடல்
இறந்தவர்கள் முன்னிலையிலா ?"

கன்ஃபூஷியஸின் சீடனால் அவர்களைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவருக்கு, அவர்கள் மிகவும் அற்பமானவர்களாகத் தோன்றினார்கள், மரியாதை யற்றவர்களாக. என்ன வகையான பாடல் இது ? இதை எங்கிருந்து பெற்றீர்கள் ? இது அனுமதி பெறப்பட்டதல்ல, வேதத்தில் இருப்பதல்ல. இந்தப் பாடலை எங்கே கண்டுபிடித்தீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா ?

எல்லாம் புத்தகத்திலிருப்பதன் படிதான் செய்யப்பட வேண்டும், பைபிளில் உள்ளபடி, வேதத்தில் இருப்பதன்படி. ஆனால் வாழ்க்கைப் புத்தகத்தின் அடிப்படையில் இருக்காது. வாழ்க்கை எப்போதுமே புத்தகங்களுக்கு அப்பாற்பட்டது. அது மேம்பட்டது. வாழ்க்கை எப்போதுமே புத்தகங்களைத் தூக்கி எறிந்துவிட்டு, மேலே தொடர்ந்து சென்று கொண்டேயிருக்கிறது.

எங்கேயிருந்து இதைக் கண்டுபிடித்திருக்கிறீர்கள், இந்த அற்பமான பாடல், இறந்தவர்களின் முன்னிலையில் ! நீங்கள் மரியாதையுடையவர்களாயிருக்க வேண்டும். ஒருவர் இறந்து போயிருக்கிறார். ஒருவர் நம்மைவிட்டுச் சென்றிருக்கிறார், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ! இது அபசாரம்!

அந்த இரண்டு நண்பர்களும்
ஒருவரையொருவர்
பார்த்துக் கொண்டு சிரித்தனர் :

“பாவப்பட்ட மனிதன்
புதிதாக இயற்றப்பட்டுள்ள பாடல்
இவனுக்குத் தெரியவில்லை !”

அவனுக்குப் புதிய வேதம் தெரியவில்லை. புதிய மதத்தைப் பற்றி அவனுக்குத் தெரியவில்லை. இதுதான் இங்கே ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது - புதிய பாடல்.

சில தினங்களுக்கு முன்னால் இங்கே ஒருவர் இருந்தார், வரலாற்றுப் பேராசிரியர், அவர் என்னிடம் கேட்டார் ; "நீங்கள் எந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர் ?" நான் சொன்னேன் : "நான் எந்தப் பரம்பரையையும் சார்ந்தவனில்லை!"

அவர் அமெரிக்காவிலிருந்து, தியானத்தைப் பற்றிய ஒரு படம் எடுப்பதற்காக இங்கு வந்திருந்தார். கூட்டத்தைப் பற்றி நான் சொல்வதைப் பற்றி, இங்கே நடப்பதைப் பற்றி எல்லாம். நான் எந்தப் பரம்பரையையும் சார்ந்தவனில்லை என்பதைக் கேட்ட கணத்தில் அவர் மறைந்து விட்டார். பிறகு நான் வரலாற்றைச் சார்ந்தவனில்லை, அது தெரிந்தது தான்.

பாவப்பட்ட மனிதன், புதிதாக இயற்றப்பட்டுள்ள பாடல் இவனுக்குத் தெரியவில்லை !

இன்றைக்கு இது போதும்.

# வெற்றுப் படகு



## 4

## பயனற்றவை

ஹூவாய்தஸூ சுவாங்தஸூவிடம் சொல்கிறார் :
"உங்களின் அனைத்துப் போதனைகளும்
பயனற்ற வைகளையே
மையமாகக் கொண்டுள்ளன."
சுவாங்தஸூ பதிலுரைத்தார் :
"பயனற்றவைகளைக் கிரகிக்கும் தன்மை
உங்களிடம் இல்லையென்றால்
உங்களால் பயனுள்ளவைகளைப் பற்றிப்
பேசத் தொடங்க முடியாது.
எடுத்துக்காட்டாக, பூமி, அகலமானது, பெரியது;
ஆனால் மனிதன் பயன்படுத்தும் பரப்பு
ஒரு சில அங்குலங்கள்தான்.
அதன்மேல்தான் ஒரே சமயத்தில் அவனால் நிற்க முடியும்.

''இப்போது அவன்
உண்மையாகவே பயன்படுத்திய
இடங்களை
ஒருவேளை எடுத்து
வீட்டீர்கள் என்றால்
அவன் காலைச் சுற்றியிருக்கும்
இடங்கள் எல்லாமே
வளைகுடா பிளவைப் போலிருக்கும்
அவன் சூன்யத்தில் நின்று கொண்டிருப்பான்.
அவன் காலுக்கடியில் தவிர
வேறெங்கும் மண்ணே இருக்காது.
அவன் பயன்படுத்திக் கொண்டிருப்பதை
மட்டுமே எவ்வளவு காலம்
அவனால் பயன்படுத்த முடியும் ?''
ஹுவாய்தஸூ சொன்னார் :
''இது பயன் தருவதனைத்தையும்
நிறுத்தி விடும்.''
சுவாங்தஸூ முடித்தார் :
''இது எவையெல்லாம் பயனற்றவை
என்பதைக் காட்ட
முழுமையாகப் பயன்படுகிறது.''



# பயனற்றவை

வாழ்க்கை மாறும் தன்மையுடையது. அதனால் தான் அது தர்க்கரீதியானதாக இல்லை. தர்க்கம் எதிர்ப்பதம் என்றால் உண்மையான எதிர்ப் பதத்தைக் குறிக்கிறது, வாழ்க்கை எப்பொழுதும் தனக்குத்தானே எதிர்ப் பதத்தைக் குறிப்பிடுகிறது. வாழ்க்கையில் எதிர்ப்பதம், உண்மையான எதிர்ப்பதமாக இருக்காது, இரண்டும் இணைந்ததுதான். இதுவன்றி எதுவும் சாத்தியமல்ல.

எடுத்துக்காட்டாக வாழ்வு என்பது சாவால் தான் இருக்கிறது. சாவு இல்லையென்றால் அங்கு வாழ்வே இருக்கமுடியாது. சாவு முடிவல்ல, சாவு எதிரி அல்ல. அதற்கு எதிர் பதமாக, சாவால்தான் வாழ்வு சாத்தியமாகிறது. எனவே, சாவு எங்கோ ஒரு முடிவிலிருப்பதல்ல, அது இங்கே, இப்போதே ஒன்றித்திருக்கிறது. ஒவ்வொரு கணமும் அதன்

வாழ்வையும், சாவையும் ஒருங்கே பெற்றிருக்கிறது ; இல்லா விட்டால் வாழ்தல் என்பதே சாத்தியமில்லாமல் இருக்கும்.

அங்கே வெளிச்சமிருக்கிறது, அங்கே இருட்டும் இருக்கிறது. தர்க்கரீதியாகப் பார்த்தால் இரண்டும் எதிரானவை. தர்க்கம் சொல்லும் : இது வெளிச்சமாய் இருந்தால் இங்கே எந்த இருட்டும் இருக்க முடியாது ; இருட்டாயிருந்தால் இங்கே எந்த வெளிச்சமும் இருக்க முடியாது. ஆனால் வாழ்க்கை இதற்கு எதிர்ப்பதமாய்ச் சொல்லுகிறது. வாழ்க்கை சொல்லுகிறது : இங்கு இருள் இருந்தால் அது வெளிச்சத்தினால்தான்; வெளிச்சம் இருந்தால் அது இருட்டினால்தான். இன்னொன்றை அது ஓரங்களில் மறைந்திருப்பதால் ஒருவேளை நம்மால் பார்க்க முடியாமல் போகலாம்.

அங்கே அமைதியிருக்கிறது என்றால் அது சத்தத்தினால். சத்தம் இல்லவே இல்லை என்றால், நீங்கள் அமைதியாயிருக்க முடியுமா ? எப்படி உங்களால் அமைதியாயிருக்க முடியும் ? எதிரான ஒன்று பின்னணியாகத் தேவைப்படுகிறது. தர்க்கரீதியாயிருப்பவர்கள் எப்போதுமே தவறான வழியில்தான் செல்கிறார்கள். ஏனெனில் அவர்கள் வாழ்க்கை மறைக்கப்பட்ட பகுதியாகவேதான் இருக்கிறது. ஒளியைப் பற்றி சிந்திக்கும் போது, இருட்டைப் பற்றிக் கவலைப்படத் தொடங்குகிறார்கள் ; வாழ்க்கையைப் பற்றி நினைக்கும் போது, சாவை எதிர்த்து சண்டை போடத் தொடங்குகிறார்கள்.

அதனால்தான் கடவுள் இருள் ஒளி இரண்டும் சேர்ந்தவர்தான் என்று சொல்லும் ஒரு ஐதிகம் உலகில் இன்று வரை இல்லை. ஒரு ஐதிகம் கடவுள் ஒளியானவர், இருள் அற்றவர் என்று சொல்கிறது. கடவுள் ஒளிமயமானவர் என்று நம்பும் மக்கள் அவர் இருளே அற்றவர் என்று நினைப்பார்கள். கடவுள் இருளானவர் என்று சொல்லும் ஒரு ஐதிகமும் இருக்கிறது - அவர்களைப் பொறுத்தவரை கடவுளுக்கு

ஒளியே இல்லை. இரண்டுமே தவறுதான், ஏனெனில் இரண்டுமே தர்க்கரீதியாய் இருக்கிறது, அவர்கள் எதிரானதை மறுக்கிறார்கள். வாழ்க்கை மிகப் பரந்தது. அது மறுக்கப் படுவதல்ல, அணைத்துக் கொள்ளப்பட வேண்டியது.

ஒருமுறை, சிறந்த கவிஞரான வால்ட்விட்மனிடம் ஒருவர் சொன்னார்: "விட்மன், நீ உன்னையே முரண் படுத்தும் வகையில் பேசுகிறாயே! ஒருநாள் ஒன்று சொல்கிறாய், இன்னொரு நாள் அதற்கு முற்றிலும் எதிர்ப்பதமாக ஒன்று சொல்கிறாய்."

வால்ட்விட்மன் சிரித்து விட்டுக் கூறினார் : "நான் விஸ்தாரமானவன். எனக்குள் எல்லா முரண்பாடுகளும் இருக்கின்றன."

சிறிய மனங்கள் மட்டுமே முரணற்றிருக்கும். மனம் குறுகக் குறுக முரண்பாடற்றத் தன்மை அதிகரிக்கும். மனம் விசலாமாய் இருக்கும் போது, அனைத்துமே இடம் பெறுகின்றன ; அங்கு வெளிச்சம் இருக்கிறது, இருளும் அங்கே இருக்கிறது, கடவுள் இருக்கிறார், பேயும் கூடவே இருக்கிறது, அவரது முழு மகிமையில்.

எதிர்ப்பதங்களின் வழியே செல்லும் வாழ்க்கையின் இந்த சூட்சுமமான பாதையை நீங்கள் புரிந்து கொண்டீர்கள் எனில், இந்த மாறும் தன்மை, எதிர் துருவத்தின் உதவியை, அதன் சமப்படுத்தும் தன்மையை, அது கொடுக்கும் நாதத்தை, உருவாக்கும் பின்னணியை, உணர்ந்தீர்கள் என்றால் பிறகு நீங்கள் சுவாங்தஸூவைப் புரிந்து கொள்ள முடியும். ஏனெனில் 'தாவோயிஸத்தின்' முழுக் கோணமும் முரண்பாடுகளின் இணைதலை அடிப்படையாகக் கொண்டுதான் அமைந்துள்ளது.

அவர்கள் 'யிங், யாங்' என்ற இரண்டு வார்த்தைகளைப் பயன்படுத்துவார்கள். அவை எதிர்பதங்கள், ஆண்-பெண் என்பதைப் போல. முற்றிலும் ஆண்களே உள்ள, அல்லது

முழுக்க முழுக்க பெண்கள் மட்டுமே உள்ள ஒரு உலகத்தை யோசித்துப் பாருங்கள். அது இறந்து போனதுபோல் இருக்கும். அது பிறந்த கணமே இறந்துவிடும். அதில் ஒரு உயிர்ப்புத் தன்மையே இருக்க முடியாது. அது பெண்கள் உலகமாக இருந்தால், பெண்கள், பெண்கள், பெண்கள். ஆண்களே இல்லை - பெண்கள் தற்கொலை செய்து கொள் வார்கள். எதிரான ஒன்று தேவைப்படுகிறது. ஏனெனில் அது கவரக் கூடியதாயிருக்கிறது. எதிரானது காந்தம் போலாகிறது, அது உங்களை இழுக்கிறது ; உங்களை உங்களிலிருந்து வெளியே இழுத்துப் போடுகிறது. எதிர் துருவம் உங்கள் சிறையை உடைக்கிறது, உங்களை விசாலமானவர்களாக்கு கிறது. எப்போதெல்லாம் எதிர்ப்பதம் மறுக்கப்படுகிறதோ, அப்போது நிச்சயமாய் துன்பமும், தொந்தரவுமிருக்கும். இதைத்தான் நாம் செய்து கொண்டிருக்கிறோம், உலகத்தில் பல துன்பங்களை.

ஆண்கள், ஆண்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு உலகத்தை உருவாக்க முயற்சி செய்தார்கள், அதனால்தான் பல துன்பங்கள்- பெண் மறுக்கப்பட்டாள், தூக்கியெறியப் பட்டாள். கடந்த நூற்றாண்டுகளிலெல்லாம் பெண்களை எங்கும் பார்க்கவே முடியாது. வீட்டின் அறைகளுக்குள் மறைத்து வைக்கப்பட்டிருப்பாள், வரவேற்பறைக்குள் அனுமதிக்கபடவே மாட்டாள். தெருக்களில் அவளைப் பார்க்கவே முடியாது, கடைகளில் சந்திக்கவே முடியாது. அவள் வாழ்க்கையின் ஒரு பகுதியாகவே இல்லை. உலகம் அசிங்கமாகச் சென்று கொண்டிருந்தது, ஏனெனில் எப்படி உங்களால் எதிர்ப் பதத்தை மறுக்கமுடியும் ? உலகம் ஒரு பகுதியை மட்டுமே கொண்டிருந்தது, சமமான மற்றொன்று இழக்கப்பட்டிருந்தது. உலகம் பைத்தியக்காரத்தனமாய் சென்று கொண்டிருந்தது.

பெண்கள் வாழ்க்கைக்குள் செயல்பட இன்னும் கூட அனுமதிக்கப்படவில்லை ; உண்மையிலேயே இன்னமும் கூட

அவள் ஒரு பகுதியாக, முக்கியமான பங்காக அங்கீகரிக்கப்பட வில்லை. ஆண்கள் ஆண்கள் - சார்ந்த - குழுக்களுடனேயே பழகுகிறார்கள் - ஆண்கள் மட்டுமே சந்திக்கும் ஆண்கள் கிளப், சந்தை, அரசியல், அறிவியல் கூட்டங்கள் - அனைத்து இடங்களுமே ஒரு சாராருடையதுதான். ஆண்கள் ஆதிக்கம் செய்கிறார்கள், அதனால்தான் ஏகப்பட்டத் துன்பங்கள். எப் போது எதிர்த்துருவங்களில் ஒன்று ஆதிக்கம் செலுத்து கிறதோ, அப்போது அங்கு துன்பம் இருக்கும், ஏனெனில் அடுத்தவர் வேதனையாக உணர்ந்து, அதனால் பழிவாங்கு வார்கள்.

எனவே, ஒவ்வொரு பெண்ணும் வீட்டைப் பழிவாங் கும் இடமாக வைத்துக் கொள்கிறாள். ஆம், அவளால் வெளியே சென்று உலகத்திலுள்ள மொத்த மனித இனத்தை யுமே பழிவாங்கிவிட முடியாது, ஆண்களை எல்லாம் பழி வாங்க முடியாது. அவள் தன் கணவனைப் பழிவாங்கத் தொடங்குகிறாள். அங்கே தொடர்ந்து கலவரம் நடந்து கொண்டேதான் இருக்கிறது.

முல்லா நஸ்ரூதின் ஒருமுறை தன் மகனைப் பார்த்துச் சொன்னார் : "இது உன் வேலை அல்ல, இந்த மாதிரியான கேள்விகளையெல்லாம் என்னிடம் கேட்காதே. உன் அம்மாவை நான் எப்படி சந்தித்தேன் என்று என்னைக்கேட்க நீ யார் ? ஆனால் நான் ஒன்று சொல்வேன். விசிலடிப் பதிலிருந்து அவள் என்னைக் குணப்படுத்தினாள்."

பிறகு அவர் சொன்னார் : "இது கதையின் கருத்து. நீ என்னைப் போல் மகிழ்ச்சியற்றவனாக இருக்கக் கூடாது என விரும்பினால், ஒருபோதும் பெண்ணைப் பார்த்து விசிலடித்து விடாதே."

ஏன் மனைவி என்பவள் எப்போதுமே முரண்பட்ட வளாய், எதிரியாய் இருக்கிறாள் ? அது தனிப்பட்ட

அவளல்ல, அது அவளின் தனிப்பட்ட விஷயமல்ல. அது பெண்ணின், பெண்மையின், மறுக்கப்பட்ட எதிர்துருவத்தின் பழிவாங்கல். வீட்டிலிருக்கும் இந்த ஆண் இவள் கணவன், உலகத்திலுள்ள அனைத்து ஆண்களின், ஆண்வர்கத்தின் பிரதிநிதியாகிறான். ஆண் ஆதிக்க உலகத்தின் பிதிநிதியான அவனுடன் அவள் சண்டையிட்டுக் கொண்டேயிருக்கிறாள்.

குடும்ப வாழ்க்கை மிகவும் துன்பம் நிறைந்த தாயிருக்கிறது. ஏனெனில், நாம் சுவாங்தஸூ சொல்வதைக் கேட்டிருக்கவில்லை. பல போர்கள் நடந்து கொண்டிருக் கின்றன. ஏனெனில், எதிர்ப்பதம் கலந்து விட வேண்டும் என்பதை நாம் கேட்டிருக்கவில்லை. அதைத் தவிர்ப்பதன் மூலம் நீங்கள் உங்களுக்குத் துன்பத்தை வருவித்துக் கொள் கிறீர்கள், எல்லாப் பாதைகளிலும். எல்லா நிலைகளிலும் எல்லாக் கோணங்களிலும், அதே தான்.

சுவாங்தஸூ சொல்கிறார் : நீங்கள் பயனற்றவைகளை மறுதலித்தால், பிறகு உலகத்தில் எந்தப் பயனுமிருக்காது. நீங்கள் பயனற்றவைகளை மறுத்தால், விளையாட்டை, வேடிக்கையை, அங்கு ஒரு வேலையும், ஒரு கடமையும் இருக்காது. இது மிகவும் கடினம் தான், ஏனெனில் நம் முழுமை பயனுள்ளவைகளை மட்டுமே வலியுறுத்துகிறது.

யாராவது உங்களிடம் ஒரு வீடு எவற்றைக் கொண்டு அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கேட்டால், நீங்கள் 'சுவர்கள்' என்று சொல்வீர்கள். ஆனால் சுவாங்தஸூ சொல்வார், அவரது குருவான லாவோதஸூவைப்போல், வீடு சுவர்களைக் கொண்டிருக்கக் கூடாது, ஆனால் ஜன்னல்களை யும், கதவுகளையும் பெற்றிருக்க வேண்டும். அவர்கள் அடுத்த பகுதியைத்தான் வலியுறுத்துகிறார்கள். அவர்கள் சொல் கிறார்கள், சுவர்கள் பயனுள்ளவைதான். ஆனால் அவற்றின் பயன் அவற்றின் பின்னாலிருக்கும் பயனற்றவைகளைச் சார்ந்துதான் இருக்கிறது.

அறை என்பது இடம், சுவர்கள் அல்ல. ஆம். இடம் இலவசமானதுதான், ஆனால் சுவர்கள் வாங்கப்பட வேண்டும். நீங்கள் வீடு வாங்கும் போது, எதை வாங்கு கிறீர்கள்? சுவர்கள், ஸ்தூலப் பொருட்கள் இவைதான் கண்ணுக்குத் தெரிகின்றன. ஆனால் அந்தப் பொருட்களில் உங்களால் வாழ முடியுமா ? சுவர்களில் உங்களால் வாழ முடியுமா ? நீங்கள் அறைக்குள் தான் வசிக்க முடியும், வெற்று இடத்தில். நீங்கள் படகை வாங்கிவிட்டீர்கள், ஆனால் அதன் வெறுமைக்குள், வெற்றிடத்திற்குள் தான் நீங்கள் வாழ வேண்டும்.

எனவே உண்மையாக, வீடு என்றால் என்ன ? சுவர்களால் சூழப்பட்டிருக்கும் வெற்றிடம். கதவு என்றால் என்ன ? அது ஒன்றுமில்லை. 'கதவு' என்பதற்குப் பொருள் ஒன்றுமில்லை, சுவர் இல்லை, வெறுமை. ஆனால் கதவே இல்லாத ஒரு வீட்டிற்குள் உங்களால் நுழைய முடியாது ; ஜன்னல் இல்லாவிட்டால் சூரிய வெளிச்சம் உள்ளே வராது, காற்று வராது. நீங்கள் இறந்து போய்விடுவீர்கள். உங்கள் வீடே உங்களுக்கு சமாதியாகிவிடும்.

சுவாங்தஸூ சொல்கிறார் : நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், வீடு இரண்டு விஷயங்களை உள்ளடக்கி யுள்ளது. சுவர்கள், பொருட்கள் - வாங்கக்கூடியவை, உபயோகப் படுத்தப்படக் கூடியவை - சுவர்களால் சூழப் பட்டுள்ள வெற்றிடம், பயன்படுத்தப்பட முடியாதவை - வாங்கிவிட முடியாதவை விற்கப்படமுடியாதவை, எவ்வித பொருளாதார ரீதியான மதிப்புமில்லாதவை.

எப்படி உங்களால் வெறுமையை விற்கமுடியும் ? ஆனால் நீங்கள் வெற்றிடத்திற்குள் தான் வாழ்ந்தாக வேண்டும் - மனிதன் சுவர்களுக்குள் மட்டும் வாழ்ந்தான் எனில், அவனுக்குப் பைத்தியம் பிடித்து விடும். அவ்வாறு செய்வது சாத்தியமில்லை - ஆனால் நாம் சாத்தியம்

இல்லாதவற்றை செய்ய முயற்சிக்கிறோம். வாழ்க்கையில் நாம் பயன்படுத்தப்படுபவற்றையே தேர்ந்தெடுக்கிறோம்.

எடுத்துக்காட்டாக, ஒரு குழந்தை விளையாடுகிற தென்றால் நீங்கள் சொல்கிறீர்கள் : "நிறுத்து ! என்ன செய்து கொண்டிருக்கிறாய் ? இது பயனற்றது. ஏதாவது பயன்படும் வகையில் செய். கற்றுக்கொள், படி, குறைந்தபட்சம் வீட்டுப்பாடமாவது செய், ஏதாவது பயனுள்ளதை. சுற்றிக் கொண்டிருக்காதே, சோம்பேறியாய்த் திரியாதே." நீங்கள் இதையே தொடர்ந்து குழந்தையிடம் வலியுறுத்துகிறீர்கள் என்றால், கொஞ்சம் கொஞ்சமாகப் பயனற்றவைகளை நீங்கள் கொன்று விடுவீர்கள். பிறகு உங்கள் குழந்தை பயனுள்ளதாக மட்டுமே இருக்கும். ஒரு மனிதன் பயனுள்ளவனாக மட்டுமே இருக்கும் போது, அவன் இறந்து போனவாகிறான். நீங்கள் அவனைப் பயன்படுத்திக் கொள்ளமுடியும், இப்பொழுது அவன் ஒரு இயந்திரப் பொருளாக இருக்கிறான். ஒரு வழி, அவனிடமே முடிந்து விடுகிறது.

நீங்கள் ஏதாவது பயனற்றதைச் செய்யும் போதுதான் நீங்களாகவே இருக்கிறீர்கள். வரைதல், விற்பதற்கல்ல, ரசிப்பதற்காக ; தோட்ட வேலை, அனுபவிப்பதற்காக ; கடற்கரையில் படுத்திருத்தல், எதவும் செய்யாமல் அனுபவிப்பதற்காக; பயனற்றவை, வேடிக்கை ; நண்பனின் பக்கத்தில் அமைதியாய் உட்கார்ந்திருத்தல்.

இந்தக் கணங்களில் எவ்வளவோ அதிகமாய் செய்ய முடியும். கடைகளுக்குச் செல்ல முடியும், சந்தைக்குச் செல்லலாம், உங்களால் ஏதாவது சம்பாதிக்க முடியும், நேரத்தைப் பணமாக மாற்றலாம். நீங்கள் அதிகமான வங்கிக் கணக்கை பெறலாம், ஏனெனில் இந்தக் கணங்கள் திரும்ப வராது. முட்டாள்கள் நேரம் என்பது பணம் என்பார்கள். அவர்களுக்கு நேரத்தின் ஒரே ஒரு பயன் மட்டும்தான் தெரியும். அதை எப்படி பணமாக, அதிகப் பணமாக, இன்னும்

அதிகப் பணமாக மாற்ற வேண்டும் என்பது. கடைசியில் நீங்கள் அதிகமான வங்கிச் சேமிப்புடன் இறந்து போவீர்கள், ஆனால் உள்ளுக்குள் முற்றிலும் ஏழையாக. ஏனெனில் உள்ளுக்குள் செல்வத்தன்மை, நீங்கள் பயனற்றதை ரசிக்கும் போதுதான் உருவாகிறது.

தியானம் என்றால் என்ன ? மக்கள் என்னிடம் வந்து கேட்பார்கள் : "அதன் பயன் என்ன ? அதன்மூலம் என்ன பெற முடியும் ? அதன் நன்மை என்ன ?"

தியானம்... நீங்கள் அதன் பயனைப் பற்றிக் கேட்கிறீர்கள்? உங்களால் அதைப் புரிந்து கொள்ளமுடியாது. ஏனெனில் தியானம் பயனற்றது. நான் பயனற்றது என்று சொல்லும் கணத்தில் நீங்கள் அசௌகர்யமாய் உணர்வீர்கள். ஏனெனில் உங்கள் பயனின் அடிப்படையிலேதான் இருக்கிறது, வியாபார ரீதியில்தான் இருக்கிறது, நீங்கள் முடிவைத்தான் கேட்கிறீர்கள். ஏதாவது ஒன்று அதற்குள்ளேயே மகிழ்ச்சியைக் கொண்டிருக்கும் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ள மாட்டீர்கள்.

பயனற்றது என்றால், அதை நீங்கள் ரசிக்கிறீர்கள் என்று பொருள். ஆனால் அதிலிருந்து எந்த சன்மானத்தையும் நீங்கள் எதிர்பார்க்கக்கூடாது ; அதில் நீங்கள் ஆழமாகக் கலந்து விட்டால் அது உங்களுக்குப் பேரானந்தத்தைக் கொடுக்கும். ஆனால், அதற்குள் நீங்கள் ஆழமாய்க் கலந்திருக்கும் போது, அந்தப் பேரானந்தத்தை உங்களால் திரட்டிப் பார்க்க முடியும், அதிலிருந்து எதையும் உங்களால் சேமிக்க முடியாது.

இந்த உலகில் இரண்டு வகையான மக்கள் வாழ்கிறார்கள் : பயன்படுவர்கள் அவர்கள் விஞ்ஞானிகளாக, பொறியியலாளர்களாக, மருத்துவர்களாக ஆகிறார்கள் ; மற்றொரு வகை- கவிஞர்கள், நாடோடி, துறவிகள் - பயனற்றவர்கள், பயன்படும் வகையில் எதையும் செய்வதில்லை.

ஆனால் அவர்கள் தான் சரிக்கட்டுகிறார்கள், உலகிற்கு கருணையைத் தருகிறார்கள், ஒரு வசீகரத்தை. முழுக்க முழுக்க விஞ்ஞானிகளை மட்டுமே கொண்டிருக்கும், ஒரே ஒரு கவிஞன் கூட இல்லாமலிருக்கும் உலகை யோசித்துப் பாருங்கள் - அது முற்றிலும் அசிங்கமாய் இருக்கும், வாழ்வதற்குத் தகுதியே அற்றதாய். அனைவருமே கடைகளிலோ, அல்லது அலுவலகத்திலோ இருந்து கொண்டு, சாலைகளில் சுற்றித் திரிய ஒருவர்கூட இல்லாமலிருக்கும உலகை யோசித்துப் பாருங்கள். அது நரகமாயிருக்கும். அவ்வாறு சுற்றித் திரிவதுதான் அழகைத் தருகிறது.

ஒருமுறை தெருவில் அலையும் இருவர் கைது செய்யப் பட்டனர். மாஜிஸ்திரெட்களும், போலீசும் பயன்படுவர்களின் பாதுகாவலர்கள். அவர்கள் பாதுகாக்கிறார்கள், ஏனெனில் இந்தப் பயனற்றப் பகுதி ஆபத்தானது - அது பரவிவிட முடியும் ! அதனால் எங்கேயும் சுற்றித்திரிபவர்களும், பயனற்றவர்களும் அனுமதிக்கப்படுவதில்லை. நீங்கள் தெருவில் சும்மா நின்று கொண்டிருந்தால், யாராவது கேட்பார்கள் என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று, நீங்கள் 'ஒன்றுமில்லை' என்பீர்கள். உடனடியாக காவல்துறையினர் உங்களை நீதிமன்றத்திற்கு அழைத்துச் சென்று விடுவார்கள். ஏனெனில் 'ஒன்றுமில்லாத் தன்மை' அனுமதிக்கப்படுவதில்லை ! நீங்கள் ஏதாவது செய்தாக வேண்டும். ஏன் அங்கே நின்று கொண்டிருக்கிறாய் ? நீங்கள் சொல்வீர்கள், 'நான் இங்கே நின்று கொண்டு, அதை ரசித்து அனுபவிக்கிறேன்.' நீ அபாயமான மனிதன், தீவிரவாதி. நீங்கள் கைது செய்யப்படலாம்.

அதனால் அந்த இருவரும் கைது செய்யப்பட்டனர். நீதிபதி முதலாமவனிடம் கேட்டார் : "நீ எங்கே வசிக்கிறாய்?"

அந்த மனிதன் சொன்னான் : "இந்த உலகம் முழுதுமே என்னுடைய வீடுதான், வானம்தான் என் கூரை ; நான் எங்கு

வேண்டுமானாலும் செல்வேன், எந்தத் தடையுமில்லை. நான் சுதந்தரமான மனிதன்."

பிறகு அவர் அடுத்தவனிடம் கேட்டார் : "நீ எங்கே வசிக்கிறாய் ?" அவன் சொன்னான் : "இவனுக்குப் பக்கத்து வீட்டில்."

இத்தகைய மக்கள் உலகிற்கு அழகைக் கொடுக்கிறார் கள். இவர்கள் வாசனைத் திரவியம் போன்றவர்கள். புத்தர் ஒரு நாடோடிதான், மகாவீரரும் சுற்றித் திரிந்தவர்தான். இந்த மனிதன், இந்த நாடோடி சொன்னார் : தனது கூரை வானம் தான் என்று. 'திகம்பரர்' என்ற வார்த்தையின் பொருள் இதுதான். மகாவீரர், சமணர்களின் கடைசித் தீர்த்தங்கரர் 'திகம்பரர்' எனப்படுவார். 'திகம்பரர்' என்பதன் பொருள் நிர்வாணமானவர், வானம்தான் உடை, வேறொன்றுமில்லை. வானம் தான் கூரை, வீடு.

எப்போது உலகம் மிகவும் பயனுள்ளதாகிறதோ, அப்போது, நீங்கள் பல பொருட்களை உருவாக்கலாம். பலவற்றைச் சொந்தமாக்கிக் கொள்ளலாம், பொருட்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளலாம். ஆனால் 'உள்'ளை இழந்து விடுவீர்கள். ஏனெனில், வெளியே எந்தப் பரப்பரப்பும் இல்லாத போதுதான் 'உள்' மலர முடியும். நீங்கள் எங்கேயும் செல்லாதபோது, ஓய்வாக இருக்கும் போது. அப்போதுதான் 'உள்' மலரும்.

மதம் என்பது முழுக்க முழுக்கப் பயனற்றது. கோயிலால் என்ன பயன் ? மசூதியால் என்ன பயன் ? ஆலயத்தினால் என்ன பயன் ? ரஷ்யாவில் அனைத்துக் கோயில்களையும், மசூதிகளையும், ஆலயங்களையும், பள்ளிக்கூடங்களாக மருத்துவமனைகளாக மாற்றிவிட்டனர், ஏதோ ஒருவகையில் பயனுள்ளவைகளாக. கம்யூனிஸ்ட்டுகள் பயன்களை ஆதரிப்பவர்கள். அதனால் தான் மதத்தை எதிர்க்கிறார்கள் அவர்கள் அப்படித்தான் இருந்தாக

வேண்டும், ஏனெனில் மதம், பயனற்றவற்றிற்கு வழிகாட்டு கிறது, எந்த வகையிலும் பயன்படுத்திக் கொள்ள முடியாத வற்றிற்கு, அதனால் எந்தப் பொருளுமடைய முடியாத வற்றிற்கு. உங்களால் அதைப் பெறமுடியும், அதில் இன்பமடைய முடியும், பேரின்பம் அடைந்து தன்னை மறக்க முடியும், ஆனால் அதைப் பிடித்து வைத்துக் கையாள முடியாது. நீங்கள் எதுவும் செய்யாமலிருக்கும்போது, இது நிகழ்கிறது. உயர்ந்தவையெல்லாம் நீங்கள் எதுவும் செய்யாம லிருக்கும் போதுதான் நிகழ்கின்றன. அற்பமானவைதான் நீங்கள் ஏதாவது செய்யும் போது நிகழ்கின்றன.

சோரன் கியார்கி கார்டு, டேனிஷ் தத்துவஞானி. மிகவும் ஊடுருவக் கூடிய வகையில் ஒன்று எழுதினார். அவர் சொல்கிறார் : ''நான் விளையாடத் தொடங்கும் போது நான் ஆலயத்திற்குச் சென்று கடவுளிடம் பேச வேண்டும்...'' அதைத்தான் உலகம் முழுவதிலும் உள்ள கிறிஸ்தவர்கள் செய்கிறார்கள். கடவுள் ஏதோ இறந்து விட்டதைப் போல அவரிடம் மிக உரத்த குரலில் பேசுகிறார்கள். அவர் ஏதோ ஒரு முட்டாள்தனமான வஸ்து என்பதைப் போல், அவருக்கு எது செய்யலாம், எது செய்யக் கூடாது என்று அறிவுரை கூறுகிறார்கள். அல்லது அவர் ஏதோ முட்டாள்தனமான அரசர் என எண்ணி அவரைத் தூண்டிவிடுகிறார்கள். லஞ்சம் கொடுக்கிறார்கள். அவர்கள் மனதிற்குள்ளிருக்கும் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள. ஆனால் கியார்கி கார்டு சொன்னார் : ''நான் பேசத் தொடங்கினேன். பிறகு உடனே அது பயனற்றது என உணர்ந்து கொண்டேன். எப்படி கடவுள் முன்னால் பேச முடியும் ? ஒருவன் அமைதியாக இருக்க வேண்டும். சொல்வதற்கு அங்கே என்ன இருக்கிறது? கடவுள் இன்னும் அதிகமாய் தெரிந்து கொள்வதற்கு உதவும் வகையில் நான் என்ன சொல்ல முடியும்? அவர் சர்வ வல்லமை யுடையவர், எல்லாம் அறிந்தவர், சர்வக்ஞானவர், அதனால் நான் அவரிடம் சொல்வதில் என்ன நோக்கம் இருக்கிறது?''

மேலும் கியார்கிகார்டு சொல்கிறார் : "நான் பல வருடங்களாக அவரிடம் பேசி விட்டேன், பிறகு திடீரென்று அது முட்டாள் தனம் என்று உணர்ந்தேன். அதனால் நான் பேசுவதை நிறுத்திவிட்டேன், நான் அமைதியாகிவிட்டேன். பிறகு பல வருடங்கள் கழித்து அந்த அமைதியினாலும் பயனில்லை என்பதை உணர்ந்தேன். பிறகு மூன்றாவது முயற்சி எடுக்கப்பட்டது. அது கவனித்தல். முதலில் நான் பேசினேன்; பிறகு பேசாமலிருந்தேன். அதன் பிறகு கவனித்தேன்."

கவனித்தல் என்பது அமைதியாய் இருப்பதிலிருந்து வேறுபட்டது. ஏனெனில் வெறுமனே அமைதியாயிருத்தல் என்பது எதிர் மறையானது. கவனித்தல் நேர் மறையான விஷயம். அமைதியாய் மட்டுமே இருத்தல் என்பது செயலற்றிருத்தல். கவனித்தல் என்பது விழிப்புடன் கூடிய செயலற்றதன்மை, ஏதோ ஒன்றிற்காகக் காத்திருத்தல், எதுமே சொல்லாமல் ஆனால் முழு உயிர்ப்புடன் உயிர்த் தன்மையுடனிருத்தல். அது தீவிரத் தன்மையை சக்தியைக் கொண்டுள்ளது. மேலும் கியார்கிகார்டு சொல்கிறார்: "இந்த கவனித்தல் நிகழ்ந்த போதுதான் முதன் முறையாக பிரார்த்தனை என்பதே நிகழ்ந்தது."

ஆனால் கவனித்தல் என்பது முழுக்க முழுக்கப் பயனற்றதைப் போல் தோன்றும். அதிலும் தெரியாத ஒன்றைக் கவனிப்பது, அவர் எங்கே என்று உங்களுக்குத் தெரியாது. அமைதி பயனற்றது, பேசுவதே பயனுள்ளது எனத் தோன்றும். பேசுவதன் மூலம் ஏதாவது செய்யப்படும், அதன் மூலம் இந்த உலகில் நீங்கள் பலவற்றைச் செய்யலாம். அதனால் நீங்கள் மதநம்பிக்கை யுடையவரானால், நீங்கள் ஏதாவது செய்தும் ஆக வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறீர்கள்.

ஆனால் சுவாங்தஸூ சொல்கிறார் : அனைத்துச் செயல்களின் உபயோகமின்மையை நீங்கள் புரிந்து கொள்ளும் போதுதான் அங்கு சமயமே தொடங்குகிறது.

நீங்கள் எதிர் துருவமான எதுவும் செய்யாமலிருத்தலுக்குச் செல்கிறீர்கள். செயலற்றிருத்தல் சாத்விகத்திற்கு பயனற்ற தாவதற்கு.

இப்போது நாம் சூத்திரத்திற்குள் நுழையலாம், பயனற்றவை.

ஹுவாய்தஸூ சுவாங்தஸூவிடம் சொல்கிறார் :
"உங்களின் அனைத்துப் போதனைகளும்
பயனற்றவைகளையே மையமாகக் கொண்டுள்ள."

இந்தப் போதனைகள் அதிகம் பயனற்றவையாகத் தோன்றலாம். ஆனால் சுவாங்தஸூவும் அவரது குருவும் எப்போதும் பயனற்றவைகளைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பர். பயனற்ற மனிதர்களைப் பாராட்டக் கூடச் செய்வார்கள்.

சுவாங்தஸூ ஒரு மனிதனைப் பற்றிப் பேசுகிறார். அவன் ஒரு கூனன். நகரத்திலுள்ள அனைத்து இளைஞர்களும் இராணுவத்தில் கட்டாயமாகத் திணிக்கப்பட்டனர். ஏனெனில் அவர்கள் பயனுள்ளவர்கள். ஒரே ஒருவன் மட்டும், அந்தக் கூனன் மட்டும் விட்டு விடப்பட்டான். ஏனெனில் அவன் பயனற்றவன். சுவாங்தஸூ சொல்கிறார் : 'அந்தக் கூனனைப் போலிருங்கள், பயனற்றவர்களாகி. அப்போது தான் போரில் கொலை செய்யப்பட மாட்டீர்கள்.'

அவர்கள் பயனற்றவர்களைப் புகழ்ந்து கொண்டே இருக்கிறார்கள். ஏனெனில் பயனுள்ளவர்கள் எப்போதும் துன்பத்தில் மாட்டிக் கொண்டிருப்பார்கள் என்கிறார்கள். உலகம் உங்களைப் பயன்படுத்திக் கொள்ளும். ஒவ்வொரு வரும் உங்களைப் பயன்படுத்திக் கொள்ளத் தயாராய் இருப்பார்கள். உங்களைக் கையாள , உங்களைக் கட்டுக்குள் வைத்துக் கொள்ள. நீங்கள் பயனற்றவராக இருந்தால் யாரும் உங்களைக் கவனிக்கக் கூட மாட்டார்கள். மக்கள் உங்களை மறந்து விடுவார்கள். உங்களை அமைதியில் விட்டு

விடுவார்கள். உங்களைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். உங்களைப் பற்றி நீங்கள் இருக்கிறீர்கள் என்ற விழிப்புணர்வு கூட அவர்களுக்கு இருக்காது.

இது எனக்கு நடந்தது. நான் பயனற்ற மனிதன். என்னுடைய சிறிய வயது நாட்களில் எல்லாம் நான் என் அம்மாவுக்குப் பக்கத்தில் சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பேன். அவள் தன்னைச் சுற்றிப் பார்த்துவிட்டு சொல்வாள் : "நான் சந்தைக்குச் சென்று சில காய்கறிகள் வாங்கிவர யாரையாவது அனுப்ப வேண்டும் என்று பார்க்கிறேன். யாருமே காணவில்லையே!" நான் அவள் பக்கத்தில்தான் உட்கார்ந்திருப்பேன்! அம்மா சொல்வாள் : "இங்கு யாரையுமே காணவில்லையே!" நான் எனக்குள் சிரித்துக் கொள்வேன். அவளால் என்னைச் சந்தைக்கு அனுப்ப முடியாது. நான் பயனற்றவன். அதனால் நான் அங்கிருப்பதைப் பற்றிய உணர்வே அவளுக்கில்லை.

ஒருமுறை எங்களுடன் தங்குவதற்காக என் அத்தை வந்திருந்தாள். அவளுக்கு என் உபயோகமின்மை தெரியவில்லை. என் அம்மா சொல்லிக் கொண்டிருந்தாள் : "சந்தைக்குச் செல்ல யாருமேயில்லை. குழந்தைகள் எல்லாம் வெளியே சென்று விட்டார்கள். வேலைக்காரனுக்கு உடல் நலம் சரியில்லை. நான் என்ன செய்ய முடியும்? யாரையாவது அனுப்பி ஆக வேண்டும்."

அதனால் என் அத்தை சொன்னாள் : "ராஜாவை ஏன் அனுப்பக் கூடாது? எதுவும் செய்யாமல் இங்கேதானே உட்கார்ந்திருக்கிறான்?"

அதனால் நான் அனுப்பப்பட்டேன். நான் அங்கிருந்த காய்கறி விற்பவனைப் பார்த்துக் கேட்டேன் : "உங்களிடமுள்ள சிறந்த காய்கறிகளைக் கொடுங்கள். நல்ல வாழைப் பழங்கள். நல்ல மாம்பழங்கள்." அவன் என்னைப் பார்த்தான். நான் பேசும் விதத்தைப் பார்த்து நான் முட்டாள்

என்று நினைத்திருக்க வேண்டும். ஏனெனில் யாருமே மிக நல்லதாகக் கொடுங்கள் என்று கேட்க மாட்டார்கள். எனவே அவன் இரண்டு மடங்கு பணத்தை வாங்கிக் கொண்டு அவனிடமிருந்த அனைத்து அழுகிய பொருட்களையும் கொடுத்துவிட்டான். நான் மிகவும் மகிழ்ச்சியாக வந்தேன்.

என் அம்மா அவற்றை எல்லாம் தூக்கி எறிந்து விட்டு சொன்னாள் : "கவனி! இதற்குத் தான் நான் சொன்னேன், இங்கே யாருமேயில்லை என்று."

சுவாங்தஸூ மிகவும் வலியுறுத்துகிறார். விழிப்பாக இருங்கள். மிகவும் பயனுள்ளவர்களாக இருக்காதீர்கள். இல்லையெனில் மக்கள் உங்களைப் பயன்படுத்திக் கொள்வார்கள். பிறகு உங்களைக் கையாள நிர்வகிக்கத் தொடங்கி விடுவார்கள், பிறகு உங்களுக்குத் தொந்தரவுதான். உங்களால் பலன் கொடுக்க முடிகிறது என்றால் உங்கள் வாழ்க்கை முழுதும் நீங்கள் பலன் கொடுக்க வேண்டும் என வற்புறுத்தப் படுவீர்கள். உங்களால் சில குறிப்பிட்டவற்றைச் செய்ய முடிகிறது என்றால், திறமை யுடையவராக இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் வீணாக்கப்பட முடியாது.

அவர் சொல்கிறார், பயனற்றத் தன்மை தனக்கே உரிய இயல்பான சில பயன்களையும் பெற்றுள்ளது. நீங்கள் அடுத்தவர்களுக்குப் பயனுள்ளவர்களாய் இருக்க முடிந்தால், பிறகு நீங்கள் அடுத்தவர்களுக்காக வாழ வேண்டும். பயனற்றிருந்தால் யாரும் உங்களைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டார்கள். யாரும் உங்கள் மேல் கவனம் செலுத்த மாட்டார்கள். நீங்கள் இருத்தலையே யாரும் கண்டு கொள்ள மாட்டார்கள். நீங்கள் தனித்து விடப்படுவீர்கள். சந்தைப் பகுதியில் கூட நீங்கள் இமய மலையில் இருப்பதைப் போல் வாழ்வீர்கள். அந்தத் தனிமையில் நீங்கள் வளர்வீர்கள். உங்கள் முழுசக்தியும் உள் நோக்கிச் செல்லும்.

ஹுவாய்தஸு சுவாங்தஸுவிடம் சொல்கிறார் :

"உங்களின் அனைத்துப் போதனைகளும்
பயனற்றவைகளையே மையமாகக் கொண்டுள்ளன."

சுவாங்தஸு பதிலுரைத்தார் :

"பயனற்றவைகளைக் கிரகிக்கும் தன்மை
உங்களிடம் இல்லை யென்றால்
உங்களால் பயனுள்ளவைகளைப் பற்றிப்
பேசத் தொடங்க முடியாது."

அவர் சொல்கிறார், பயனற்றவை என்பது பயனுள்ளதின் இன்னொரு தோற்றம் என்று. நீங்கள் பயனுள்ளவைகளைப் பேசுகிறீர்கள் என்றால் அதற்குக் காரணம் பயனற்றவைதான். சில விஷயங்கள் பயனுள்ளவை, ஏனெனில் பயனற்ற சிலவும் அங்குள்ளன.

ஆனால் இது உலகிற்கு நிகழ்கிறது. நாம் நம்முடைய விளையாட்டுத்தனமான செயல்களையெல்லாம் நிறுத்திவிட்டு, நம் முழு சக்தியும் வேலையை நோக்கிச் செல்லும் என நினைத்துக் கொள்கிறோம். ஆனால் இப்பொழுது வேலை செய்வது அலுப்பாகி விட்டது. ஒருவன் எதிர் துருவத்திற்குச் செல்ல வேண்டும்- அப்போதுதான் அவன் இளமையூட்டப் படுகிறான்.

நாள் முழுவதும் நீங்கள் விழித்திருக்கிறீர்கள். இரவில் தூங்கச் செல்கிறீர்கள். தூக்கத்தின் பயன் என்ன? அது வீணான நேரம். அது கொஞ்ச நேரமல்ல. நீங்கள் தொண்ணூறு வருடங்கள் வாழ்ந்தால் உங்கள் வாழ்க்கையில் முப்பது வருடங்கள் நீங்கள் தூங்கிக் கொண்டு தானிருக்கிறீர்கள். மூன்றில் ஒரு பகுதி, ஒரு நாளில் எட்டு மணி நேரம். அதன் பயன் என்ன?

ரஷ்ய விஞ்ஞானிகள் இது தொழிலாளர்கள், சக்தி ஆகியவற்றின் விரயம் என்று எண்ணத் தொடங்கியுள்ளார்கள். இது பொருளாதார வீணடிப்பு, அதனால்

இவ்விஷயத்தில் ஏதாவது ஒன்று செய்தாகப்பட வேண்டும்,. சில வேதியியல் மாற்றங்கள் அல்லது ஹார்மோன் மாற்றங்கள் தேவைப்படுகின்றன. அல்லது அடிப்படையான 'ஜீன்களில்' ஏதாவது மாற்றம் செய்யப்பட வேண்டும். செல்களில் இது செய்தே ஆகப்பட வேண்டும். நாம் விழிப்புடனே இருக்கும், சுறுசுறுப்பாகவே இருக்கும், இருபத்து நான்கு மணி நேரம் விழித்திருக்கும் ஒரு மனிதனை உருவாக்க வேண்டும்.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஒருவேளை அவர்கள் வெற்றி பெற்றால் அவர்கள் கொன்றுவிடுவார்கள்! உங்களை ஒரு தானியங்கியாக ஒரு இயந்திரப் பொருளாக மாற்றிவிடுவார்கள். வேலை செய்து கொண்டே இருக்கும், இரவு இல்லை, பகலில்லை. ஒய்வு இல்லை, வேலை இல்லை. நீங்கள் நகரவோ, மறக்கவோ எதிர்துருவம் ஒன்றே இருக்காது. அவர்கள் பலவற்றைச் செய்யத் தொடங்கி விட்டார்கள். சிறு குழந்தைகளுக்குத் தூக்கத்தில் கற்பிக்கும் முறையை ஆரம்பித்து விட்டார்கள். இப்பொழுது சோவியத் ரஷ்யாவில் ஆயிரக் கணக்கான குழந்தைகள் காதுகளில் செருகப்பட்ட டேப் ரிகார்டர்களுடன் தான் தூங்குகிறார்கள். இரவு முழுவதும் அந்த 'டேப்' தொடர்ந்து ஒன்று மாற்றி ஒன்று சொல்லிக் கொண்டிருக்கும். அவர்கள் அதையே கவனித்துக் கொண்டிருப்பார்கள். அது அவர்கள் ஞாபக சக்தியின் ஒரு பகுதியாகிவிடும். தூக்கத்தில் கற்பித்தல் ஹிப்னோபீடியா. மேலும் அவர்கள் சொல்கிறார்கள் இப்போதோ அல்லது கொஞ்சம் தாமதமாகவோ பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுக்கப்படுபவை யெல்லாம் ஒரு குழந்தைக்குத் தூக்கத்திலேயே கற்றுக் கொடுக்கப்பட்டு விடும், பிறகு பகல் பொழுது வேறு விதத்தில் பயன்படுத்தப்படும்.

தூக்கம் கூட பயன்படுத்தப்பட்டு விட வேண்டும், உன் தூக்கத்தில் கூட நீ, நீயாக இருக்க அனுமதிக்கப்படுவதில்லை. கனவு காண்பதற்குக் கூட உனக்கு அனுமதியில்லை. பிறகு நீ

என்ன? நீங்கள் சக்கரத்தின் ஒரு ஆரமாகி விடுவீர்கள். சக்கரத்திலிருக்கும் பயன்தரக் கூடிய ஒரு பகுதி, ஒரு இயந்திரப் பகுதி. நீங்கள் பயன்பட்டால் சரி, இல்லாவிட்டால் ஒதுக்கப் பட்டு விடுவீர்கள். பரணில் போடப்பட்டுவிடுவீர்கள். உங்களை விட அதிகமாய் பயன்கொடுக்கும் ஒருவர் அந்த இடத்தில் நியமிக்கப்படுவார்.

நான் முழுவதும் உழைத்தபின் என்ன நிகழ்கிறது? நீங்கள் தூங்கச் செல்கிறீர்கள். என்ன நடக்கிறது? பயனுள்ளதில் இருந்து பயனற்றதை நோக்கிச் செல்கிறீர்கள். அதனால் காலையில் அதிகப் புத்துணர்ச்சியாய் உணர் கிறீர்கள். மிகவும் உயிர்ப்பாக எந்தச் சுமையும் இல்லாதது போல் வேலையின் அனைத்து அழுக்குகளும் எரியப்பட்டு விடுகின்றன. கண்ணாடி மீண்டும் தெளிவாகி விடுகிறது. காலையில் ஒரு தெளிவு வந்துவிடுகிறது. எப்படி வந்தது? பயனற்றதன் வழியாகத்தான்.

அதனால் தான் தியானத்தால் உங்களுக்கு உயர்ந்த கணங்களைக் கொடுக்க முடிகிறது. ஏனெனில் அது மிகவும் பயனற்ற ஒன்று. நீங்கள் எதுவும் செய்வதில்லை. அமைதியாய் இருக்கிறீர்கள். அவ்வளவுதான். இது தூங்குவதை விட உயர்ந்தது. ஏனெனில் தூக்கத்தில் நீங்கள் நினைவிழந்த நிலையிலிருக்கிறீர்கள். என்ன நடந்தாலும் நினைவில்லாமல் தான் நிகழ்கிறது. நீங்கள் சொர்க்கத்தில் இருக்கலாம். ஆனால் உங்களுக்கு அது தெரிவதில்லை.

தியானத்தில் நீங்கள் சுய உணர்வுடன் செயல்படு கிறீர்கள். பிறகு அந்தப் பாதையைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருக்கிறீர்கள். பயனுள்ளவைகளின் உலகத்திலிருந்து நகர்ந்து எப்படி பயனற்றவைகளின் உலகிற்குள் நுழைவது? பேருந்தில் உட்கார்ந்திருப்பதற்கு நீங்கள் எதுவும் செய்ய வேண்டும் என்ற அவசியமில்லை, நீங்கள் சும்மா உட்கார்ந்திருக்கிறீர்கள். காரில், இரயிலில் அல்லது விமானத்தில் பயணம் செய்யும்

போது நீங்கள் ஒன்றும் செய்வதில்லை. எல்லாம் அடுத்தவர்களால் செய்யப்பட்டுவிடுகின்றன. நீங்கள் கண்களை மூடிக் கொண்டு பயனற்றவைக்குள் சென்றுவிடலாம். உள்ளுக்குள் திடீரென எல்லாம் அமைதியாகிவிடும். திடீரென்று எல்லாம் குளுமையாகிவிடும். திடீரென்று வாழ்க்கையின் எல்லா மூலத்திற்குள்ளும் நீங்கள் இருப்பீர்கள்.

ஆனால் அதற்குச் சந்தையில் எந்த மதிப்புமில்லை. நீங்கள் சென்று அதை விற்க முடியாது. நீங்கள் சொல்ல முடியாது, "என்னிடம் உயர்ந்த தியானம் இருக்கிறது. யாராவது வாங்கிக் கொள்கிறீர்களா?" என்று. யாரும் வாங்கிக் கொள்ளத் தயாராய் இருக்க மாட்டார்கள். அது விற்பனைச் சரக்கு அல்ல. அது பயனற்றது.

சுவாங்தஸு பதிலுரைத்தார் :

"பயனற்றவைகளைக் கிரகிக்கும் தன்மை
உங்களிடம் இல்லையென்றால்
உங்களால் பயனுள்ளவைகளைப் பற்றிப்
பேசித் தொடங்க முடியாது.
எடுத்துக் காட்டாக,
பூமி அகலமானது, பெரியது,
ஆனால் மனிதன் பயன்படுத்தும் பரப்பு
ஒரு சில அங்குலங்கள் தான்.
அதன் மேல்தான் ஒரே சமயத்தில்
அவனால் நிற்க முடியும்.
இப்போது அவன்
உண்மையாகவே பயன்படுத்தாத இடங்களை
ஒருவேளை எடுத்துவிட்டீர்கள் என்றால்,
அவன் காலைச் சுற்றியிருக்கும்
இடங்கள் எல்லாமே
வளைகுடா பிளவைப் போலிருக்கும்,
அவன் சூன்யத்தில் நின்று கொண்டிருப்பான்.

அவன் காலுக்கடியில்
வேறெங்கும் மண்ணே இருக்காது.
அவன் பயன்படுத்திக் கொண்டிருப்பதை மட்டுமே
எவ்வளவு காலம்
அவனால் பயன்படுத்த முடியும்?"

இது ஓர் அழகான உவமானம்.

அவன் அதைப் புரிந்து கொண்டுவிட்டான். நீங்கள் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள், ஒரு சிறிய பகுதியைத் தான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். இரண்டடிக்கு இரண்டு. நீங்கள் முழு பூமியையும் பயன்படுத்தவில்லை. முழு பூமியும் பயனற்றது. நீங்கள் மிகச் சிறிய பகுதியைத் தான் பயன்படுத்திக் கொண்டிக்கிறீர்கள். இரண்டடிக்கு இரண்டு. சுவாங்தஸூ சொல்கிறார். ஒரு வேளை முழு பூமியும் எடுக்கப்பட்டு விட்டால் இரண்டடிக்கு இரண்டடி மட்டும் தான் உங்களுக்கு மிஞ்சும். உங்கள் இரண்டு கால்கள் மட்டும் பூமியின் இரண்டு அங்குலங்களைப் பயன்படுத்தும். ஒரு வேளை இது மட்டும் விடப்பட்டு முழு உலகமும் எடுக்கப்பட்டு விட்டால் எவ்வளவு நேரம் தான் அந்த சிறிய பகுதியை மட்டும் பயன்படுத்திக் கொண்டிருக்க உங்களால் முடியும்?

வளைகுடா, கிடுகிடு பாதாளம்; ஆழமான பிளவு உங்களைச் சூழ்ந்துள்ளது. உடனே உங்களுக்குத் தலை சுற்றிவிடும், அந்த பாதாளத்திற்குள் விழுந்து விடுவீர்கள். பயனில்லாத அந்த உலகம் தான், பயனுள்ள ஒன்றை ஆதரித்து வருகிறது. பயனில்லாதது தான் விசாலமானது. பயனுடையது மிகவும் சிறியது. நீங்கள் பயனுள்ள ஒன்றைக் காப்பாற்ற முயற்சித்து பயனற்றதை மறந்து விட்டீர்கள் எனில், உடனே தலைச் சுற்றலில் விழுந்து விடுவீர்கள். இது நடந்து கொண்டுதானிருக்கிறது. நீங்கள் ஏற்கெனவே தலைசுற்றி பாதாளத்திற்குள் விழுந்து கொண்டிருக்கிறீர்கள்.

உலகம் முழுவதுமே யோசிக்கும் மக்கள் பிரச்சினையுடையவர்களாக இருக்கிறார்கள். வாழ்க்கையே அர்த்தமற்று

இருக்கிறது. வாழ்க்கை அர்த்தமுடையதைப் போல் தோன்றலாம். சாத்ரே, மார்செல், ஜேஸ்பெர்ஸ், ஹெட்கர் ஆகியோரிடம் கேளுங்கள், அவர்கள் சொல்வார்கள், வாழ்க்கை அர்த்தமற்றது என்று. ஏன் வாழ்க்கை இவ்வளவு அர்த்தமற்றதாயிருக்கிறது? அது அப்படி எப்போதுமே இருந்ததில்லை. புத்தர் இவ்வாறு சொன்னதேயில்லை. கிருஷ்ணரால் நடனமாட முடியும், பாட முடியும், தனக்குத் தானே அனுபவிக்க முடியும். முகமதுவால் பிரார்த்தனை செய்ய முடியும், வாழ்க்கை மூலம் கடவுள் தனக்குள் பொழிந்துள்ள ஆசிர்வாதங்களுக்காக நன்றி கூறியிருக்க முடியும். சுவாங்தஸூ மகிழ்ச்சியாயிருக்கிறார். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு, ஒரு மனிதனால் எவ்வளவு மகிழ்ச்சியாயிருக்க முடியுமோ அந்த அளவு. அவர்கள் ஒரு போதும் வாழ்க்கை அர்த்த மற்றது என்று சொல்லவில்லை. நவீன மனதிற்கு என்ன நேர்ந்துவிட்டது? வாழ்க்கை ஏன் அர்த்தமற்றது போல் தோன்றுகிறது?

பூமி முழுமையும் நீக்கப்பட்டு நீங்கள் நின்று கொண்டிருக்கும் அல்லது உட்கார்ந்து கொண்டிருக்கும் பகுதி மட்டும் விட்டுவைக்கப்படுகிறது. உங்களுக்கு தலை சுற்றல் ஏற்படுகிறது. உங்களைச் சுற்றி நீங்கள் பார்க்கும் இடங்களெல்லாம் பாதாளமும், அபாயமும்தான். நீங்கள் இப்போது நின்று கொண்டிருக்கும் பூமியை உங்களால் பயன்படுத்த முடியாது. ஏனெனில் அதனுடன் பயனற்றதும் சேரும் போதுதான் உங்களால் பயன்படுத்த முடியும். பயனற்றது அங்கே இருந்தாக வேண்டும். அதன் பொருள் என்ன? உங்கள் வாழ்க்கை வேலையாக மட்டுமே ஆகிவிட்டது. எந்த விளையாட்டும் இல்லாமல், விளையாட்டு பயனற்றது, பெரியது ; வேலை பயனுடையது. அற்பமானது, சிறியது. நீங்கள் உங்கள் வாழ்க்கையை முழுக்க முழுக்க வேலைகளால் நிரப்பப்பட்டதாய் ஆக்கிவிட்டீர்கள். எப்போதெல்லாம் ஏதாவது ஒன்றை செய்யத் தொடங்கு

கிறீர்களோ, அப்போது உங்கள் மனதில் முதலில் தோன்றுவது இதன் பயன் என்ன? என்பதுதான். ஏதாவது பயன் இருந்தால் அதைச் செய்வீர்கள்.

வரும் நூற்றாண்டான இருபத்தோராம் நூற்றாண்டில் நிகழும்படி சாத்ரே தன் கதைக் களத்தை அமைத்திருக்கிறார். ஒரு பணக்காரன் சொல்கிறான் : "அன்பு எனக்கல்ல, அது ஏழைகளுக்கு மட்டும் தான். என்னைப் பொறுத்தவரை, என் வேலைக்காரர்களால் வேண்டுமானால் செய்ய முடியும்."

ஆம், ஃபோர்டு போன்றவர்கள் எதற்கு ஒரு பெண்ணைக் காதலித்து நேரத்தை வீணடிக்க வேண்டும்? ஒரு வேலைக்காரன் வேண்டுமானால் செய்யலாம்... போர்டின் நேரம் மிகவும் மதிப்பு வாய்ந்தது. அதை ஏதாவது உயர்ந்த பலன் தரக்கூடிய விஷயத்தில் செலவழிக்க வேண்டும்.

இது சாத்தியம்! மனித மனம் இப்போது இருக்கும் நிலையைப் பார்த்தால் எதிர் காலத்தில் வேலைக்காரர்களுக்கு மட்டுமே காதல் உறவு சாத்தியம் என்று ஆகிவிடும். நீங்கள் ஒரு வேலைக்காரனை நியமித்த பிறகு, நீங்கள் ஏன் கவலைப்படப் போகிறீர்கள்? எல்லாமே பொருளாதார ரீதியில் சிந்திக்கப்படும் போது ஃபோர்டும் ராக்ஃபெல்லரும் அவர்கள் நேரத்தைப் பயனுள்ளதாய் செலவழிக்க முடியும். ஏன் அவர்கள் ஒரு பெண்ணிடம் சென்று தங்கள் நேரத்தை வீணடிக்க வேண்டும்? அவர்கள் வேலைக்காரனை அனுப்பிவிட முடியும் ; அது பிரச்சினை குறைவான தாயிருக்கும். இதைக் கேட்கும் போது உங்களுக்கு அபத்தமாய் தோன்றும். ஆனால் ஏற்கெனவே இது வாழ்க்கையின் பல்வேறு பரிமாணங்களில் நிகழ்ந்து கொண்டுதானிருக்கிறது. நீங்கள் ஒருபோதும் விளையாடுவதில்லை, உங்கள் வேலைக்காரர்கள் செய்கிறார்கள். நீங்கள் ஒருபோதும் வேடிக்கைகளில் முழு ஈடுபாட்டோடு செயல்படுவதில்லை. மற்றவர்கள் உங்களுக்காகச் செய்வார்கள். நீங்கள்

கால்பந்தாட்டப் போட்டியைப் பார்க்கச் செல்வீர்கள். மற்றவர்கள் செய்கிறார்கள். நீங்கள் அதைக் கவனிக்கிறீர்கள், நீங்கள் செயல்படாத பார்வையாளன், ஈடுபடாதவர். நீங்கள் திரைப்படம் பார்க்கச் செல்கிறீர்கள். அடுத்தவர்கள் காதலிக்கிறார்கள். சண்டை போடுகிறார்கள். வன்முறையில் ஈடுபடுகிறார்கள். எல்லாம் நீங்கள் இருக்கையில் ஒரு பார்வை யாளனாய் இருக்கிறீர்கள். இது மிகவும் பயனற்றது. இதைச் செய்வதற்குக் கவலைப்படத் தேவையில்லை. யாராலும் செய்ய முடியும். உங்களால் கவனிக்க முடியும். வேலை நீங்கள் செய்வீர்கள். வேடிக்கையை உங்களுக்காக மற்றவர்கள் செய்வார்கள். பிறகு காதல் மட்டும் ஏன் கூடாது? அதே தர்க்கரீதியைப் பயன் படுத்திப் பாருங்கள், யாரோ ஒருவர் அதைச் செய்வார்கள்.

வாழ்க்கை அர்த்தமற்றதைப் போல் தோன்றுகின்றது. ஏனெனில் அர்த்தம் பயனுள்ளது, பயனற்றது இவையிரண் டையும் சரிசமமாக்கும் காரணியை உள்ளடக்கியது. நீங்கள் பயனற்றதை முற்றிலும் ஒதுக்கி விட்டீர்கள். கதவை மூடி விட்டீர்கள். இப்பொழுது பயனுள்ளவை மட்டுமே அங்கிருக் கின்றன. நீங்கள் அவற்றால் சுமையேற்றப் படுகிறீர்கள்.

வெற்றியின் சின்னம், அடையாளம் எது வென்றால், உங்களது நாற்பது வயதிற்குள் உங்களுக்கு அல்சர் வந்துவிட வேண்டும். இது நீங்கள் வெற்றி பெற்றுள்ளீர்கள் என்பதைக் காட்டிவிடும், நீங்கள் நாற்பது வயதைக் கடந்து விட்ட பிறகும் ஐம்பதாகிவிட்ட பின்பும் அல்சர் வரவில்லையென்றால் நீங்கள் தோல்வியடைந்து விட்டீர்கள் என்று அர்த்தம். வாழ்க்கை முழுவதும் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? நேரத்தை வீணடித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

ஐம்பது வயதில் உங்களுக்கு முதல் நெஞ்சுவலி வந்திருக்க வேண்டும். இப்போது விஞ்ஞானிகள் கணக் கிட்டுள்ளார்கள், நாற்பதாவது வயதிற்குள் வெற்றி பெற்ற

மனிதனுக்கு அல்சர் வந்திருக்க வேண்டும், ஐம்பது வயதிற்குள் முதல் நெஞ்சுவலி வந்திருக்க வேண்டும். அறுபது வயதிற்குள் மேலே சென்று விட வேண்டும். ஒருபோதும் அவன் வாழ்ந்ததில்லை. அவன் வாழ்வதற்கு நேரமே இருந்ததில்லை. அவன் செய்வதற்குப் பல முக்கியமான வேலைகள் இருந்தன. வாழ்வதற்கு நேரமே இருந்ததில்லை.

உங்களைச் சுற்றியுள்ள அனைவரையும் பாருங்கள், வெற்றி பெற்றவர்களைப் பாருங்கள்; அரசியல்வாதிகளை பணக்காரர்களை, பெரிய தொழிலதிபர்களைப் பாருங்கள். அவர்களுக்கு என்ன நேர்கிறது? அவர்களுக்குச் சொந்தமான பொருட்களைப் பார்க்காதீர்கள், நேரடியாக அவர்களைப் பாருங்கள். ஏனெனில் நீங்கள் அவர்களின் பொருட்களைப் பார்த்தால் ஏமாற்றமடைவீர்கள், பொருட்களுக்கு அல்சரில்லை. கார்களுக்கு 'மாரடைப்பு' வருவதில்லை. வீடுகள் மருத்துவ மனையில் அனுமதிக்கப்படுவதில்லை. பொருட்களைப் பார்க்காதீர்கள். இல்லையெனில் ஏமாந்து விடுவீர்கள். தன் பொருடகளையெல்லாம் பறிகொடுத்து விட்ட மனிதனைப் பாருங்கள். அவனை நேரடியாய் ஆழமாகப் பாருங்கள்; அப்போது அவன் வறுமையை உணர்வீர்கள். பிறகு ஒரு பிச்சைக்காரன், பணக்காரனாய்த் தோன்றுவான். வாழ்க்கையைப் பொறுத்தவரை ஏழை மனிதன் கூட பணக்காரனாய்த் தோன்றுவான்.

வெற்றி தோல்வியடைகிறது. வெற்றியைப் போல் வேறெதுவும் தோல்வியடைவதில்லை. ஏனெனில் வெற்றி பெற்ற மனிதன் வாழ்க்கையின் மேல் பிடிப்பை இழக்கிறான். எல்லாவற்றின் மேலும் வெற்றியடைந்த மனிதன் வியாபாரம் பேசுகிறான். பொய்யான ஒன்றிற்காக உண்மையானதைத் தூக்கி எறிகிறான். கரையோரத்தில் இருக்கும் வண்ணக் கூழாங்கற்களுக்காக உள்ளே இருக்கும் வைரங்களை வீசி எறிகிறான்.

பணக்காரன் இழந்தவனாகிறான் ; வெற்றியடைந்த மனிதன் தோல்வியானவனாகிறான். ஆனால் குறிக்கோளு டைய கண்களுடன் பார்த்தீர்கள் எனில் நீங்கள் சொத்துக் களை மட்டுமே பார்ப்பீர்கள். நீங்கள் ஒருபோதும் அரசியல் வாதியைப் பார்ப்பதில்லை ; அவனது பதவியைத் தான் பார்க்கிறீர்கள். பிரதம மந்திரி என்ற பதவியை, அதிகாரத்தைத் தான் பார்க்கிறீர்கள். அதிகாரமே இல்லாமல் சும்மா உட்கார்ந் திருக்கும் அவனைப் பாத்ததில்லை. அவன் அதிகாரத்தை வாங்கி விட்டான். ஆனால் அந்த வாங்கலில் அவன் தன்னை இழந்துவிட்டான். இது எல்லாமே வியாபாரம் தான்.

நான் கேள்விப்பட்ட ஒன்று. ஒருமுறை ஒரு பொதுக் கூட்டத்திற்குப் பிறகு, அரசியல் கட்சித் தலைவன் தன் உதவியாளனைப் பார்த்து கத்திக் கொண்டிருந்தான். அந்த உதவியாளனுக்கு ஒன்றும் புரியவில்லை. அரசியல் கட்சித் தலைவன், “நான் ஏமாற்றப்பட்டு விட்டேன்” என்று கத்திக் கொண்டிருந்தான்.

உதவியாளன் சொன்னான் : “எனக்கு ஒன்றும் புரிய வில்லை. பொதுக் கூட்டம் மிக நன்றாகத்தானே நடந்தது. பல ஆயிரக் கணக்கான மக்கள் வந்திருந்தனர். உங்கள் மாலை களைப் பாருங்கள். அதில் எவ்வளவு பூக்கள் உள்ளன. எண்ணிப் பாருங்களேன்.”

அந்தக் கட்சித் தலைவன் சொன்னான் : “இங்கு பதி னொரு மாலைகள் தானே உள்ளன. நான் பனிரண்டு மாலை களுக்கு அல்லவா பணம் கொடுத்தேன். ஏமாந்து விட்டேனே.”

முடிவில் ஒவ்வொரு வெற்றியாளனும் தான் ஏமாற்றப் பட்டு விட்டதைப் போல் உணர்வான். இது நடந்தாக வேண்டும், இந்த எல்லையைக் கடந்தாக வேண்டும். இது தவிர்க்க முடியாதது, ஏனெனில், நீ என்ன கொடுக்கிறாய்? உள்ளிருக்கும் ‘தான்’ இந்தப் பலனற்ற சொத்துக்களினால் அழிந்து போய் விடுகிறது. நீங்கள் மற்றவர்களை ஏமாற்றலாம்,

உங்களையே எப்படி ஏமாற்றிக் கொள்ள முடியும்? முடிவில் உங்கள் வாழ்க்கையை நீங்கள் பார்க்கும் போது, பயனுள்ள வைகளால் நீங்கள் பலவற்றை இழந்துள்ளதைப் பார்ப்பீர்கள்.

பயனில்லாதவையும் கட்டாயம் இருந்தாக வேண்டும். பயனுள்ளவை தோட்டத்தைப் போன்றவை. அழுக்கில்லாமல் சுத்தமாக. பயனற்றவை பெரிய காட்டைப் போன்றது, இயற்கையானது. அது இந்த அளவிற்கு அழுகில்லாமல், சுத்தமாக. இல்லாமல் இருக்கலாம். இயற்கை தனக்கே உரிய அழகைப் பெற்றுள்ளது. எல்லாமே அழுக்கில்லாமல், சுத்த மாய் இருக்கும் போது அது ஏற்கெனவே இறந்துவிட்டதா கிறது. தோட்டம் மிகுந்த உயிர்ப்போடு இருக்க முடியாது. ஏனெனில் நீங்கள் அதன் கிளைகளை நறுக்கித் திருத்திக் கொண்டேயிருக்கிறீர்கள். வெட்டிக் கொண்டே நிர்வகித்துக் கொண்டேயிருக்கிறீர்கள். பெரிய காடு உயிர்ப்புத் தன்மை யைப் பெற்றிருக்கிறது. மிகவும் சக்திவாய்ந்த ஆன்மாவை. காட்டிற்குள் செல்லுங்கள். அதன் விளைவைப் புரிந்து கொள் வீர்கள். பாதிப்பை உணர்வீர்கள். காட்டிற்குள் தொலைந்து போய் விடுங்கள். அதன் சக்தியைப் பார்ப்பீர்கள். தோட்டத் தில் அந்த சக்தியை உங்களால் உணரமுடியாது. அது அங்கே இல்லை. அது மனிதனால் தயாரிக்கப்பட்டது. நீங்கள் அதைப் பார்க்க முடியும். அது அழகு தான். ஆனால் அது விளைவிக் கப் பட்டது. நிர்வகிக்கப் பட்டது. ஏற்பாடு செய்யப்பட்டது.

உண்மையிலேயே, தோட்டம் என்பது பொய்யான ஒன்று-காடுதான் உண்மையானது. பயனற்றவை பெரிய காட்டைப் போன்றது. பயனுள்ளவையோ நீங்கள் வீட்டைச் சுற்றி உருவாக்கியுள்ள தோட்டத்தைப் போன்றது. காட்டை வெட்டிக் கொண்டேயிருக்காதீர்கள். அது சரியாய்த் தான் உள்ளது. உங்கள் தோட்டம் நன்றாய்த் தான் உள்ளது. ஆனால் அதைப் பெரிய காட்டின் ஒரு பகுதியாக அப்படியே விட்டு விடுங்கள். அது உங்கள் தோட்டம் அல்ல. கடவுளின் தோட்டம்.

கடவுளை விடப் பயனற்ற ஏதாவது ஒன்று இருக்கும் என நினைக்கிறீர்களா? அவரை ஏதாவது ஒருவிதத்தில் பயன்படுத்தி இருக்கிறீர்களா? அதுதான் பிரச்சினை. அதனால் தான் நம்மால் கடவுளுக்கு எந்த அர்த்தமும் கண்டு பிடிக்க முடிவதில்லை. அர்த்தத்தையே அடிப்படையாகக் கொண்டிருப்பவர்கள் நாத்திகவாதிகளாகிறார்கள். அவர்கள் கடவுள் இல்லை என்று சொல்கிறார்கள். அங்கே இருக்க முடியாது. கடவுள் பயனற்றவர் எனக் கருதப்படும் போது எப்படி அங்கே இருப்பார்?

அவரை வெளியே விட்டுவிடுதலே நல்லதுதான். பிறகு கையாளப்படவும், நிர்வகிக்கப்படவும் உலகம் நம் கையில் விடப்பட்டுவிடும். பிறகு நாம் முழு உலகத்தையும் சந்தையாக்கிவிடலாம், கோயில்களை மருத்துவமனைகளாக்கி விடலாம், ஆரம்பப் பள்ளிகளாக்கி விடலாம். ஆனால் கடவுளின் பயனில்லாமைதான், நிகழ்ந்து கொண்டிருக்கும் அனைத்துப் பயனுள்ளவைகளின் அடிப்படையாகும். நீங்கள் விளையாடினால், உங்கள் வேலை மகிழ்ச்சியானதாகும். உங்களால் எளிய வேடிக்கையை ரசிக்க முடிகிறதென்றால், விளையாடுவதில் குழந்தைகள் போலாகி விட்டீர்கள் என்றால், உங்கள் வேலை உங்களுக்குச் சுமையாகாது. ஆனால் இது கடினம்தான். உங்கள் மனம் பணத்தின் அடிப்படையில் தான் சிந்தித்துக் கொண்டேயிருக்கும்.

நான் ஒரு முறை கேள்விப்பட்டிருக்கிறேன். "ஒரு தடவை முல்லா நஸ்ருதின் வீட்டிற்கு வந்தபோது அவரின் மனைவி தன் உயிர் நண்பனுடன் கட்டிலில் இருப்பதைக் கண்டார். இந்த நண்பன் மிகவும் தர்மசங்கடமான சூழ்நிலையிலிருந்தான். மிகவும் பயந்து போயிருந்த அவன் கூறினான் : "கவனி, இதில் நான் ஒன்றும் செய்ய முடியாது. நான் உன் மனைவியைக் காதலிக்கிறேன். அவளும் என்னைக் காதலிக்கிறாள். நீ விவேகமுள்ளவனாய் இருக்கிறாய், நாம் ஒரு

ஏற்பாட்டிற்கு ஒத்துவர வேண்டும். இதைப் பற்றி சண்டை போடுவதில் ஒரு பயனும் இல்லை."

அதனால் நஸ்ரூதின் கேட்டார் : "என்ன ஏற்பாட்டை நீ பரிந்துரைக்க விரும்புகிறாய்?"

அவரது நண்பன் சொன்னான் : "நாம் சீட்டாட வேண்டும். உன் மனைவியைப் பணயமாக வைத்து. நான் வெற்றி பெற்றால் நீ விலகிவிட வேண்டும் நீ வெற்றி பெற்றாய் எனில், நான் ஒரு போதும் உன் மனைவியைத் திரும்பிக் கூடப் பார்க்கமாட்டேன்."

நஸ்ரூதின் சொன்னார் : "சரி, இந்த ஏற்பாடு சரியாய் உள்ளது." பிறகு அவர் சொன்னார் : "நாம் கொஞ்சம் பணத்தையும் பணயமாக வைத்துக் கொள்ளலாம். ஒவ்வொரு புள்ளிக்கும் ஒரு ரூபாய் என்று. இல்லாவிட்டால் முழு செயலுமே பயனற்றதாகிவிடும். ஒரு மனைவிக்காக எல்லாமே பயனில்லாமல் போய்விடும். என் நேரத்தை வீணாக்காதே, கொஞ்சம் பணத்தையும் பணயமாக வைத்துக் கொள்வோம்."

பிறகு அச்செயல் பயனுள்ளதாகிவிடும். பணம்தான் ஒரே பயனுள்ள விஷயம் என்று தோன்றுகிறது. பயனைக் கருதும் அனைவருமே பணப் பைத்தியங்களாய்த் தான் இருப்பார்கள். ஏனெனில் பணத்தால் வாங்க முடியும். பணம்தான் எல்லாப் பயன்களின் அடிப்படை. அதனால் புத்தரும், அவரைப் போன்றவர்களும் விட்டு விலகினார்கள் என்றால், அவர்கள் பணத்திற்கு எதிரானவர்கள் என்பதால் அல்ல, அவர்கள் பயன்களுக்கு எதிரானவர்கள் என்பதால் தான், பயனுள்ளவைகளுக்கு எதிரானவர்கள். அதனால் அவர்கள் சொன்னார்கள். உங்கள் பணத்தை எல்லாம் வைத்துக் கொள்ளுங்கள், நான் காட்டிற்குச் செல்கிறேன். இந்தத் தோட்டம் எனக்கானதல்ல. நான் பரந்ததற்குள் நுழைகிறேன். எல்லையில்லாததற்குள். எங்கே ஒருவனால்

தொலைந்து விடமுடியுமோ அங்கே. இந்த சுத்தமான, தெளிவான கூழாங்கல் பாதை, எல்லாம் தெரிந்த, வரைபடத்தில் குறிப்பிடப்பட்டு விட்டபாதை எனக்கானதல்ல.

நீங்கள் பயனில்லாதவைகளாகிய பரந்தவற்றிற்குள் நுழைந்துவிட்டீர்கள் என்றால், உங்கள் ஆன்மா விசாலமாகி விடும். நீங்கள் எந்த வரைபடமும் இல்லாமல் கடலுக்குள் சென்று விட்டீர்கள் எனில், நீங்கள் மகாசமுத்திரமாகி விடுவீர்கள். பிறகு தெரியாதவைகளின் சவால் உங்கள் ஆன்மாவை உருவாக்கும்.

நீங்கள் பாதுகாப்பாய் இருக்கும் போது, எந்தப் பிரச்சினையுமில்லாமல் இருக்கும்போது, எல்லாமே கணக்கு போல் திட்டமிடப்பட்டிருக்கும்போது, ஸ்தாபித்துவிட்ட பிறகு, உங்கள் ஆன்மா சுருங்கிவிடுகிறது. அதற்கு எந்தச் சவாலுமில்லை. பயனற்றது தான் சவாலைக் கொடுக்கிறது.

"இப்போது
அவன் உண்மையாகவே பயன்படுத்தாத
இடங்களை ஒருவேளை எடுத்து விட்டீர்கள் என்றால்,
அவன் காலைச் சுற்றியிருக்கும் இடங்கள் எல்லாமே
வளைகுடா பிளவைப் போலிருக்கும்,
அவன் சூன்யத்தில் நின்று கொண்டிருப்பான்.
அவன் காலுக்கடியில் தவிர
வேறெங்கும் மண்ணே இருக்காது.
அவன் பயன்படுத்திக் கொண்டிருப்பதை மட்டுமே
எவ்வளவு காலம்
அவனால் பயன்படுத்த முடியும்?"

கடவுள் இல்லாமல் உலகத்தால் தொடர்ந்து இருக்கவே முடியாது. நூறு வருடங்களுக்கு முன்பே. 'கடவுள் இறந்து விட்டார்,' என நீட்ஷே அறிவித்தார். அதை அவர் உணர்ந்திருக்கவில்லை. ஆனால் அதை அவர் அறிவித்த அதே சமயம் நம்மாலும் அதற்கு மேல் வாழமுடியாது. அவர்

சொன்னார் : 'கடவுள் இறந்துவிட்டார். இப்போது மனிதன் சுதந்திரமாய் வாழலாம்.' ஆனால் நான் சொல்கிறேன். கடவுள் இறந்து விட்டார் என்றால், மனிதன் ஏற்கெனவே இறந்து விட்டான், அந்தச் செய்தி ஒரு வேளை அவனை வந்தடையாமல் இருக்கலாம், ஆனால் அவன் இறந்து விட்டான். ஏனெனில் கடவுள் அதிகமாய் பயனற்றவர்.

மனிதனின் உலகம் பயன்களை அடிப்படையாய்க் கொண்டது. பயனுள்ளது. பயனற்றவைகள் இல்லாமல் பயனுள்ளவைகளால் இருக்கவே முடியாது. கடவுள் விளையாட்டு, மனிதன் வேலை ; கடவுள் இல்லாமல் நீங்கள் அர்த்த மற்றவர்களாகி விடுவீர்கள், சுமை எப்படியாவது சுமக்கப்பட வேண்டும். கடவுள் வேடிக்கை, மனிதன் தீவிரமானவன். வேடிக்கையில்லாமல் தீவிரத்தன்மை மிக அதிகமாக இருக்கும். அது நோயைப் போலிருக்கும். கோயில்களை அழிக்காதீர்கள், மசூதிகளை அழிக்காதீர்கள். அவற்றை மருத்துவமனைகளாய் மாற்றாதீர்கள். உங்களால் வேறு மருத்துவ மனைகளைக் கட்டமுடியும் . பள்ளிக் கூடங்கள் அமைக்க வேறு கட்டடங்களை ஏற்படுத்திக் கொள்ளமுடியும். ஆனால் பயனற்றவைகளை அப்படியே இருக்கவிட்டு விடுங்கள். வாழ்க்கையின் மிக மையப் பகுதியில். அதனால்தான் கோயில்கள் மையமான சந்தைப் பகுதிகளில் அமைக்கப்படுகின்றன. நகரத்தின் மையத்தில். பயனற்றவை மையத்தில் இருக்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்காக. இல்லாவிட்டால் எல்லாப் பயன்களும் அழிந்துவிடும். எதிரானவையும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். எதிர்ப்பதமானவை, எதிரானவையே உயர்ந்தவை.

வாழ்க்கையின் நோக்கம் என்ன? மக்கள் என்னிடம் வந்து இந்தக் கேள்வியை கேட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். எந்த நோக்கமும் இல்லை. எதுவும் இருக்க முடியாது. அது நோக்கமற்றது. வேடிக்கை. நீங்கள் அதை அனுபவிக்க

வேண்டும், உங்களால் அனுபவிக்க மட்டுமே முடியும். அதை வேறு ஒன்றும் செய்ய உங்களால் முடியாது. அது வியாபாரச் சரக்கல்ல. நீங்கள் ஒரு கணத்தை இழந்தீர்கள் என்றால், இழந்தது தான். நீங்கள் மீண்டும் அதற்குச் செல்ல முடியாது.

சமயம் என்பது ஒரு அடையாளம் தான். ஒருவர் என்னிடம் வந்து சொன்னார் : "இந்தியாவில் ஐநூறாயிரம் சன்யாசிகள் இருக்கிறார்கள். இது அதிகமான பொருளாதார வீணடிப்பு. இந்த மக்கள் என்ன செய்கிறார்கள்? அடுத்தவர் களின் தொழிலாளிகளாய் வாழ்கிறார்கள். அவர்கள் வாழ்வதற்கே அனுமதிக்கப்படுவதில்லை."

ரஷ்யாவில் அவர்கள் வாழ்வதற்கே அனுமதிக்கப்படு வதில்லை. ஒரே ஒரு சன்யாசி கூட. அந்தப் பகுதி முழுவதுமே ஒரு சிறையாகிவிட்டது. நீங்கள் பயனற்றதாயிருக்க அனுமதிக்கப்பட மாட்டீர்கள். சீனாவில் புத்த குருமார் களையும், பிக்குகளையும் கொன்றுவிடுகிறார்கள். ஆயிரக் கணக்கானவர்களைக் கொன்றுவிட்டார்கள். அனைத்து மடாலயங்களையும் அழித்துக் கொண்டிருக்கிறார்கள். முழு நாட்டையும் ஒரு தொழிற் சாலையாக மாற்றி வருகிறார்கள். மனிதன் ஏதோ வயிறு மட்டும் உள்ளவன் என்பதைப் போலும், அவன் வாழ ரொட்டி மட்டும் போதுமானது என்பதைப் போலும்.

ஆனால் மனிதனுக்கு இதயம் உண்டு. அவன் உயிர் வாழ்கிறான். எந்த நோக்கத்தின் அடிப்படையிலுமல்ல. அவன் எந்தக் காரணிகளும் இல்லாமல். எந்தக் காரணங்களும் இல்லாமல் வாழ்வை அனுபவிக்க விரும்புகிறான். ஒன்றுமே இல்லாமல் பேரானந்தமாக வாழ விரும்புகிறான்.

அந்த மனிதர் கேட்டார் : "எப்போது இந்தியாவில் இந்த சன்யாசிகளை நிறுத்தப் போகிறீர்கள்?" அவர் எனக்கு எதிராய் இருந்தார். அவர் சொன்னார் : "நீங்கள் இவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கிறீர்கள். அதை நிறுத்துணங்கள். இந்த சன்யாசிகளால் என்ன பயன்?"

இந்தக் கேள்வி பொருத்தமானதாய்த் தோன்றும். அவர் வேறு எங்காவது சென்றிருந்தால், வேறு யாராவது ஒரு மதகுருவைச் சந்தித்துக் கேட்டிருந்தால், அவர் வழக்கமாகச் சொல்லும் பதிலைச் சொல்லியிருப்பார், அவர்களால் மிகுந்த பயனுண்டு என்று. ஆனால் நான் அவர்கள் எதற்கும் பயன்படாதவர்கள் என்று சொன்னவுடன் இந்த மனிதர் சிறிது கலவரப்பட்டார். மிகவும் விசனமடைந்தார்.

ஆனால் வாழ்க்கை என்பதே பயனற்றதுதான். அதன் நோக்கம் என்ன? நீங்கள் எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள்? தீர்வு என்ன? ஒரு நோக்கமும் இல்லை, ஒரு முடிவுமில்லை. ஒரு இலக்குமில்லை. வாழ்க்கை என்பது நிலையான தன்னை மறந்த நிலைதான். ஒவ்வொரு கணத்தை யும் உங்களால் அனுபவிக்க முடியும். ஆனால் நீங்கள் முடிவைப்பற்றி யோசிக்கத் தொடங்கினீர்கள் என்றால் அந்த அனுபவித்தலை இழந்துவிடுவீர்கள். உங்கள் வேர்கள் பிடுங்கப்பட்டுவிடும். அதன் பிறகு நீங்கள் அதில் இருக்கவே மாட்டீர்கள். வெளியாளாகி விடுவீர்கள். பிறகு நீங்கள் அர்த்தத்தைக் கேட்பீர்கள், நோக்கத்தைக் கேட்பீர்கள்.

ஒன்றைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் மகிழ்ச்சியாய் இருக்கும்போது ஒரு போதும் கேட்கவே மாட்டீர்கள். "மகிழ்ச்சியாயிருப்பதன் நோக்கம் என்ன?" என்று. எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? காலையில் சூரிய உதயத்தைப் பார்க்கும்போது, பறவைக் கூட்டத்தை வானத்தில் பார்க்கும் போது, கேட்டிருக்கிறீர்களா, "இதன் நோக்கம் என்ன?" என்று. இரவில் பூ மலர்கிறது. அதன் மணத்தை இரவு முழுவதும் பரப்புகிறது, கேட்டிருக்கிறீர்களா, "இதன் நோக்கம், பயன் என்னவென்று?"

அங்கு எந்த நோக்கமுமில்லை. நோக்கம் என்பதே மனத்தின் பகுதிதான். வாழ்க்கை மணமில்லாமல்தான் இருக்கிறது. பயனற்றதை வலியுறுத்தும் வரை நீங்கள் பயன்களையே பார்த்துக் கொடிருந்தால், உங்களால் மனதைத் துறக்க

முடியாது. நீங்கள் ஒரு பலனை ஒரு முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போது எப்படி உங்களால் மனதைத் துறக்க முடியும்? எந்த நோக்கமும் இல்லை, மனது தேவையேயில்லை என்பதை நீங்கள் உணரும் போதுதான், உங்கள் மனதை நீங்கள் துறக்க முடியும். நீங்கள் அதை ஒதுக்கிவிடுங்கள். அது தேவையில்லாத ஒன்று. ஆம், நீங்கள் சந்தைக்குச் செல்லும் போது உங்களுடன் அதை எடுத்துச் செல்லுங்கள். கடையில் நீங்கள் உட்கார்ந்திருக்கும் போது அதைப் பயன்படுத்துங்கள். அது ஒரு இயந்திரப் பகுதி, கம்ப்யூட்டரைப் போல.

விஞ்ஞானிகள் சொல்கிறார்கள், மிக விரைவில் அல்லது கொஞ்சம் தாமதமாக நாம் ஒவ்வொரு குழந்தைக்கும் அவன் சட்டைப்பையில் வைத்துக் கொள்ளும்படி ஒரு கம்ப்யூட்டரை வினியோகித்து விடுவோம். அவன் அதிகப் படியான கணக்குகளை மனதில் சுமக்க வேண்டியதில்லை. அவன் ஒரு பட்டனை அழுத்தினால் போதும், கம்ப்யூட்டரே செய்துவிடும். உங்கள் மனம் ஓர் இயற்கையான கம்ப்யூட்டர். எதற்கு அதைத் தொடர்ந்து சுமந்து கொண்டிருக்கிறீர்கள்? அது தேவையில்லாத போது ஒதுக்கி வையுங்கள். ஆனால் நீங்கள் ஏதாவது பயன் உள்ளதாகச் செய்யவேண்டும் எனும் போதுதான் அது தேவை என்று நினைக்கிறீர்கள். யார் உங்களுக்குச் சொல்வார்கள் எது பயனுள்ளது, எது பயனற்றது என்று? மனம் எப்போதும் கணக்குப் பார்த்துக் கொண்டேயிருக்கிறது. இது பயனுள்ளது, இதைச் செய், இது பயனற்றது. இதைச் செய்யாதே என்று. மனம் உங்கள் நிர்வாகி. மனம் பயனுள்ளவைகளின் பிரதிநிதியாக இருக்கிறது. தியானம் பயனற்றவைகளின் பிரதிநிதியாக இருக்கிறது.

பயனுள்ளவற்றிலிருந்து பயனற்றவற்றிற்கு செல்லுங் கள். இந்த மாற்றம் இயல்பானதாக எந்தப் போராட்டமும் இல்லாமல் இயற்கையானதாய் ஆக்கிக் கொள்ளுங்கள். எந்த முரண்பாடும் இல்லாததாய் இதை உங்கள் வீட்டிற்குள் நுழைவதைப் போல் இயற்கையானதாக ஆக்கிக் கொள்ளுங்

கள். மனம் தேவைப்படுகிறதென்றால், இயந்திரப் பொருளைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். அது பயனில் இல்லாதபோது அதை ஒதுக்கி வைத்துவிட்டு மறந்து விடுங்கள். பிறகு பயனற்ற வராகி ஏதாவது பயனில்லாததைச் செய்யுங்கள். உங்கள் வாழ்க்கை வளமாகிவிடும். உங்கள் வாழ்க்கை பயனுள்ள திற்கும் பயனற்றதிற்கும் இடையேயான சமமாக்கல் ஆகி விடும். இந்தச் சமானம் இரண்டையும் மேம் படுத்திவிடும். இதுதான் மேம்பட்டிருத்தல், பயனுமில்லாமல் பயனற்றும் இல்லாமல்.

"அவன் பயன்படுத்திக் கொண்டிருப்பதை
மட்டுமே
எவ்வளவு காலம் அவனால் பயன்படுத்தமுடியும்?"

ஹுவாய்தஸு சொன்னார் :

"இது பயன் தருவதனைத்தையும் நிறுத்தி விடும்."

சுவாங்தஸு முடித்தார் :

" இது எவையெல்லாம் பயனற்றவை என்பதைக் காட்ட
முழுமையாகப் பயன்படுகிறது."

பயனுள்ளது கூட பயனற்றது இல்லாமல் இருக்க முடியாது. பயனற்றதுதான் அடிப்படை. நான் உங்களிடம் ஒன்று சொல்கிறேன். உங்கள் மனத்தால் தியானம் இல்லாமல் வாழ முடியாது. நீங்கள் சாத்தியமில்லாத அதைச் செய்ய முயன்றீர்கள் என்றால் பைத்தியமாகிவிடுவீர்கள். இதுதான் பலருக்கு நிகழ்ந்தது. அவர்கள் பைத்தியமானார்கள். பைத்தியம் என்றால் என்ன? பைத்தியம் என்பது அதிக முயற்சி எடுத்து சிந்தித்தல் ; தியானம் இல்லாமல், அறிவால் மட்டுமே வாழ்தல். எந்தத் தியாணனமும் இல்லாமல் நீங்கள் முயற்சித்தீர்கள் என்றால் உங்கள் மனம் பைத்தியமாகும், நிலை தடுமாறி விடும். இது அதீதமானது சகித்துக் கொள்ள முடியாது. பைத்தியக்காரன், பயன்படுத்தலையே அடிப்படையாகக் கொண்டிருப்பவன். அவன் சாத்தியமில்லாததை முயற்சிக்

கிறான். தியானம் செய்யாமல் வாழ முயற்சிக்கிறான். அதனால் தான் அவன் பைத்தியமாகிறான்.

மனவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள், மூன்று வாரங்களுக்கு நீங்கள் தூங்க அனுமதிக்கப்படவில்லையெனில், நீங்கள் பைத்தியமாகிவிடுவீர்கள். ஏன்? தூக்கம் பயனற்றது. மூன்று வாரங்களுக்கு தூங்க அனுமதிக்கப் படாவிட்டால் ஏன் நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள்? மனிதனால் உணவில்லாமல் மூன்று மாதங்களுக்கு வாழ முடியும். ஆனால் தூக்கம் இல்லாமல் மூன்று வாரங்கள் கூட வாழமுடியாது. இது மிக அதிகமான காலவரை. இது உங்களுக்கு அல்ல - நீங்கள் மூன்று நாட்கள் தூங்க அனுமதிக்கப்படா விட்டாலே பைத்தியமாகி விடுவீர்கள். பயனற்றது தூக்கி எறியப்பட்டது என்றால் நீங்கள் பைத்தியமாகி விட வேண்டியதுதான்.

பைத்தியமாதல் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் தியானம் முக்கியமானதாகக் கருதப்படவில்லை. எவையெல்லாம் விலை மதிப்பிடப் படுகின்றனவோ அவைமட்டும் தான் மதிப்பு மிக்கவை என நினைக்கிறீர்களா? எவையெல்லாம் வியாபாரச் சரக்கோ, அவற்றிற்கு மட்டும் தான் மதிப்பு இருக்கிறதா? அப்படியென்றால் நீங்கள் நினைப்பது தவறு. பணமதிப்பு இல்லாதவைக்கும் மதிப்பு இருக்கிறது. அதை விற்க முடியாது. வாங்க முடியாது. ஆனால் அது விற்கவும், வாங்கவும் சாத்தியமானவற்றைவிட மதிப்புடையது.

காதல்தான் காமத்தின் அடிப்படை. நீங்கள் மக்களிடமிருந்து காதலைப் பிடுங்கி விட்டீர்கள் எனில், காமம் என்பதே நெறி தவறியதாகிவிடும். தியானம் தான் மனதின் அடிப்படை. நீங்கள் தியானத்தை மறுத்தீர்கள் எனில், மனதிற்குப் பைத்தியம் பிடித்துவிடும். வேடிக்கையும், விளையாட்டும் தான் வேலையின் அடிப்படை. நீங்கள் வேடிக்கையையும் விளையாட்டையும் மறுத்தீர்கள் எனில், வேலை சுமையாகிவிடும், மிக அதிகமான சுமையாக.

பயனில்லாத இந்த வானத்தைப் பாருங்கள். உங்கள் வீடு பயனுள்ளதாக இருக்கலாம். ஆனால் அது பயனுள்ளதாக இருப்பது பயனற்ற வானத்தினால் தான். உங்களால் இவ் விரண்டையும் உணரமுடிந்தால், எந்தப் பிரச்சினையும் இல்லாமல் ஒன்றிலிருந்து இன்னொன்றிற்கு உங்களால் மாற முடிந்தால், அப்பொழுது முதன் முறையாக மிகச் சரியான மனிதன் உங்களுக்குள் பிறப்பான்.

சரியான மனிதனுக்கு எது உள்ளே இருக்கிறது, எது வெளியே உள்ளது என்றெல்லாம் தெரியாது - இரண்டுமே அவனுடையதுதான். சரியான மனிதன் எது பயனுள்ளது, எது பயனற்றது என்பதைப் பற்றியெல்லாம் கவலைப் படமாட்டான். இரண்டுமே அவனது சிறகுகள் தான். சரியான மனிதன் தியானம், மனம் என்ற இரண்டு சிறகுகளையும் பயன்படுத்தி வானத்தில் பறக்கிறான். செயலோடும் பிரக்ஞையோடும், இவ்வுலகத்தோடும், அவ்வுலகத்தோடும், கடவுள் நம்பிக்கை யோடும், இல்லையென்ற எண்ணத்தோடும். இரண்டு எதிர்த்துருவங்களும் அவனிடம் பொருந்தியிருக்கின்றன.

சுவாங்தஸூ பயனற்றவைகளையே அதிகம் வலியுறுத்து கிறார். பயன் இல்லாதவைகளைத்தான் வலியுறுத்துகிறார். ஏனெனில் நீங்கள் பயனுள்ளவைகளைத் தான் அதிகமாய் குறிப்பிடுகிறீர்கள். இல்லாவிட்டால் இந்த வலியுறுத்தல் தேவைப்பட்டிருக்காது. இது ஒரு சமானத்தைக் கொடுக்கத் தான். நீங்கள் இடப்பக்கத்திற்கே அதிகமாய் சென்றுவிட்டீர் கள். நீங்கள் வலப்பக்கத்திற்கும் இழுத்து வரப்பட வேண்டும்.

ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இந்த அதீத வலியுறுத்தலின் காரணமாக நீங்கள் அடுத்த எதிர் முனைக்குச் சென்று விடக்கூடும். இது சுவாங்தஸூவைப் பின்பற்றும் பலருக்கும் நேர்ந்திருக்கிறது. அவர்கள் பயனற்ற வைகளுக்கு அடிமையாகி விட்டார்கள். பயனற்றவைகளின் பைத்தியமாகி விட்டார்கள். பயனற்றவைகளை நோக்கி

அதிகமாய் நகர்ந்து விட்டார்கள். இது நோக்கமல்ல- அவர்கள் தவறி விட்டார்கள்.

சுவாங்தஸூ இதை வலியுறுத்தியதன் காரணம் என்ன வென்றால் நீங்கள் பயன்களுக்கு அதிகமாய் அடிமையாகி விட்டீர்கள். அதனால்தான் அவர் பயனற்றவைகளை வலியுறுத்தினார். ஆனால் நான் ஒன்று ஞாபகப் படுத்த வேண்டும். ஏனெனில் மனம் அடுத்த துருவத்திற்கு நகரலாம். அப்போதும் முடிவு அதேதான். உண்மையான நிலை மேம்பட்டது. நீங்கள் பயனுள்ளவையும், பயனற்றவையும் இணையும் பகுதிக்கு வர வேண்டும். நோக்கமுடையவையும் நோக்கமற்றவையும். அப்போது நீங்கள் இரண்டிற்கும் அப்பாற்பட்டிருக்கிறீர்கள். இரண்டும் உங்களுக்குப் பணியும்.

சில மனிதர்கள் தங்கள் மனதை விட்டு வெளியே வர முடியாதவர்களாக இருக்கிறார்கள். சிலர் தங்கள் தியானத்தை விட்டு வெளியேற முடியாமலிக்கிறார்கள். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள், இரண்டும் ஒரே நோய்தான். நீங்கள் ஏதாவது ஒன்றிற்கு அடிமையாகக் கூடாது. முதலில் நீங்கள் மனதை விட்டு வெளியே வர முடியாதவராயிருந்தீர்கள், பிறகு எப்படியோ சமாளித்தீர்கள். இப்போது உங்களால் தியானத்தி லிருந்து வெளியே வரமுடியவில்லை. மீண்டும் நீங்கள் ஒரு சிறையிலிருந்து மற்றதற்குச் செல்கிறீர்கள்.உண்மையான சரியான மனிதன், தாவோவின் மனிதனுக்குப் போதையே இருக்காது. அவனால் ஒரு துருவத்திலிருந்து மற்றதிற்கு நகரமுடியும், ஏனெனில் அவன் நடுவிலிருக்கிறான். அவன் இரண்டு இறக்கைகளையும் பயன்படுத்துகிறான்.

சுவாங்தஸூ வைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது. அதனால்தான் நான் இதைச் சொல்கிறேன் . அவர் தவறாகப் புரிந்துக் கொள்ளப்படலாம். சுவாங்தஸூவைப் போல் இருக் கும் மனிதர்கள் ஆபத்தானவர்கள். ஏனெனில் நீங்கள் அவர் களைத் தவறாகப் புரிந்து கொள்வீர்கள். மனம் சொல்லும் :

"சரி, இந்தக் கடை போதும் இந்தக் குடும்பம் போதும், இப்போது நான் நாடோடியாகிவிட்டேன்." இதுதான் தவறாகப் புரிந்து கொள்ளப்படல். பிறகு உங்களால் கடைக்குத் திரும்பிவர முடியாது, சந்தைக்கு. குடும்பத்திற்கு பிறகு இதைப் பற்றிப் பயப்படுவீர்கள்.

இதே போல்தான், மருந்து கூட நோயாகி விடும், நீங்கள் அதற்கு அடிமையானால். அதனால் மருத்துவர் கவனிக்க வேண்டும், நீங்கள் நோயிலிருந்து விடுபடுகிறீர்களா அதே சமயம் மருந்திற்கு அடிமையாகிவிட வில்லையா என்பதை - இல்லையெனில் அவர் நல்ல மருத்துவர் அல்ல. முதலில் நீங்கள் நோயிலிருந்து விடுபடவேண்டும். பிறகு உடனடியாக மருந்தின் போதையினின்றும் விடுபடவேண்டும். இல்லா விட்டால் மருந்து நோயின் இடத்தைப் பிடித்துக் கொள்ளும். பிறகு நீங்கள் அதையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப் பீர்கள்.

முல்லா நஸ்ருதின் ஏழு வயதான தன் சிறிய மகனுக்குக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார், எப்படி ஒரு சிறுமியை அணுகுவது, எப்படி அவளை நடனமாடச் சொல்வது, என்ன சொல்லலாம், என்ன சொல்லக்கூடாது, எப்படி அவளைத் தூண்டுவது என்றெல்லாம்.

அந்தப் பையன் வெளியே சென்றுவிட்டு ஒரு அரை மணி நேரம் கழித்து வந்து அவரிடம் கேட்டான்: "இப்போது எப்படி அவளைவிட்டு வருவது என்பதைக் கற்றுக் கொடுங்கள்."

அதுவும் கற்றுக் கொள்ளப்பட வேண்டும். இது கடினமான பகுதிதான். வரவேற்பது மிகவும் எளிது. ஆனால் விட்டுவிலகுவது என்பது கடினமானது. உங்கள் சொந்த அனுபவத்திலிருந்து இதைத் தெரிந்து கொண்டிருப்பீர்கள். ஒரு பெண்ணை வரவேற்பது எப்போதும் எளிது, அவளைத் தூண்டுவதும் எளிது. ஆனால் எப்படி அவளை விட்டு விலகு

வது? அப்போதுதான் பிரச்சினை வருகிறது. பிறகு நீங்கள் எங்கேயும் வெளியே செல்வதில்லை. விசிலடிப்பதையே முற்றிலுமாய் மறந்து விடுகிறீர்கள்.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், பயனற்றவை எப்போதும் தனக்கே உரிய வசிகரத்தைக் கொண்டுள்ளன. நீங்கள் பயனுள்ளவைகளால் மிகவும் கஷ்டப்படுகிறீர்கள் எனில், நீங்கள் அடுத்த எதிர் துருவத்திற்கு நகர்ந்து விடுவீர்கள். சமத்தன்மையை இழந்துவிடுவீர்கள்.

என்னைப் பொறுத்த வரை, சன்யாசம் என்பது ஆழ்ந்த சமத்தன்மை, நடுவில் நின்று கொண்டிருத்தல், எல்லா எதிர் துருவங்களிலிருந்தும் விடுபடுதல். அவனால் பயனுள்ளவை களையும் பயன்படுத்த முடியும். பயனற்றவைகளையும் பயன்படுத்த முடியும். அவனால் நோக்க முடையவற்றையும் பயன்படுத்த முடியும். நோக்கமில்லாதவற்றையும் பயன்படுத்த முடியும். இப்போதும் இரண்டிற்கும் அப்பாற்பட்டிருக் கிறீர்கள். அவர் அவர்களால் பயன்படுத்தப்படுவதில்லை, அவரே குருவாகிறார்.

இன்றைக்கு இது போதும்.

## வெற்றுப் படகு



# 5

## வழியும் முடிவும்

மீன் பொறியின் நோக்கம்
மீனைப் பிடிப்பது தான்,
மீன்கள் பிடிக்கப்பட்டவுடன்
அந்தப் பொறி மறக்கப்பட்டு விடுகிறது.

வார்த்தைகளின் நோக்கம்
எண்ணங்களைத் தெரிவித்தல் தான்.
எண்ணங்கள் கிரகிக்கப்பட்டவுடன்
வார்த்தைகள் மறக்கப்பட்டு விடுகின்றன.

வார்த்தைகளை மறந்துவிட்ட ஒரு மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும்?
நான் பேச விரும்பும் மனிதர்களில் அவனும் ஒருவன்.



# வழியும் முடிவும்

வார்த்தைகளை மறப்பது என்பது மிகவும் கடினமானது. அவை மனதை இறுகப் பற்றிக் கொண்டுள்ளது. அந்த வலையைத் தூக்கி எறிவது மிகவும் கடினம். ஏனெனில் அதற்குள் மீன்கள் மட்டும் மாட்டிக் கொண்டிருக்கவில்லை. மீன் பிடிப்பவனும் மாட்டிக் கொண்டுள்ளான். இது மிகப் பெரிய பிரச்சினைகளில் ஒன்று. வார்த்தைகளுடன் வேலை செய்வது என்பது தீயுடன் விளையாடுவது போன்றது. ஏனெனில் வார்த்தைகள் அர்த்தத்தைவிட முக்கியமாகி அர்த்தத்தை இழந்து விட்டுள்ளன. அடையாளம் மிகவும் கனமாகி, பொருள் முற்றிலுமாய் தொலைந்து விட்டது. நீங்கள் மையத்தை மறந்துவிடும்படி உங்களை வெளிப்பரப்பு மயக்கி விட்டது.

இது உலகம் முழுவதும் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கிறது. கிறிஸ்து என்பது உட்பொருள், கிறிஸ்தவம்

என்பது ஒரு வார்த்தைதான் ; புத்தர் என்பது உட்பொருள், 'தாம்மபதா' என்பது ஒரு வார்த்தைதான். கிருஷ்ணர் என்பது உட்பொருள், கீதை ஒன்றுமேயில்லை. அது ஓர் பொறிதான். ஆனால் கீதை நினைவில் வைத்துக் கொள்ளப் பட்டுள்ளது. ஆனால் கிருஷ்ணர் மறக்கப்பட்டுவிட்டார். அல்லது நீங்கள் கிருஷ்ணரை நினைவு கூர்கிறீர்கள் என்றால், கீதையினால் தான் நீங்கள் அவரை நினைத்துக் கொள் கிறீர்கள். நீங்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றிப் பேசுகிறீர்கள் என்றால், அது ஆலயங்களால்தான். பிரசங்கங்களினால்தான், பைபிளினால்தான். வார்த்தைகளினால்தான் மக்கள் வலையைச் சுமக்கிறார்கள். அது ஒரு வலைதான் என்று தெரியாமலேயே பலர் வாழ்கிறார்கள், அது ஒரு பொறிதான் என்று உணராமல்.

புத்தர் ஒருகதையை அடிக்கடிச் சொல்வார்.

சில மனிதர்கள் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தனர். அந்த ஆறு ஆபத்தானது. மழைக்காலத்தில் கட்டாயம் வெள்ளம் பெருக்கெடுக்கும். படகுகள் தான் அவர்கள் உயிரைக் காப்பாற்றும்.

அவர்கள் மிகவும் புத்திசாலிகளாய் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் நினைத்தார்கள் : "இந்தப் படகு நம்மைக் காப்பாற்றியது, இப்போது இதை எப்படி நாம் விட்டுவிடுவது? இதுதான் நம் பாதுகாவலன். இதை விட்டு விட்டால் அது நன்றிகெட்ட செயலாகிவிடும்." அதனால் அவர்கள் அந்தப் படகை தங்கள் தலையில் சுமந்து கொண்டு நகரத்திற்குள் சென்றார்கள்.

சிலர் அவர்களைக் கேட்டார்கள் : "என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? யாரும் படகைச் சுமந்து செல்வதை நாங்கள் ஒருபோதும் பார்த்ததேயில்லை."

அவர்கள் சொன்னார்கள் : "நாங்கள் இந்தப் படகை எங்கள் வாழ்க்கையில் மீதமுள்ள நாட்களிலும் சுமக்க வேண்டும். ஏனெனில் இந்தப் படகுதான் எங்களைக் காப்பாற்றியது. நாங்கள் நன்றி கெட்டவர்களாயிருக்க முடியாது."

புத்திசாலிகளாகத் தோன்றும் மனிதர்கள் முட்டாள்களாகத்தான் இருப்பார்கள். அந்தப் படகிற்கு நன்றி கூறிவிட்டு அங்கேயே விட்டு வந்திருக்கலாம். அதைச் சுமந்து செல்லாதீர்கள். நீங்கள் உங்கள் தலையில் பல வகையான படகுகளைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் தலைமேல் இல்லாமலிருக்கலாம். ஆனால் உங்கள் தலைக்குள், உள்ளுக்குள் பாருங்கள். ஏணிகள், படகுகள், பாதைகள், வார்த்தைகள். இதுதான் உங்கள் தலைக்குள் அடங்கி இருப்பவை, உங்கள் மனதிற்குள்.

பாத்திரம் மிகவும் முக்கியமானதாகிவிட்டது. வாகனம் மிகவும் முக்கியமானதாகிவிட்டது. உடல் மிகவும் முக்கியமானதாகிவிட்டது. பிறகு நீங்கள் குருடனாகி விடுகிறீர்கள். வாகனம் உங்களுக்கு ஒரு செய்தியைக் கொடுக்கத்தான்- செய்தியைப் பெற்றுக் கொண்டபின் வாகனத்தை மறந்து விடுங்கள். தூதுவன் உங்களுக்கு செய்தியைத் தெரிவிக்க மட்டும்தான்- செய்தியை வாங்கிக் கொண்டபின் அந்தத் தூதுவனுக்கு நன்றி கூறுங்கள். ஆனால் உங்கள் தலையில் அவரைச் சுமக்காதீர்கள்.

முகமது மீண்டும், மீண்டும் வலியுறுத்துகிறார். கிட்டத்தட்ட அவர் வாழ்வின் ஒவ்வொரு நாளுமே, "நான் ஓர் தூதுவன்தான், பைகம்பெர். என்னை வணங்காதீர்கள். நான் தெய்விகத் தன்மையிலிருந்து செய்தியைச் சுமந்துவர மட்டும்தான். என்னைக் கவனிக்காதீர்கள். உங்களுக்குச் செய்தியனுப்பியுள்ள தெய்வத்தை மட்டுமே பாருங்கள்." ஆனால் முகமதியர்கள் மூலத்தை மறந்துவிட்டார்கள். முகமது முக்கிய வாகனமாகிவிட்டார்.

சுவாங்தஸு சொல்கிறார் :

வார்த்தைகளை மறந்துவிட்ட மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும்?
நான் பேசவிரும்பும் மனிதர்களில் அவனும் ஒருவன்.

வார்த்தைகளை மறந்த மனிதன், பேசத் தகுதியானவன். அவன் உண்மையான உள்மனத்தைப் பெற்றுள்ளான். அவனுக்குள் உயிரின் மையம் உள்ளது. அவனிடம் தகவல் உள்ளது. அவனுடைய அமைதி செய்தியை உள்ளடக்கியது. உங்களது பேச்சு செயலற்றது, வெறுமையானது. பேசும்போது நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் எதையும் குறிப்பிட்டுச் சொல்வதில்லை. உங்களிடம் செய்தியே இல்லை. சொல்வதற்கு எதுவுமேயில்லை. அவை அடையாளங்கள் தான். நீங்கள் பேசும் போது குப்பைகளை எறிகிறீர்கள். அவ்வளவுதான். இது உங்கள் மன அழுத்தத்தை வெளியே கொண்டு வரும் சிறந்த வழியாக வேண்டுமானால் இருக்கலாம். ஆனால் இது மற்றவர்களுக்கு ஆபத்தானது. வார்த்தைகளால் நிரப்பப்பட்டுள்ள மனிதனுடன் எப்படி உங்களால் பேசமுடியும்? சாத்தியமேயில்லை. வார்த்தைகள் அறையை விட்டுச் செல்வதில்லை. வார்த்தைகள் கதவைக் கொடுப்பதில்லை, திறப்பை. வார்த்தைகள் அதிகப்படியானவை. உங்களால் ஊடுருவ முடியாது.

வார்த்தைகளால் நிரப்பப்பட்டுள்ள ஒரு மனிதனுடன் பேசுவதென்பது சாத்தியமேயில்லாதது. அவனால் கவனிக்க முடியாது. ஏனெனில் கவனிப்பதற்கு ஒருவன் அமைதியாக இருக்க வேண்டும். கவனிப்பதற்கு ஒருவன் ஏற்றுக் கொள்பவனாக இருக்க வேண்டும். வார்த்தைகள் அதை அனுமதிப்பதில்லை - வார்த்தைகள் ஆக்ரமிப்பவை. அவை ஒருபோதும் ஏற்பவையாயிருக்க முடியாது. உங்களால் பேச முடியும். ஆனால் கவனிக்க முடியாது. உங்களால் கவனிக்க முடியவில்லையெனில், உங்கள் பேச்சு பைத்தியக்காரனின்

பேச்சு போலிருக்கும். ஏன் என்று தெரியாமலேயே நீங்கள் பேசுகிறீர்கள். என்ன என்று தெரியாமலேயே பேசுகிறீர்கள். நீங்கள் தொடர்ந்து பேசிக் கொண்டேயிருக்கிறீர்கள். ஏனெனில் அது உங்களுக்கு ஒருவகையான உணர்ச்சி வெளிப் பாடாயிருக்கிறது.

ஒரு நல்ல கலந்துரையாடலுக்குப் பின் நீங்கள் மிகவும் நன்றாக உணர்கிறீர்கள். நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாய் உணர் வதற்குக் காரணம் நீங்கள் விடுதலை உணர்வோடிருக்கிறீர்கள். உங்கள் பேச்சு மன இறுக்கத்தின் ஒரு பகுதிதான். அது உங்களிலிருந்து வரவில்லை. அது ஒரு தடைதான். அது ஒரு பாடலல்ல, தனக்கென்று ஒரு அழகைக் கொண்டி ருப்பதில்லை. அதனால்தான் எப்போதெல்லாம் நீங்கள் பேசுகிறீர்களோ, அப்போது அடுத்தவர் அலுப்பாய் உணர்கிறார்கள். ஆனால் ஏன் அவர் கவனிக்கிறார்? அவர் கவனித்துக் கொண்டிருக்கவில்லை. உங்களை அலுப்புற வைப்பதற்குக் காத்துக் கொண்டிருக்கிறார். தன் கையில் கடிவாளத்தை எடுத்துக் கொள்ளும் கணத்திற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்.

ஒரு பெரிய அரசியல் வாதிக்கு ஒருமுறை நேர்ந்ததை நான் கேள்விப்பட்டேன். பெரிய கட்சித் தலைவரான அவர் பேசிக் கொண்டிருந்தார். பேசினார், பேசினார், நள்ளிரவே ஆகிவிட்டது. கொஞ்சம் கொஞ்சமாக எல்லா பார்வையாளர் களும் சென்றுவிட்டிருந்தனர். ஒரே ஒருவர் மட்டும் அந்த அறையில் இருந்தார் அந்தத் தலைவர் அவருக்கு நன்றி தெரி வித்து விட்டுக் கூறினார். "நீ மட்டும் தான் உண்மை விரும்பி யாய்த் தோன்றுகிறாய், ஒரே ஒரு உண்மையான தொண்டன். நான் மிகவும் பெருமிதமாய் உணர்கிறேன். எல்லாருமே சென்றுவிட்ட பிறகும் நீ மட்டும இங்கே இருக்கிறாய்."

அந்த மனிதன் சொன்னார் : "ஏமாற்றமடைந்து விடாதே, நான் அடுத்த பேச்சாளன்."

நீங்கள் கவனிக்கும்போது, அடுத்த பேச்சாளராக நீங்கள் இருப்பதால் தான் கவனிக்கிறீர்கள். உங்களால் ஒருவனை சகித்துக் கொள்ளமுடிகிறது. இது ஒரு பேரம்தான். நீங்கள் அடுத்தவரை அலுப்புறச் செய்ய வேண்டுமெனில், அவர்கள் உங்களை அலுப்புறச் செய்வதையும் நீங்கள் அனுமதித்தாக வேண்டும். உண்மையிலேயே ஒருவன் உங்களை அலுப்புத் தட்டச் செய்கிறான் என்று நீங்கள் கூறினீர்கள் எனில், அவர் நீங்கள் அடுத்த பேச்சாளராக இருக்க உங்களை அனுமதிக்கவில்லை என்பதைத் தான் குறிப்பிடுகிறீர்கள். அவர் தொடர்ந்து பேசிக் கொண்டேயிருப்பதால், நீங்கள் பேசத் தொடங்குவதற்கு ஒரு இடைவெளியுமே இல்லை. அந்த மனிதன் உங்களுக்கு அலுப்புறச் செய்பவனாகத் தோன்றுகிறார். ஆனால் வார்த்தைகளால் நிரம்பியுள்ள அனைத்து மனங்களுமே அலுப்பைக் கொடுப்பவைதான்.

எப்போது நீங்கள் இதை உணர்வீர்கள்? ஏன் ஒருவன் அலுப்பாக உணர்கிறான்? ஏனெனில் அங்கே வார்த்தைகள் மட்டுமே இருக்கின்றன. அவற்றில் மீன்களே இல்லை. பொறிகள் மட்டும்தான். பயனற்றவை, அர்த்தமற்றவை. அங்கே ஒன்றுமில்லை. ஏதோ ஒன்றை கலகலவென்று சப்தம் எழுப்பச் செய்வது போல்தான், சப்தம் மட்டும் தான், எந்த அர்த்தமும் அதில் இல்லை. எப்போதெல்லாம் அர்த்த மிருக்கிறதோ, அப்போது அதில் அழகும் இருக்கிறது. அர்த்த மிருக்கும் போதெல்லாம் அதன் வழியாய் நீங்கள் வளர் கிறீர்கள். எப்போதெல்லாம் அர்த்தமிருக்கிறதோ, எப்போதெல்லாம் அர்த்தமுள்ள மனிதனாகிறீர்களோ, அப்போதெல்லாம் ஓர் புதியசக்தி உங்களுக்குள் பாய்கிறது. இது வீணானதல்ல, கற்றுக் கொள்ளல், அனுபவம். அமைதியாயிருக்கும் மனிதனைக் கண்டுபிடிப்பது கடினமான அபூர்வமான விஷயம்.

அமைதியாயிருக்கும் ஒரு மனிதனைக் கண்டுபிடித்து, அவனை உங்களுடன் பேசத் தூண்டினீர்கள் என்றால், நீங்கள்

அதிகம் பலன் பெறுவீர்கள் - ஏனெனில் மனம் வார்த்தைகளால் நிரப்பப்படாத போது, இதயமும் இதயமும் பேசிக் கொள்கின்றன. எல்லாமே அமைதியிலிருந்து வரும் போது, வார்த்தை அமைதியிலிருந்து பிறக்கும் போது, அது அழகாயிருக்கிறது. உயிர்ப்புடனிருக்கிறது. உங்களுடன் ஏதோ ஒன்றைப் பகிர்ந்து கொள்கிறது. வார்த்தை, வார்த்தைக் குவியலிலிருந்து வரும்போது, அது பைத்தியக்காரத்தனமாயிருக்கிறது. அது உங்களையும் பைத்தியமாக்கிவிடும்.

ஐந்து வயதுச் சிறுவனிடம் அவன் ஆசிரியர் கேட்டார், "உன் தங்கை பேசக் கற்றுக் கொண்டு விட்டாளா?"

அந்தச் சிறுவன் சொன்னான் : "ஆம், அவள் பேசக் கற்றுக் கொண்டுவிட்டாள். இப்போது அவளுக்கு அமைதியாயிருத்தலைக் கற்பித்துக் கொண்டிருக்கிறோம்."

இதுதான் பிரச்சினை, நீங்கள் வார்த்தைகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும், அது வாழ்க்கையின் ஒரு பகுதி. அதற்குப் பிறகு எப்படி அமைதியாயிருப்பது என்பதையும் கற்றுக் கொள்ள வேண்டும். எப்படி வார்த்தைகளற்று இருப்பது என்பதை. பல்கலைக் கழகங்கள், பெற்றோர்கள், ஆசிரியர்கள், இவர்களெல்லாம் உங்களுக்கு வார்த்தைகளைக் கற்றுத் தருகிறார்கள். பிறகு எப்படி அமைதியாயிருப்பது என்பதையும் உங்களுக்குக் கற்றுக் கொடுக்க ஓர் ஆசிரியரைக் கண்டுபிடிக்க வேண்டும்.

ஜெர்மனியிலிருந்து ஒரு பண்டிதர் வந்து ரமண மகரிஷியிடம் சொன்னார் : "நான் மிகத் தொலைவிலிருந்து உங்களிடமிருந்து ஏதாவது கற்றுக் கொள்ள வேண்டும் என வந்திருக்கிறேன்."

ரமணர் சிரித்துவிட்டுக் கூறினார் : "அப்படியென்றால் நீங்கள் தவறான இடத்திற்கு வந்துவிட்டீர்கள். ஏதாவது பல்கலைக் கழகத்திற்குச் செல்லுங்கள், ஏதாவது ஒரு

பண்டிதரிடம், ஏதேனும் ஒரு பெரிய பேராசியரிடம், அங்கே உங்களால் கற்றுக் கொள்ள முடியும். என்னிடம் நீங்கள் வந்தீர்கள் என்றால் இங்கு கற்றுக் கொள்வது சாத்தியமில்லை என்று புரிந்து கொள்ளுங்கள். நாங்கள் கற்றுக் கொள்ளாமலிருப்பதைத்தான் சொல்லித் தருகிறோம். கற்காமலிப்பது எப்படி என்றுதான் என்னால் உங்களுக்குச் சொல்லித் தர முடியும். எப்படி வார்த்தைகளை விலக்குவது, உங்களுக்குள் எப்படி இடத்தை உருவாக்குவது என்று. இந்த இடம்தான் தெய்விகம். இந்த இடம்தான் கடவுள்."

நீங்கள் எங்கே தேடிக் கொண்டிருக்கிறீர்கள்? வார்த்தைகளில், வேதங்களில்! அப்படியென்றால் ஒரு நாள் இல்லாவிட்டாலும் ஒருநாள் நீங்கள் நாத்திகவாதியாகி விடுவீர்கள். ஒரு பண்டிதரோ, வித்வானோ அதிக காலம் கடவுள் நம்பிக்கையுடன் இருக்கமாட்டார். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். எவ்வளவுதான் அறிந்திருந்தாலும், என்னவெல்லாம் பைபிளைப் பற்றி, கீதையைப் பற்றி, குரானைப் பற்றி அறிந்திருந்தாலும் ஒரு பண்டிதன் கடவுள் நம்பிக்கையை இழந்தே தீருவான். ஏனெனில் அவை தர்க்க ரீதியான வார்த்தைகளின் ஒருங்கிணைப்பு. ஒருநாள் இல்லாவிட்டாலும் ஒருநாள் அவன் கேட்பான், கடவுள் எங்கே? எந்த பைபிளாலும் பதில் சொல்ல முடியாது. எந்தக் கீதையாலும் விடையளிக்க முடியாது. பைபிள், கீதை, குரான் எவையானாலும் சரி, உங்கள் மனதில் அவை அதிகமாயிருக்கும்போது தெய்விகத் தன்மையைத் தவறவிட்டுவிடுகிறீர்கள். ஏனெனில் உங்கள் மனதிலிருக்கும் இடைவெளியெல்லாம் நிரப்பப் பட்டுவிட்டன. உங்களுக்குள் அதிகமாய் பொருட்கள் சேர்ந்து விட்டன. கடவுளால் நகரமுடியாது. உங்கள் மனம் முழுவதும் வார்த்தைகளாய் இருப்பதால் கடவுளால் உங்களைத் தொடர்பு கொள்ள முடியாமல் போகலாம். பிறகு கவனிப்பது என்பதே சாத்தியமில்லாமல் போய்விடும். உங்களால் கவனிக்க முடியாத போது எப்படி பிரார்த்தனை செய்ய

முடியும்? காத்திருப்பது சாத்தியமில்லாததாகி விடும். வார்த்தைகள் பொறுமையே இல்லாதவையே. அவை வெளியே வர உள்ளேயிருந்து தட்டிக் கொண்டிருக்கின்றன.

நான் ஒன்று கேள்விப்பட்டேன் :

ஒருமுறை காலை மூன்று மணிக்கு, முல்லா நஸ்ருதீன், மதுபான விடுதிக்குத் தொலை பேசியில் தொடர்பு கொண்டு கேட்டார் : "எப்பொழுது மதுக்கடையைத் திறக்கப் போகிறீர்கள்?"

மதுபான விடுதியிலிருந்தவர் சொன்னார் : "இந்த மாதிரியான விசாரணைக்கெல்லாம் இது நேரமல்ல. நீங்கள் எங்களின் வாடிக்கையாளர். நஸ்ருதீன் உங்களுக்குத் தெரியும். நாங்கள் காலை ஒன்பது மணிக்கு முன்னால் திறப்பதில்லை என்று. தூங்கச் செல்லுங்கள். காலை ஒன்பது மணி வரை காத்திருங்கள்."

ஆனால் பத்து நிமிடங்கள் கழித்து மீண்டும் தொலைபேசியில் கூறினார் : "மிகவும் அவசரம். எப்போது விடுதியைத் திறப்பீர்கள் என்று சொல்லுங்கள்."

இப்பொழுது அந்த மனிதன் வெறுப்பாகிவிட்டான். அவன் கூறினார் : "நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர் கள் என்று தெரியுமா? நான் சொன்னேன் ஒன்பது மணிக்கு ஒரு நிமிடம் முன்னால் கூடமுடியாது என்று. என்னைத் தொடர்ந்து தொந்தரவு செய்யாதே."

ஆனால் மறுபடியும் பத்து நிமிடங்கள் கழிந்து தொலைபேசி அடித்தது. அந்த ஆள் கேட்டார் : "உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? நீ ஒன்பது மணிவரை காத்திருந்து தான் ஆக வேண்டும்."

நஸ்ருதீன் கூறினார் : "உங்களுக்குப் புரியவில்லை. நான் பாரினுள் மாட்டிக் கொண்டிருக்கிறேன். உள்ளே வைத்துப் பூட்டப்பட்டுவிட்டேன். வெளியே வர விரும்புகிறேன்!"

உங்கள் மனது வார்த்தைகளால், கோட்பாடுகளால், வேதங்களால் அதிகம் சுமையேற்றப்பட்டு விட்டால், அவை தொடர்ந்து தட்டிக் கொண்டேயிருக்கும், வழிவிடு. நாங்கள் வெளியேவர வேண்டும்! மனம் வெளியேவர விரும்பும் போது, கடவுள் உங்களுக்குள் நுழைய முடியாது. மனம் வெளியே வர விரும்பும் போது அது உள்ளேவரும் எதற்காகவும் திறந்திருப்ப தில்லை. அது மூடப்பட்டுள்ளது. ஒரு வழிப் பாதையாகிறது- இருவழிப் பாதை சாத்தியமில்லாமல் போகிறது.

நீங்கள் முரட்டுத்தனத்தை வார்த்தைகளில் வெளிப் படுத்தும் பொழுது எதுவும் உங்களை ஊடுருவ முடியாது. காதலும் சரி, தியானமும் சரி, கடவுளும்சரி. இவையனைத்தும் உட்செல்லும் வழிப் பாதைகளிலிருக்கும் அழகான நிகழ்வுகள். நீங்கள் அமைதியாக இருக்கும் போது எந்த வார்த்தைகளும் வெளியேறத் துடிப்பதில்லை. நீங்கள் காத்திருக்கும் போது காத்திருக்கும் கணத்தில் அழகு நிகழ்கிறது. காதல் நிகழ்கிறது. பிரார்த்தனை நிகழ்கிறது. கடவுளைக் காண முடிகிறது. ஆனால் ஒரு மனிதன் வார்த்தைகளுக்கு அடிமையாயிருந்தால் அவன் எல்லாவற்றையும் தவற விடுகிறான். முடிவில் அவனிடம் வார்த்தைகள், கோட்பாடுகள், தர்க்கங்கள் எல்லாம் அடங்கிய பெரிய தொகுப்பு மட்டுமேயிருக்கும். மதிப்புள்ள எதுவும் இருக்காது. ஏனெனில் உட்பொருள் தவறிவிடுகிறது.

உங்களிடம் வலை இருக்கிறது. பொறி இருக்கிறது. ஆனால் அங்கு மீனே இல்லை. உண்மையாகவே நீங்கள் மீன் பிடித்துவிட்டீர்கள் என்றால், நீங்கள் உடனே வலையை எறிந்துவிட்டிருப்பீர்கள். யாருக்குக் கவலை? நீங்கள் உண்மை யிலேயே ஏணியைப் பயன்படுத்தியிருந்தீர்கள் என்றால், அதை மறந்துவிடுவீர்கள். யார் அதைப்பற்றி நினைப்பது? நீங்கள் அதற்கப்பால் சென்றுவிட்டீர்கள். அது பயன்படுத்தப்பட்டு விட்டது.

அதனால் எப்போது ஒருவனுக்கு எல்லாம் தெரிந்து விடுகிறதோ, அப்போது அவன் அறிவு மறக்கப்பட்டு விடுகிறது. இதைத்தான் நாம் ஞானம் என்கிறோம். அறிவாளியால் அறிவை, தகவல்களைக் கற்றுக் கொள்ளாமலிருக்க முடியும். அவன் தேவையில்லாதவற்றை எறிந்து விடுவான்.

சுவாங்தஸூ சொல்கிறார் :

வார்த்தைகளை மறந்துவிட்ட ஒரு மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும்?
நான் பேசவிரும்பும் மனிதர்களில் அவனும் ஒருவன்.

அவன் பேசத் தகுதியானவன். அவனைப் பேசத் தூண்டுவது எளிதாக இல்லாமலிருக்கலாம். ஆனால் அவனருகில் இருங்கள். அவன் அருகில் தொடர்பிருப்பவனைப் போல் உட்காருங்கள். ஏதாவது தொடர்பு ஏற்படும், ஆழமான ஒன்று. இரண்டு இதயங்களுடன் ஒன்றுக்குள் ஒன்று உருகிவிடும்.

ஏன் இந்த வார்த்தைகளில் மயக்கம்? ஏனெனில் அடையாளம் உண்மையைப் போல் தோன்றுகிறது. அது மறுபடி மறுபடி சொல்லப்பட்டால், இந்த வலியுறுத்தல் மூலம் நீங்கள் தானாகவே மயக்கப்படுகிறீர்கள். எதையாவது மீண்டும், மீண்டும் சொல்லும் போது உங்களுக்குத் தெரியாது என்பதையே மறந்துவிடுகிறீர்கள். இந்த வலியுறுத்தலே உங்களுக்குத் தெரியும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தி விடுகிறது.

முதல் முறையாக நீங்கள் கோயிலுக்குச் செல்லும் போது அறியாமையுடன் செல்கிறீர்கள். அப்போது இந்தக் கோயிலில் உண்மையாகவே ஏதாவது அடங்கியிருக்கிறதா, உண்மையிலேயே கடவுள் இருக்கிறாரா இல்லையா என்றெல்லாம் அனுமானிக்கிறீர்கள். ஆனால் தினமும் செல்லும் போது, மீண்டும் மீண்டும், சடங்குகளைச் செய்யும் போது, பிரார்த்தனைகளைத் தொடர்ந்து செய்யும் போது, குரு என்ன சொன்னாலும் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வருடமும் செய்யத் தொடங்கி விடுகிறீர்கள்.

நீங்கள் ஆரம்பத்திலிருந்த நிலையை, அனுமானிக்கும் மனநிலையை மறந்து விடுகிறீர்கள். தொடர்ச்சியான நிகழ்வுகளால் உங்கள் மனது இதுதான் கடவுள் வாழும் இடம். இதுதான் கோயில். இது கடவுளின் வீடு என்றெல்லாம் நினைக்கத் தொடங்குகிறது. இப்பொழுது நீங்கள் தோற்றங்களின் உலகிற்குச் சென்று விடுகிறீர்கள்.

எனவேதான் ஒவ்வொரு மதமும் குழந்தைக்கு எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் கற்றுக் கொடுக்க வேண்டும் என வலியுறுத்துகிறது. ஏனெனில் நீங்கள் குழந்தைப் பருவத்தைக் கடந்து விட்டால் பிறகு முட்டாள் தனத்திற்கு மாற்றுவது மிகவும் கடினம். மனவியலாளர்கள் சொல்கிறார்கள், அனைவரும் ஏழு வயதிற்கு முன் பிடிக்கப் பட்டுவிட வேண்டும். குழந்தை இந்து, கிறிஸ்தவன், முஸ்லிம் அல்லது கம்யூனிஸ்ட், நாத்திகன் என்று ஏதாவது ஒன்றில் நிலைப்படுத்தப் பட்டுவிட வேண்டும். இவை எதுவும் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. ஆனால் குழந்தையை ஏழு வயதிற்கு முன்னால் கட்டிப் போட்டு விடுங்கள். ஏழு வயதிற்குள் அந்தக் குழந்தை வாழ்க்கை முழுவதும் அறிந்து கொள்பவற்றில் ஐம்பது சதவீதத்தைக் கற்றுக் கொண்டுவிடும்.

இந்த ஐம்பது சதவீதம் மிகவும் அர்த்தம் நிறைந்தது. ஏனெனில் இதுதான் அடிப்படையாகிறது. எல்லா அறிவு அமைப்பும் அவன் குழந்தையாயிருக்கும் போது கற்றுக் கொண்டதன் அடிப்படையில்தான் அமைகின்றன. இந்தக் கால கட்டத்தில் ஏழு வயதிற்கு முன் குழந்தைக்கு எந்த தர்க்கமும் தெரியாது. எந்த வாதமும் தெரியாது. அவன் நம்புகிறான். அனுபவிக்கிறான். நம்புகிறான். அவனால் நம்பிக்கையில்லாமல் இருக்க முடியாது. ஏனெனில் அவனுக்கு நம்பிக்கை என்றால் என்ன? அவநம்பிக்கை என்றால் என்ன என்று தெரியாது.

குழந்தை பிறக்கும்போது விவாதம் செய்ய அறிவே இருக்காது. விவாதம் என்றால் என்ன என்றே தெரியாது.

நீங்கள் என்ன சொன்னாலும் அவனுக்கு அது உண்மையாகத் தான் தோன்றும். நீங்கள் அதையே திரும்பத் திரும்பச் சொன்னால் அந்தக் குழந்தை மயங்கிவிடும். இப்படித்தான் எல்லா மதங்களும் மனிதனைப் பயன்படுத்திக் கொண்டு விட்டன. குழந்தை ஏதாவது ஒரு பாதையில் நிலைக்க வலியுறுத்தப்படுகிறது. ஒரு முறை அந்தப் பாதை ஆழமாய் வேரூன்றி விட்டால் எதுவும் செய்ய முடியாது. பிற்காலத்தில் அந்தக் குழந்தை மதம் மாறினால் கூட, எதுவும் மாறாது. மாறாக அவனது கிறிஸ்தவம், இத்துத்துவமாகவேதான் இருக்கும், அடிப்படையின் காரணமாக.

அமேசான் அருகில் நரமாமிசம் சாப்பிடும் காட்டு மிராண்டி குலத்தவர் இருந்தனர். அவர்கள் தாங்கள் உறுப் பினர்களிலேயே பலரைக் கொன்று கொன்று சாப்பிட்டனர். கடைசியில் இருநூறு பேர் மட்டுமே மீதமிருந்தனர். அவர்கள் ஒருவரையொருவர் கொன்று சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். ஒரு அமைப்பு அங்கே வேலை செய்யச் சென்றது. அந்தக் குலத்தின் தலைவன் சரியான ஆங்கிலத்தில் பேசினார். அந்த அமைப்பின் மதத் தலைவரே ஆச்சரியப் பட்டுக் கேட்டார்: “என்ன! நீங்கள் இவ்வளவு சரியான ஆங்கிலத்தில் பேசுகிறீர் கள். இவ்வளவு சரியாக ஆக்ஸ் ஃபோர்டு உச்சரிப்பில் பேசுகிறீர்கள். ஆனால் இன்னும் காட்டு மிராண்டியாய் இருக்கிறீர்களே?’

அந்த மனிதன் சொன்னான் : “ஆம், நான் ஆக்ஸ் ஃபோர்டில் தானிருந்தேன், அதிகம் படித்தேன். ஆம், இன்னும் நாங்கள் காட்டு மிராண்டிக் கூட்டத்தில்தான் இருக்கிறோம். ஆனால் இப்போது நாங்கள் கத்தியையும், முள் கரண்டியையும் பயன்படுத்துகிறோம். இதை நான் ஆக்ஸ் ஃபோர்டில் தான் கற்றுக் கொண்டேன்.”

இந்த அளவு மாற்றம் வேண்டுமானால் நிகழலாம். அதிகமாய் ஒன்றுமிருக்காது. இந்துவை கிறிஸ்தவத்திற்கு

மாற்றலாம். ஆனால் அவனது கிறிஸ்தவம் இந்துத்துவத்தைப் போல் தானிருக்கும். கிறிஸ்தவனை இந்துவாக மாற்றலாம், ஆனால் அடிமனதில் அவன் கிறிஸ்தவனாகத்தான் இருப் பான். ஏனெனில் உங்களால் அடிப்படையை மாற்ற முடியாது. அவனை ஓர் குழந்தையாய் மாற்ற முடியாது. அவனை வெகுளியாய் மாற்ற முடியாது. அந்தக் கணம் சென்றுவிட்டது.

இந்த உலகம் எப்போதுமே தொடர்ந்து உண்மையான மதப்பற்றுள்ளதாய் இருக்குமெனில் நாம் கிறிஸ்தவத்தையும், இந்துத்துவத்தையும், இஸ்லாமியத்தையும், புத்த மதத்தையும் கற்றுக் கொடுக்க மாட்டோம். அது பெரிய குற்றங்களில் ஒன்றாகிவிடும். நாம் பிரார்த்தனைகளைக் கற்றுக் கொடுப் போம். தியானத்தைக் கற்றுக் கொடுப்போம். பிரிவுகளை அல்ல. வார்த்தைகளையும், நம்பிக்கைகளையும் போதிக்க மாட்டோம். வாழ்க்கை முறையைக் கற்றுக் கொடுப்போம். பேரின்பத்தைக் கற்றுக் கொடுப்போம். எப்படி ஒரு மரத்தைப் பார்ப்பது என்று கற்றுத் தருவோம். மரங்களுடன் எப்படி நடனமாடுவது என்று, எப்படி அதிக உணர்ச்சியுடன் இருப்பது என்று, எப்படி அதிக உயிர்ப்புடனிருப்பது, கடவுள் கொடுத்துள்ள கொடைகளை எப்படி அனுபவிப்பது என்று.. ஆனால் வார்த்தைகளை அல்ல. நம் நம்பிக்கைகளை அல்ல, தத்துவங்களையல்ல, சாஸ்திரங்களையல்ல. இல்லை நாம் அவர்களை ஆலயத்திற்கோ, கோயிலுக்கோ, மசூதிக்கோ வழி நடத்தமாட்டோம். ஏனெனில் இந்த இடங்கள் எல்லாம் ஊழலின் மூலங்கள். அவர்கள் மனம் கெட்டுவிடும். குழந்தை களை நாம் இயற்கைக்கு இட்டுச் செல்வோம். அதுதான் உண்மையான கோயில், உண்மையான ஆலயம்.

குழந்தைகளுக்கு மிதக்கும் மேகங்களைப் பார்க்கக் கற்றுக் கொடுப்போம். உதிக்கும் சூரியனை, இரவில் நிலவை, எப்படி அன்பு செய்வது என்று கற்றுக் கொடுப்போம். அன்பிற்கு எதிராகத் தடைகளை உருவாக்காமலிருக்கக் கற்றுக் கொடுப்போம். தியானம், பிரார்த்தனை, வெளிப்படை

யாக எந்தப் பாதுகாப்புக் கவசமுமின்றி இருக்கக் கற்றுக் கொடுப்போம். அவர்களின் மனங்களை மூட மாட்டோம். நாம் வார்த்தைகளைக் கற்றுக் கொடுப்போம். அதேசமயம் அமைதியையும் கற்றுக் கொடுப்போம். ஏனெனில் வார்த்தைகள் அடிப்படையாகி விட்டால் பிறகு அமைதி கடினமாகி விடும்.

நீங்கள் என்னிடம் வருகிறீர்கள். உங்கள் பிரச்சினை இதுதான் : அடிப்படையில் வார்த்தைகளே அதிகம் இருக்கின்றன. இப்பொழுது நீங்கள் தியானம் செய்யவும் அமைதியாயிருக்கவும் முயற்சி செய்கிறீர்கள். அடிப்படை எப்பொழுதுமே அங்கு இங்கிறது. நீங்கள் எப்போதெல்லாம் அமைதியாயிருக்கிறீர்களோ அப்போது அந்த அடித்தளம் வேலை செய்யத் தொடங்குகிறது. அதனால் நீங்கள் தியானம் செய்யும் போது அதிக விழிப்புடன் சிந்திக்கிறீர்கள்-சாதாரணமாய் உணர்வதைவிட அதிகமாய். ஏன்? என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது? நீங்கள் அமைதியாயிருக்கும் போது உள் நோக்கிச் செல்கிறீர்கள். உள்ளிருக்கும் குப்பைகளுடன் உணர்ச்சியைச் செலவழிக்கிறீர்கள். இது தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது. நீங்கள் தியானத்தில் இல்லாத போது நீங்கள் வெளியே செல்கிறீர்கள். வெளிப் புறமாகவே நீங்கள் உலகத்துடன் ஒன்றிப் போயிருக்கிறீர்கள். உங்களால் உள்ளே நடந்து கொண்டிருக்கும் உள் சத்தத்தைக் கவனிக்க முடியாது. உங்கள் மனம் அங்கேயில்லை.

சத்தம் அங்கு தொடர்ந்து இருந்து கொண்டுதானிருக்கிறது. ஆனால் உங்களால் அதைக் கேட்கமுடியாது. நீங்கள் நிரப்பப் பட்டிருக்கிறீர்கள். ஆனால் எப்போதெல்லாம் நீங்கள் கண்களை மூடி உள்ளுக்குள் கவனிக்கிறீர்களோ, அப்பொழுது அந்த பைத்தியக்கார விடுதி திறக்கிறது. உங்களால் பார்க்கவும், உணரவும், கேட்கவும் முடியும். பிறகு நீங்கள் பயப்படுகிறீர்கள். என்ன நிகழ்கிறது? நீங்கள் தியானத்தின் மூலம் அதிகம் அமைதியாகிக் கொண்டிருப்பதாக நினைக்கிறீர்கள்! இதுதான் நடக்கிறது எதிர்ப்பதமாக!.

ஆரம்பத்தில் இது நடந்தாகும். ஏனெனில் தவறான அடிப்படை உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சமுதாயம், பெற்றோர் , ஆசிரியர்கள், பல்கலைக் கழகங்கள், கலாசாரம், உங்களுக்குத் தவறான அடித்தளத்தைக் கொடுத்துள்ளன. ஏற்கெனவே நீங்கள் கலப்படம் செய்யப் பட்டுவிட்டீர்கள். உங்கள் மூலம் விஷமேற்றப்பட்டு விட்டது. இதுதான் பிரச்சினை. எப்படி உங்கள் விஷத்தை நீக்குவது ? அதற்கு நேரமாகும். அதிக கடினமான செயல்களில் ஒன்று, உங்களுக்குத் தெரிந்தவற்றிலிருந்து உங்களை வெளியே கொண்டு வருவதுதான்- எதுவும் கற்காத நிலைக்கு.

சுவாங்தஸு சொல்கிறார் :

வார்த்தைகளை மறந்துவிட்ட ஒரு மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும்?
நான் பேச விரும்பும் மனிதர்களில்
அவனும் ஒருவன்.

ரிஷிதான் பேசுவதற்குத் தகுதியானவர். ரிஷிதான் கவனிக்கப்படுவதற்குத் தகுந்தவர். ரிஷிதான் உடன் வாழ உகந்தவர்.

ரிஷி என்றால் என்ன? வெற்றுப் படகு - உள்ளே வார்த்தைகளே இல்லை. மேகங்களே இல்லாத வெற்று வானம். எந்த ஒலியுமில்லை. இரைச்சலுமில்லை. யாரும் பைத்தியமில்லை. உள்ளே எந்தக் குழப்பமுயில்லை. தொடர்ந்து இசைவுதானிருக்கும். சமநிலை, சமானம். தான் இல்லாதது போலவே வாழ்கிறார். அவர் அவ்விடத்தில் இல்லாதது போலவே இருக்கிறார். அவர் நகர்கிறார். ஆனால் அவருள் எதுவும் நகர்வதில்லை. அவர் பேசுகிறார். ஆனால் உள்ளே அமைதிதானிருக்கிறது. அது ஒருபோதும் பிரச்சினைக் குள்ளாவதில்லை. அவர் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார். ஆனால் அந்த வார்த்தைகள் வாகனங்கள் மட்டும்தான். அந்த வார்த்தைகளின் வழியாக, வார்த்தை

களுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒன்றை உங்களுக்கு அனுப்பு கிறார். நீங்கள் வார்த்தைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டீர்கள் எனில், அதை இழந்து விடுவீர்கள்.

நீங்கள் ரிஷியைக் கவனிக்கும் போது, அவரது வார்த்தைகளைக் கவனிக்காதீர்கள். அவை இரண்டாம்பட்சம் தான். மேலோட்டமானவை. வெளியே தெரிபவை. அவரைக் கவனியுங்கள். அவர் வார்த்தைகளைக் கவனிக்காதீர்கள். வார்த்தைகள் உங்களை வந்தடையும்போது அவற்றை ஒதுக்கி விடுங்கள். கடலைக் கடந்து விட்ட பயணி செய்வதைப் போல், அவர் படகை விட்டுவிட்டு சென்று விடுவார். படகை அங்கேயே விட்டு விட்டு சென்று விடுங்கள். நீங்கள் படகையும் சுமந்து சென்றால், நீங்கள் பைத்தியம்தான். பிறகு உங்கள் வாழ்க்கை முழுவதுமே சுமையாகிவிடும். அந்தப் படகால் நீங்கள் சுமையேற்றப் படுவீர்கள். படகு தலையில் சுமந்து செல்வதற்கல்ல. நன்றியுடன் நினையுங்கள். அது போதும். ஆனால் படகைத் தலையில் சுமந்து செல்வது அதீதம்.

எத்தனை படகுகளை உங்கள் தலையில் சுமக்க முடியும்? உங்கள் முழு வாழ்க்கையுமே இந்தப் பாரத்தால் ஒரே நிலையில் இருக்க வேண்டிவரும். உங்களால் பறக்க முடி யாது, மிதக்க முடியாது. ஏனெனில் நீங்கள் அந்த அளவிற்குச் சுமையைக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு வாழ்க்கையிலிருந்து மட்டுமல்ல, இந்த வாழ்க்கை இன்னும் பலவற்றிலிருந்து தேவையில்லாத எல்லாவற்றையும் சேர்த்து வைத்துக் கொண்டேயிருக்கிறீர்கள். பலனற்றவைகளை யெல்லாம். இது ஏன் நிகழ்கிறது? ஏதாவது ஆழமான காரணம் இருந்தாக வேண்டும், இல்லையெனில் எல்லாருமே இவ்வாறு செய்து கொண்டிருக்க மாட்டார்கள்.

ஏன் இது நிகழ்கிறது? முதலாவதாக வார்த்தைகள் தான் உண்மையானவை என்று நீங்கள் நினைக்கிறீர்கள்- கடவுள் என்ற வார்த்தைதான் கடவுள்; காதல் என்ற வார்த்தைதான்- காதல்- அந்த வார்த்தைதான் உண்மை. வார்த்தை உண்மை

அல்ல. வார்த்தை ஒரு அடையாளம் தான். அது குறிப்பிடுகிறது; சுட்டிக் காட்டுகிறது ; அது உண்மையல்ல. வார்த்தை தான் உண்மை என்று நீங்கள் நம்பத் தொடங்கி அதற்குள் சிக்கிக் கொண்டீர்கள் எனில் பிறகு யாராவது, 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று சொன்னால், நீங்கள் ஏமாற்றம் தான் அடைவீர்கள். ஏனெனில் அவன் உங்களைக் காதலிக்கிறேன் என்று சொல்லத்தான் செய்தான். நீங்கள் அவன் உங்களைக் காதலிக்கிறான் என்று நினைத்துக் கொள்கிறீர்கள். உங்களைப் பொறுத்தவரை வார்த்தைதான் உண்மை.

உங்களால் வார்த்தைகளில் இல்லாத உண்மையைப் பார்க்க முடியாவிட்டால், உங்கள் வாழ்க்கைப் பாதை முழுவதுமே ஏமாற்றம் அடைவீர்கள். எல்லா இடங்களிலும் நீங்கள் ஏமாற்றப்படுவீர்கள். ஏனெனில் நீங்கள் வார்த்தையை உண்மை என்று எடுத்துக் கொள்கிறீர்கள்.

பலர் என்னிடம் வந்து சொல்வார்கள் : 'இந்தப் பெண் என்னைக் காதலித்தாள், அதை அவளே சொன்னாள்.' 'இந்த மனிதன் என்னைக் காதலித்தான், இப்போது அந்தக் காதல் மறைந்து போய்விட்டது.' இவர்கள் இருவருமே வார்த்தைகளால் ஏமாற்றப்பட்டு விட்டனர்.

டேல் கார்னஜி ஒரு ஆலோசனை சொல்கிறார். நீங்கள் இருபது வருடம் மண வாழ்க்கையிலிருந்தாலும் உங்கள் மனைவியை மணம் கோரும் போது பயன்படுத்திய வார்த்தைகளை தினமும் சொல்லத் தவறாதீர்கள். தொடர்ந்து சொல்லுங்கள். ஒவ்வொரு நாள் காலையும் நீங்கள் மணம் கோரும் போது பயன்படுத்திய அதே வார்த்தைகளைச் சொல்லுங்கள். அந்த வார்த்தைகளை விட்டுவிடாதீர்கள். ஒவ்வொரு நாளும் சொல்லுங்கள் : 'உன்னைப் போல் யாருமே இல்லை. உலகிலேயே மிக அழகானவள் நீதான். நீ இல்லையென்றால் நான் இறந்து போய்விடுவேன்.' டேல் கார்னஜி சொல்கிறார். நீங்கள் உணராத போது கூட தொடர்ந்து சொல்லிக் கொண்டே யிருங்கள். ஏனெனில்

வார்த்தைகள் தானே உண்மையானவை. மனைவி ஏமாற்றப் படுவாள், கணவனும் ஏமாற்றப்படுவான். ஏனெனில் அவர்கள் இருவருமே வார்த்தைகளில் மட்டுமே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

உங்களுக்கு வேறெதுவும் தெரியாது. உண்மையான எதுவும் தெரியாது. எப்படி நீங்கள் உண்மையுடன் தொடர்பு கொள்ள முடியும்? யாராவது உங்களிடம் "நான் உன்னைக் காதலிக்கிறேன் " என்று சொல்லும் போது அவ்வளவுதான் முடிந்தது. யாராவது "நான் உன்னை வெறுக்கிறேன்" என்று சொல்லும் போது அதோடு முடிந்து விட்டது. வார்த்தை களை ஒதுக்கி வைத்துவிட்டு மனிதனைப் பாருங்கள், யாரா வது "நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று சொல்லும் போது வார்த்தைகளோடு சிக்கிக் கொண்டிருக்காதீர்கள். அவற்றை ஒதுக்கிவிட்டு விடுங்கள். மனிதனைப் பாருங்கள், அவனது அல்லது அவளது முழுமையை. பிறகு யாராலும் உங்களை ஏமாற்ற முடியாது. காதல் என்பது தீயைப் போன்றது. அதை உங்களால் பார்க்க முடியும், தொட முடியும். அது அங்கே இருக்கிறதா, இல்லையா என்று தெரிந்து கொள்ள முடியும்.

காதலை மறைக்க முடியாது. அது அங்கே இருந்தால், உண்மையாகவே இருந்தால், வார்த்தைகள் தேவையில்லை. யாராவது உண்மையாகவே உங்களைக் காதலிக்கும் போது அவன் "நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று சொல்ல மாட்டான். அது தேவையில்லை. காதல் என்பது போது மானது தான்- அது விற்பனை அல்ல. யாரையும் அது தூண்டி விடத் தேவையில்லை. சமாதானப்படுத்தத் தேவையில்லை. காதல் என்பதே போதுமானது. அது தீ போன்றது. காதலைப் போன்ற தீ வேறெதுவுமில்லை. அது ஜுவாலை. இருட்டில் தீ ஜுவாலை இருக்கும்போது அதைப் பற்றி நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டிய அவசியமேயில்லை. அது அங்கே இருக் கிறது. எந்த விளம்பரமும் தேவையில்லை. எந்த பிரச்சாரமும் தேவையில்லை.

வார்த்தைகளை உண்மையிலிருந்து பிரிக்க முயற்சியுங்கள். உங்களின் அன்றாட வாழ்க்கையில் யாராவது "நான் உன்னை வெறுக்கிறேன்" என்று சொன்னால் அந்த வார்த்தையை நம்பிவிடாதீர்கள். அது ஒரு கணத்தில் தோன்றியதாக இருக்கலாம். அது ஒரு அம்சமாக இருக்கலாம், வார்த்தைகளோடு செல்லாதீர்கள். இல்லையெனில் நீங்கள் வாழ்க்கைக்கே எதிரியாகி விடுவீர்கள். வார்த்தைகளால் நண்பர்களை உருவாக்கிக் கொண்டது போல், வார்த்தைகளால் எதிரிகளையும் ஏற்படுத்திக் கொள்வீர்கள். வார்த்தைகளுக்காகச் செல்லாதீர்கள். அந்த மனிதனுக்குள் பாருங்கள், கணகளுக்குள் பாருங்கள், முழுமையை உணருங்கள். அது ஒரு கணத்தின் வெளிப்பாடாக இருக்கலாம். நூற்றுக்கு தொண்ணூற்றொன்பது முறை ஒரு கணத்தின் செயலாகத் தானிருக்கும். ஏதாவது ஒரு செயலால் அவன் வேதனையடைந்திருக்கலாம், அதனால் "நான் உன்னை வெறுக்கிறேன்" என்று சொல்வதன் மூலம் அதை வெளிப்படுத்தியிருக்கலாம். காத்திருங்கள், முடிவு செய்து விட வேண்டாம். "இது என் எதிரி" என்று சொல்லி விடாதீர்கள். இப்படிச் சொன்னீர்கள் என்றால் நீங்கள் அடுத்தவரின் வார்த்தைகளால் ஏமாற்றப்பட்டு விடுவதில்லை. உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்கிறீர்கள். நீங்கள் "இது என் எதிரி" என்று சொல்லிவிட்டால் இந்த வார்த்தை விடாப்பிடியாக இருக்கும், நாளை ஒரு வேளை அவன் மாறிவிட்டால் கூட நீங்கள் மாறுவதற்குத் தயாராயிருக்க மாட்டீர்கள். உங்களுக்குள் நீங்கள் அதைச் சுமந்து கொண்டிருப்பீர்கள். நீங்கள் குறிப்பிட்டு விட்டதாலேயே நீங்கள் எதிரியை உருவாக்கி விடுவீர்கள். உங்கள் எதிரிகள் பொய், உங்கள் நண்பர்கள் பொய், ஏனெனில் வார்த்தைகள் உண்மையல்ல.

வார்த்தைகளால் ஒன்றே ஒன்று செய்ய முடியும். அவற்றைத் திரும்பத் திரும்பக் கூறினால் உண்மையின் தோற்றத்தை அவை கொடுக்கும். அடால்ஃப் உறிட்லர்

அவரது சுயசரிதையில் சொல்லுகிறார்: 'உண்மைக்கும் பொய்க்குமிடையே உள்ள ஒரே ஒரு வேறுபாடுதான் எனக்குத் தெரியும்- அது, பொய் திரும்பத் திரும்பச் சொல்லப் படும் போது உண்மையாகிவிடுகிறது.' அவருக்கு அனுபவத் தால் தெரிந்திருக்கிறது. அவர்தான் அவ்வாறு செய்திருக் கிறேன் என்று சொல்லியிருக்கிறார். அவர் தொடர்ந்து பொய்களைச் சொல்லியிருக்கிறார். அவற்றைத் தொடர்ந்து திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறார்.

ஆரம்பத்தில் அவை முட்டாள் தனமாகத் தோன்றி யிருக்கும். யூதர்களால் தான் ஜெர்மனி முதல் உலகப் போரில் தோற்கடிக்கப்பட்டது என்று சொல்லத் தொடங்கினார். அது முற்றிலும் தவறான அபத்தமான ஒன்று.

ஒரு முறை அவர் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த போது கேட்டார்: "ஜெர்மனியின் தோல்விக்கு யார் காரணம்?"

ஒருவன் எழுந்து நின்று சொன்னான் : "சைக்கிள் ஓட்டுபவர்கள்."

ஹிட்லருக்கு ஆச்சரியமாகிவிட்டது. அவர் கேட்டார் : "என்ன? ஏன்?"

அவன் கேட்டான் : "பிறகு ஏன் யூதர்கள்?" அவன் ஒரு யூதன். ஏன் யூதர்கள் என்று சொல்கிறீர்கள்?

ஹிட்லர் இறந்த போது கூட மறுபடியும் ஜெர்மனி தோற்கடிக்கப்பட்டு முற்றிலும் அழிக்கப்பட்டது. அவர் அது, ஸ்டாலின் சர்ச்சில், ரூஸ்வெல்ட் ஆகியோரால் தான் என்று நம்பவில்லை. தான் தோற்கடிக்கப்பட்டது தன்னைவிட மேலானவர்கள், சக்தி வாய்ந்த எதிரிகளால் என்று நம்ப வில்லை. அவரது கடைசி அபிப்ராயம் கூட அதுவாகவே தானிருக்கிறது. அது யூதர்களின் சதி, பின்னணியில் யூதர்கள் சதி வேலை செய்ததால் தான் ஜெர்மனி தோற்கடிக்கப்

பட்டுவிட்டது. ஜெர்மனி முழுமையும் அவரை நம்பியது- பூமியிலிருக்கும் மிகவும் புத்திசாலி மனிதர்கள்.

ஆனால் புத்திசாலி மனிதர்கள் முட்டாள்களாகவும் இருப்பார்கள். ஏனெனில் அவர்கள் வார்த்தைகளை நம்புகிறார்கள். அதுதான் பிரச்சனை. ஜெர்மானியர்கள் அதிபுத்திசாலிகள். அதிகம் படித்தவர்கள், அதிக அளவு பேராசிரியர்களையும், தத்துவ ஞானிகளையும் கொடுத்தவர் கள், முழு நாடுமே புத்திசாலியானது. எப்படி அடால்ஃப் உறிட்லர் போன்ற முட்டாள் மனிதனைத் தூண்டிவிட்டு ஆதரித்தது, அவரது வாதங்கள் தர்க்க ரீதியானவை?

ஆனால் இது அங்கே நிகழ முடியும். ஏனெனில் பேராசிரியர்களின் மண்ணில், புத்திசாலிகளின் , சான்றோர் களின் இடத்தில், அதிபுத்திசாலிகள் என்று அழைக்கப்படு வோரிடம் வார்த்தை அடிமைத்தனம் இருக்கிறது. நீங்கள் ஒரு வார்த்தையைத் திரும்பத் திரும்பத் திரும்பக் கூறினால், மீண்டும் மீண்டும் அடித்துச் சொன்னால் மக்கள் கவனிப்பார்கள். திரும்பத் திரும்பச் சொல்லப்படும் போது இதுதான் உண்மை என்று உணரத் தொடங்கிவிடுவார்கள். தொடர்ந்து பொய்களைச் சொல்லிக் கொண்டிருந்தால் அது உண்மையாகி விடும். திரும்பத் திரும்பச் சொல்லுதல் பொய்யை உண்மையாக மாற்றும் ஒரு வழியாகும். ஆனால் உங்களால் பொய்யை உண்மையாக மாற்ற முடியுமா? வெளித் தோற்றத்திற்கு முடியும் முயற்சி செய்யுங்கள். எதையாவது ஒன்றைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டேயிருங்கள், அதை நம்பத் தொடங்கிவிடுவீர்கள். நீங்கள் நினைப்பது போல் அத்தனை துன்பமயமாய் நீங்கள் இல்லாமல் இருக்கலாம், ஏனெனில் நீங்கள் திரும்பத் திரும்ப "நான் துன்பத்திலிருக்கிறேன், நான் துன்பத்திலிருக்கிறேன்," என்று சொல்லிக் கொண்டேயிருந்தால், கூடிய விரைவில் நீங்கள் துன்பத்திலிருப்பதைப் போலவே தோற்றம் அளிப்பீர்கள்.

சாதாரணமாய் உங்கள் துன்பத்தை உற்றுப்பாருங்கள். நீங்கள் உண்மையாகவே துன்பத்திலிருக்கிறீர்களா? நீங்கள் முகத்தில் வெளிப்படுத்துவதைப் போல் அந்த அளவிற்கு நரகத்திலா இருக்கிறீர்கள்? மறுபடியும் யோசித்துப் பாருங்கள். உடனடியாக நீங்கள் துன்பமாயிருப்பதைப் போல் நினைக்க மாட்டீர்கள், ஏனெனில் நீங்கள் வெளிப்படுத்து வதைப் போல துன்பகரமாய் யாராலுமே இருக்க முடியாது. சாத்தியமேயில்லை. கடவுள் அதை அனுமதிக்க மாட்டார். இது திரும்பத் திரும்ப நினைத்தலால் ஏற்பட்டது. சுய மனோவசியம்.

எமிலேக்யூ என்ற ஃபிரெஞ்சு மனநல நிபுணர் ஒரு வைத்திய முறையைக் கையாண்டார். அவரது வழிமுறை திரும்பத் திரும்பச் சொல்லுதல் தான். ஆலோசனை, மனவ சியம். நீங்கள் அவரிடம் சென்று சொல்லலாம், ‘எனக்குத் தலைவலி, தீராத தலைவலி, எந்த மருந்தினாலும் பயனில்லை. நான் எல்லா மருத்துவ முறைகளையும் கையாண்டுவிட்டேன். இயற்கை வைத்தியம் உட்பட ஆனால் எதனாலும் பயனில்லை.’

அவர் சொல்வார் : வைத்தியம் செய்ய வேண்டிய அவசியமேயில்லை. ஏனெனில் உங்களுக்குத் தலைவலியே இல்லை. நீங்கள் அதை நம்பிவிட்டீர்கள். இந்த மருத்துவர் அந்த மருத்துவர் என்று எல்லாரிடம் சென்றீர்கள். அவர்கள் எல்லாரும் உங்கள் நம்பிக்கைக்குக் காரணமாகிவிட்டார்கள். தலைவலி அங்கே இருந்தது. ஏனெனில் அவர்கள் உங்கள் தலைவலியை நம்பாவிட்டால் அவர்களால் வாழ முடியாது. மருத்துவர்களால் உங்களுக்குத் தலைவலி இல்லை என்று சொல்ல முடியாது. நீங்கள் மருத்துவரிடம் செல்லும்போது உங்களுக்கு எதுவும் இல்லையென்றாலும் அவர் ஏதாவது ஒன்றைக் கண்டு பிடித்துவிடுவார். அப்போதுதான் அவரால் வாழ முடியும்.’

க்யூவுடன் நீங்கள் பேசுவது உடனே உங்களுக்கு உதவியாயிருக்கும். அவருடன் பேசுவதினாலேயே ஐம்பது சதவீதம் தலைவலி. உங்களை விட்டுப் போய்விடும், எந்த மருந்தும் இல்லாமலேயே. அவர் உங்கள் முகத்தில் தோன்றும் அமைதியை உணர்ந்த பின்னர் தன்னுடைய வழிமுறை வேலை செய்துவிட்டது என்பதைத் தெரிந்து கொள்வார். பிறகு அவர் உங்களுக்கு ஒரு வழிமுறையைக் கற்பிப்பார். எப்போதெல்லாம் உங்களுக்கு நினைவு வருகிறதோ, பகல், இரவு எப்போது வேண்டுமானாலும் தொடர்ந்து சொல்ல வேண்டும் எனக்குத் தலைவலி இல்லை என்று. ஒவ்வொரு நாளும் காலை எழுந்தவுடன் சொல்ல வேண்டும். "நான் நாளுக்கு நாள் குணமாகிக் கொண்டிருக்கிறேன்." இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்குள் தலைவலி மறைந்துவிடும்.

உண்மையான தலைவலி இந்த வழியில் மறைய முடியாது. முதலாவதாக தலைவலி வார்த்தைகளால் உருவாக்கப்படுகிறது. முதலில் நீங்கள் உங்களுக்குத் தலைவலி இருப்பதாகத் தானாக மனவசியம் செய்து கொள்கிறீர்கள். பிறகு அந்த வசியத்திலிருந்து நீங்களே விலகுகிறீர்கள். உண்மையான நோயால் மறைய முடியாது. ஆனால் உங்கள் நோய் தொண்ணூறு சதவீதம் உண்மையற்றவை. வார்த்தைகளால் நீங்கள் உருவாக்கிக் கொண்டீர்கள். க்யூ ஆயிரக்கணக்கானவர்களுக்கு உதவியிருக்கிறார். மெஸ்மர் ஆயிரக்கணக்கானவர்களைக் குணப்படுத்தியுள்ளார். நீங்கள் நோயற்றவர் என்ற எண்ணத்தைக் கொடுப்பதன் மூலம் சுய மனவசியத்தின் மூலம் நோயைக் குணப்படுத்தி விடலாம் என்பதை இது குறிப்பிடவில்லை. நீங்கள் சிறந்த சுய மனோவசியம் செய்பவர் என்றால் ஏற்கெனவே நீங்கள் நோயில் இருக்கிறீர்கள் என்று பொருள்! நீங்கள் அவர்களை நம்புகிறீர்கள். மருத்துவர்களால் உங்கள் நோய்கள் எல்லாம்

மன ரீதியானவை தான் என்று சொல்ல முடியாது. அவ்வாறு சொன்னால் நீங்கள் கவலையாக உணர்வீர்கள். உடனே வேறு மருத்துவரிடம் சென்றுவிடுவீர்கள். எப்போதெல்லாம் மருத்துவர் உங்களுக்குப் பெரிய நோய் உள்ளது, மிகவும் தீவிரமான நோய் என்று சொன்னால் நீங்கள் மிகவும் சந்தோஷ மடைகிறீர்கள்- ஏனெனில் உங்களைப் போன்ற மனிதனெல்லாம். உயர்ந்த யாரோவாய் இருப்பவரெல்லாம் ஒரு பெரிய நோயைப் பெற்றிருக்க வேண்டும். சிறிய நோய்களெல்லாம் சிறிய மனிதர்களுக்கு, சாதாரண நோய்கள் எல்லாம் சாதாரணமானவர்களுக்கு. புற்றுநோய், காசநோய் அல்லது வேறு பெரிய நோய்களைப் பெற்றிருக்கும் போது நீங்கள் உயர்வாய் உணர்கிறீர்கள். யாரோ ஒருவராய். நோயை களைப் பொறுத்த அளவிலாவது நீங்கள் சாதாரணமானவர் இல்லை.

ஒரு மருத்துவர், அப்போதுதான் படிப்பை முடித்தவர் வீட்டிற்குத் திரும்பினார். அவர் தந்தையும் மருத்துவர் தான். வேலை செய்து வேலை செய்து மிகவும் சோர்வடைந்த அவர், விடுமுறை எடுத்துக் கொண்டு செல்ல நினைத்தார். அவர் சொன்னார் : "எனக்குக் குறைந்த பட்சம் மூன்றுவார கால மாவது ஓய்வு தேவை. நான் மலைப்பகுதிக்குச் செல்கிறேன். அதனால் என் வேலையை நீ தொடர்ந்து செய்."

மூன்று வாரங்கள் கழித்து தந்தை திரும்பி வந்தவுடன் மகன் சொன்னான் : "நான் உங்களுக்கு ஆச்சரியமான செய்தி ஒன்றைச் சொல்கிறேன். வருடக்கணக்காக நீங்கள் வைத்தியம் பார்த்தும் குணமாகாத பெண் ஒருத்தியை மூன்றே நாட்களில் நான் குணப்படுத்தி விட்டேன்."

தந்தை அவனது தலையில் அடித்து விட்டுக் கூறினார் : "முட்டாளே ! அந்தப் பெண்தான் உன் படிப்பிற்கு உதவி னாள்; அவள் மூலமாகவே என் குழந்தைகள் எல்லாரையும் படிக்க வைத்துவிடலாம் என்று நான் நினைத்தேன். அவளது

வயிற்றுவலி உண்மையானதல்ல. நான் மலையில் இருக்கும் போது அந்தப் பெண்ணைத் தொடவேண்டாம் என்று உன்னிடம் சொல்லிவிட்டு வர வில்லையே என்று வருத்தப்பட்டேன், அவள் மிகவும் பணக்காரி. அவளுக்கு வயிற்றுவலி தேவையாயிருந்தது. அவளுக்கு நான் உதவிக் கொண்டிருந்தேன். பல வருடங்களாக நம் வருமானத்திற்கு அவள் மூலகாரணமாக இருந்து வந்தாள்."

தொண்ணூறு சதவீத நோய்கள் மனரீதியானவை. அவற்றை மந்திரங்களால் குணப்படுத்திவிட முடியும். ஆலோசனைகளால் குணப்படுத்திவிட முடியும். சத்யசாய் பாபாவால் குணப்படுத்திவிட முடியும். ஏனெனில் முதலாவதாக அவற்றை உருவாக்குவதன் மூலம் ஒரு அற்புதத்தை நிகழ்த்தி விட்டீர்கள். இப்போது யாராலும் குணப்படுத்திவிட முடியும்.

தொடர்ந்து சொல்லப்படும் வார்த்தைகள் உண்மையை உருவாக்கி விடுகின்றன. இந்த உண்மை ஒரு பிரமைதான், இது ஒரு மாயை. அனைத்து வார்த்தைகளும் மனதிலிருந்து மறைந்து விடும் வரை உங்களால் உண்மை நிலைக்கு வர முடியாது. ஒரே ஒரு வார்த்தையால் கூட மாயையைத் தோற்று வித்துவிட முடியும். வார்த்தைகள் உயர்ந்த வலிமையான சக்தி. ஒரே ஒரு வார்த்தை உங்கள் மனதிற்குள் இருந்தால் கூட உங்கள் மனம் ஏதுமற்று, வெறுமையாக இல்லை. எவற்றை யெல்லாம் நீங்கள் பார்க்கிறீர்களோ, உணர்கிறீர்களோ எல்லாம் வார்த்தை மூலம்தான். வார்த்தை உண்மையை மாற்றிவிடும்.

நீங்கள் முற்றிலுமாக வார்த்தையே இல்லாமல் எண்ணங்களே இல்லாமல் இருக்க வேண்டும். நினைவு மட்டுமே உங்களுக்கிருக்க வேண்டும்.

நீங்கள் நினைவுடன் மட்டுமே இருக்கும் போது, படகு வெறுமையாயிருக்கிறது. உண்மை உங்களுக்கு வெளிப்படு

கிறது. ஏனெனில் நீங்கள் எதையும் திரும்பச் சொல்வதில்லை. எதையும் கற்பனை செய்து கொள்வதில்லை. நீங்கள் உங்களுக்கே சுய மனோவசியம் செய்து கொள்வதில்லை. அப்போதுதான் உண்மை தோன்றுகிறது. வெளிப்படுகிறது.

**சுவாங்தஸூ சரிதான். அவர் சொல்கிறார் :**

வார்த்தைகளை மறந்துவிட்ட ஒரு மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும்?
நான் பேசவிரும்பும் மனிதர்களில்
அவனும் ஒருவன்.

மீன் பொறியின் நோக்கம்
மீனைப் பிடிப்பது தான்...

நீங்கள் நோக்கத்தை முற்றிலுமாய் மறந்து விடுகிறீர்கள். நீங்கள் பல மீன் பொறிகளை சேகரித்து வைத்திருக்கிறீர்கள். சதா அவற்றைப் பற்றியே கவலைப் பட்டுக் கொண்டிருக் கிறீர்கள். யாராவது உடைத்து விடுவார்களோ, திருடி விடு வார்களோ என்று. மீனைப் பற்றி சுத்தமாக மறந்துவிடுகிறீர்கள்.

மீன் பொறியின் நோக்கம்
மீனைப் பிடிப்பது தான்.
மீன்கள் பிடிக்கப்பட்டவுடன்
அந்தப் பொறி மறக்கப்பட்டு விடுகிறது.

நீங்கள் பொறியை மறக்க முடியவில்லை என்றால், அந்த மீன் இன்னும் பிடிக்கப்பட வில்லை என்று பொருள். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், நீங்கள் தொடர்ந்து அந்தத் தூண்டிலைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் அது மீன்கள் பிடிபடவில்லை என்பதைக் காட்டுகிறது. நீங்கள் முற்றிலுமாய் அவற்றைப் பற்றி மறந்து விடுகிறீர்கள். மீன் தூண்டிலையே கெட்டியாகப் பற்றிக் கொண்டு அவற்றைக் காதலிக்கவே தொடங்கி விடுகிறீர்கள்!.

ஒருமுறை என் பக்கத்து வீட்டில் ஒரு பேராசிரியர் இருந்தார். வார்த்தைகள் அடங்கிய மனிதர். அவர் ஒரு கார் வாங்கினார். தினமும் காலையில் அதைச் சுத்தம் செய்வார். அது எப்போதுமே கடையில் இருப்பது போல் புத்தம் புதிதாக, காட்சிப் பொருளாகவே தானிருக்கும். ஒருபோதும் அவர் அதை சாலைக்கு எடுத்துச் சென்றதேயில்லை. வருடக்கணக்காக நான் அதைக் கவனித்தேன். தினமும் காலையில் அதைத் துடைத்து சுத்தம் செய்ய அதிக சிரத்தை எடுத்துக் கொள்வார்.

ஒருமுறை நாங்கள் இருவரும் ஒரே இரயில் பெட்டியில் பயணம் செய்தோம். அதனால் நான் கேட்டேன் : "காரில் ஏதாவது பிரச்சினையா? ஒரு போதும் அதை வெளியில் எடுத்து வருவதேயில்லையே? அது எப்போதும் உங்கள் கார் நிறுத்துமிடத்திலேயே உள்ளதே."

அவர் சொன்னார் : "இல்லை, நான் அதைக் காதலிக்கத் தொடங்கிவிட்டேன். நான் அதை மிகவும் நேசிப்பதால் அதை வெளியே எடுத்து வந்தால் ஏதாவது தவறு நேர்ந்து விடுமோ என்று பயப்படுகிறேன். விபத்து, கீறல், ஏதாவது தவறு நேர்ந்து விடலாம், அதைப்பற்றி நினைப்பதைக் கூடத் தாங்கிக் கொள்ள முடியவில்லை."

கார், வார்த்தை, தூண்டில் இவை வழிதான். முடிவில்லை. நீங்கள் அவற்றைக் காதலிக்கத் தொடங்கி விட்டால், அதை.ஒரு போதும் பயன்படுத்வே மாட்டீர்கள்.

நான் ஒரு வீட்டில் தங்கியிருந்தேன். அந்த வீட்டுப் பெண்மணியிடம் முன்னூறு சேலைகள் இருந்தன. ஆனால் அவள் எப்போதுமே இரண்டே இரண்டு வேலைகளை மட்டுமே பயன்படுத்துவாள். மற்ற சேலைகளை விழாக்களுக்காகப் பாதுகாத்து வைத்திருப்பாள். எப்போது விழாக்கள் வரும்? எனக்குத் தெரிந்தவரை அவளை பதினைந்து வருடங்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்,

சிறப்புத் தருணமோ, விழாக்களோ அவளுக்கு இன்னும் வரவில்லை. இனி வரப் போவதுமில்லை. ஏனெனில் நாளுக்கு நாள் அவளுக்கு வயதாகிக் கொண்டிருக்கிறது . மிகவிரைவில் அல்லது கொஞ்ச காலத்திற்குப் பிறகு அவள் இறந்து விடுவாள். அந்த முன்னூறு சேலைகளும் வாழும்.

என்ன நடந்தது? சேலைகளைக் காதலித்தாளா? நீங்களும் பொருட்கள் மேல் காதல் கொள்ள முடியும். மனிதர்கள் மேல் காதல் கொள்வது கடினம். பொருட்களுடன் காதல் கொள்வது எளிது. ஏனெனில் பொருட்கள் இறந்து போனவை. நீங்கள் அவற்றைக் கையாள முடியும். சேலைகள் ஒருபோதும் சொல்லாது : "நீ எங்களை அணிந்துகொள்! நாங்கள் வெளியே வந்து சுற்றிப் பார்க்க விரும்புகிறோம்." கார் ஒருபோதும் சொல்லாது : "என்னை ஓட்டிச் செல், எனக்கு மிகவும் அலுப்பாயிருக்கிறது."

மனிதர்களுடன் இது கடினம். அவர்கள் வலியுறுத்து வார்கள், கேட்பார்கள், வெளியே செல்ல விரும்புவார்கள், நிறைவேற்றிக் கொள்ள வேண்டிய பல ஆசைகளைக் கொண்டிருப்பார்கள். நீங்கள் மனிதர்களுடன் காதலில் ஈடுபடும்போது அங்கு எப்போதுமே கலவரம் ஏற்படுகிறது. அதனால் புத்திசாலிகள் எப்போதுமே மனிதர்களைக் காதலிக்க மாட்டார்கள். பொருட்கள் மேல்தான் காதல் வசப்படுவார்கள். வீடு, கார், துணிகள். அவை எப்போதுமே எளிதானவை. கையாள முடிபவை. நீங்கள்தான் எப்போதுமே எஜமானாக இருப்பீர்கள். அவை ஒருபோதும் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்காது. அல்லது நீங்கள் மனிதனைக் காதலித்தால் உடனே அவனை ஒரு பொருளாக உயிரேயில்லாத பொருளாக மாற்றிவிட முயற்சிப்பீர்கள். மனைவி ஒரு இறந்த பொருள், கணவன் ஒரு இறந்த பொருள், அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் சித்ரவதை செய்கின்றனர். ஏன் அவர்கள் ஒருவரையொருவர் சித்ரவதை

செய்ய வேண்டும்? அதில் என்ன இருக்கிறது? சித்ரவதையின் மூலம் அடுத்தவரை இறந்து போனதாக மாற்றி விடுகிறீர்கள். மற்றவர் ஒரு பொருளாக கையாளப்படக் கூடியதாக ஆகி விடுகிறார். பிறகு அவர்கள் கவலைப்படுவதில்லை.

இரண்டு மணமான பெண்கள் புத்தகக் கடையின் ஜன்னலைப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒருத்தி மற்றவளிடம் சொன்னாள் : "அங்கே பார், ஒரு புத்தம் இருக்கிறது, 'எப்படி உங்கள் கணவனை சித்ரவதை செய்வது' என்று."

இன்னொரு பெண் கொஞ்சம் கூட விருப்பம் காண்பிக்கவில்லை. அந்தப் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அவள் சொன்னாள் : "எனக்கு அது தேவையில்லை, எனக்கென்று ஒரு தனிப்பட்ட வழி இருக்கிறது."

ஒவ்வொருவருக்கும் அடுத்தவரைச் சித்ரவதை செய்ய பிரத்யேகமான சில வழிகள் உள்ளன. ஏனெனில் சித்ரவதையின் மூலம், அழிவின் மூலம் மட்டுமே ஒரு மனிதனைப் பொருளாக மாற்ற முடியும்.

ஒருமுறை முல்லா நஸ்ருதின் ஒரு காப்பிக் கடைக்குள் மிகவும் கோபத்துடன் வெறியுடன் நுழைந்து கேட்டார் : "என் மனைவியை அசிங்கமான வயதான கிழவி என்று யாரோ அழைத்ததாகக் கேள்விப்பட்டேன். யார் அது?"

ஒருவன் எழுந்து நின்றான். மிகவும் உயரமாய், வலிமையாய், பூதம் போன்ற தோற்றத்திலிருந்தான். அவன் சொன்னான் : "நான்தான் உன் மனைவியைப் பற்றி அவ்வாறு சொன்னேன், என்ன அதற்கு?"

அந்த ஆளைப் பார்த்தவுடன் நஸ்ருதின் உடனே அமைதியானார். அவன் மிகவும் ஆபத்தானவன். அவர் அவனிடம் சொன்னார் : "நன்றி, என் அபிப்ராயமும் இது

தான். ஆனால் அவ்வாறு சொல்வதற்கான தைரியம் என்னிட மில்லை. நீ அதைச் செய்துவிட்டாய். மிகவும் துணிச்சலான மனிதன் தான்."

உறவில் என்ன நிகழ்கிறது? ஏன் அது எப்போதும் அசிங்கமாயிருக்கிறது? ஏன் காதலிப்பது என்பது சாத்திய மேயில்லாமல் போகிறது? ஏன் எல்லாமே விஷமாயிருக் கிறது? ஏனெனில் மனம் எப்போதுமே பொருட்களைக் கையாள விரும்புகிறது. ஏனெனில் பொருட்கள் எதுவுமே எதிர்க்காது. அவை எப்போதுமே கீழ்ப்படிகின்றன. ஒரு போதும் கீழ்ப்படியாமலிருப்பதில்லை. ஒரு மனிதன் உயிருடனிருக்கிறான். அவன் என்ன செய்யப் போகிறான் என்பதை உங்களால் முன்கூட்டியே சொல்லமுடியாது. உங்களால் கையாள முடியாது. அடுத்தவரின் சுதந்திரம் உங்களுக்குப் பிரச்சினையாகிவிடும்.

காதல் என்பது ஒரு பிரச்சினைதான். ஏனெனில் அடுத்தவர் சுதந்திரமாயிருப்பதை உங்களால் அனுமதிக்க முடியாது. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் உண்மையாகவே காதலித்தால் அடுத்தவரை முழுச் சுதந்திரத்துடன் செயல்பட எப்போது அனுமதிக்கிறீர்களோ அப்போதுதான் அங்கு உண்மையான காதல் என்பது சாத்திய மாகும். ஆனால் அப்போது நீங்கள் சொந்தம் கொண்டாட முடியாது. உங்களால் எதையும் கணிக்க முடியாது. உங்களால் பாதுகாப்பாய் உணரமுடியாது. பிறகு கணத்திற்கு கணம்தான் செயல்பட முடியும். மனது திட்டத்தை விரும்புகிறது, பாதுகாப்பாய் இருக்க.

மனம், வாழ்க்கை ஒரு பாதையிலேயே செல்ல வேண்டு மென விரும்புகிறது. ஏனெனில் மனம்தான் உங்களிட மிருக்கும் உப்பு சப்பற்ற விஷயம். நீங்கள் ஓர் ஆறு எனில் அது ஒரு பனிப்பாறை போன்றது. உங்கள் மனம் ஒரு பனிப்பாறை போன்றது தான். உங்களிடமிருக்கும் உறைந்து போன பகுதி,

அது உங்கள் முழுவதையுமே உறைந்து போகச் செய்யவிரும்பு கிறது, அப்போதுதான் அங்கு பயமிருக்காது. எப்போதெல்லாம் புதிதாய் ஒன்று இருக்கிறதோ, அங்கே பயமிருக்கிறது. பழையதுடன், பயமிருப்பதில்லை. மனம் எப்போதுமே பழையவற்றுடன் மகிழ்ச்சியாயிருக்கிறது.

அதனால் மனம் எப்போதுமே பழைமையாயிருக்கிறது. ஒருபோதும் புரட்சியாயிருப்பதில்லை. ஒருபோதுமே புரட்சியான மனம் என்று ஒன்றிருந்ததில்லை. மனதால் புரட்சியாய் இருக்க முடியாது. புத்தர் புரட்சியானவர், சுவாங்தஸூ புரட்சியானவர். ஏனெனில் அவர்களுக்கு மனங்களில்லை. லெனின் புரட்சியாளர் அல்ல. ஸ்டாலின் முற்றிலுமாய் இல்லை. அவர்களால் இருக்கவும் முடியாது. மனமுடையவர்களால் எப்படி புரட்சியாயிருக்க முடியும்? மனம் எப்போதுமே பழமையானது. மனம் எப்போதுமே உறுதி செய்து கொள்ள விரும்புவது, ஏனெனில் மனம்தான் உங்களுக்குள்ளிருக்கும் இறந்துபோன பகுதி. இது புரிந்து கொள்ளப் பட வேண்டும்.

உங்கள் உடலில் ஏராளமான இறந்து போன பகுதிகள் உள்ளன. உங்கள் தலைமுடி இறந்தது தான். அதனால் தான் வலி இல்லாமல் அதை வெட்டிவிட முடிகிறது. உங்கள் நகங்கள் இறந்தவைதான் ; அதனால்தான் எந்த வலியும், வேதனையும் இல்லாமல் அவற்றை வெட்டி விட உங்களால் முடிகிறது. உங்கள் உடல் அவற்றைத் தொடர்ந்து வெளியே எறிந்து கொண்டேயிருக்கிறது. உணர்வு நிலையும் பலவற்றை வெளியே எறிந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் அவை சேர்ந்துவிடும். மனம் முடியைப் போல் இறந்து விட்ட ஒரு பகுதிதான். இது அடையாளம் தான். புத்தர் தன் சீடர்களிடம் ஒரு அடையாளத்திற்காகத்தான் முடியை மழித்து விடச் சொன்னார். உங்கள் முடியை முற்றிலுமாய் மழித்து விடுவதைப் போல் உங்கள் உள்உணர்வு நிலையையும் மழித்து விடுங்கள். மனதையும் முற்றிலுமாய் மழித்து விடுங்கள்.

முடி, மனம் இரண்டுமே இறந்து போனவைதான், அவற்றைச் சுமக்காதீர்கள். இது அழகானது! இறந்த பகுதி சேர்ந்து விட அனுமதிக்காதீர்கள். மனம் என்றால் என்ன? உங்களது கடந்த கால அனுபவங்கள் படிப்பினைகள், எல்லாம்தான். மனம் எப்போதும் நிகழ்காலத்திலிருப்பதில்லை. எப்படி முடியும்? இங்கே இப்போதே, மனதால் முடியாது.

நீங்கள் என்னைச் சாதாரணமாய்ப் பார்த்தால், மனம் எங்கே இருக்கிறது? நீங்கள் அமர்ந்து கொண்டு என்னைக் கவனித்தால், மனம் எங்கே இருக்கிறது? நீங்கள் விவாதிக்கத் தொடங்கும் போதுதான் மனம் உள்ளே வருகிறது. நீங்கள் மதிப்பிடத் தொடங்கும் போது மனம் உள்ளே வருகிறது. ஆனால் எப்படி நீங்கள் மதிப்பிடுகிறீர்கள்? நிகழ் காலத்திற்கு இறந்த காலத்தைக் கொண்டு வருகிறீர்கள். இறந்த காலம் தான் நிகழ் காலத்தின் நீதிபதியாகிறது. எப்படி விவாதிக்கிறீர்கள்? இறந்த காலத்தை விவாதமாகக் கொண்டு வருகிறீர்கள். நீங்கள் இறந்த காலத்தை எடுத்துவரும் போது மனம் உள்ளே வருகிறது.

மனம் உங்களிடமிருக்கும் இறந்த பகுதி, அது ஒரு கழிவுப் பொருள். மலச்சிக்கல் உள்ளவர்கள் அதிகமாய் சிரமப்படுவார்கள். மனத்தில் கழிவுகள் சேரச்சேர அங்கும் சிக்கல் ஏற்படுகிறது. நீங்கள் ஒருபோதும் அதை வெளியே எறிவதில்லை. உங்கள் மனதில் விஷயங்கள் எல்லாம் உள்ளே சென்று கொண்டேதானிருக்கின்றன. நீங்கள் ஒருபோதும் வெளியே எறிவதே இல்லை.

தியானம் என்பது மனதை வெளியே எறிதல், உங்கள் சுமைகளை எறிதல், கழிவு சுமக்கப்படக் கூடாது. இல்லா விட்டால் நீங்கள் சோர்வாகிக் கொண்டேதான் இருப்பீர்கள். அதனால் தான் குழந்தைக்குப் புத்துணர்ச்சியான மனம் இருக்கிறது. ஏனெனில் அது எதையும் சேர்த்து வைத்திருப்பதில்லை. அதனால் சில நேரங்களில் குழந்தைகள்

தத்துவஞானிகள் சொல்லாதவற்றைக் கூடச் சொல்வார்கள். சில நேரங்களில் உங்கள் மனம் கூட தவற விட்டிருக்கும். ஆனால் அவர்கள் உண்மையைக் கவனித்து அதற்குள் ஊருவிச் செல்வார்கள். குழந்தைகள் மிகமிக ஊடுருவிச் செல்லும் தன்மையுடையவை. அவர்களிடம் தெளிவிருக்கிறது. அவர்கள் புத்துணர்ச்சியுடன் காணப்படுகிறார்கள். அவர்களின் கண்கள் நிரப்பப்பட்டிருப்பதில்லை. ரிஷி என்பவரும் குழந்தைதான். அவர் தன் படகை வெறுமையாய் வைத்திருக்கிறார். எல்லா மூட்டைகளையும் அவர் அகற்றிவிட்டார். கழிவு எறியப்பட்டுவிட்டது. அவருக்குச் சிக்கலில்லை. அவரது உள்மன உணர்வு நிலை பொழிந்து கொண்டுதானிருக்கிறது. அதனிடம் உறைந்த பகுதிகள் ஏதும் இல்லை.

மீன் பொறியின் நோக்கம்
மீனைப் பிடிப்பதுதான்.
மீன்கள் பிடிக்கப்பட்டவுடன்
அந்தப் பொறி மறக்கப்பட்டு விடுகிறது.

வார்த்தைகளின் நோக்கம்
எண்ணங்களைத் தெரிவித்தல் தான்.
எண்ணங்கள் கிரகிக்கப்பட்டவுடன்
வார்த்தைகள் மறக்கப்பட்டு விடுகின்றன.

நீங்கள் உண்மையாகவே என்னைப் புரிந்து கொண்டீர்கள் எனில், உங்களால் நான் சொன்னதை நினைவில் வைத்துக் கொள்ள முடியாது. நீங்கள் மீனைப் பிடித்துக் கொண்டு, பொறியை விட்டுவிடுவீர்கள். நான் சொன்னதைப் போல் நீங்களிருப்பீர்கள். ஆனால் நான் சொன்னவற்றை நினைவில் வைத்திருக்க மாட்டீர்கள். நீங்கள் அதன் வழியே மாற்று நிலையை அடைவீர்கள். ஆனால் இதன் மூலம் அதிகம் கற்றுக் கொண்டவனாக மாட்டீர்கள். இதன் மூலம் இன்னும் வெறுமையானவனாவீர்கள். குறைவாய் நிரப்பப்பட்டவராய்

என்னிடமிருந்து செல்லும் போது புத்துணர்ச்சியுடையவராய், சுமையற்றவராய் திரும்பிப் போவீர்கள்.

நான் சொல்பவற்றை யெல்லாம் சேகரிக்க முயற்சிக்காதீர்கள். ஏனெனில் எவற்றை யெல்லாம் நீங்கள் சேகரிக்கிறீர்களோ அவை யெல்லாம் தவறானதாக இருக்கும். சேகரிப்பது என்பதே தவறு. சேகரிக்காதீர்கள். உங்கள் பொக்கிஷத்தை என் வார்த்தைகளிலிருந்து நெஞ்சுக்குள் நிரப்பாதீர்கள். வார்த்தைகள் என்பதே கழிவுதான். அவற்றிற்கு எந்த மதிப்புமில்லை. அவற்றை வெளியே எறிந்து விடுங்கள். பிறகு அங்கு பொருள் இருக்கும். அர்த்தத்தை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. அது நினைவின் ஒரு பகுதியாக ஒருபோதும் ஆவதில்லை. உங்கள் முழுமையின் அறிவின் ஒரு பகுதியாகிறது. உங்களுக்கு நிகழ்ந்த உண்மையான நிகழ்வை நீங்கள் நினைவில் வைத்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அது உங்களுக்கு நிகழ்ந்தால், அது அங்கேயே தானிருக்கிறது. நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன? திரும்பத் திரும்பச் சொல்லாதீர்கள். ஏனெனில் திரும்பச் சொல்லுவது தவறான எண்ணத்தைத்தான் உங்களுக்குக் கொடுக்கும்.

கவனியுங்கள், ஆனால் வார்த்தைகளை அல்ல-வார்த்தைகளின் சார்பை. வார்த்தையில்லாத தன்மைதான் உங்களுக்கு ஜீவனைக் கொடுக்கிறது. வார்த்தைகளின் மேலேயே உங்கள் கவனத்தைச் செலுத்தாதீர்கள். கொஞ்சம் அப்பாலும் பாருங்கள். ஏனெனில் உண்மை அங்குதான் இருக்கிறது. நான் என்ன சொல்லுகிறேன் என்று கவனிக்காதீர்கள். என்னைக் கவனியுங்கள். நானும் இங்கேதானிருக்கிறேன். வார்த்தைகள் மட்டுமல்ல. ஒருமுறை என்னைக் கவனிக்கத் தொடங்கி விட்டீர்கள் என்றால் பிறகு வார்த்தைகள் அனைத்தும் மறந்து போய்விடும்.

புத்தர் இறந்து போனார். புத்தக் குருக்கள், சீடர்கள் அனைவரும் மிகவும் கவலைப்பட்டார்கள். ஏனெனில் அவர் உயிருடனிருக்கும் போது கூறிய வார்த்தைகள் எவையும் சேகரிக்கப்படவில்லை. அவரது வார்த்தைகளைப் பதிவு செய்து வைத்துக் கொள்ள வேண்டும் என்பதையே அவர்கள் முற்றிலும் மறந்துவிட்டிருந்தார்கள். இவ்வளவு சீக்கிரம் அவர் இறந்து போவார் என்று அவர்கள் நினைக்கவேயில்லை. இவ்வாறு குரு திடீரென மறைந்து விடலாம் என்று அவரது சீடர்கள் நினைத்துப் பார்க்கவேயில்லை.

ஒருமுறை புத்தர் திடீரென்று சொன்னார் : "நான் போகிறேன்." அதன் பின் நேரமேயில்லை . அவரோ நாற்பது வருடங்களாக பேசியிருக்கிறார். அவர் இறந்து போன பின் எப்படி அவரது வார்த்தைகளையெல்லாம் சேகரிக்க முடியும்? பொக்கிஷம் தொலைக்கப்பட்டு விட்டது. ஆனால் அங்கே அப்போது என்ன செய்ய முடியும்?

இதில் அழகு என்ன வென்றால் மஹாகாஷ்யபாவால் புத்தரின் வார்த்தைகளைத் திரும்பச் சொல்ல முடியவில்லை. அவர் சொன்னார் : "நான் அவர் சொன்னதைக் கேட்டேன். ஆனால் அவர் என்ன சொன்னார் என்பதெல்லாம் நினைவி லில்லை. அது ஒருபோதும் என் நினைவில் ஞாபகத்தின் ஒருபகுதியானதில்லை. எனக்குத் தெரியாது." அவர் ஞானமடைந்தவராகி விட்டார்.

சாரி புத்தர், மொகல்யன், மற்றும் ஞானமடைந்த அனைவரும் தங்கள் தோள்களைக் குலுக்கிச் சொன்னார்கள்: "இது கடினம், அவர் அதிக விஷயங்களைச் சொல்லி யிருக்கிறார். ஆனால் எங்களுக்கு அவை நினைவிலில்லை." இவர்கள்தான் ஞானைத்தையடைந்த சீடர்கள்.

பிறகு ஆனந்தரை அணுகினர். புத்தர் உயிருடனிருக்கும் போது அவர் ஞானமடைந்திருக்கவில்லை. புத்தர் இறந்த பிறகு அவர் ஞானமடைந்தவரானார். அவர் எல்லாவற்றையும் ஞாபகத்தில் வைத்திருந்தார். புத்தருடன் அவரிருந்த நாற்பது

வருடங்களின் பொருளடக்கத்தையும் ஒவ்வொரு வார்த்தை யாக அவர் உச்சரித்தார். அவர் ஒவ்வொரு வார்த்தையாக எடுத்துரைத்தார். -ஞானமடையாத மனிதர்! இது வஞ்சப் புகழ்ச்சி போல் தோன்றலாம். சென்றடைந்துவிட்டவர்கள் நினைவில் வைத்திருக்க வேண்டும். இன்னொரு பக்கத்தைச் சென்றடையாத இந்த மனிதனைப் போலல்ல-ஆனால் அடுத்த கரையை சென்றடைந்தவுடன் இது மறந்துவிடுகிறது, ஒருவன் தனக்குள் புத்தனாகிவிட்ட பிறகு, யார் புத்தர் என்ன சொன்னார் என்பதைக் கவனிப்பது?

மீன் பொறியின் நோக்கம்
மீனைப் பிடிப்பது தான்.
மீன்கள் பிடிக்கப்பட்டவுடன்
அந்தப் பொறி மறக்கப்பட்டு விடுகிறது.

புத்தரின் வார்த்தைகள் பொறி, மஹாகாஷ்யபா மீனைப் பிடித்துவிட்டார். இப்போது யார் பொறியைப் பற்றிக் கவலைப்படுவது? அவர் ஓடையைக் கடந்துவிட்டார். மஹாகாஷ்யபா சொன்னார் : “இந்த மனிதர் என்ன சொன்னார் என்று எனக்குத் தெரியவில்லை. உங்களால் என்னைச் சார்ந்திருக்க முடியாது. ஏனெனில் என்னைப் பொறுத்த வரை அவர் என்ன சொன்னார், நான் என்ன சொல்கிறேன் என்பதைப் பிரிப்பது கடினம்.”

ஆம், அது அப்படித்தானிருக்கும். மஹாகாஷ்யபா புத்தராகவே தனக்குள் மாறிவிட்ட பிறகு எப்படி அவர்களைப் பிரிக்க முடியும். இருவர் இருவரல்ல. ஆனால் ஆனந்தர் சொல்கிறார் : “என்னால் அவர் வார்த்தைகளைத் தொடர்பு படுத்த முடியும்.” மிக உண்மையாகவே அவர் தொடர்பு படுத்திக் கூறினார். மனித இனம் ஆனந்தர் இன்னும் வெகுளியாயிருப்பதை நினைவு கூர வேண்டும். அவர் இன்னும் மீனைப் பிடித்துவிட வில்லை. அதனால் பொறியை நினைவில் வைத்திருந்தார். இன்னமும் மீனைப் பிடிப்பதைப் பற்றி

நினைத்துக் கொண்டிருந்தார். அதனால் பொறியைச் சுமந்து செல்ல வேண்டியதாயிற்று.

வார்த்தைகளின் நோக்கம்
எண்ணங்களைத் தெரிவித்தல் தான்.
எண்ணங்கள் கிரகிக்கப்பட்டவுடன்
வார்த்தைகள் மறக்கப்பட்டு விடுகின்றன.

இதை வாழ்க்கையின் அடிப்படை விதியாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்-பயனற்றதை, அர்த்தமற்றதை, வெளிப்புறத்தை, மிகவும் குறிப்பாகத் தெரிவதை. ஏனெனில் மையத்தைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கில்லை. இந்த உலகம் மிகவும் அர்த்தமுடையதாய் முக்கியத்துவமுடைய தாய் தோன்றும். ஏனெனில் உங்களுக்குக் கடவுளைப் பற்றிய விழிப்பு இல்லை. கடவுள் தெரியும் போது, உலகம் மறக்கப் பட்டுவிடுகிறது. ஒருபோதும் இது வேறு முறையில் இருக்காது.

மக்கள் உலகத்தை மறந்துவிட முயற்சிக்கிறார்கள். அதனால் தான் அவர்களுக்கு கடவுளைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது- இது இதுவரை நிகழ்ந்ததில்லை. இனி மேலும் ஒருபோதும் நிகழாது. உங்களால் தொடர்ந்து முயற்சி செய்ய முடியும். உலகத்தை மறக்க முயச்சிதான் செய்ய முடியும். ஆனால் அது முடியாது. நீங்கள் மறக்க எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு முயற்சியும் தொடர்ச்சியான நினைவு கூரலாகத்தான் இருக்கும். கடவுள் எப்போது தெரிந்து கொள்ளப்படுகிறாரோ அப்போதுதான் உலகம் மறக்கப்படும். யோசனைகளைத் தவிர்த்து விட நீங்கள் தொடர்ந்து போரா டிக் கொண்டிருக்கலாம். ஆனால் உங்களால் யோசனையைத் தவிர்க்க முடியாது, சுய நினைவை சாதிக்கும் வரை. யோசித்தல் என்பது ஒரு மாற்று. மீன் பிடிக்கப்படாதபோது எப்படி நீங்கள் பொறியை விட்டு விடுவீர்கள்? மனம் சொல்லும், "முட்டாள் தனமாயிருக்காதீர்கள், மீன் எங்கே?"

அர்த்தம் உணரப்படாத போது எப்படி உங்களால் வார்த்தைகளைத் துறந்து விடமுடியும்? வார்த்தைகளுடன் சண்டை போடாதீர்கள். அதன் பொருளை அடைய முயற்சி செய்யுங்கள். எண்ணங்களுடன் சண்டை போட முயற்சிக்காதீர்கள். அதனால்தான் நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறேன். எண்ணங்கள் உங்களைத் தொந்தரவு செய்தால் அவற்றுடன் போராட்டத்தை உருவாக்காதீர்கள். அவற்றுடன் சண்டை போடாதீர்கள். அவை வந்தால் அவற்றை வரவிடுங்கள். அவை போனால் போகவிடுங்கள். வேறெதுவும் செய்யாதீர்கள். அலட்சியமாயிருங்கள், ஒரு கவனிப்பாளனைப் போல். எல்லாவற்றையும் பார்ப்பவராக எதனுடனும் தொடர்பில்லாமல். இவ்வளவுதான் இப்போது உங்களால் செய்யமுடியும், எதனுடனும் தொடர்பில்லா திருத்தல்.

“வராதே” என்று சொல்லாதீர்கள். வரவேற்காதீர்கள். தவிர்க்காதீர்கள். கண்டனம் செய்யாதீர்கள். பாராட்டாதீர்கள். அக்கறையில்லாமலிருங்கள். அவற்றைக் கவனியுங்கள், அவை வானத்தில் தவழும் மேகங்களைப் போல் வரும். பிறகு சென்று விடும். மேகங்கள் மறைவதைப் போல அவற்றை வந்து போக விடுங்கள், அவற்றின் பாதையில் செல்லாதீர்கள். அவற்றையே கவனிக்காதீர்கள். நீங்கள் அவற்றிற்கு எதிராய் செயல் பட்டால் அவற்றின் மேல் கவனம் செலுத்தத் தொடங்கி விடுகிறீர்கள். உடனே நீங்கள் தொந்தரவுக்குள்ளாகிறீர்கள். “என் தியானம் தொலைக்கப்பட்டு விட்டது.” எதுவும் தொலைக்கப்படவில்லை. தியானம் உங்கள் இயல்பு. இயற்கை எண்ணம். எதுவும் இழக்கப்படவில்லை. மேகங்கள் வரும் போது வானம் தொலைந்து விடுகிறதா? எதுவும் தொலைக்கப்படுவதில்லை.

அக்கறை இல்லாதிருங்கள், எண்ணங்களால் கலைக்கப் படாதீர்கள். இப்படியும், அப்படியும் மிகவிரைவில் அந்த எண்ணங்கள் வந்து போவது குறைந்து போயிருப்பதை நீங்கள்

உணர்வீர்கள். பிறகு அவை வருவதை நீங்கள் காண்பீர்கள். ஆனால் அதிகமாய் அல்ல, சில நேரங்களில் போக்குவரத்து நின்று விடும். அப்போது சாலை வெறுமையாக இருக்கும். ஒரு எண்ணம் கடந்து சென்றுவிட்டது. அடுத்தது இன்னும் வரவில்லை. அப்போது அங்கே ஒரு இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளியில் நீங்கள் உங்களின் உள் வானத்தை அதன் முழு மகிமையோடு காணலாம். ஆனால் எண்ணம் நுழைந்தால் அதை நுழைய விட்டு விடுங்கள். தொந்தர வடையாதீர்கள்.

உங்களால் இவ்வளவுதான் செய்ய முடியும். நீங்கள் இவ்வளவுதான் செய்வீர்கள். இதைத் தவிர வேறொன்றும் சாத்தியமில்லை. எதிலும் கலந்து கொள்ளாதீர்கள். அக்கறை இல்லாமலிருங்கள். கவனிக்காமலிருங்கள். ஒரு சாட்சியாக மட்டும் இருங்கள். கவனித்துக் கொண்டு, அதில் கலந்து கொள்ளாமல், மனம் செல்லட்டும். ஏனெனில் நீங்கள் அக்கறை இல்லாமல் இருந்தால் எதையும் உள்ளே பத்திரப்படுத்தி வைக்க முடியாது.

அக்கறையின்மை வேர்களை வெட்டிவிடுகிறது. மிக அடிப்படையான வேர்களை. விரோதமாய் உணராதீர்கள். ஏனெனில் இது மீண்டும் உணவு கொடுத்தல்தான். நீங்கள் நண்பர்களை நினைவில் வைத்திருக்கிறீர்கள் எனில் எதிரி களையும் அதிகமாய் நினைவில் வைத்திருப்பீர்கள். நண்பர் களைக் கூட மறந்துவிடலாம். எதிரிகளை எப்படி மறக்க முடியும்? நீங்கள் தொடர்ந்து நினைவில் வைத்துக் கொண்டே இருக்கிறீர்கள். ஏனெனில் நீங்கள் பயப்படுகிறீர்கள்.

மக்கள் எண்ணங்களால் தொந்தரவுக்குள்ளாகிறார்கள். சாதாரண மக்கள், மதநம்பிக்கையுள்ள மக்கள் அதிகமாய் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில் அவர்கள் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் சண்டையிடுவதின் வழியாக கவனம் செலுத்துகிறீர்கள்.

இந்தக் கவனம் தான் உணவு. ஒவ்வொன்றும் நீங்கள் கவனம் செலுத்துவதால் தான் வளர்கிறது. வேகமாய் வளர்கிறது. முக்கியமாகிறது. நீங்கள் அக்கறையில்லாமல் இருங்கள்.

புத்தர் 'உபெக்ஷா' என்ற வார்த்தையைப் பயன் படுத்தினார். இதன் பொருள் முழுமையாக அக்கறையின்றி இருத்தல். இதுவும் இல்லாமல் அதுவும் இல்லாமல் நடுவில், நட்புமில்லாமல் எதிர்ப்புமில்லாமல், சார்பாகவும் இல்லாமல் எதிராகவும் இல்லாமல். நடுவிலிருத்தல் உங்களுக்குத் தொடர்பே இல்லாதது போல் கவனித்தல். இந்த எண்ணங்க ளெல்லாம் உங்களைச் சார்ந்தவையல்ல என்பதைப் போல், இவையெல்லாம் இந்தப் பெரிய உலகத்தின் பகுதி என்பதைப் போல் அவற்றை அங்கேயே இருக்கவிடுங்கள். பிறகு ஒருநாள் திடீரென்று அக்கறையின்மை முழுமையாயிருக்கும் போது உணர்வு நிலை வெளிப்புறத்திலிருந்து மையத்திற்கு மாறும்.

ஆனால் இவை கணிக்க முடியாதவை, திட்டமிடப்பட முடியாதவை. ஒருவன் தொடர்ந்து வேலை செய்து கொண்டே காத்துக் கொண்டே இருக்கிறான். எப் போதெல்லாம் இது நிகழ்கிறதோ அப்போது நீங்கள் சிரிக்கலாம். அத்தகைய எண்ணங்கள் அங்கேயிருக்கின்றன. ஏனெனில் அவை அங்கேயிருக்க வேண்டும் என நீங்கள் விரும்பினீர்கள். அந்த எண்ணங்கள் நீங்கள் அவற்றைத் தொடர்ந்து ஊட்டியதால் விளைந்தவை. அந்த எண்ணங்கள் அங்கே இருக்கின்றன. ஏனெனில் மீன் இன்னும் பிடிக்கப்படவில்லை. எப்படி உங்களால் பொறியைத் தூக்கி எறிந்துவிட முடியும்? நீங்கள் சுமந்து செல்லத்தான் வேண்டும்.

ஒருமுறை முல்லா நஸ்ருதின் நாட்டில், மன்னன் அறிவாளியைத் தேடிக் கொண்டிருந்தான். அவனது வயதான அறிவாளி மனிதர், "நீங்கள் எனக்குப் பதிலாய் ஒருவனைத் தேர்வு செய்யும் போது, இந்த ராஜ்யத்திலேயே மிகவும் அடக்கமுடைய ஒருவனைத் தேர்ந்தெடுங்கள். அதுதான்

ஞானத்தின் அறிகுறி. அடக்கமின்மை ஞானத்திற்கு எதிரானது. அதனால் அடக்கமான ஒருவனைத் தேர்ந் தெடுங்கள்,'' என்று சொல்லிவிட்டு இறந்து போனார்.

இரகசியத் தூதர்கள், அடக்கமான ஒருவனைத் தேர்ந்தெடுப்பதற்காக நாடு முழுவதும் அனுப்பப்பட்டனர். கடைசியாக முல்லா நஸ்ருதீனின் கிராமத்தை அடைந்தனர். அவர் அறிவாளி மனிதன் இறந்து விட்டதைக் கேள்விப் பட்டார். அதனால் ஞானிக்குரிய குணம் என்னவாயிருக்கும் என்று சிந்தித்துக் கொண்டிருந்தார். அவர் படித்திருக்கிறார், பழைய ஞானி அடக்கமானவரென்று. அதனால் தர்க்க ரீதியாய் யோசித்துப் பார்த்தார். ஒரு முடிவுக்கு வந்தார். அந்த வயதான அறிவாளி மனிதன் ஞானி, அடக்கமானவனைத் தான் கண்டுபிடிக்கச் சொல்லியிருக்க வேண்டும்.

அரசனின் ஆட்கள் தேடிக் கொண்டிருந்தனர். முல்லா நஸ்ருதீன் பெரிய பணக்காரர். ஆனால் அவர்கள் அவரைப் பார்த்தபோது பட்டணத்திலேயே பணக்காரரான அவர் மீன் வலையைச் சுமந்து கொண்டு ஆற்றிலிருந்து வந்து கொண்டிருந்தார். நகரத்திலேயே மீன்பிடித்தல்தான் மிகவும் எளிமையான வேலை. அதனால் அவர்கள் நினைத்தார்கள் : "இந்த மனிதன் மிகவும் அடக்கமானவனைப் போல் தோன்றுகிறான்.'' அவர்கள் முல்லாவிடம் கேட்டார்கள் : "ஏன் இந்த மீன் வலையைச் சுமந்து கொண்டிருக்கிறாய்? நீ மிகவும் பணக்காரன், நீ இந்தத் தொழிலை செய்ய வேண்டிய அவசியமில்லையே?''

நஸ்ருதீன் சொன்னார் : "நான் மீன்பிடித்தலின் மூலம் தான் இவ்வளவு பணக்காரனானேன். ஒரு மீனவனாகத்தான் என் வாழ்க்கையைத் தொடங்கினேன். நான் பணக்காரனாகி விட்டேன், ஆனால் எனக்குப் பலவற்றைக் கொடுத்த இந்த மூல தொழிலுக்கு மரியாதை செலுத்தும் வகையில் நான் இந்த வலையை எப்போதும் என் தோளில் சுமந்து செல்வேன்.''

உண்மையிலேயே அடக்கமான மனிதன்- பொதுவாக ஏழை பணக்காரனாகி விட்டால் அவன் தன் இறந்த காலத்தை சுத்தமாகத் துடைத்துவிடுவான்-யாருக்குமே அவன் ஒரு காலத்தில் ஏழையாயிருந்தான் என்று தெரியாதபடி. அவன் ஏழையாக இருந்தபோது தொடர்பு கொண்டிருந்த அனைவரையும் உதறிவிடுவான். அவனது உறவினர்களைப் பார்க்க விரும்பமாட்டான். அவனது இறந்த காலத்தை நினைத்துப் பார்க்கவே விரும்பப்பட மாட்டான். இறந்த காலத்தை முழுமையாய் உதறிவிடுவான். ஏதோ பெரிய பிரபு குலத்தில் பிறந்ததைப் போல் ஒரு புதிய இறந்த காலத்தை உருவாக்கி விடுவான். ஆனால் இந்த மனிதன் மிகவும் அடக்கமாயிருக்கிறான். அதனால் தூதுவர்கள் அரசனிடம் சென்று சொன்னார்கள், "முல்லா நஸ்ரூதீன் தான் மிகவும் அடக்கமான மனிதர், அவரைப் போல் ஒருவனை நாங்கள் இதுவரை பார்த்தேயிருந்ததில்லை" என்று. அதனால் முல்லா நஸ்ரூதீன் ஞானியாகி வேலையில் அமர்த்தப்பட்டார்.

அவர் வேலையில் அமர்த்தப்பட்ட அன்றே தனது வலையைத் தூக்கி எறிந்துவிட்டார். அவருக்காகப் பரிந்து பேசிய ஒருவன் கேட்டான் : "நஸ்ரூதீன், இப்போது உன் வலை எங்கே?"

அவர் சொன்னார் : "மீனைப் பிடித்து விட்ட பின்னர், வலை தூர எறியப் பட்டுவிட்டது."

ஆனால் முன்பே அதை எறிந்திருக்க முடியாது. அது சாத்தியமல்ல. நீங்கள் சுமந்தாக வேண்டும். ஆனால் அக்கறையில்லாமல் சுமந்து செல்லுங்கள். பிடிப்பு கொள்ளாதீர்கள், அதனுடன் காதல் வசப்படாதீர்கள். ஏனெனில் ஒருநாள் அது எறியப்பட வேண்டும். அதன் மேல் நீங்கள் காதல் வசப்பட்டு விட்டால், மீனைப் பிடிக்க முடியாமலே கூடப் போய் விடலாம். மீனைப் பிடித்து விட்டால் வலையை எறிந்துவிட வேண்டிவருமே என்று பயப்படுவீர்கள்.

மனதின் மேல் காதல் கொள்ளாதீர்கள், அது பயன் படுத்தப்பட வேண்டும். அது அங்கேயிருக்கிறது. ஏனெனில் மனம் இல்லாத நிலையைப் பற்றி உங்களுக்கு இன்னும் தெரியாது. உங்கள் உயிரின் அடி ஆழப் பகுதி உங்களுக்குத் தெரியாது. வெளிப்புறம் மட்டுமே உள்ளது. நீங்கள் அதை சுமந்து தான் ஆக வேண்டும், ஆனால் அக்கறையில்லாமல் சுமக்க வேண்டும், அதன் அடிமையாகாதீர்கள்.

இன்னும் ஒரு கதை.

ஒரு மனிதன் இருந்தான். அவன் ஒவ்வொரு ஆண்டும் தன் பிறந்த நாளன்று குதிரைப் பந்தயத்திற்குச் செல்வான். ஆண்டு முழுவதும் அவன் சேர்த்து வைத்திருந்த பணம் இந்தப் பிறந்த நாளுக்காகத்தான். பல ஆண்டுகளாக அவன் பந்தயத்தில் தோற்றுக் கொண்டேயிருந்தான். ஆனால் நம்பிக்கை மீண்டும் மீண்டும் வந்தது. ஒவ்வொரு முறை அவன் செல்லும் போதும் இன்னொரு முறை வரவே கூடாது என முடிவு செய்வான். ஆனால் ஒரு வருடம் என்பதே மிக நீண்ட காலத்தைப் போல் இருக்கும். சில நாட்களில் ஞாபகம் வந்து விடும். நம்பிக்கையுடன் தோன்றும். அவன் நினைத்துக் கொள் வான் : "யாருக்குத் தெரியும், இந்த வருடம் நான் பணக்காரன் ஆனாலும் ஆகிவிடலாம். ஏன் மீண்டும் ஒருமுறை முயற்சி செய்யக் கூடாது?"

அவன் பிறந்த நாள் வரும்போது அவன் பந்தயத்திற்குச் செல்லத் தயாராகி விடுவான். அது அவனது ஐம்பதாவது பிறந்த நாள். அதனால், "நான் முழு உள்ளத்தோடு முயற்சிசெய்ய வேண்டும்" என நினைத்துக் கொண்டான்.

அதனால் அவனது சொத்து முழுவதையும் விற்றான். அவன் செல்வத்தை யெல்லாம், வாழ்க்கை முழுதும் சம்பாதித் தவற்றை யெல்லாம், அவனிடமிருந்ததை யெல்லாம் சேகரித்துவிட்டுக் கூறினான் : "நான் இப்போது இந்த வழியா இல்லையா என்பதை முடிவு செய்ய வேண்டும். நான் பிச்சைக்காரனாகவும் ஆகலாம். இல்லை பேரரசனாகவும் ஆகலாம். இந்த நடுநிலைமை வேண்டாம், போதும்."

அவன் அங்கு சென்றான். ஜன்னல் வழியாக குதிரைகளின் பெயர்களைப் பார்த்தான், அடால்ஃப் ஹிட்லர் என்று பெயரிடப்பட்ட ஒரு குதிரையைப் பார்த்தான். அவன் நினைத்தான் : "இது நன்றாகச் செயல்படும். எவ்வளவு உயர்ந்த மனிதன், வெற்றிகளைக் குவித்தவன், முழு உலகையே பயமுறுத்தியவன். இந்தக் குதிரையும் வலிமை மிகுந்ததாய் இருக்க வேண்டும்." அதனால் அந்தக் குதிரை மீது பணம் கட்டினான். அவன் இழந்து போனான். ஹிட்லர் மீது பணம் கட்டியவர்கள் எல்லாருமே இழந்தார்கள். இப்போது அவனுக்குச் செல்வதற்கு இடமே இல்லை. அவன் வீட்டைக் கூட இழந்திருந்தான். எனவே தற்கொலை செய்து கொள்வதைத் தவிர அவனுக்கு வேறு வழியே இல்லை.

எனவே அவன் ஒரு மலைப் பாறைக்குச் சென்றான். அங்கிருந்து குதித்துவிட்டால் போதும், வாழ்க்கை முடிந்து விடும். அவன் குதிக்க எத்தனிக்கும் போது ஒரு குரல் திடீரென்று கேட்டது. அந்தக் குரல் வெளியேயிருந்து வந்ததா, தனக்குள்ளிருந்து வந்ததா என்பதை அவனாலேயே சொல்ல முடியவில்லை. அது சொன்னது : "நிறுத்து! அடுத்த முறை நான் உனக்கு வெற்றி பெற்றவன் என்ற பெயரைத் தருகிறேன். இன்னும் ஒரு முயற்சி. உன்னை நீயே கொன்று விடாதே."

நம்பிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவன் திரும்பி வந்தான். அந்த வருடம் கடுமையாக உழைத்தான். ஏனெனில் அது வெற்றியாகப் போகிறது . அவன் வாழ்க்கை முழுவதும் எதற்காக காத்திருந்தானோ அது. கனவு நனவாகப் போகிறது. இரவு பகலாக அவன் கடுமையாக உழைத்தான். அதிகம் சம்பாதித்தான். பிறகு நடுங்கும் இதயத்துடன் ஜன்னலை அடைந்தான், காத்திருந்தான். அந்தக் குரல் சொன்னது : "சரி. சர்ச்சில் என்றக் குதிரையைத் தேர்வு செய்." எந்த வாக்குவாதமுமில்லாமல், எதைப் பற்றியும் யோசிக்காமல் மனம் நுழையாமல் அவன் அதன் மேல் பணத்தைக் கட்டி வெற்றி பெற்றான். சர்ச்சில் முதலில் வந்துவிட்டது.

மீண்டும் ஜன்னலுக்கு அருகில் சென்று காத்திருந்தான். இப்போது அந்தக் குரல் சொன்னது : "ஸ்டாலினைத் தேர்வு செய்." எல்லா பணத்தையும் அதில் கட்டினான். ஸ்டாலின் முதலாவதாக வந்தது. இப்போது அவனிடம் மிக அதிக அளவு பணமிருந்தது.

மூன்றாவது முறை அவன் காத்திருந்தான். அந்தக் குரல் சொன்னது : "இனிமேல் வேண்டாம்."

ஆனால் அவன் சொன்னான் : "அமைதியாயிரு. நான் வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறேன். என் நட்சத்திரங்கள் உச்சத்திலிருக்கின்றன. யாராலும் என்னை இப்போது தோற்கடிக்க முடியாது." அதனால் அவன் நிக்சனைத் தேர்வு செய்தான் ; நிக்சன் கடைசியாக வந்தது.

பெருந்தொகையையும் இழந்துவிட்டான். மறுபடியும் பிச்சைக்காரனானான். அவன் தனக்குள்ளேயே முணு முணுத்தான் : "இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?"

உள்ளிருந்த குரல் சொன்னது : "இப்போது நீ மலையுச்சிக்குச் சென்று குதித்துவிடலாம்!"

நீங்கள் சாகப் போகும் கணத்தில். மனம் நின்றுவிடுகிறது. ஏனெனில் இனிமேல் வேலை செய்வதற்கு அதற்கு ஒன்றுமில்லை. மனம் உயிரின் ஒரு பகுதிதான். சாவின் ஒரு பகுதியல்ல. இனிமேல் வாழ்க்கையே இல்லை எனும் போது, மனம் நின்று விடுகிறது. அங்கு வேலையேயில்லை. உடனே வேலையில்லாததாகி விடுகிறது. மனம் நின்றவுடன், உள்ளே ஒருகுரல் வருகிறது. அது எப்போதும் அங்குதான் இருக்கிறது. ஆனால் மனம் போடும் சத்தத்தில் அதன் சிறிய குரலைக் கேட்க முடியாமல் போய்விடுகிறது.

அந்தக் குரல் எங்கிருந்தோ வரவில்லை. எங்கேயோ யாருமில்லை. எல்லாம் உங்களுக்குள்தான் இருக்கிறது. கடவுள் வானத்தில் இல்லை. உங்களுக்குள்தான் இருக்கிறார். அவர் இறக்கப்போகிறார். கடைசி முடிவு மனதால்

எடுக்கப்பட்டது. ஆனால் மனதும் ஓய்வு பெற்ற பிறகு, யாரும் வேலை செய்ய இல்லாதபோது, திடீரென அவனுக்கு அந்தக் குரல் கேட்டது. இந்தக் குரல் அவனது அடி ஆழத்திலிருந்து வந்தது . அடி ஆழத்திலிருந்து வரும் வார்த்தைகள் எல்லாம் எப்போதுமே சரியாகத்தான் இருக்கும்.

பிறகு என்ன நடந்தது? இரண்டு முறை அந்த வார்த்தை வேலை செய்தது. பிறகு மறுபடியும் அவனது மனம் உள்ளே நுழைந்துவிட்டது. அது சொன்னது : "இந்த முட்டாள் தனத்தையெல்லாம் கவனிக்காதே, உன் நட்சத்திரம் உச்சத்தில் உள்ளது. நாம் வெற்றி பெற்றுக் கொண்டேயிருக்கிறோம்."

இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். எப்போதெல்லாம் நீங்கள் வெற்றி பெறுகிறீர்களோ, அப்போதெல்லாம் உங்கள் வெற்றிக்குக் காரணமாயிருப்பது அந்த உள் குரல்தான். ஆனால் மனம் எப்போதும் உள்ளே வந்து பொறுப்பை எடுத்துக் கொள்கிறது. அப்போதெல்லாம் மகிழ்ச்சியாய் உணர்கிறீர்களோ அதெல்லாம் உள்ளேயிருந்து வருவதுதான். மனம் உடனே குதித்து பொறுப்பேற்றுக் கொண்டு சொல்கிறது : "இதெல்லாம் என்னால்தான்." நீங்கள் காதலில் இருக்கும் போது, காதல் சாவைப் போலாகிறது. நீங்கள் பேரின்பமாய் உணர்கிறீர்கள். உடனே மனம் வந்து சொல்கிறது : "சரி , இது நான்தான். இதெல்லாம் என்னால் தான்."

நீங்கள் தியானம் செய்யும் போதெல்லாம் அங்கே அதீத மகிழ்ச்சி ஏற்படுகிறது. உடனே மனம் உள்ளே வந்து சொல் கிறது : "மகிழ்ச்சியாயிரு! கவனி, இதை நான்தான் செய்தேன்." உடனே அந்தத் தொடர்பு தொலைந்து போய்விடுகிறது.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : மனதுடனிருக் கும் போது நீங்கள் தோல்வியடைபவராகவே இருப்பீர்கள். நீங்கள் வெற்றி பெற்றால் கூட அந்த வெற்றி தோற்கடிக்கப் படும். மனதுடன் வெற்றி என்பதே இல்லை. மனதில்லாமல் இருக்கும் போது தோல்வியென்பதே இல்லை.

நீங்கள் உங்கள் உணர்வுநிலை முழுவதையும் மனதி லிருந்து மனதில்லாத நிலைக்கு மாற்ற வேண்டும். ஒருமுறை மனதில்லாத நிலை வந்துவிட்டால், பிறகு எல்லாமே வெற்றி தான். ஒருமுறை அந்நிலை வந்து விட்டால் எதுவுமே தவறா காது. எதுவும் தவறாக முடியாது. எல்லாமே எப்படி இருக்க வேண்டுமோ அப்படியிருக்கும். ஒருவன் முழுத் திருப்தியுடன் இருப்பான். கொஞ்சம் கூட ஒரு துண்டு கூட திருப்தியின்மை இருக்காது. முழுமையாக வீட்டிலிருப்பான். நீங்கள் மனதின் காரணமாகத்தான் வெளியாளாக இருக்கிறீர்கள்.

இந்த மாற்றநிலை நீங்கள் அக்கறை இல்லாதவராக இருக்கும் போது மட்டுமே சாத்தியம், இல்லாவிட்டால் இந்த மாற்றம் ஒரு போதும் சாத்தியமாகாது. நீங்கள் மகிழ்ச்சியாயிருந்தால் கூட அவையும் இழக்கப்பட்டுவிடும். தரிசனம் சாதாரண வாழ்க்கையில் கூட நிகழாம். பெண்ணு டன் காதலுறவில் ஈடுபடும்போது மனம் நின்றுவிடுகிறது. அதனால்தான் காமம் மிகவும் உயர்ந்ததாய் தோன்றுகிறது. அது இயற்கையான பேரின்பம். சில கணங்கள் மனம் திடீரென்று அங்கிருப்பதில்லை. நீங்கள் பேரின்பமாகவும். திருப்தியாகவும் உணர்கிறீர்கள். ஆனால் ஒரு சில கணங்கள் தான். உடனே மனம் அங்கே வந்து வேலை செய்யத் தொடங்கி விடுகிறது. எப்படி இன்னும் அதிக மகிழ்ச்சி பெறுவது, எப்படி அதிக நேரம் செயல்படுவது என்று திட்டமிடுதல், கட்டுப்படுத்தல், சேகரித்தல், நீங்கள் இழந்து விடுகிறீர்கள்.

சில நேரங்களில் எந்தக் காரணமும் இல்லாமல் நீங்கள் வீதியில் மரங்களுக்கடியில் நடந்து கொண்டிருப்பீர்கள். திடீரென சூரியக் கதிர் வந்து உங்கள் முகத்தை வருடும். திடீரென இந்த உலகம் முழுதும் மாறிவிட்டதாக, நீங்கள் பேரின்பத்தில் இருப்பதாக ஒரே ஒரு கணம் உணர்வீர்கள். என்ன நடந்து கொண்டிருந்தது? நீங்கள் நடந்து கொண்டிருந்தீர்கள், எந்தக் கவலையுமில்லாமல், எங்கேயும் செல்லாமல் சும்மா நடந்து செல்ல, காலையிலோ, மாலை

யிலோ நடந்தீர்கள். அந்த ஓய்வான கணத்தில் திடீரென்று உங்களை அறியாமல் உணர்வுநிலை மனதிலிருந்து மனதற்ற நிலைக்கு மாறிவிட்டது. உடனே அங்கு அழகு வந்துவிட்டது. ஆனால் மனம் உள்ளே வந்து சொல்கிறது : "எனக்கு இதைப் போன்ற கணங்கள் நிறைய வேண்டும்." பிறகு நீங்கள் வருடக்கணக்காய் பலகாலம் இருக்கலாம். ஆனால் அது மீண்டும் நிகழாது. மனதால் அது நிகழாது.

சாதாரண அன்றாட வாழ்க்கையில் கோயில்களில் மட்டுமல்ல, கடைகளிலும் அலுவலகத்திலும் கூட இந்த கணங்கள் வருகின்றன. உணர்வு நிலை வெளிப் பகுதியி லிருந்து மையத்திற்கு மாறுகிறது. ஆனால் மனம் உடனே கட்டுப் படுத்துகிறது. மனம் சிறந்த கட்டுப் பாட்டாளர். நீங்கள் எஜமானாக இருக்கலாம். ஆனால் அது தான் நிர்வாகி. நிர்வாகி ஏகப்பட்ட கட்டுப்பாடுகளையும், வலிமையையும் கொண்டிருப்பதால் தான் 'தான் எஜமான்' என்று நினைத்துக் கொள்கிறான். எஜமான் சுத்தமாக மறக்கப்பட்டு விடுகிறான்.

மனதின் மேல் அக்கறையில்லாமல் இருங்கள், எப்போ தெல்லாம் வார்த்தைகளில்லாத கணங்கள் வருகிறதோ, அமைதி இருக்கிறதோ, அப்போது மனம் உள்ளே வந்தால் அதற்கு உதவி அதனுடன் ஒத்துழைக்காதீர்கள். சும்மா பாருங்கள். அது சொல்வதையெல்லாம் சொல்லவிடுங்கள். அதன்மேல் கவனம் செலுத்தாதீர்கள், அது போய்விடும்.

தியானத்தில், கணங்கள் ஒவ்வொரு நாளும் உங்களுக்கு நிகழ்கின்றன. பலர் என்னிடம் வந்து சொல்வார்கள் : "இது முதல் நாள் நிகழ்ந்தது. ஆனால் அதன் பிறகு இவ்வாறு நிகழவே இல்லை."

ஏன் முதல் நாள் நிகழ்ந்தது? நீங்கள் இப்போது மிகவும் தயாராயிருக்கீறீர்கள். முதல் நாள் நீங்கள் தயாராயில்லை. ஏன் முதல் நான் நிகழ்ந்தது? முதல் நாள் அவ்வாறு நிகழப் போகிறது என்பதை நிர்வாகி அறியாமல் இருந்தார். அவர்

திட்டமிடவில்லை. அடுத்த நாள் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நிர்வாகி அறிந்திருந்தார். வேகமாய் மூச்சுவிடுதல், பிறகு அழுதல், கத்துதல், பிறகு ஹிப்ஹிப். இப்போது நிர்வாகிக்குத் தெரியும். நிர்வாகி அதைச் செய்கிறார் . பிறகு அந்தக் கணம் நிகழாது. நிர்வாகி அந்தப் பொறுப்பை எடுத்துக் கொண்டுவிட்டார்.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : எப்போதெல் லாம் பேரின்பமான கணங்கள் நிகழ்ந்தாலும் அது மீண்டும் வேண்டுமெனக் கேட்காதீர்கள். திரும்பக் கேட்காதீர்கள்,. அப்படி நீங்கள் கேட்டால் பிறகு மனம் சொல்லும் : "எனக்கு அந்த வித்தை தெரியும். நான் உனக்காகச் செய்கிறேன்."

இவ்வாறு நிகழும் போது மகிழ்ச்சியாய் நன்றியாய் உணருங்கள். பிறகு மறந்து விடுங்கள். மீன் பிடிக்கப் பட்டுவிட்டது. பொறியை மறந்து விடுங்கள். அர்த்தத்தைப் பிடித்தாகி விட்டது. வார்த்தையை மறந்துவிடுங்கள்.

கடைசியான விஷயம். எப்போது தியானம் முழுமை யடைகிறதோ, பிறகு அதை மறந்துவிடுங்கள். அப்போதுதான் நீங்கள் தியானத்தை மறக்கும் போதுதான். நிறைவு கிடைக்கும். உச்சத்தை அடைய முடியும். இப்போது இருபத்து நான்கு மணிநேரமும் தியானத்திலிருக்கிறீர்கள். செய்வதற்கு ஒன்று மில்லை. அது அங்கே இருக்கிறது. நீங்கள் இருக்கிறீர்கள். அது உங்கள் ஆன்மா.

இதை உங்களால் செய்ய முடிந்தால் பிறகு தியானம் தொடர்ச்சியான ஓட்டமாகிவிடும், உங்கள் பக்கமிருந்து எந்த முயற்சியுமில்லாமல். ஏனெனில் முயற்சி என்பது மனதால் வருவது.

தியானம் உங்களது அன்றாட வாழ்க்கையாகி விட்டால், உங்களின் நிலையான தடையில்லாத வாழ்க்கை யாகிவிட்டால், நீங்கள் தாவோ. பிறகு நான் சொல்வேன், சுவாங்தஸூ ஒரு நாள் உங்களைப் பிடித்து விடுவார்.

உங்களைப் பிடித்து வைத்துக் கொள்வார். ஏனெனில் அவர் கேட்கிறார் :

வார்த்தைகளை மறந்துவிட்ட ஒரு மனிதனை
நான் எங்கே கண்டுபிடிக்க முடியும் ?
நான் பேசவிரும்பும் மனிதர்களில்
அவனும் ஒருவன்.

அவர் தேடிக் கொண்டிருக்கிறார். இங்கே அவர் உங்களுக்காகச் சுற்றிக் கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன், காத்திருக்கிறார், காத்திருக்கிறார். நீங்கள் வார்த்தைகளை மறந்தால், அவர் உங்களை எடுத்துச் சென்று விடுவார். சுவாங்தஸூ மட்டுமல்ல கிருஷ்ணர், கிறிஸ்து, லாவோதஸூ, புத்தர் இவர்கள் அனைவரும் உங்களைத்தான் தேடிக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அவர்களால் பேச முடியாது. ஏனெனில் அவர்களுக்கு அமைதியின் மொழிதான் தெரியும். ஆனால் உங்களுக்குப் பைத்தியக்காரத்தனமான மொழிதான் தெரியும். அவர்கள் உங்களை எங்கேயும் வழி நடத்திச் செல்ல முடியாது. அவர்கள் தேடலில் இருக்கிறார்கள். வாழ்ந்த புத்தர்கள் எல்லாம் தேடலில் தான் இருக்கிறார்கள், நீங்கள் அமைதியிலிருக்கும் போதெல்லாம் அவர்கள் உங்களைச் சுற்றி இருப்பதைப் போல் உணர்வீர்கள்.

எப்போதெல்லாம் சீடன் தயாராகிவிட்டானோ அப்போது குரு தோன்றுவார் என்பார்கள். எப்போது நீங்கள் தயாராகிறீர்களோ அப்போது அங்கு உண்மை வெளிப்படுத்தப்படும், ஒரே ஒரு கணம் கூட இடைவெளி இருக்காது : எப்போது நீங்கள் தயாரோ, அப்போது நிகழ்ந்துவிடும். நேர இடைவெளியே இருக்காது.

சுவாங்தஸூவை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். எந்தக் கணமும் அவர் உங்களை எடுத்துச் செல்லலாம். ஆனால் அவர் உங்களை எடுத்துச் செல்வதற்கு முன் உங்கள் பேச்சு போக வேண்டும்.

இன்றைக்கு இது போதும்.

வெற்றுப் படகு



# 6

## முழுமை

எப்படி உண்மையான தாவோவின் மனிதனால்
சுவர்களின் ஊடே எந்தத் தடையுமின்றி
நடக்க முடிகிறது ?
தீக்குள் சூடேதும் படாமல்
நிற்க முடிகிறது?

எந்தத் தந்திரத்தினாலோ, வீரத்தினாலோ அல்ல,
அவன் கற்றுக் கொண்டதால் அல்ல,
அவன் எதுவும் கற்காமலிப்பதால் தான்.

அவனது இயல்பு
அதன் வேர்களில் ஒன்றாக மூழ்குகிறது.
அவனது ஜீவன், அவனது சக்தி,
தாவோவின் ரகசியத்தில் மறைந்திருக்கிறது.
அவன் எல்லாமும் ஒன்றாகும் போது,
அவனிடம் எந்தக் குறையுமில்லை.
அந்த ஆயுதத்தால் நுழைந்துவிட முடியும்.

அதனால் தான் குடிகாரன்
பாரவண்டிக்கு வெளியே விழுகிறான்.
நசுக்கப்படுகிறான், ஆனால் அழிக்கப்படுவதில்லை.
அவன் எலும்புகள் மற்ற மனிதர்களின்
எலும்புகள் போல்தான் உள்ளன.
ஆனால் அவன் விழுவது வித்தியாசமாய் உள்ளது.
போதை முழுமையாயுள்ளது.
அவன்
வண்டியில் எடுத்துச் செல்வதைப் பற்றிய
விழிப்புடன் இல்லை.
அல்லது அதிலிருந்து விழுவதைப் பற்றி.
வாழ்வும் சாவும் அவனுக்கு
ஒன்றுமே இல்லை.
அவனுக்கு எந்தப் பயமுமில்லை.
அவன் எந்தவித எண்ணங்களும் இல்லாமல்,
கவனமும் இல்லாமல்
துன்பங்களைச் சந்திக்கிறான்.
அவர்கள்
அங்கேயிருப்பதைப் பற்றித் தெரியாமல்
அவர்களைப் பற்றிப் பேசுகிறான்.
மதுபானத்திலேயே
இந்த அளவு பாதுகாப்பு இருந்தால்,
தாவோவில்
எவ்வளவு அதிகமாய் இருக்கும்?
ஞானி தாவோவிற்குள்
மறைந்து கொள்கிறான்.
எதுவும் அவனைத் தொட்டுவிட முடியாது.



# முழுமை

எப்படி உண்மையான தாவோவின் மனிதனால் சுவர்களின் ஊடே எந்தத் தடையுமின்றி நடக்க முடிகிறது ?

தீக்குள் சூடேதும் படாமல் நிற்க முடிகிறது?

இது மிகவும் அடிப்படையான ரகசியப் பாடங்களுள் ஒன்று. சாதாரணமாக நாம் புத்திசாலித் தனத்தோடும், அதிதீவிர திட்டங்களுடனும், தந்திரத்தோடும் தான் வாழ்கிறோம். நாம் சிறு குழந்தைகளைப் போல் வெகுளித்தனத்துடன் வாழ்வதில்லை. நாம் திட்டமிடுகிறோம், பாதுகாக்கிறோம், எல்லா பாதுகாப்புக் கவசங்களையும் செய்து கொள்கிறோம். ஆனால் தீர்வு என்ன? இறுதியாக மிகக் கடைசி நிலையில் என்ன நிகழ்கிறது? எல்லாப் பாது காப்புக் கவசங்களும் தகர்க்கப்படுகின்றன. எல்லா கபடத் திட்டங்களும் முட்டாள் தனத்தைத் தான் நிரூபிக்கின்றன. கடைசியில் சாவு நம்மை எடுத்துக் கொண்டு போய் விடுகிறது.

தாவோவின் தத்துவம் சொல்வது இதுதான் : உங்களது தந்திரம் உங்களுக்கு உதவாது, ஏனெனில் முழுமைக்கு எதிரான சண்டை என்பதைத் தவிர அதில் என்ன இருக் கிறது? யாருடன் நீங்கள் தந்திரமாய் செயல்படுகிறீர்கள்- இயற்கை யுடன், தாவோவுடன், கடவுளுடன்? நீங்கள் யாரை ஏமாற்றிக் கொண்டிருப்பதாய் நினைத்துக் கொள்கிறீர்கள்- எந்த மூலத்தி லிருந்து பிறந்தீர்களோ, எந்த மூலத்திற்குத் திரும்பச் செல்வீர் களோ அதை? அலை, கடலை ஏமாற்ற நினைக்கிறதா? இலை, மரத்தை ஏமாற்ற முயற்சிக்கிறதா ? மேகம் வானத்தை ஏமாற்ற முயற்சி செய்கிறதா? யாரை நீங்கள் ஏமாற்ற வேண்டும் என்று நினைக்கிறீர்கள்? யாருடன் விளையாடிக் கொண்டிருக் கிறீர்கள்?

இது புரிந்து கொள்ளப்பட்டுவிட்டால், மனிதன் வெகுளியாகிவிட்டால், அவனது கபடத்தை, தந்திரங்களை விட்டுவிட்டால் எளிதாக ஏற்றுக் கொள்வான். இயற்கையை உள்ளதை உள்ளவாறே ஏற்றுக் கொண்டு அதனுடனே செல்வதைத் தவிர வேறு வழியே இல்லை. பிறகு அங்கே எந்தத் தடையும் இருக்காது. பிறகு அவன் தந்தையுடன் செல்லும் குழந்தை போல் செல்லலாம், ஆழ்ந்த நம்பிக்கையுடன்.

ஒருமுறை முல்லா நஸ்ருதீனின் மகன் வீட்டிற்குள் வந்தவுடன் தன் நண்பனுடன் விளையாடிக் கொண்டிருந்த போது, அவன் விளையாட அவனை நம்பித் தன் பொம்மையைக் கொடுத்ததாகவும், ஆனால் அந்த நண்பன் இப்போது அந்தப் பொம்மையைத் தர மறுப்பதாகவும் கூறி விட்டுக் கேட்டான் : "இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?"

முல்லா நஸ்ருதீன் அவனைப் பார்த்துச் சொன்னார் : "இந்த ஏணியில் ஏறு." அந்தப் பையனும் அவ்வாறே செய்தான். அவன் தன் தந்தையை நம்பினான். அவன் பத்து

அடி உயரத்திலிருந்த போது நஸ்ரூதீன் சொன்னார் : "இப்போது என் தோளின் மேல் குதி."

அந்தப் பையன் தயங்கிவிட்டுக் கூறினான் : "நான் விழுந்தால், மிகவும் வலிக்குமே."

நஸ்ரூதீன் சொன்னார் : "நான் இங்கே இருக்கும் போது நீ கவலைப் படவேண்டிய அவசியமில்லை, குதி."

அந்தப் பையன் குதித்தான். நஸ்ரூதீன் ஒதுங்கிக் கொண்டார். அந்தப் பையன் கீழே விழுந்துவிட்டான். பிறகு அழ ஆரம்பித்தான்.

அப்போது நஸ்ரூதின் சொன்னார் : "இப்போது உனக்குத் தெரிந்திருக்கும். யாரையும் ஒருபோதும் நம்பாதே, உன் தந்தை சொன்னால் கூட, உன் தந்தையைக் கூட நம்பாதே!"

யாரையும் நம்பாதீர்கள், இல்லாவிட்டால் உங்கள் வாழ்க்கை முழுவதுமே ஏமாற்றப்படுவீர்கள். இதைத்தான் எல்லா தகப்பனும், எல்லா பெற்றோரும், எல்லாப் பள்ளிகளும், எல்லா ஆசிரியர்களும் உங்களுக்குக் கற்றுத் தருகிறார்கள், இதுதான் உங்களின் பாடம். யாரையும் நம்பாதீர்கள், யார் மீதும் நம்பிக்கை வைக்காதீர்கள். இல்லா விட்டால் ஏமாற்றப்படுவீர்கள். நீங்கள் கபடமுள்ளவரா கிறீர்கள். புத்திசாலித்தனம் என்ற பெயரில் கபடத்தனத் தோடும், நம்பிக்கையில்லாத் தன்மையோடும் வளர்கிறீர்கள். ஒருமுறை ஒருமனிதன் நம்பிக்கையில்லாமல் போய் விட்டான் என்றால், மூலத்தொடர்பையே அவன் தொலைத்து விடுகிறான்.

நம்பிக்கைதான் ஒரே பாலம். இல்லாவிட்டால் உங்கள் முழு வாழ்க்கையும் வீணடிக்கப்பட்டுவிடும். தோல்வியைத்

தழுவும் என்று நிச்சயமாய் தெரிந்தும் தேவையில்லாது சண்டை போடுகிறீர்கள் சர்வ நிச்சயமாயிருக்கும் போது இதை இப்போதே உணர்வது நல்லது. ஏனெனில் இறக்கும் தருவாயில் ஒவ்வொருவருமே தோற்கடிக்கப்பட்டதை உணர் கிறார்கள். ஆனால் அப்போது ஒன்றும் செய்ய முடியாது.

உண்மையான புத்திசாலித்தனம் கபடம் நிறைந்ததல்ல, அது முற்றிலும் மாறுபட்டது. உண்மையான புத்திசாலித் தனம் விஷயங்களுக்குள் பார்க்கும். எப்போதெல்லாம் நீங்கள் உள்ளுக்குள் பார்க்கிறீர்களோ, அப்போது நீங்கள் ஒரு அலை தான், முழுமையான கடல் இருக்கிறது. அதனால் கவலைப் படத் தேவையில்லை என்பது உங்களுக்குத் தெரிய வரும். முழுமை உங்களை உருவாக்கியுள்ளது. அது உங்களைக் கவனித்துக் கொள்ளும், நீங்கள் முழுமையிலிருந்து வந்து விட்டீர்கள். அது உங்கள் எதிரி அல்ல. நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. திட்டமிடத் தேவையில்லை. எப்போது நீங்கள் கவலைப்படாமல் இருக்கிறீர்களோ, திட்ட மிடாமலிருக்கிறீர்களோ அப்போதுதான் முதன் முதலாக வாழ்க்கை தொடங்குகிறது. முதன் முறையாக நீங்கள் கவலைகளே இல்லாதது போல் உணர்கிறீர்கள். வாழ்க்கை உங்களுக்கு நிகழ்கிறது.

இந்த புத்திசாலித்தனம் தான் சமயம். இந்த புத்திசாலித் தனம் உங்களுக்கு அதிக நம்பிக்கையைக் கொடுக்கிறது. கடைசியாக முழுமையான நம்பிக்கையை இந்த புத்திசாலித் தனம் உங்களை உயர்ந்த இயற்கைக்கு , ஏற்புத்தன்மைக்கு வழிநடத்திச் செல்கிறது. இதைத்தான் புத்தர் ‘ததாத்தா’ என்றார். புத்தர் கூறினார் . என்னவெல்லாம் நடக்க வேண்டுமோ, நடக்கும். வேறெதுவும் நிகழாது. வேறெதுவும் சாத்தியமில்லை. அது வேறுவிதமாக இருக்க வேண்டும் என்று கேட்காதீர்கள். அதைச் செல்லவிடுங்கள். முழுமையைச் செயல்பட விடுங்கள். முழுமையை நீங்கள் செயல்பட

அனுமதிக்கும் போது உங்களுக்குச் சுமையிருக்காது, தடையிருக்காது, பிறகு நீங்கள் தோற்கடிக்கப்பட முடியாது.

ஜப்பானில், புத்தர் வழியாக லாவோதஸூ மற்றும் சுவாங்தஸூ மூலமாக 'ஜென்டோ' எனப்படும் ஒரு கலை முன்னேற்றமடைந்தது. ஜென்டோ என்பதன் பொருள் கத்தியின் ஜென் நிலை என்பதாகும், வீரர்களின் கலை. அவர்களைப் போல் வேறு யாராலும் செய்ய முடியாது. அவர்கள் அதை முன்னேற்றியது அபரிமிதமானது. அதற்குப் பல ஆண்டுகள் ஆயின, முழுவாழ்க்கையும் கூட, ஜென்டோவைக் கற்றுக் கொள்ள. ஏனெனில் கற்றுக் கொள்ளல் என்பது ஏற்றுக் கொள்ளலை உள்ளடக்கியுள்ளது. நீங்கள் சாதாரண வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ள முடியாது. வீரன் முன்னால் நின்று கொண்டிருக்கும் போது, உங்களைக் கொல்லக் காத்துக் கொண்டிருக்கும் போது, எப்படி உங்களால் ஏற்றுக் கொள்ள முடியும்? ஒவ்வொரு கணமும் கத்தி உங்களுக்கு முன்னால் நீட்டப்படும் போது எப்படி உங்களால் ஏற்றுக் கொள்ள முடியும் , எந்தக் கணத்திலும் நேரலாம் என்று எதிர்பார்த்து சாவின் பக்கத்தில் நிற்கும்போது?

ஜென்டோ கலை சொல்கிறது : நீங்கள் கத்தியை ஏற்றுக் கொண்டால், எதிரியை உங்களைக் கொல்லப் போகும் ஒருவனை ஏற்றுக் கொண்டால் அங்கே நம்பிக்கையின்மை என்பதே இருக்காது.எதிரி கூட நண்பனாவான். நீங்கள் பயப்பட மாட்டீர்கள். நடுங்கமாட்டீர்கள். சக்தியின் தூணாகிவிடுவீர்கள், உடைக்க முடியாதபடி. கத்தி உங்களை வெட்டவரும். ஆனால் உங்களைப் பிரிக்க முடியாது. நீங்கள் அழிக்கப்படக் கூடிய சாத்தியமே ஒருபோதும் இருக்காது.

ஒரு பெரிய ஜென்டோ குரு இருந்தார். அவருக்கு எண்பது வயது. வழக்கமாக அவரைத் தோற்கடிக்கத்

தகுதியான சீடன் அவரை வெற்றி கொண்டவனாவான். அதனால் எல்லா சீடர்களும் நினைத்தார்கள், என்றாவது ஒரு நாள் அவர் அவர்களின் சவாலைச் சந்திப்பார் என்று. ஏனெனில் அவருக்கு வயதாகிக் கொண்டேயிருந்தது.

அங்கு அதிபுத்திசாலியான சீடன் ஒருவனிருந்தான். மிகவும் தந்திரமுடையவன், வலிமையுடையவன். ஆனால் ஜென்டோ ஆசிரியர் அல்ல. அந்தக் கலையில் திறமை யுடையவர். அவன் பெரிய வீரனாக இருந்தால் கூட, கத்திச் சண்டை பற்றி எல்லாம் தெரிந்திருந்தால் கூட. அவன் இன்னும் தூண் போன்ற சக்தியைப் பெற்றிருக்கவில்லை. சண்டை பற்றிய பயம் இன்னமும் இருந்தது. 'ததாத்தா' அவனுக்கு இன்னும் நிகழ்ந்திருக்கவில்லை.

அவன் திரும்பத் திரும்பக் குருவிடம் சென்று சொல்லிக் கொண்டிருந்தான் : "இப்போது நேரம் வந்துவிட்டது, உங்களுக்கு வயதாகிக் கொண்டேயிருக்கிறது, விரைவில் எங்களுடன் சவால்விடக் கூட முடியாத அளவிற்கு வயதாகிப் போகும். நான் இப்போது உங்களிடம் சவால் விடுகிறேன், என் சவாலை ஏற்றுக் கொள்ளுங்கள். குருவே, உங்களிடம் நான் கற்றுக் கொண்டதை வெளிப்படுத்த எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுங்கள்." குரு அவனைப் பார்த்து சிரித்துவிட்டு அவனைத் தவிர்த்துவிட்டார்.

சீடன் குருவிற்கு சக்தியில்லாமல் போய்விட்டதால், வயதாகிவிட்டதால் பயப்படுகிறார். அதனால் சவாலிலிருந்து தப்பிக்க நினைக்கிறார் என்று நினைத்துக் கொண்டான். அதனால் ஒரு நாள் இரவு வலியுறுத்தி, வலியுறுத்திப் பார்த்தான், பிறகு கோபமடைந்து : "நீங்கள் என் சவாலை ஏற்கும் வரை நான் உங்களை விடப் போவதில்லை. உங்களுக்கு வயதாகிக் கொண்டேயிருக்கிறது. பிறகு என் திறமையை

உங்களிடம் கற்றுக் கொண்டதை வெளிப்படுத்த முடியாமல் போய்விடும். நாளை காலை நீங்கள் ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும். இது பரம்பரைப் பழக்கமாக இருந்து வருகிறது."

குரு சொன்னார் : "நீ வலியுறுத்தினால், உன்னுடைய அதீத வலியுறுத்தலே நீ இன்னமும் தயாராகவில்லை என்பதைக் காட்டுகிறது. உன்னிடம் அதிக உணர்ச்சி வசப்படும் தன்மை இருக்கிறது. உனது நான் என்ற உணர்ச்சி சவால் விட விரும்புகிறது. நீ இன்னும் தகுதியாகவில்லை. ஆனால் நீ வலியுறுத்தினால் சரி. ஒன்றுசெய். அருகிலுள்ள மடத்திற்குச் செல். அங்கே என்னிடம் பத்து வருடங்களுக்கு முன் சீடனாக இருந்த ஒரு புத்தகுரு இருக்கிறார். அவர் 'ஜென்டோ' கலையில் திறமை படைத்தவர். பிறகு அவர் கத்தியைத் தூக்கி எறிந்துவிட்டு துறவி ஆகிவிட்டார். அவர் தான் என்னைப் பொறுத்தவரை சரியான வெற்றியாளர். அவர் ஒரு போதும் என்னிடம் சவால் விட்டதில்லை. அவர் ஒருவரால் தான் என்னிடம் சவால் விடவும் என்னைத் தோற் கடிக்கவும் கூட முடியும். அதனால் முதலில் அந்த புத்த குருவிடம் சென்று சவால் விடு. அவரைத் தோற்கடிக்க உன்னால் முடிந்தால் பிறகு என்னிடம் வா. அவரைத் தோற் கடிக்க முடியவில்லை எனில் இந்த எண்ணத்தையே விட்டு விடு."

உடனே அந்தச் சீடன் மடத்திற்குக் கிளம்பிவிட்டான். காலைக்குள் அவன் அங்கேயிருந்தான், அந்தப் புத்த குருவிடம் சவால் விட்டான். இந்தப் புத்த குரு ஒரு 'ஜென்டோ' வீரனாக இருந்திருப்பார் என்று அவனால் நம்பவே முயடிவில்லை. ஒல்லியாக, மெலிவாக, தொடர்ந்து தியானம் செய்து கொண்டு ஒரு நாளைக்கு ஒரு முறை மட்டும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அந்தக் குரு கவனித்துவிட்டுச் சிரித்தார். அவர் கேட்டார் : "நீ என்னிடம் சவால் விட வந்திருக்கிறாயா?

என் குருவே என்னிடம் சவால்விட முடியாது, அவரே பயப்படுவார்."

இதைக் கவனித்த சீடன் பைத்தியம் போலாகிவிட்டான். அவன் சொன்னான் : "உடனே வந்து நில்! இதோ நான் உனக்குக் கத்தி கொண்டு வந்துள்ளேன், புத்தகுருவிட மிருக்காது என்று தெரிந்து. தோட்டத்திற்கு வா. இது எனக்கு அவமரியாதை. நான் கவனிக்கப் போவதில்லை."

அந்தப் புத்த குரு கொஞ்சம் கூட தொந்தரவுக்குட் படாமலிருந்தார். அவர் சொன்னார் : "நீ ஒரு குழந்தைதான். வீரனல்ல. உடனடியாக நீ கொல்லப்படுவாய். எதற்குத் தேவையில்லாமல் சாவு வேண்டுமென்று கேட்கிறாய்?"

அது அவனை இன்னும் கோபப்படுத்தியது. இருவரும் வெளியே சென்றார்கள். புத்த குரு சொன்னார் : "எனக்கு கத்தி தேவையில்லை. ஏனெனில் உண்மையான வீரனுக்கு அது தேவைப்படாது. நான் உன்னைத் தாக்கப் போவதில்லை. என்னைத் தாக்க ஒரு வாய்ப்பு கொடுக்கப் போகிறேன். உன் கத்தி உடைக்கப்பட்டு விட்டது, நீ எனக்குப் பொருத்த மானவன் அல்ல. நீ ஒரு குழந்தை, நான் கத்தியை உனக் கெதிராகப் பயன்படுத்தினால் மக்கள் சிரிப்பார்கள்."

இது மிக அதிகம். அந்த சீடன் குதித்தான். அப்போது அந்தக் குரு நின்றிருப்பதைக் கண்டான். அதற்குள் உட்கார்ந்திருந்தார். இப்போது எழுந்தார். அவர் கண்களை மூடினார், பக்கவாட்டில் அசைந்தார், திடீரென மறைந்து விட்டார், சக்தித் தூண் மட்டுமே அங்கிருந்தது. முகமில்லை. சக்தித் தூண் மட்டுமேயிருந்தது. அசைந்தது. அவன் பயந்து பின்னடைந்தான். அவனை நோக்கி அந்தத் தூண் நகர்ந்தது. அவன் கத்தியைத் தூர எறிந்து விட்டு சத்தமாகக் கத்தினான் : "என்னைக் காப்பாற்றுங்கள்."

அந்தக் குரு உட்கார்ந்து கொண்டு மறுபடி சிரிக்கத் தொடங்கினார். மீண்டும் அவர் முகம் வந்துவிட்டது. சக்தி மறைந்து விட்டது. அவர் சொன்னார் : "நான் முன்பே சொன்னேன்! என் குரு கூட எனக்குப் பொருத்தமானவர் இல்லை என்று. அவரிடம் சென்று சொல்."

வேர்த்து வழிய நடுங்கிக் கொண்டே பதட்டத்துடன் அவன் தன் குருவிடம் சென்று சொன்னான் : "என் மேல் கொண்டுள்ள கருணைக்காக நான் உங்களிடம் எவ்வளவு கடன் பட்டிருக்கிறேன்! நான் உங்களுக்குப் பொருத்தமே இல்லை. அந்த புத்தக் குருவே என்னை முழுமையாய் அழித் திருப்பார். ஆனால் ஒன்றை என்னால் சகித்துக் கொள்ள முடிய வில்லை. அதனால்தான் நான் இதில் ஈடுபட்டேன். அவர் சொன்னார் : "உன் குரு கூட எனக்குப் பொருத்தமான வரில்லை."

அந்தக் குரு சிரித்துக் கொண்டே கேட்டார் : "இந்தத் தந்திரத்தை அவன் உன்னிடமும் காட்டி விளையாடி விட்டானா? உனக்குக் கோபம் வந்ததா? பிறகு அவன் உன் வழியாக பார்த்திருப்பான், ஏனெனில் கோபம் என்பது உயிரின் ஓட்டை. இதுதான் அடிப்படைத் தந்திரம். நான் எப்போது அவனிடம் யாரையாவது அனுப்பினாலும் அவன் எனக்கெதிராகப் பேசத் தொடங்கிவிடுவான். என்னுடைய சீடர்கள் இயல்பாகக் கோபமடைந்து விடுவார்கள். அவர்கள் கோபப்படும் போது அவர்களிடம் ஓட்டை உள்ளதை அவன் கண்டுபிடித்து விடுவான். ஓட்டை இருக்கும் போது உன்னால் சண்டை போட முடியாது."

எப்போதெல்லாம் நீங்கள் கோபப்படுகிறீர்களோ, அப்போது உங்கள் உயிர் உடைகிறது. எப்போது ஆசைப் பட்டாலும் உங்கள் உயிரில் ஓட்டை விழுகிறது. எப்போதெல் லாம் பொறாமைப் படுகிறீர்களோ, வெறுப்படைகிறீர்களோ,

காமம் கொள்கிறீர்களோ அப்போது சக்தித் தூணாக இருக்க மாட்டீர்கள். அதனால்தான் புத்தர்கள் ஆசையற்று இருக்க வேண்டுமென நமக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள் ஏனெனில் எப்போதெல்லாம் ஆசையற்றிருக்கிறீர்களோ அப்போது சக்தி வெளியே நகராது. உள்ளுக்குள்தான் செல்லும். ஒரு உள்வட்டமாகிவிடும், மின்சாரப் பகுதியாகிவிடும், உடல்மின் பகுதி. அந்தப் பகுதி இருக்கும் போது, எந்த ஒழுகலு மின்றியிருக்கும் போது நீங்கள் தூணாகிறீர்கள். உங்களைத் தோற்கடிக்க முடியாது. ஆனால் நீங்கள் வெற்றியைப் பற்றிச் சிந்திப்பதில்லை, நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் வெற்றியைப் பற்றிச் சிந்தித்தால் சக்தித் தூணாக முடியாது. பிறகு அந்த ஆசை ஒரு ஓட்டையாகி விடும்.

நீங்கள் பலவீனமாயிக்கிறீர்கள். அடுத்தவர் பலத் துடனிருப்பதால் அல்ல, நீங்கள் பலவீனமாயிருப்பது, அதிக ஆசைகள் உங்களுக்குள் நிரம்பியிருப்பதால்தான், நீங்கள் தோற்கடிக்கப்படுகிறீர்கள். அடுத்தவர் புத்திசாலியாக தந்திரத் துடனிருப்பதால் அல்ல. நீங்கள் தோற்கடிக்கப் படுகிறீர்கள், ஏனெனில் உங்களிடம் பல ஓட்டைகள் இருக்கின்றன.

'ததாத்தா' - ஏற்றுக் கொள்ளல், முழுமையாக ஏற்றுக் கொள்ளல். இதன் பொருள் ஆசை இல்லாதிருத்தல். ஆசை என்பது ஏற்றுக் கொள்ளாத் தன்மையிலிருந்து உதிக்கிறது. ஒரு குறிப்பிட்ட சூழலை உங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. அதனால் ஆசை தோன்றுகிறது. நீங்கள் குடிசையில் வாழ்கிறீர்கள். ஆனால் அதை ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. இது அதீத 'நான்' என்ற தன்மை, ஒரு அரண்மனையை நீங்கள் விரும்புகிறீர்கள். பிறகும் நீங்கள் ஏழைதான். நீங்கள் குடிசை யில் வாழவில்லை என்பதால் இல்லாமல் போய்விடாது. குடிசையில் பேரரசர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். புத்தர் மரத்தடியில் தான் வாழ்ந்தார். அவர் ஏழையல்ல. உங்களால் பணக்கார மனிதனை எங்கேயும் பார்க்க முடியாது.

உங்கள் குடிசை உங்களை ஏழையாக்கி விடுவதில்லை, அடுத்தவர்கள் அரண்மனையில் வாழ்வதால் நீங்கள் ஏழையாகி விடுவதில்லை. அரண்மனைக்கு ஆசைப்படும் கணத்தில் தான் ஏழையாகிறீர்கள், அரண் மனையில் வாழும் ஆசையில் குடிசையை ஒப்பிட்டுப் பார்ப்பதால் ஏழையாகிறீர்கள். நீங்கள் பொறாமையுடையவராகிறீர்கள், ஏழையாகிறீர்கள்.

எப்போதெல்லாம் திருப்தியின்மை இருக்கிறதோ அங்கே வறுமையிருக்கிறது. திருப்தியின்மை இல்லா மலிருக்கும் போது நீங்கள் பணக்காரராகிறீர்கள். எந்தத் திருடனாலும் திருடிவிட முடியாத செல்வம் உங்களிடம் இருக்கிறது. வரி என்ற பெயரில் எந்த அரசாலும் எடுத்துக் கொள்ள முடியாத. எந்தவிதத்திலும் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட முடியாத செல்வத்தை நீங்கள் பெற்றுள்ளீர்கள். உங்கள் உயிருக்கு ஒரு கோட்டையைப் பெற்றுள்ளீர்கள். தகர்க்க முடியாதது, ஊடுருவ முடியாதது.

ஒரு ஆசை நிகழும் போது உங்கள் சக்தி குறைகிறது. ஆசையினால் நீங்கள் பலவீனமாகிறீர்கள். எதிர்பார்ப் பதனால் நீங்கள் பலவீனமாகிறீர்கள். நீங்கள் எதிர்பார்க்காமல் திருப்தியாயிருக்கும் போது, எதுவும் நிகழாமலிருக்கும் போது, உங்கள் முழு உயிரும் நிலையாயிருக்கும் போது, அப்போது சுவாங்தஸூ சொல்கிறார் : 'நீங்கள் ஊடுருவப்பட முடியாத கோட்டை. தீயால் உங்களைச் சுட முடியாது. சாவு சாத்தியமேயில்லை. நீங்கள் இறக்க முடியாது. நிலையான வாழ்க்கையின் ரகசிய சாவி உங்களிடமுள்ளது.'

சில நேரங்களில் இது சாதாரண சூழலிலும் கூட நிகழும். வீடு தீப்பற்றி எரிகிறது. எல்லாரும் இறந்து விடுகிறார் கள், ஆனால் சிறுகுழந்தை மட்டும் பிழைத்து விடுகிறது. விபத்து நிகழ்கிறது. வயதானவர்கள் இறந்து போகிறார்கள்,

குழந்தை மட்டும் தப்பித்துவிடுகிறது. மக்கள் இதை அற்புதம், கடவுளின் கருணை என்றெல்லாம் சொல்வார்கள். இல்லை, அப்படி எதுவுமில்லை. அதற்குக் காரணம் அந்தக் குழந்தை அந்தச் சூழலையும் ஏற்றுக் கொள்கிறது. தந்திரமுடையவர்கள் ஓடத் தொடங்குகிறார்கள். தங்களைக் காப்பாற்றிக் கொள்ள முயல்கிறார்கள். தமக்குத் தாமே துன்பத்தில் மாட்டிக் கொள்கிறார்கள். அந்தக் குழந்தை ஒய்வெடுக்கிறது. நடந்து கொண்டிருப்பதைப் பற்றி தான் சாகப் போவதைப் பற்றி யெல்லாம் அதற்குத் தெரிந்திருக்கவில்லை. அந்தக் குழந்தை தன் வெகுளித்தனத்தின் வழியாகப் பிழைத்துக் கொள்கிறது.

இது ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது. மதுபானக் கடையின் முன்னாலோ, மதுபான விடுதிக்கருகிலோ இரவு போய் கவனியுங்கள், குடிகாரர்கள் தெருவில் விழுந்து கிடப்பார்கள். சாக்கடைக்கருகில் படுத்திருப்பார்கள். முழுமையான மகிழ்ச்சியுடன் காலையில் எழுந்திருப்பார்கள், அவர்கள் சிறிது கசங்கியிருக்கலாம் ஆனால் உடலில் சிறிய சேதம் கூட ஏற்பட்டிருக்காது. அவர்கள் உடல் எந்தப் பாதிப்புமின்றி இருக்கும். ஒரு கீறல் கூட இல்லாமலிருப்பார்கள்.

அந்தக் குடிகாரர்களைப் போல் சாலையில் விழ நீங்கள் முயற்சி செய்து பாருங்கள். உடனே காயம் படுவீர்கள். அவன் இதைப் போல்தான் தினமும் விழுகிறான். ஒவ்வொரு இரவும், பல தடவை. ஆனால் அவனுக்கு எதுவும் ஏற்படுவதில்லை. என்ன விஷயம், என்ன ரகசியம்? அவன் குடித்திருக்கும் போது அங்கு ஆசையே இல்லை. அவன் முழுவதும் ஓய்வாக இருக்கிறான். இங்கே இப்போதே குடித்திருக்கும்போது அவனுக்கு பயமே இல்லை. அவன் பயப்படுவதே இல்லை. பயமில்லாதபோது அங்கே தந்திரமுமில்லை.

தந்திரம் பயத்தின் வழியாகத்தான் வருகிறது. அதனால் அதிகம் பயப்படும் மனிதன் அதிக தந்திரமுள்ளவனாயிருக்

கிறான். துணிச்சலான மனிதன் தந்திரசாலியாய் இருப்ப தில்லை. அவன் தன் துணிச்சலைச் சார்ந்துதானிருப்பான். ஆனால் பயந்தவன் கோழை தந்திரத்தைச் சார்ந்து தான் இருப்பான். எவ்வளவு தாழ்வு மனப்பான்மையுடன் ஒருவன் இருக்கிறானோ அந்தளவிற்கு அவன் தந்திரவாதி யாகவும் இருப்பான். உயர்ந்த மனிதன் வெகுளியாயிருப்பான், தந்திரம் என்பது மாற்றுதான். ஒருவன் குடித்திருக்கும் போது, முற்றிலும் குடிபோதையில் இருக்கும் போது எதிர் காலமும், இறந்த காலமும் மறைந்துவிடுகிறது.

ஒருமுறை முல்லா நஸ்ரூதீன் தன் மனைவியுடன் நடந்து கொண்டிருந்தார். முழு போதையில் அவர் தெருவில் படுத்துக் கிடந்ததைப் பார்த்துவிட்டு அவரை வீட்டிற்கு அழைத்து வந்து கொண்டிருந்தாள் ஆம். எப்போதும் போல் அவள்விவாதித்துக் கொண்டு, எல்லா விவாதங்களிலும் வெற்றியும் பெற்றுக் கொண்டிருந்தாள். ஏனெனில் அவள் தனியாக இருந்தாள். முல்லா அங்கு இல்லை, அவர் அவளோடு நடந்து வந்தார், அவ்வளவுதான்.

அங்கு திடீரென ஒரு வெறி பிடித்த காளை தங்களை அணுகுவதைக் கண்டாள். நஸ்ரூதீனை எச்சரிக்க நேரமே இல்லை. அதனால் அவள் ஒரு புதருக்குள் குதித்து விட்டாள். அந்தக் காளை அருகில் வந்து முல்லாவை ஐம்படிக்குத் தூக்கி எறிந்தது. அவர் ஒரு சாக்கடைக்குள் விழுந்துவிட்டார். அவர் வெளியே வந்து தன் மனைவியைப் பார்த்துச் சொன்னார் : "இன்னொரு முறை இவ்வாறு செய்தாயெனில் நிஜமாகவே என் நிதானத்தை இழந்து விடுவேன். இது அதீதம்!"

சாதாரணமாகவே ஒயின் அதைக் குடிப்பவருக்கு அதிக சக்தியைக் கொடுத்து விடுகிறது. அப்படியெனில் தாவோ முழுமையான போதையா? கிருஷ்ணர், புத்தர் எல்லாம் பெரிய குடிகாரர்களா-தெய்விகத்துடன் குடியுமிருந்தால் 'தான்'

என்ற உணர்ச்சியின் பாதை கூட மிஞ்சாதா? நீங்கள் அவர்களை வேதனைப்படுத்த முடியாது. ஏனெனில் அவர்கள் அங்கே இல்லை. நீங்கள் அவர்களை அவமரியாதை செய்ய முடியாது. ஏனெனில் அவர்கள் யாரும் அதைத் தடுத்து காயம் ஏற்படுத்திக் கொள்ள மாட்டார்கள். உங்கள் அவமரியாதை அவர்களுக்குள் கடந்து செல்லும், காலியான வீட்டைக் கடப்பது போல. அவர்கள் படகு வெறுமையாயுள்ளது. தென்றல் எந்தத் தடையுமின்றி உள்ளே வரும். தென்றல் வீட்டிற்குள் செல்லும் போது அது அங்கே இருந்து கொண்டிருக்கிறது என்ற உணர்வு கூட இருக்காது.

நீங்கள் 'தான்' என்ற உணர்வுடனிருப்பதால்தான் ஒயினின் தாக்கம் அந்தளவிற்கிருக்கிறது. அதனால் நீங்கள் அதிகச் சுமையேற்றப் படுகிறீர்கள். சில நேரங்களில் அதை மறக்க விரும்புகிறீர்கள். அதனால் இந்த உலகம் ஒன்று குடியைப் பின்பற்ற வேண்டும். இல்லை தாவோவை, இவை தான் மாற்று வாய்ப்புகள். மதப் பற்றுடையவனே, உண்மையான மதப்பற்றுடைய மனிதன் மட்டுமே குடி, மரிஜுவானா போன்ற அனைத்து போதைப் பழக்கங்களுக்கும் அப்பாற்பட்டிருக்க முடியும். மதப்பற்றுடைய மனிதன் மட்டுமே இவற்றிற்கப்பாற்பட்டிருக்க முடியும். இல்லாவிட்டால் எப்படி அப்பாற்பட்டிருக்க முடியும்? 'நான்' என்ற உணர்ச்சி மிக அதிகமாயிருக்கிறது. சுமை அதிகமாயிருக்கிறது, தொடர்ந்து உங்கள் தலையில் இருக்கிறது. நீங்கள் உங்களை மறக்க வேண்டும்.

ஆனால் ஒயினினால் இவ்வளவு செய்ய முடிந்தால்., தெய்விக ஒயின் எந்தளவிற்கு முடியும் என்பதை உங்களால் நினைக்க முடியாது. ஒயின் என்ன செய்கிறது? சில குறிப்பிட்ட கணங்கள், மூளையில் ஏற்படும் வேதியியல் மாற்றங்களின் காரணமாக, உடலில் ஏற்படும் மாற்றங்களின் காரணமாக நீங்கள் உங்களை மறக்கிறீர்கள். ஆனால் சில சில கணங்

களுக்குத் தான். அடி ஆழத்தில் தான் நீங்களிருக்கிறீர்கள். சில மணி நேரங்களுக்குப் பிறகு அந்த வேதியியல் பாதிப்பு போய்விடும். உங்கள் உடல் ஒயினைத் தூக்கி எறிந்திருக்கும். பிறகு 'நான்' என்ற உணர்வுதான் மீண்டும் இருக்கும்.

ஆனால் அங்கே ஒயின் இருக்கிறது. நான் உங்களுக்கு ஒன்று சொல்கிறேன். கடவுள் தான் அந்த ஒயின், தாவோ அல்லது என்ன பெயரை விரும்புகிறீர்களோ, அவ்வாறே அழையுங்கள். ஒருமுறை நீங்கள் அதைச் சுவைத்தால், 'நான்' என்ற உணர்வு ஒரேயடியாகப் போய் விடும். யாரும் அந்தக் குடித்தன்மையிலிருந்து மீளவே முடியாது.

அதனால்தான் சுஃபிகள் எப்போதும் ஒயினைப் பற்றியே பேசுவார்கள். எப்போதும் பெண்களைப் பற்றியே பேசுவார்கள். அவர்களின் பெண்கள் உங்களுக்குத் தோன்றும் பெண்கள் போல் அல்ல. கடவுள் தான் பெண். அவர்கள் ஒயின், நீங்கள் நினைக்கும் ஒயின் அல்ல. கடவுள் தான் ஒயின். உமர்கய்யாம் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டார். மிக அதிகமாய், ஃபிட்ஸ்ஜெரால்டால் அவர் உலகம் முழுவதும் தறவாகப் புரிந்து கொள்ளப்பட்டார். உமர்கய்யாமின் ரூபயாத் ஒயினையும் பெண்ணையும் புகழ்வதைப் போல் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் அது அப்படியல்ல. உமர் கய்யாம் ஒரு சுஃபி, பூடகமானவர். அவர் தாவோவின் வழியாக வரும் ஒயினைப் பற்றிக் கூறுகிறார். நீங்கள் எப்போதும் இடைவிடாது உங்களை இழந்து, இழந்து கொண்டிருக்கும் ஒயினைப் பற்றிச் சொல்கிறார். இந்தப் போதையூட்டும் பொருள் தெய்விக போதை தற்காலிகாலிக மானதல்ல, நிரந்தரமானது; ஒருகணம் மட்டுமல்ல; நிலையானது.

சுஃபிகள் கடவுளைப் பெண்ணாக நினைத்துப் பேசுவார்கள். இந்த ஆலிங்கனம் நிலையானது. உயர்ந்தது, இதற்குப் பிறகு விலகலே இல்லை. இதை நீங்கள் புரிந்து

கொண்டால் பிறகு நீங்கள் புத்திசாலிதான். ஆனால் உங்கள் தந்திரத்தின் வழியே, கபடத்தின் வழியே கணக்கு, தர்க்கம் ஆகியவற்றின் வழியே அல்ல.

உங்களால் முடிந்தால் உயிருக்குள் ஆழமாய் பாருங்கள். நீங்கள் எங்கிருந்து வந்தீர்கள்? எங்கே சென்று கொண்டிருக் கிறீர்கள்? யாருடன் சண்டை போட்டுக் கொண்டிருக் கிறீர்கள். ஏன்? நீங்கள் சண்டைபோட்டு இழந்து கொண்டிருக் கும் கணத்தில் உங்களால் பேரின்பத்தை அடைய முடியும். இப்போது சூத்திரத்தைக் கவனியுங்கள் : முழுமை.

நீங்களாகவே உங்களை ஒருதனி மனிதனாய் கருதினால் நீங்கள் செய்வது தவறு. முழுமைதான் வாழ்கிறது. இது தவறு- இது அதுவாகத் தோன்றுகிறது. நான் நான் என்று நினைத்துக் கொள்கிறேன். இதுதான் உலகிலேயே மிகவும் தவறான ஒன்று. இதனால்தான் 'நான்' என்ற சண்டை தோன்றுகிறது. நான் என்றால், பிறகு இந்த முழுமை எதிரியாய்த் தோன்றும், எல்லாம் எனக்கெதிராயிருப்பதைப் போல் தோன்றும்.

எதுவும் உங்களுக் கெதிராயில்லை. இருக்க முடியாது! இந்த மரங்கள் உங்களுக்கு உதவிக் கொண்டிருக்கின்றன. இந்த வானம் உங்களுக்கு உதவிக் கொண்டிருக்கிறது. இந்த தண்ணீர் உங்களுக்கு உதவிக் கொண்டிருக்கிறது. இந்த பூமிதான் உங்களை உருவாக்கியது. இயற்கைதான் உங்கள் அன்னை. எப்படி தாய் உங்களுக்கெதிராயிருக்க முடியும்? நீங்கள் அவளி லிருந்துதான் வந்தீர்கள். ஆனால் நீங்கள் தனிப் பட்டவன் என்று நினைத்துக் கொள்கிறீர்கள். பிறகு சண்டை தோன்று கிறது. இது ஒரு பக்கமானது. நீங்கள் சண்டையைத் தொடங்கு கிறீர்கள். இயற்கை சிரித்துக் கொண்டேயிருக்கிறது. கடவுள் ரசித்துக் கொண்டேயிருக்கிறார். சிறு குழந்தைக்குள் கூட நான் என்ற உணர்வு தோன்றும் போது சண்டை தோன்றுகிறது.

பெரிய கடை ஒன்றில் ஒரு குழந்தை ஓர் பொம்மையைக் கேட்டுக் கொண்டேயிருந்தது. அதன் தாய் நிதானமாய் சொன்னாள் : "இல்லை, நான் வாங்கித்தரப் போவதில்லை, உனக்குத் தேவையான அளவு இருக்கிறது."

அந்தக் குழந்தை கோபத்துடன் சொன்னது : "அம்மா, நான் உன்னைப் போல் கஞ்சத்தனமான ஒருத்தியை ஒரு போதும் பார்த்ததேயில்லை. நீ மிக மிக கருமித்தனமுடையவள்."

அந்தத் தாய் குழந்தையைப் பார்த்தாள், அதன் முகத்திலிருந்த கோபத்தை, பிறகு சொன்னாள் : "காத்திரு, நீ உண்மையான கருமியைப் பார்ப்பாய். கொஞ்சம் பொறு!"

ஒரு வீட்டில் தாய் குழந்தையை வீட்டுப்பாடம் செய்யும் படி வலியுறுத்திக் கொண்டிருந்தாள். ஆனால் அந்தக் குழந்தை கவனிக்காமல் பொம்மைகளுடன் விளையாடிக் கொண்டேயிருந்தான். அதனால் அவள் கேட்டாள் : "என்னைக் கவனிக்கிறாயா, இல்லையா?"

அந்த குழந்தை பார்த்துவிட்டுக் கேட்டது : "என்னை யாரென்று நினைக்கிறாய்-அப்பாவென்றா?"

சிறு குழந்தைதான், சண்டை தொடங்கிவிட்டது -நான் என்ற உணர்ச்சி தோன்றத் தொடங்கிவிட்டது. தந்தை அமைதியாயிருக்க முடியும் என்பது அவனுக்குத் தெரியும்; ஆனால் அவன் அப்படியல்ல. குழந்தை தான் தனியானவன் என்பதை உணரும் கணத்தில் மொத்த இயற்கை ஒருமையும் தாக்கப்படுகிறது. பிறகு அவன் வாழ்க்கை முழுவதுமே போராட்டமும் சண்டையுமாகத்தான் இருக்கும்.

மேற்கத்திய மனோவியல் 'நான்' என்ற உணர்வு வலிமைப் படுத்தப்பட வேண்டுமென வலியுறுத்துகிறது. இதுதான் மேற்கத்திய பகுதிக்கும் கிழக்கத்திய பகுதிக்குமுள்ள

வேறுபாடு. மேற்கத்திய மனவியல் 'நான்' என்ற உணர்வு வலிமைப்படுத்தப்பட வேண்டும் என்கிறது. குழந்தை அதிக தன்னுணர்வுடன் வாழ வேண்டும். அவன் சண்டைபோட வேண்டும், போராட வேண்டும். அப்போது தான் முதிர்ச்சியடைய முடியும்.

குழந்தை தாயின் கருப்பையிலிருக்கிறது, தாயுடன் ஒன்றாக. அவனோ, அவளோ இருப்பதாக உணர்வு கூட இல்லாமல், எந்த விழிப்புணர்வுமின்றி. ஆழ்ந்த உணர்வில் எல்லா உணர்வுகளுமே நோய்தான். அவன் உணர்வில்லா மலில்லை. அவன் விழிப்போடுதான் இருக்கிறான். அவன் ஜீவன் இருக்கிறது. ஆனால் சுயநினைவின்றி. "நான்" என்பதில்லை. இன்னும் அது பிறக்கவில்லை. குழந்தை உணர்கிறது. வாழ்கிறது, முழு உயிர்ப்புடன், ஆனால் தான் தனியானவன் என்று ஒருபோதும் உணர்வதில்லை. தாயும், குழந்தையும் ஒன்று.

பிறகு குழந்தை பிறக்கிறது. முதல் பிரிவு நிகழ்கிறது, முதல் அழுகையும். இப்போது நகரத் தொடங்குகிறான். அலை கடலிலிருந்து நகரத் தொடங்குகிறது. மேற்கத்திய மனநல நிபுணர்கள் சொல்கிறார்கள்: நாம் குழந்தைக்குச் சுதந்திரமா யிருக்கக் கற்றுக் கொடுக்க வேண்டும், தனித்திருக்க. ஜங்'கின் மனநலவியல் தனித்திருத்தல் தான். அவன் தனி நபராக வேண்டும். முற்றிலும் தனியாய் அவன் சண்டை போட வேண்டும். அதனால் தான் மேற்கே இளைய சமுதாயத்தினரிடையே ஏகப்பட்ட கலவரம். அந்தக் கலகம் இளைஞர்களால் தோற்றுவிக்கப்படுவதில்லை. ஃப்ராய்டு, ஜங், அட்லர் போன்றவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. அவர்கள் தான் அடிப்படையைக் கொடுத்தார்கள்.

ஃப்ராய்டு உங்களுக்கு அதீத தன்னுணர்ச்சியைத் தருவார். அது உங்களை வடிவமைக்கும். அதனால் தாய், தந்தை

யுடன் சண்டை போடுங்கள். ஆசிரியருடன், சமுதாயத்துடன் சண்டைபோடுங்கள். வாழ்க்கை என்பது போராட்டம். டார்வின் தன் கொள்கையின் மூலம் இத்தகைய கருத்தைத் தோற்றுவித்தார். வாழ்க்கை என்பது 'வலிமையுடையவை உயிருடன் இருக்கும்.' அதனால் நீங்கள் உங்கள் தன்னுணர்ச்சியில் எவ்வளவு பலசாலியாக இருக்கிறீர்களோ அவ்வளவு வாழ வாய்ப்புக் கிடைக்கும்.

மேற்கத்திய பகுதிகள் அரசியலின் வழியாக வாழ்கின்றன. கிழக்கு முற்றிலும் வேறுபட்ட நடத்தையுடையது. தாவோதான் எல்லை, கிழக்கத்திய உணர்வின் மிக அடிப்படை. அது சொல்கிறது : தனித்தன்மை இல்லை, தன்னுணர்வு இல்லை, சண்டை இல்லை, தாயுடன் ஒன்றாகுங்கள், எதிரியே அங்கில்லை, தோல்வியடைதல் என்ற கேள்வியே இல்லை.

ஒரு மனிதன் கூட, அதிக அறிவுடையவன் கூட தூண்டக் கூடிய, தர்க்கரீதியான பெட்ரண்ட்ரஸ்ஸல் போன்ற மனிதன் கூட, ஜெயித்தலைப் பற்றித்தான் யோசிக்கிறான். இயற்கையை தோற்கடித்தலை, வெற்றி கொள்ளலைப் பற்றி. அறிவியல் போராட்டத்தைப் போல் தோன்றுகிறது. இயற்கையுடன் சண்டை போடுவதைப் போல் எப்படி பூட்டை உடைப்பது, எப்படி ரகசியங்களைத் திறப்பது, எப்படி இயற்கையிலிருந்து ரகசியங்களை எடுத்துக் கொள்வது ?

கிழக்கத்திய உணர்வு நிலையோ முற்றிலும் மாறுபட்டது. அது சொல்கிறது : நான் என்ற உணர்ச்சியே பிரச்சினைதான். அதை வலிமைப் படுத்தாதீர்கள். எந்தச் சண்டையையும் உருவாக்காதீர்கள். வலிமையுடையவர்களல்ல, அடக்க முடையவர்கள் தான் வாழ்கிறார்கள்.

அதனால்தான் நான் திரும்பத் திரும்ப வலியுறுத்துகிறேன். இயேசு கிறிஸ்து கிழக்குப் பகுதியிலிருந்து

வந்தவரென்று . அதனால்தான் அவரால் மேற்கைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. மேற்கு அவரைத் தவறாகப் புரிந்து கொண்டது. கிழக்குப் பகுதியால் அவரைப் புரிந்து கொள்ள முடிந்தது. ஏனெனில் அவர்களுக்கு லாவோதஸூ, சுவாங்தஸூ, புத்தர் எல்லாம் தெரியும். அதனால் இயேவும் அவர் களுள் ஒருவரானார். அவர் சொன்னார் : 'யார் கடைசி யானவனோ அவன் கடவுள் இராஜ்ஜியத்தில் முதலாமவனாக இருப்பான். அடக்கம் மிகுந்தவன், பணிவானவன் கடவுளின் அரசைக் கைப்பற்றுவான்.' ஊக்கத்தில் குறைந்தவன் சக்தியில் குறைந்தவன் யார்? வெற்றுப்படகு, எதுவுமில்லாதவன், எதன் மேலும் ஆசைப்படாதவன், எதையும் சொந்தமாக்கிக் கொள் ளாதவன், 'தான்' என்ற உணர்வில்லாதவன், இல்லாமலே வாழ்பவன்.

இயற்கை தனது ரகசியங்களைக் கொடுக்கிறது. நீங்கள் பிடுங்க வேண்டிய அவசியமில்லை. கொல்ல வேண்டிய, பூட்டை உடைக்க வேண்டிய அவசியம் இல்லை. இயற்கையைக் காதலியுங்கள், அது தன் ரகசியங்களை யெல்லாம் கொடுத்து விடும். காதல் தான் சாவி. தோற்கடித்தல் அபத்தமானது.

அதனால் மேற்கில் என்ன நிகழ்ந்து கொண்டிருக் கிறது? இந்தத் தோற்கடிப்பு இயற்கையை அழித்து விடுகிறது. அதனால் இப்போது இயற்கைக்கு அழுகிறது. சமானத்திற்கு நாம் இயற்கையை முற்றிலுமாய் அழித்து விட்டோம். ஏனெனில் நாம் எல்லாப் பூட்டுக்களையும் உடைத்துவிட்டி ருந்தோம். முழு சமானத்தை அழித்துவிட்டிருந்தோம். இப்போது இந்த சமமின்மையால் மனித இனம் கொஞ்சம் கொஞ்சமாய் அழியும்.

சுவாங்தஸூவை இப்போது புரிந்து கொள்ள முடியும். ஏனெனில் அவர் சொன்னார் : இயற்கையுடன் சண்டை

போடாதீர்கள். ஆழ்ந்த காதலுடனிருங்கள். அந்தக் காதல் மூலம் ஒன்றாகுங்கள். இதயத்திலிருந்து இதயத்திற்கு ரகசியம் கொடுக்கப்படும். அந்த ரகசியம் நீ தனியானவனல்ல, நீ முழுமை. ஒரு பகுதியாயிருப்பதில் ஏன் திருப்தியடைய வேண்டும்? ஏன் முழுமையாயிருக்கக் கூடாது? ஏன் முழு பிரபஞ்சத்தையும் சொந்தமாக்கிக் கொள்ளக் கூடாது? ஏன் சிறியவற்றைச் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும்?

ராமதீர்த்தர் சொல்வார் : "நான் கண்களை மூடும் போது எனக்குள் நட்சத்திரங்கள் நகர்வதையும், நிலா எனக்குள் எழுவதையும் பார்ப்பேன். கடல்களையும் வானங்களையும் பார்ப்பேன். நான் பரந்து முழு பிரபஞ்சமாயிருப்பேன்."

அவர் மேற்கத்திய நாடுகளுக்கு முதன் முதலாய் சென்ற போது இவ்வாறு கூறினார். மக்கள் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாய் நினைத்தனர். சிலர் அவரிடம் கேட்டார்கள் "யார் உலகத்தை உருவாக்கியது?"

அவர் சொன்னார் : "நான் , அது எனக்குள் இருக்கிறது."

இந்த 'நான்' தன்னுணர்ச்சியல்ல, தனிநபரல்ல, இந்த 'நான்' பிரபஞ்சம், கடவுள். அவர் பைத்தியம் போல் தோன்றினார். இந்த உரிமை அதீதமாய்த் தோன்றலாம். ஆனால் அவர் கண்களுக்குள் பாருங்கள். அங்கே 'நான்' என்ற தன்னுணர்ச்சியே இருக்காது. அவர் எதையும் சொந்தமாக்கிக் கொள்ளவில்லை. உண்மையைச் சொன்னார். அவ்வளவுதான்.

நீங்கள் தான் உலகம்! ஏன் ஒரு பகுதியாக இருக்க வேண்டும், சிறிய பகுதியாய் ? உங்களால் உலகமாயிருக்க முடியும்போது ஏன் தேவையில்லாமல் பிரச்சினையை உருவாக்கிக் கொள்ள வேண்டும்?

இந்த சூத்திரம் முழுமையுடன் தொடர்புடையது . தனி நபராயிருக்காதீர்கள், முழுமையாயிருங்கள். 'நான்' என்ற உணர்வுடனிருக்காதீர்கள். உங்களால் தெய்விகமாயிருக்க முடியும் போது ஏன் இந்த சிறிய அசிங்கமானவற்றின் மூலம் திருப்தியடைந்து விடுகிறீர்கள்?

எப்படி உண்மையான தாவோவின் மனிதனால் சுவர்களின்
ஊடே எந்தத் தடையுமின்றி நடக்க முடிகிறது ?
தீக்குள் சூடேதும் படாமல் நிற்க முடிகிறது?

ஒருவர் சுவாங்தஸூவிடம் கேட்டார் : "தாவோவின் மனிதனால் எந்தத் தடையுமின்றி சுவர்களினூடே நடக்க முடியும் என்று கேள்விப்பட்டோம். ஏன்?" உங்களுக்குள் எந்தத் தடையும் இல்லை யென்றால், எந்தத் தடையும் உங்களைத் தடை செய்ய முடியாது. இதுதான் விதி. உங்களுக்குள் உங்கள் இதயத்திற்குள் எந்தத் தடையுமில்லை யெனில் முழு உலகமே உங்களுக்காகத் திறந்திருக்கும். எந்தத் தடையுமிருக்காது. உலகம் ஒரு பிரதிபலிப்புதான். அது ஒரு பெரிய கண்ணாடி. நீங்கள் தடையைப் பெற்றிருந்தால் முழு உலகமும் தடையைப் பெற்றிருக்கும்.

ஒரு அரசன் பெரிய அரண்மனையைக் கட்டிக் கொண்டிருந்தான். அதில் கோடிக் கணக்கான கண்ணாடிகள் இருந்தன. சுவர்கள் எல்லாம் கண்ணாடிகளாலேயே அமைக்கப்பட்டிருந்தன. ஒரு நாய் அரண்மனைக்குள் நுழைந்தவுடன் கோடிக் கணக்கான நாய்கள் தன்னைச் சுற்றியிருப்பதைக் கண்டது. அதன் உயிருக்கு ஆபத்து என்பதை உணர்ந்து பதறிப் போயிருக்க வேண்டும். குரைக்கத் தொடங்கியது. அந்த நாய் குரைக்கத் தொடங்கியவுடன் கோடிக் கணக்கான நாய்களும் சேர்ந்து குரைத்தன.

காலையில் அந்த நாய் இறந்திருந்தது. அது தனியாக இருந்தது. அங்கு கண்ணாடிகள் இருந்தன. யாரும் அதோடு சண்டை போடவில்லை. சண்டைபோட அங்கு யாருமில்லை. ஆனால் அது தன்னைத்தானே கண்ணாடியில் பார்த்துக் கொண்டு பயந்தது. அது சண்டை போடக் தொடங்கிய போது கண்ணாடியும் அதைப் பிரதிபலித்தது. அது தனியாயிருந்தது. அதைச் சுற்றிலும் கோடிக் கணக்கான நாய்கள் . இரவு முழுவதும் அந்த நாய் எத்தகைய நரகச் சூழலை அனுபவித்திருக்கும் என்று உங்களால் கற்பனை செய்து பார்க்க முடிகிறதா?

நீங்கள் அத்தகைய நரகத்தில் தான் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். கோடிக் கணக்கான நாய்கள் உங் களைச் சுற்றிக் குரைத்துக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு கண்ணாடியிலும் ஒவ்வொரு உருவிலும், நீங்கள் எதிரியைப் பார்க்கிறீர்கள். தாவோவின் மனிதனால் சுவர்களினூடே நடக்க முடியும். ஏனெனில் அவன் இதயத்தில் சுவரில்லை. தாவோவின் மனிதன் எல்லாச் சுவர்களையும் வெறுமையாய், எல்லாப் படகுகளையும் இருப்பற்றதாகப் பார்க்கிறான், ஏனெனில் அவனின் படகு வெறுமையாயிருக்கிறது. அவன் கண்ணாடியாயிருக்கிறான், தன்கென்று எந்த முகமுமில்லா மல். நீங்கள் எப்படி பிரதிபலிக்க முடியும்? எப்படி நீங்கள் தாவோவின் மனிதனைப் பிரதிபலிக்க முடியும்? எல்லாக் கண்ணாடிகளும் அமைதியாயிருக்கின்றன. தாவோவின் மனிதன் கடந்து செல்கிறான். எந்த கால் தடயத்தையும் எந்த அடையாளத்தையும் விட்டுவைக்காமல். எல்லாக் கண்ணாடி களும் அமைதியாயிருக்கின்றன. எதுவும் அவனைப் பிரதிபலிப்பதில்லை. ஏனெனில் அவன் அங்கேயில்லை. அவன் இருப்பு இல்லை.

'நான்' என்ற தன்னுணர்வு மறையும் போது நீங்கள் அங்கே இருப்பதில்லை. பிறகு நீங்கள் முழுமையாகிறீர்கள்.

'நான்' என்ற தன்னுணர்வு இருக்கும் போது நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். மிகச் சிறிய பகுதியாக மிகவும் அசிங்கமாக. பகுதி எப்போதுமே அசிங்கமாகத்தானிருக்கும். அதனால் தான் நாம் பலவழிகளில் அதை அழகுபடுத்த முயற்சிக்கிறோம். ஆனால் 'நான்' என்ற உணர்வுடைய மனிதனால் அழகாயிருக்க முடியாது. அது இல்லாதவனுக்குத்தான் அழகு நிகழ்கிறது. அழகில் தெரியாத ஏதோ ஒன்று இருக்கிறது. அளவிடப்பட முடியாதது.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அசிங்கத் தன்மையை அளவிட முடியும். அதற்கு எல்லை இருக்கிறது. அழகு என்று அழைக்கப்படுவதையும் அளவிட முடியும். அதற்கும் எல்லை இருக்கிறது. ஆனால் உண்மையான அழகை அளக்க முடியாது. அதற்கு அளவுகளே, எல்லையே இல்லை. அது சென்று கொண்டேயிருக்கும். புத்தருடன் நீங்கள் முடித்துக் கொள்ள முடியாது. அவருக்குள் நீங்கள் நுழைய முடியும். உங்களால் ஒருபோதும் வெளியே வர முடியாது. முடிவற்றது! அவர் அழகு ஒருபோதும் முடியாது.

ஆனால் 'நான்' எப்போதும் அழகாக முயற்சிக்கிறது. எப்படியோ நீங்கள் முழுமையின் அழகை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். எப்படியாவது நீங்கள் அமைதியின் பிறப்பிடத்தை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். எப்படியாவது அடிமனத்தில் ஒன்றாய் இருப்பதன் பேரின்பத்தை, ஒற்றுமையை, ஒன்றாய் வாழ்தலின் இன்பத்தை உணர்வீர்கள். அதனால்தான், பல ஆசைகள் உதிக்கின்றன. கடவுளாயிருப்பதன் அழகு உங்களுக்குத் தெரியும். ஆனால் நீங்கள் பிச்சைக்காரராக வாழவே விரும்புகிறீர்கள். என்ன செய்கிறீர்கள்? நீங்கள் முகங்களை உருவாக்குகிறீர்கள். நீங்களாகவே வரைந்து கொள்கிறீர்கள். ஆனால் அடி ஆழத்தில் அந்த அசிங்கத் தன்மை இருந்து கொண்டே

தானிருக்கிறது. ஏனெனில் எல்லா ஓவியங்களும் வெறும் ஓவியங்கள்தான்.

ஒருபெண் ஒருமுறை கடற்கரை ஓரமாக நடந்து கொண்டிருந்தாள். அங்கு அவள் ஒரு கண்ணாடிக்குப்பியைக் கண்டெடுத்தாள், அதைத் திறந்தாள். ஒரு பூதம் வெளியே வந்தது. மற்ற எல்லா பூதங்களைப் போலவே அதுவும் சொன்னது : "நீ என் சிறையை உடைத்துவிட்டாய், என்னை விடுவித்துவிட்டாய். அதனால் நீ என்ன வேண்டுமானாலும் கேட்கலாம். நான் உன்னுடைய ஆசையை நிறைவேற்றி வைப்பேன்."

பூதங்கள் எல்லா நாட்களும் , எல்லா கடற்கரை ஓரங் களிலும், எல்லா குப்பிகளிலும் கண்டு பிடிக்கப்படுவதில்லை. இது அபூர்வமாகத்தான் நிகழ்கிறது. அதுவும் கதைகளில் மட்டும். ஆனால் அந்தப் பெண் ஒரே ஒரு கணம் கூட யோசிக்கவில்லை. அவள் சொன்னாள் : "நான் அழகான பெண்ணாக வேண்டும்-எலிசபெத் டெய்லரின் முடிபோல், பிரிஜிட் பார்டடின் கண்களைப் போல், சோஃபியாலா ரெனின் உடல்போல் எனக்கு அமைய வேண்டும்."

அந்த பூதம் மறுபடியும் பார்த்து விட்டு சொன்னது : "பெண்ணே, என்னை மறுபடியும் குப்பியிலேயே அடைத்துவிடு."

இவ்வாறு தான் நீங்களும் கேட்கிறீர்கள்- ஒவ்வொரு வரும் இதைத்தான் கேட்கிறார்கள்- இதனால்தான் பூதங்கள் உலகிலிருந்து மறைந்து விட்டன. உங்களைப் பார்த்து மிகவும் பயப்படுகின்றன. சாத்தியமில்லாததை நீங்கள் கேட்கிறீர்கள். இது நிகழ முடியாது. ஏனெனில் ஒரு பகுதியால் ஒருபோதும் அழகாயிருக்க முடியாது.

சும்மா யோசித்துப் பாருங்கள். என் கையை வெட்டிவிட முடியும்- அந்தக் கை அழகாயிருக்க முடியுமா? அது இன்னும், இன்னும் அசிங்கமாய்த்தான் வளரும், அது அழுகிப் போகும், நாற்றமடிக்கத் தொடங்கும். எப்படி என்னை விட்டு நீங்கியவுடன் என் கை அழகாயிருக்க முடியும்? பிரிவு சாவைக் கொடுக்கிறது. ஒன்றாயிருத்தல் வாழ்வைக் கொடுக்கிறது. முழுமையில் நீங்கள் உயிர்ப்புடன் இருக்கிறீர்கள். தனியாக, பிரிந்திருக்கும் போது ஏற்கெனவே இறந்து போய் விட்டிருக்கிறீர்கள் அல்லது இறந்து கொண்டிருக்கிறீர்கள்.

என் கண்கள், அவற்றை வெளியே எடுத்து விடுங்கள். பிறகு அவை என்ன? கற்கள் கூட, வண்ணம் தீட்டப்பட்ட கற்கள் கூட அவற்றைவிட அழகாயிருக்கும். ஏனெனில் அவை இன்னும் முழுமையுடன் தானிருக்கின்றன. பூவைப் பறித்து விடுங்கள், அப்போது அது அழகாய் இருக்காது. அதன் அழகு போய்விடுகிறது. அது சிறிது கணங்களுக்கு முன்னால் வேருடன் சேர்ந்திருக்கும் போது அழகாயிருந்தது, பூமியுடன் சேர்ந்திருந்த போது. பிடுங்கப்பட்ட பின்னர் நீங்கள் 'நான்' என்பதைப் போல் மிதப்பீர்கள். நீங்கள் நோயுற்றிருப்பீர்கள், எப்போதும் நோய்வாய்பட்டேதான் இருப்பீர்கள், வேறெதாலும் உதவ முடியாது. உங்களது எல்லா முயற்சிகளும் எப்படிப்பட்டப் புத்திசாலித்தனமும், தோல்விதானடையும்.

முழுமையிலிருக்கும் போது தான் நீங்கள் அழகாக இருக்கிறீர்கள்.

முழுமையிலிருக்கும் போதுதான் நீங்கள் இனிமையாக இருக்கிறீர்கள்.

முழுமையில் தான் தயை சாத்தியமாகிறது.

தாவோவின் மனிதன் சுவர்களின் வழியே எந்தத் தடையுமின்றி நடப்பதும், தீயில் சுடப்படாமல் நிற்பதும் தந்திரத்தால் அல்ல. அது,

எந்தத் தந்திரத்தினாலோ, வீரத்தினாலோ அல்ல,
அவன் கற்றுக் கொண்டதால் அல்ல,
அவன் எதுவும் கற்காலிருப்பதால் தான்.

கற்றுக் கொள்ளல் 'நான்' என்ற தன்னுணர்வுக்குள் செல்கிறது. கற்றுக் கொள்ளல் தன்னுணர்ச்சியை வலிமைப் படுத்துகிறது. அதனால் தான் பண்டிதர்கள், பிராமணர்கள், வித்வான்கள் எல்லாரும் கொஞ்சம் 'நான்' என்ற உணர்வைப் பெற்றிருக்கிறார்கள். கற்றுக் கொள்தல் அவர்களுக்கு நம்பிக்கையைத் தருகிறது. கற்றுக் கொள்ளல் அவர்களுக்கு இடத்தைத் தருகிறது. அதனால்தான் அவர்கள் அகம்பாவம் பிடித்தவர்களாகிறார்கள். அவர்களின் முழு இருத்தலும் 'நான்' என்ற உணர்வால் பயன்படுத்தப் படுகின்றன.

அதிகமாய்க் கற்ற மனிதன் அடுத்தவருடன் வாழ அதிக சிரமப் படுகிறான். அதிகமாய் தொடர்பு கொள்ள முடியாமல் இக்கிறான். கோயிலை அடைவது அவனுக்கு மிகவும் கடினமாயிருக்கிறது. கடவுளைத் தெரிந்து கொள்வது அவனுக்கு சாத்தியமில்லாததாக இருக்கிறது. ஏனெனில் அவன் ஒரு புண்ணைப் போல் வாழ்கிறான். அதற்கென்று ஒரு தனி வாழ்க்கை உள்ளது. இது 'நான்' என்ற புண். இது பயன்படுத்திக் கொள்கிறது. எவ்வளவு அதிகமாய் நீங்கள் தெரிந்து வைத்துள்ளீர்களோ, அவ்வாறு குறைவாய்தான் உங்கள் பிரார்த்தனை சாத்தியமாகும்.

அதனால் சுவாங்தஸூ சொல்கிறார். இது தந்திரத்தினால் அல்ல. அவன் கணக்குப் போடுவதில்லை. அவன் தந்திரமாகவோ, துணிச்சலாகவோ இருப்பதில்லை. ஏனெனில். வீரம், திட்டமிடல், தந்திரமாயிருத்தல் எல்லாமே

'நான்' என்பதன் ஒரு பகுதிதான். தாவோவின் மனிதன் கோழையாகவும் இருப்பதில்லை, துணிச்சலாகவும் இருப்ப தில்லை. அவனுக்கு வீரம் என்றால் என்ன என்று தெரியாது. கோழைத்தனம் என்றாலும் என்னவென்று தெரியாது. அவன் வாழ்கிறான். சுய உணர்வோடு அவன் இருப்பதில்லை. அவன் கற்றிருப்பதால் அல்ல, கற்காமலிருப்பதால். சமயம் முழுதுமே கற்காமலிருப்பதன் பாதைதான். கற்றல் என்பது 'நான்' என்ற உணர்வின் பாதை. கற்காமலிருத்தல் கர்வம் இல்லாத் தன்மை யின் பாதை. கற்றிருக்கும்போது உங்கள் படகு நிறைந்துள்ளது, உங்களுக்குள்ளே நிரம்பியுள்ளது.

முல்லா ஆற்றைக் கடக்கும் படகு ஒன்றை வைத்திருந்தார். நேரம் சரியில்லாதபோது அவர் பயணிகளை ஒரு கரையிலிருந்து மறுகரைக்கு அழைத்துச் செல்வார்.

ஒருமுறை ஒரு பெரிய பண்டிதர் - இலக்கியவாதி, வித்வான்-அவர் படகில் ஒரு கரையிலிருந்து அடுத்த கரைக்குச் சென்றார். அந்தப் பண்டிதர் நஸ்ரூதீனிடம் கேட்டார் : "உனக்கு குரான் தெரியுமா?" நஸ்ரூதீன் சொன்னார் : "இல்லை நேரமே இல்லை."

அந்தப் பண்டிதர் சொன்னார் : "உன் வாழ்க்கையில் பாதி வீணாகிவிட்டது."

பிறகு திடீரென்று ஒரு புயல் எழுந்தது. அந்தச் சிறிய படகு கடற்கரையிலிருந்து கொஞ்சம் தூரத்திலிருந்து. எந்தக் கணத்திலும் அது மூழ்கிவிடும். நஸ்ரூதீன் கேட்டார் : "ஆசிரியரே, உங்களுக்கு எப்படி நீந்த வேண்டுமென்று தெரியுமா?"

அந்த மனிதன் பயந்து விட்டார். வேர்த்து விறுவிறுத்தபடி 'இல்லை' என்று சொன்னார்.

நஸ்ரூதீன் சொன்னார் : "அப்படியென்றால் உங்கள் முழு வாழ்க்கையுமே வீணாகிவிட்டது. நான் செல்கிறேன்."

இப்போது இந்தப் படகால் அடுத்த கரைக்குச் செல்ல முடியாது. ஆனால் மக்கள் நினைத்துக் கொள்கிறார்கள் படிப்பு படகாகிவிடும், படிப்பு நீச்சலுக்கு மாற்றாகிவிடும். இல்லை! வேதங்களால் படகுகளாகிவிட முடியுமா? இல்லை, அவை மிகவும் சுமையானவை. நீங்கள் அவற்றுடன் நீரில் மூழ்கிவிட முடியும். ஆனால் ஆற்றைக் கடக்க முடியாது. கல்லாமை உங்களை மிருதுவாக்கிவிடும். உங்களை மறுபடியும் வெகுளியாக்கிவிடும்.

நீங்கள் தெரிந்து கொள்ளாமலிருக்கும் போது அந்த தெரிந்து கொள்ளாமையில் என்ன நிகழ்கிறது? மிக அழகான ஒன்று நீங்கள் தெரியாமலிருக்கும் போது உயர்ந்த பேரின்பம் நிகழ்கிறது. அங்கு ஒரு அமைதி நிலவுகிறது. யாராவது கேள்வி கேட்கிறார்கள். உங்களுக்குத் தெரியவில்லை. வாழ்க்கை ஒரு புதிர், உங்களுக்குத் தெரியாது. எல்லா இடத்திலும் புதிர் தானிருக்கிறது. நீங்கள் தெரியாமையிலேயே அங்கிருக்கிறீர்கள். அதிசயித்துக் கொண்டிருக்கிறீர்கள். அங்கே அதிசயமிருக்கிறது என்று உங்களுத் தெரியாதபோது, அந்த அதிசயம் மிகவும் பக்தியான குணமாகிறது. ஆழமான பக்தி குணம் அதிசயம்தான். குழந்தையால் மட்டுமே அதிசயிக்க முடியும். எல்லாம் தெரிந்த மனிதனால் அதிசயப்பட முடியாது. அதிசயப் படாமல் யாராலும் தெய்விகத்தை அடைய முடியாது. அதிசயிக்கும் இதயத்திற்கு எல்லாமே புதிராகத்தான் தெரியும். வண்ணத்துப் பூச்சி ஒரு அதிசயம், விதை முளைப்பது ஒரு அதிசயம்.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், எதையுமே தீர்வுக்குட்படுத்த முடியாது. உங்கள் அறிவியல் எல்லாமே 'ஒன்றுமே' செய்வதில்லை. விதை முளைப்பது இன்னமும் ஒரு

அதிசயம்தான். அது அதிசயத்தைத் தொடர்ந்து ஞாபகப் படுத்திக் கொண்டேயிருக்கிறது. அறிவியலால் விதையை உற்பத்தி செய்ய முடிந்தால் கூட அது முளைப்பது புதிராகவே தானிருக்கும். குழந்தை பிறக்கிறது. அது பிறப்பது என்பதே அதிசயம்தான். குழந்தை சோதனைக் குழாயில் தயாரிக்கப் பட்டால் கூட, அதில் வித்தியாசம் ஒன்றுமில்லை. ஆச்சரியம் அப்படியேதானிருக்கிறது.

நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். இது ஒரு அதிசயம் தான். நீங்கள் இதைச் சம்பாதிக்கவில்லை. நீங்கள் பிரபஞ்சத்திடம் சொல்ல முடியாது, "நான் இங்கேயிருக்கிறேன். ஏனெனில் நான் அதைச் சம்பாத்தேன்." இது ஒரு பரிசுதான், நீங்கள் இங்கே எந்தக் காரணமுமின்றி இருக்கிறீர்கள். நீங்கள் இங்கே இல்லாவிட்டால், என்ன வேறுபாடு நிகழ்ந்துவிடப் போகிறது? நீங்கள் இங்கில்லாவிட்டால் எந்த நீதிமன்றத்தில் உங்களால் தாக்கல் செய்ய முடியும்?

இந்த இருத்தல், இந்த மூச்சு உட்சென்று வெளியே வருதல், இந்தக் கணம் நீங்கள் இங்கிருக்கிறீர்கள். என்னை தென்றலை, பறவைகளைக் கவனித்துக் கொண்டு, இந்தக் கணம் நீங்கள் உயிருடனிருக்கிறீர்கள் என்றால் அதுவே அதிசயம் தான். எந்த அறிவுமின்றி இதை நோக்கினீர்களெனில் இதற்குள் நுழைந்துவிடுவீர்கள். அறிவுடன் பார்த்தீர்கள் என்றால் நீங்கள் சொல்வீர்கள் : "எனக்குத் தெரியும், விடை எனக்குத் தெரியும்." கதவுகள் மூடப்பட்டு விட்டன. சூட்சுமத்தால் அல்ல, கதவுகள் உங்கள் அறிவால் மூடப்பட்டு விட்டன. உங்கள் கோட்பாடுகளால், தத்துவத்தால், சாஸ்திரத்தால், உங்களது கிறிஸ்தவத்தால், இந்துத்துவத்தால் அவை கதவை மூடிவிட்டன.

தனக்கு எல்லாம் தெரியும் என நினைக்கும் மனிதனுக்கு ஒன்றுமே தெரியாது. உபநிஷதங்களில் தொடர்ந்து

சொல்லப்படும் தனக்கு எதுவும் தெரியாது என்று நினைக்கும் மனிதனுக்கு எல்லாம் தெரியுமென்று. சாக்ரடீஸ் சொல்கிறார்: 'ஒரு மனிதனுக்கு உண்மையிலேயே தெரிந்திருக்கும் போது அவனுக்கு ஒன்றே ஒன்றுதான் தெரிந்திருக்கிறது. தனக்கு எதுவும் தெரியாது என்பதுதான் அது.' சுவாங்தஸூ சொல்கிறார் : 'இதற்குக் காரணம் அவன் கற்காமலிருப்பது தான். எவற்றையெல்லாமோ உலகம் கற்றுக் கொடுத்திருந் தாலும் எவ்வற்றையெல்லாமோ சமூகம் அவனுக்குக் கற்றுக் கொடுத்திருந்தாலும், பெற்றோர்களும் அவனைப் பயன் படுத்துவோரும் கற்றுக் கொடுத்திருந்தாலும், அவன் அதை விட்டுவிடுகிறான். அவன் மறுபடியும் குழந்தையாகிறான், சிறிய குழந்தையாக. அவன் கண்கள் மறுபடியும் அதிசயத்தால் நிறைகின்றன. அவன் சுற்றிலும் பார்க்கிறான், எல்லா இடங்களிலும் அதிசயம் தானிருக்கிறது.

'நான்' என்ற எண்ணம் ஆச்சரியத்தைக் கொன்று விடுகிறது. அது விஞ்ஞானியின் கர்வமானாலும் சரி, பண்டிதனின் தத்துவ ஞானியின் கர்வமானாலும் சரி, எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. நான் சொல்கிறது. "எனக்குத் தெரியும்." நான் சொல்கிறது, "எனக்குத் தெரியா விட்டால் கூட விரைவில் தெரிந்து கொண்டுவிடுவேன்." நான் சொல்கிறது, "தெரிந்து கொள்ள முடியாதவை என்று எதுவுமே இல்லை" என்று.

இரண்டு வகையான 'நான்' உண்டு. தெரிந்தவை, தெரியாமலிருப்பவை. தெரிந்தவை நான், ஏற்கெனவே பயணம் செய்த ஒருபகுதி. தெரியாதவை நான் பயணம் செய்யாத பகுதி. நான் நினைத்துக் கொள்கிறது பயணம் செய்வது சாத்தியம் தான். ஆனால் தெரிந்து கொள்ள முடியாதவையென்று எதுவுமில்லை.

நான் உலகத்தில் எந்த அதிசயத்தையும் விட்டுவைப்ப தில்லை. உங்களைச் சுற்றி அத்தகைய ரகசியமே இல்லாத

போது, உள்ளுக்குள் எந்த அதிசயமும் இருக்க முடியாது. அதிசயம் மறையும் போது எல்லாப் பாடல்களும் மறைந்து விடுகின்றன. அதிசயம் மறையும்போது கவிதை செத்து விடுகிறது. அதிசயம் மறையும்போது கடவுள் கோயிலில் இருப்பதில்லை. இறந்த சிலையைத் தவிர அங்கு வேறெதுவுமில்லை. அதிசயம் மறையும்போது காதலுக்கு சாத்தியமேயில்லை. ஏனெனில் இரண்டு அதிசயங்களால்தான் ஒன்றின் மீது ஒன்று காதல் கொள்ள முடியும். உங்களுக்குத் தெரிந்திருப்பின். பிறகு காதலுக்குச் சாத்தியமேயில்லை. அறிவு காதலுக்கு எதிரானது, காதல் எப்போதுமே கல்லாமைக்குத் தான். ஏனெனில் அவன் தெரியாமலிருக்கிறான்.

அவனது இயல்பு
அதன் வேர்களில் ஒன்றாக மூழ்குகிறது.
அவன் ஜீவன், அவனது சக்தி,
தாவோவின் ரகசியத்தில் மறைந்திருக்கிறது.

அவனது இயல்பு அதன் வேர்களில் ஒன்றாக மூழ்குகிறது.. நான் என்ற உணர்வு தலையில் தானிருக்கிறது. நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் உங்கள் தலையை மிக உயரமாக சுமக்கிறீர்கள். வேர் உங்கள் இருத்தலின் நேர் எதிர் துருவத்தில் இருக்கிறது.

சுவாங்தஸூவும் லாவோதஸூவும் சொல்வார்கள்: 'உங்கள் கால்விரலில் கவனம் செலுத்துங்கள். கண்களை மூடிக் கொண்டு கால்களுக்கு நகர்ந்து சென்று அங்கேயே' இருங்கள். இது உங்களுக்கு சமதன்மையைத் தரும். தலை உங்களுக்கு அதிகமாய் சமமின்மையைத்தான் தருகிறது. கால்விரல்...? அவர்கள் கிண்டல் செய்வது போல் தோன்றும். ஆனால் அதைத்தான் குறிப்பிடுகிறார்கள். கிண்டல் செய்யவில்லை. அவர்கள் சொல்வது சரிதான். தலையிலிருந்து நகருங்கள். ஏனெனில் தலை வேர் அல்ல, நாம் தலையில்தான் அதிகமாக இருக்கிறோம்.

அவன் இயல்பு அதன் வேர்களில் ஒன்றாக மூழ்கிறது. அலை கடலின் ஆழத்திற்குள் செல்கிறது, அதனுள் ஒன்றாக. நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். மூலம் ஒன்றுதான். அலைகள் பலவாயிருக்கலாம். கோடிக்கணக்காக. ஆனால் கடல் ஒன்றுதான். நீங்கள் அங்கே தனியாயிருக்கிறீர்கள். நான் இங்கே தனியாயிருக்கிறேன். ஆனால் கொஞ்சம் ஆழமாகப் பார்த்தால் வேர்களில் நாம் ஒன்றாகத்தானிருக்கிறோம். ஒரு மரத்தின் வெவ்வேறு கிளைகளைப் போல் நாமிருக்கிறோம். கிளைகளைப் பாருங்கள், அவை பிரிந்திருக்கின்றன. ஆனால் கீழே ஒன்றாக உள்ளன.

ஆழமாக நீங்கள் சென்றால், நீங்கள் குறைவாக, இன்னும் குறைவாக பிரிந்திருத்தலையும், அதிகம் அதிகமாய் ஒன்றாக இருத்தலையும் பார்ப்பீர்கள். அடி ஆழத்தில் அது ஒன்றுதான். அதனால்தான் இந்துக்கள் ஒருமையை, இருவரில்லாத நிலையை, அத்வைதத்தைப் பற்றிப் பேசுகிறார்கள்.

அவனது ஜீவன், அவனது சக்தி,
தாவோவின் ரகசியத்தில் மறைந்திருக்கிறது.

மனிதனுக்கு எவ்வளவுதான் சக்தி வந்தாலும் தாவோவைச் சேகரிக்க முடியாது. அது அவனால் உருவாக்கப் பட வில்லை. அது வேர்கள் மூலம் கொடுக்கப்பட்டது. அவன் சக்தியுடையவனாயிருக்கிறான். ஏனெனில் அவன் கடலில் சேர்ந்துவிட்டான். ஒன்றாக அவன் மூலத்திற்கே திரும்பி விட்டான். அவன் தாயிடம் வந்து சேர்ந்துவிட்டான். அவன் எல்லாமும் ஒன்றாகும் போது அவனிடம் எந்தக் குறையு மில்லை. அந்த ஆயுதத்தால் நுழைந்துவிட முடியும்.

எப்போதெல்லாம் ஒருவன் அடி ஆழமான உயிரிலிருந்து வருகிறானோ, ஒன்றிலிருந்து அப்போது அங்கு

தவறே இருக்காது. அத்தகைய மனிதனை ஊடுருவ முடியாது. கத்திகள் அவனுக்குள் செல்ல முடியாது. தீ அவனைச் சுட்டுவிட முடியாது. உயர்ந்த, இறுதியான ஒன்றை எப்படி உங்களால் அழிக்க முடியும்? தற்காலிகமானவற்றை உங்களால் அழிக்க முடியும். உயர்ந்த கடைசியான ஒன்றை எப்படி உங்களால் அழிக்க முடியும்? உங்களால் அலையை அழிக்க முடியும். கடலை எப்படி அழிக்க முடியும்.? நீங்கள் தனிப்பட்டவரை அழித்துவிடலாம். ஆனால் உங்களால் ஆன்மாவை அழிக்க முடியாது. ஒரு வடிவம் கொல்லப்பட முடியும். ஆனால் வடிவமற்றது...? வடிவமற்ற ஒன்றை எப்படிக் கொல்வீர்கள்? வடிவற்றதைக் கொல்லும் கத்தியை எங்கே கண்டுபிடிக்கப் போகிறீர்கள்?

கிருஷ்ணர் கீதையில் சொல்கிறார் : "எந்தக் கத்தியாலும் இதைக் கொல்லமுடியாது. எந்தத் தீயாலும் அதைச் சுட முடியாது." அதற்காக சுவாங்தஸூவை நீங்கள் கொன்று விட்டால் அவரைச் சாகடிக்க முடியாது என்று பொருள் அல்ல. உங்களால் அந்த வடிவத்தைத்தான் கொல்லமுடியும். ஆனால் சுவாங்தஸூ அந்த வடிவமல்ல ; அவர் சிரிப்பார்.

அலெக்ஸாண்டர் இந்தியாவிலிருந்து திரும்பும் போது திடீரென அரிஸ்டாட்டிலை நினைவு கூர்ந்தார். அவர் ஆசிரியர், சிறந்த தர்க்கவியலாளர்களில் ஒருவர்.

அரிஸ்ட்டாட்டில் தான் அனைத்து முட்டாள்தனங்களின் மூலமும். அவர் தான் தந்தை, அவர்தான் தர்க்கரீதியான மனதை உருவாக்கியர். ஆய்வுகளை, உடல்கூறு முறையை, தனிநபர் 'நான்' என்ற எண்ணத்தையெல்லாம் படைத்தவர். அவர்தான் அலெக்ஸாண்டரின் ஆசிரியர்.

அவர் அலெக்ஸாண்டரிடம், 'நீ திரும்பி வரும் போது இந்து மத கொள்கையுடைய ஒரு சன்யாசியை கொண்டு வா'

என்றார். ஏனெனில் எதிர் எதிர் துருவங்கள் எப்போதுமே ஈர்க்கின்றன. அவர் இந்து மதத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள அடிமனதில் மிகுந்த ஆசை கொண்டிருக்க வேண்டும், எந்த வகையான மனிதனால் தர்க்கத்திற்கு அப்பாற்பட்டு வாழ முடியும். யார் சொல்வார்கள் இரண்டல்ல ஒன்று தானென்று, யார் அனைத்து முரண்பாடுகளையும் இணைப்பார்கள், யாருடைய முழு யெல்பாடுகளும் கூட்டா இருக்கும், ஆய்வாக இல்லாமல்? ஒருபோதும் பகுதியை நம்பாத மனிதன் முழு மையை நம்புவான். எந்த வகையான மனிதனால் முடியும்?

அதனால் தான் அவர் அலெக்ஸாண்டரிடம் சொன்னார் : "நீ திரும்பி வரும் போது இந்து மதக் கொள்கையையுடைய ஒரு சன்யாசியை அழைத்துவா. நான் அப்படிப்பட்ட ஒருவரைப் பார்க்க விரும்புகிறேன். மனத் திற்கு அப்பாற்பட்டு வாழும் மனிதன். மனதிற்கு அப்பால் ஏதோ இருக்கிறது என நினைக்கும் மனிதன் அபூர்வ வகைதான்." அரிஸ்டாட்டில் மனதிற்கு அப்பாற்பட்டு ஒன்று இருக்கும் என்று ஒருபோதும் நம்பியதில்லை. அவருக்கு மனதுதான் எல்லாம். அலெக்ஸாண்டர் திரும்பிவரும் போது திடீரென அவருக்கு அந்த ஞாபகம் வந்தது. அதனால் அவர் தன் படைவீரர்களிடம் ஒரு பெரிய இந்துத் துறவியை புனிதரை அழைத்து வருமாறு சொன்னார். அவர்கள் நகரத்தில் விசாரித்துவிட்டு சொன்னார்கள் : "அந்த ஆற்றங் கரையில் ஒரு மனிதன் நிர்வணமாக நின்று கொண்டிருக் கிறானாம். பல வருடங்களாக அவன் அப்படித்தான் இருக் கிறானாம். அவன் துறவி என்று நாங்கள் நினைக்கிறோம். நாங்கள் நிச்சயமாய் சொல்ல முடியாது. ஏனெனில் அவன் அதிகம் பேச மாட்டானாம். எங்களால் அவனை அதிகம் புரிந்து கொள்ள முடியாது. அவன் சொல்வது தர்க்கரீதியக இல்லாது இருக்கலாம். அது உண்மையாகவும் இருக்கலாம். உண்மையில்லாமலும் இருக்கலாம்."

அலெக்ஸாண்டர் சொன்னார் : "இவர் சரியான ஆள்தான். என் குரு தர்க்கத்தை உருவாக்கிய மனிதன். இந்த தர்க்கமே இல்லாத மனிதனைப் பார்க்க விரும்புவார். அவனிடம் சென்று அலெக்ஸாண்டர் அழைத்ததாகச் சொல்." வீரர்கள் அவரிடம் சென்று அலெக்ஸாண்டர் அவரை அழைத்தாகக் கூறினர். "அவர் ஒரு சிறப்பு விருந்தினாக இருப்பார். எல்லா வசதிகளும் கொடுக்கப்படும். அதனால் அவர் கவலைப்படத் தேவையில்லை."

அந்த மனிதன் சிரித்துக் கொண்டே கூறினார் : "என்னை அழைத்தவனே ஒரு பெரிய முட்டாள். அவனிடம் சென்று சொல்லுங்கள், நான் முட்டாள்களுடன் எல்லாம் பழகுவதில்லை என்று. அதனால் பல வருடங்களாக இங்கே தனியே நின்று கொண்டிருக்கிறேன். நான் முட்டாள்களுடன் பழ விரும்பினால் அவன் நாட்டை விட இந்தியாவில் குறைவான முட்டாள்கள் என்று நினைக்கிறீர்களா? இந்தப் பட்டணம் முழுக்க அவர்கள் தான்."

அந்த வீரர்கள் மிகவும் சலனமடைந்தார்கள், ஆனால் அவர்கள் மறுபடியும் சென்று இந்த விஷயத்தை சொல்ல வேண்டும். அலெக்ஸாண்டர் அந்த மனிதன் என்ன கூறினான் என்று கேட்டார். அவரின் பெயர் தண்டாமி. அலெக்ஸாண்டர் தன் அறிக்கைகளிலெல்லாம் தண்டமாஸ் என்ற பெயரைக் குறிப்பிடுவார். அலெக்ஸாண்டர் வெறுப் படைந்தார், ஆனால் அவர் கடைசி கிராமத்திலிருந்தார். விரைவில் இந்தியாவிற்கு வெளியேயிருப்பார். ஆனால் அவர் சொன்னார் : "நான் சென்று அவன் எந்த வகையான மனிதன் என்று பார்ப்பது நல்லது."

அவருக்கு தயோஜீன்ஸ் ஞாபகம் வந்திருக்கலாம். ஒரு வேளை இந்த மனிதனும் அதே வகையைச் சேர்ந்தவனாக இருக்கலாம். ஆற்றங்கரையில் நிர்வாணமாய் நிற்றல். இதே

தான் தயோஜீன்ஸிடம் நிகழ்ந்தது. அவரும் சிரித்து விட்டு அலெக்ஸாண்டரை முட்டாள் என்றார்.

அதனால் அலெக்ஸாண்டர் பிரிக்கப்பட்ட கத்தியுடன் தண்டமியை அணுகிக் கூறினான் : "என்னைப் பின் வா. இல்லையெனில் நான் உன் தலையை உடனடியாக வெட்டி விடுவேன். எனக்கு விவாதங்களில் நம்பிக்கையில்லை. கட்டளைகளைத் தான் நம்புகிறேன்."

அந்த மனிதன் சிரித்துவிட்டுச் சொன்னார் : "வெட்டி விடு- காத்திருக்காதே! நீ வெட்டப் போகும் தலையை பல வருடங்களுக்கு முன்னரே நான் வெட்டி விட்டேன். இது ஒன்றும் புதிதல்ல. நான் ஏற்கெனவே தலையில்லாதவன் தான். வெட்டி விடு. மேலும் நான் ஒன்று சொல்கிறேன். தலை கீழே பூமியில் விழும் போது நீ அதைப் பார்ப்பாய், நானும் அதைப் பார்ப்பேன். ஏனெனில் நான் தலையல்ல."

தாவோவின் மனிதன் எரிக்கப்படலாம். ஆனால் அவனைச் சுட முடியாது. வடிவம் எப்போதும் தீயில் இருக்கிறது. ஏற்கெனவே எரிந்து கொண்டுதானிருக்கிறது. ஆனால் வடிவமற்றது... அது ஒருபோதும் தீயால் தொடப்படுவதில்லை. எங்கேயிருந்து சக்தி வருகிறது. எங்கிருந்து இந்த ஜீவசக்தி வருகிறது? அவர்கள் தாவோவின் ரகசியத்தில் ஒளிந்திருக்கிறார்கள். தாவோ என்பதன் பொருள் உயர்ந்த இயற்கை, தாவோவின் பொருள் சிறந்த கடல், தாவோவின் பொருள் பெரிய மூலம்.

அதனால் தான் குடிகாரன்
பாரவண்டிக்கு வெளியே விழுகிறான்.
நசுக்கப்படுகிறான்,
ஆனால் அழிக்கப் படுவதில்லை.
அவன் எலும்புகள்

மற்ற மனிதர்களின் எலும்புகள் போல்தான் உள்ளன,
ஆனால் அவன் விழுவது
வித்தியாசமாய் உள்ளது.
அங்கே 'நான்' இல்லை.
போதை முழுமையாயுள்ளது.
அவன்
வண்டியில் எடுத்துச் செல்வதைப் பற்றிய
விழிப்புடன் இல்லை,
அல்லது
அதிலிருந்து விழுவதைப் பற்றி.
வாழ்வும் சாவும் அவனுக்கு
ஒன்றுமே இல்லை.

அவனுக்கு எந்தப் பயமும் இல்லை,
அவன் எந்தவித
எண்ணங்களும் இல்லாமல் கவனமும் இல்லாமல்
துன்பங்களைச் சந்திக்கிறான்.
அவர்கள்
அங்கே இருப்பதைப் பற்றித் தெரியாமல்
அவர்களைப் பற்றிப் பேசுகிறான்.
மதுபானத்திலேயே
இந்த அளவு பாதுகாப்பு இருந்தால்,
தாவோவில்
எவ்வளவு அதிகமாய் இருக்கும்?
ஞானி தாவோவிற்குள்
மறைந்து கொள்கிறான்,
எதுவும் அவனைத் தொட்டுவிட முடியாது.

குடிகாரனைக் கவனியுங்கள், ஏனெனில் தாவோவின் மனிதன் பலவிதங்களில் அவனை ஒத்திருக்கிறான். அவன் நடக்கிறான். ஆனால் நடப்பதில்லை. அதனால் தான் அவன்

சமமில்லாததைப் போல் தோன்றுகிறான். தள்ளாடுகிறான். அவன் நடக்கிறான். ஆனால் எந்தத் திசையுமின்றி அவன் எங்கேயும் செல்லவில்லை. அவன் நடக்கிறான், ஆனால் படகு வெறுமையாய் உள்ளது. கணசெயல்பாடு மட்டுமே, ஆனால் அது வெறுமையாக உள்ளது.

குடிகாரனைக் கவனியுங்கள். அவனைப் பின் தொடர்ந்து சென்று அவனுக்கு என்ன நேர்கிறது என்று பாருங்கள். யாராவது அவனை இடித்தால் அவன் வெறுப்படைவதில்லை. கீழே விழுந்தால் அதை அவன் ஏற்றுக் கொள்கிறான். அதைத் தடுப்பதில்லை. ஏதோ செத்து விட்டவனைப் போல விழுந்து விடுகிறான். மக்கள் சிரித்தால், அவனைக் கிண்டல் செய்தால், அவன் கவலைப்படுவதில்லை. அவன் அவர்களுடன் சேர்ந்து சிரிக்கக் கூட செய்வான். அவர்களுடன் நகைச் சுவையில் கலந்து கொள்வான். அவனைப் பார்த்தே கூட சிரித்துக் கொள்வான். என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது? இயல்பாக வேதிப் பொருட்கள் மூலமாக அவன் 'நான்' எடுக்கப்பட்டு விடுகிறது.

'நான்' என்பது ஒரு அமைப்புதான். வேதிப் பொருட் கள். வழியாகக் கூட நீங்கள் அதை விலக்கலாம். அது ஒரு அமைப்புதான். உண்மையல்ல. உங்களுக்குள்ளிருக்கும் ஒரு பொருளல்ல. அதை நீங்கள் சமுதாயத்தின் வழியாகக் கற்றுக் கொண்டீர்கள். போதை உங்களை சமுதாயத்திலிருந்து விலக்குகிறது. அதனால்தான் சமூகம் எப்போதும் குடியை எதிர்க்கிறது. அரசாங்கம் குடியை எதிர்க்கிறது. பல்கலைக் கழகம் எப்போதும் குடியனை எதிர்க்கிறது. எல்லா நீதிமான் களும் குடியை எதிர்க்கிறார்கள். ஏனெனில் குடி ஆபத்தானது. அது சமூகத்தை விட்டு விலகிய கணத்தைக் கொடுக்கும். அதனால்தான் அமெரிக்காவிலும், மேற்கு நாடுகளிலும் போதைக்கு எதிராக இவ்வளவு பிரச்சாரம். அரசாங்கங்கள்,

அரசியல்வாதிகள், தேவாலயம், போப் இவர்களெல்லாம் புனிதமானவர்கள். ஏனெனில் இளைய சமுதாயம் போதைக்கு அடிமையாகி யுள்ளது. அவர்கள் சமுதாயத்திற்கு ஆபத்தான வர்கள். ஒருமுறை நீங்கள் சமுதாயத்திற்கு எதிரான கணத்தை அனுபவித்து விட்டால் பிறகு ஒருபோதும் அதில் ஒரு பகுதி யாகி அனுசரித்துக் கொள்ள மாட்டீர்கள். எப்போதும் வெளியிலிருக்கவே விரும்புவீர்கள். ஒருமுறை 'நான்' இல்லாத கணத்தை அடைந்தீர்களெனில் பிறகு சமுதாயம் உங்களை எளிதாக ஆளமுடியாது. நீங்கள் போதையின் ஆழத்திற்குச் சென்று விட்டீர்களெனில் பிறகு 'நான்' என்பதை முற்றிலும் துண்டித்துவிடலாம். பிறகு நீங்கள் பைத்தியம் போல் ஆகிவிடுவீர்கள்.

ஒருமுறை இருமுறை போதை உங்களுக்கு அந்த தரிசனத்தைக் கொடுக்கும். ஜன்னல் திறந்து மூடுவதைப் போல நீங்கள் அதை ஏற்று அனுபவித்தீர்கள் எனில் அதற்கு அடிமையாகி விடுவீர்கள். 'நான்' உடனே நின்று போய் விடலாம். ஆனால் அதுதான் பிரச்சினை. நான் எடுக்கப்பட்டு விடும். ஆனால் 'நான்' இல்லாத் தன்மை தோன்றிவிடும். நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். எண்ணங்கள் குழம்பி பிளவுபட்டுப் போவீர்கள்.

சமயம் அடுத்த ஓரத்திலிருந்து செயல்படுகிறது, அடுத்த முடிவிலிருந்து. அது 'நான்' இல்லாத் தன்மையை முதலில் கொண்டு வர முயற்சிக்கிறது. அதிகமாக 'நான்' அற்ற தன்மை வர வர அதிக முழுமை இருக்கிறது. அதிக 'நான்' தானாக விலகிவிடுகிறது. கொஞ்சம் கொஞ்சமாக 'நான்' விலகுவதற்கு முன்னால் முழுமை சொந்தமாகிவிடுகிறது. பிறகு நீங்கள் பைத்தியமாகிவிட மாட்டீர்கள். வித்தியாசமாய் தோற்றமளிக்க மாட்டீர்கள், சாதாரணமாயிருப்பீர்கள். இயல்பாக சமூகத்தைவிட்டு வெளியே வருவீர்கள்.

போதையின் மூலம் நீங்கள் சமுதாயத்தை விட்டு வெளியே வருவீர்கள். ஆனால் பைத்தியமாக. அதனால்தான் மதங்கள் எல்லாம் குடியை எதிர்க்கின்றன. சமுதாயம் உங்களுக்கு 'நான்' என்பதற்கு ஒரு செயல்திட்டத்தைக் கொடுத்துள்ளது. அதை வைத்துக் கொண்டு எப்படியோ சமாளிக்கிறீர்கள். அதை வைத்துக் கொண்டு எப்படியோ வாழ்க்கை நடத்துகிறீர்கள். ஆனால் முழுமை பொறுப் பேற்றால் பிறகு பிரச்சினை இல்லை. நீங்கள் தாவோவின் மனிதனாகி விடுவீர்கள். பிறகு 'நான்' என்பதற்கு அவசியமே இருக்காது. நீங்கள் அதை நாய்க்குப் போட்டு விடலாம்.

ஆனால் நீங்கள் வேறொரு விதமாகவும் செய்யலாம். நீங்கள் இந்த 'நானை' வேதிப் பொருட்கள் மூலம் அழித்துவிடலாம். இவ்வாறு செய்ய முடியும் - பிறகு அங்கே பிரச்சினை வந்துவிடும். ஏனெனில் நீங்கள் வித்தியாசமா யிருப்பீர்கள். நீங்கள் குறிப்பிட்ட சக்தியை உணர்வீர்கள். ஆனால் அந்த சக்தி பொய்யானதாயிருக்கும். ஏனெனில் முழுமை உங்களைப் பொறுப்பேற்றுக் கொள்ளவில்லை.

பலபேர் இதைப்பற்றி புகார் கூறியுள்ளனர். நியூயார்க்கில் ஒரு பெண். எல்எஸ்டி போதைக்கு அடிமையாகி பதிமூன்றாவது மாடியிலிருந்து குதித்துவிட்டாள். ஏனெனில் நான் பறந்து செல்வேன் என்று நினைத்தாளாம். நீங்கள் போதைக்கு அடிமையாகியிருக்கும் போது, உங்களால் பறக்க முடியும் என்று தோன்றினால் , அதில் சந்தேகமேயில்லை. நீங்கள் அதை முழுவதுமாக நம்பிவிட்டீர்கள். ஏனெனில் சந்தேகம், 'நான்' அங்கேயில்லை. சதேகப்பட அங்கே யார் இருக்கிறார்கள்? நீங்கள் அதை நம்புகிறீர்கள். ஆனால் முழுமை அங்கில்லை.

சுவாங்தஸூ பறந்திருப்பார் சுவாங்தஸூ ஒரு பறவை இறக்கையால் பறப்பது போல் ஜன்னலுக்கு வெளியே

பறந்திருப்பார். ஆனால் எல்எஸ்டியைக் கொண்டு உங்களால் செய்ய முடியாது. 'நான்' அங்கேயில்லை. அதனால் சந்தேகப்பட முடியாது. ஆனால், முழுமை உங்களைச் சொந்த மாக்கிக் கொள்ளவில்லை. அதனால் நீங்கள் சக்தி பெற்றிருக்கவில்லை. அங்கே சக்தியில்லை, சக்தியிருப்பது போன்ற ஒரு மாயைதான் உள்ளது. அது பிரச்சினையை உருவாக்கும். ஆல்கஹாலைக் கொண்டு நீங்கள் குறிப்பிட்ட சிலவற்றைத்தான் செய்ய முடியும்.

சர்க்கஸ் கூட்டம் ஓர் சிறப்பு இரயிலில் ஒரு நகரத்தி லிருந்து இன்னொரு நகரத்திற்குச் சென்று கொண்டிருந்தது. கூண்டு உடைந்து போய் சிங்கம் தப்பித்து விட்டது. அதனால் நிர்வாகி அங்கிருந்த எல்லா வலிமையான மனிதர்களையும் திரட்டி சொன்னார் : "இரவுக்கு முன்னால் காட்டிற்குச் சென்று, சிங்கத்தைக் கண்டு பிடிக்க வேண்டும். நான் உங்களுக்கு ஒயின் தருகிறேன். அது உங்களுக்குத் துணிவைக் கொடுக்கும்."

அந்த இருபது பேரும் பெரிய வெடிகுண்டுகளையெல் லாம் எடுத்துக் கொண்டனர். இரவு குளிராகவும் ஆபத்தான தாகவும் இருந்ததால் தைரியம் தேவைப்பட்டது. ஆனால் முல்லா நஸ்ருதீன் மறுத்துவிட்டார். அவர் சொன்னார் : "நான் சோடா மட்டும் குடித்துக் கொள்கிறேன்." நிர்வாகி எதிர்த்தார். அவர் சொன்னார் : "உனக்கு தைரியம் அவசியம்."

நஸ்ருதீன் பதில் சொன்னார். "இந்த மாதிரியான கணங் களில் எனக்குத் தைரியம் வேண்டாம். இந்தக் கணங்கள் ஆபத்தானவை. நான் கோழையாகவும், விழிப்பாகவும் தான் இருக்க வேண்டும்."

உங்களுக்கு சக்தி இல்லாதபோது போதையால் துணிச்சலைத் தர முடியும். அது ஆபத்தானது. நீங்கள் ஒரு

குறிப்பிட்ட பாதையில் பைத்தியக்காரத்தனமாய் செல்ல முடியும். இதுதான் போதையின் அபாயம்.

ஆனால் சமுதாயம் இதைப் பார்த்துப் பயப்படவில்லை. சமுதாயத்தை விட்டு நீங்கள் ஒரு கணம் நகர்ந்துவிட்டால் பிறகு அதனுடன் ஒத்துப் போகவே மாட்டீர்கள். சமுதாயம் ஒரு பைத்தியக்காரர்களின் இடம் போன்றது. அதனுடன் ஒத்துப் போக வேண்டுமெனில் வெளியேயிருந்து எந்தக் கணத்தையும் அனுமதிக்கக் கூடாது.

மதங்கள் கூட குடிக்கு எதிரானதுதான். ஆனால் வேறொரு காரணத்திற்காக அவர்கள் சொல்கிறார்கள் : குடிகாரனாயிரு, தெய்விக போதையை அருந்து, ஏனெனில் அப்போது நீங்கள் ஆழச் செல்கிறீர்கள். மையமாகிறீர்கள். பிறகு சக்தி பெற்றவராகிறீர்கள்.

மதுபானத்திலேயே
இந்த அளவு பாதுகாப்பு இருந்தால்,
தாவோவில் எவ்வளவு அதிகமாய் இருக்கும்?
ஞானி தாவோவிற்குள் மறைந்து கொள்கிறான்,
எதுவும் அவனைத் தொட்டுவிட முடியாது.

முற்றிலுமாய் எதுவுமே அவனைத் தொட்டுவிட முடியாது. ஏன்? நீங்கள் என்னைச் சரியாகப் பின்பற்றினால், 'நான்' மட்டும்தான் தொடப்படும். அது எளிதில் தொடப் படக் கூடாது. யாராவது ஒரு குறிப்பிட்ட விதத்தில் உங்களைப் பார்த்தால், அது தொடப்பட்டுவிடும். ஆனால் எதுவும் செய்ய முடியாது. யாராவது லேசாக சிரித்தால், அது தொடப்பட்டுவிடும். அது எளிதில் தொடப்படக் கூடியது. காயத்தைப் போல் எப்போதும் திறந்திருக்கும், பசுமையாக. அதை நீங்கள் தொட்டால் வலி ஏற்படுகிறது. ஒரு வார்த்தை, ஒரு அசைவு, அடுத்தவர் உங்களுக்காக என்ன செய்தார்

என்பதைப் பற்றி விழிப்புடன் கூட இருக்க மாட்டார். ஆனால் அவர் அதைத் தொட்டுவிட்டார்.

நீங்கள் எப்போதும் அடுத்தவர் தான் பொறுப்பு என்று நினைத்துக் கொள்கிறீர்கள். அதாவது அவர் உங்களைக் காயப்படுத்தி விட்டதாக, இல்லை. நீங்கள் உங்கள் காயத்தைச் சுமந்து செல்கிறீர்கள். 'நான்' என்பதால் உங்கள் முழு உயிரும் காயம்பட்டுள்ளது. அதை எடுத்துக் கொண்டே நீங்கள் சுற்றுகிறீர்கள். யாருக்கும் உங்களை வேதனைப் படுத்துவதில் விருப்பமில்லை. யாரும் உங்களை வேதனைப் படுத்துவதற் காகக் காத்துக் கொண்டிருக்க வில்லை. எல்லாரும் தங்களது சொந்தக் காயத்தைப் பாதுகாத்துக் கொள்வதில் மும்முரமாயிருக்கிறார்கள். யாருக்கு சக்தி இருக்கிறது? ஆனாலும் அது நிகழ்கிறது. ஏனெனில் நீங்கள் காயம் படுவதற்கு மிகத் தயாராயிருக்கிறீர்கள். மிகவும் தயாராய், விளிம்பில் எதற்காகவும் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்களால் தாவோவின் மனிதனைத் தொட முடியாது. ஏன்? அங்கே தொடப்படுவதற்கு யாருமில்லை. அங்கே காயமேயில்லை. அவன் ஆரோக்கியமாய் இருக்கிறான். குணமாயிருக்கிறான், முழுமையாய். இந்த முழு உலகம் அழகானது. உலகத்தின் ஆரோக்கியம் முழுமையிலிருந்து தான் வந்துள்ளது. அவன் முழுமையாயிருக்கிறான். ஆரோக்கியமாய், புனிதமாய்.

உங்கள் காயத்தைப் பற்றிய விழிப்புடன் இருங்கள். அதுவரை உதவாதீர்கள். அதை குணமாயிருக்க விடுங்கள். அதன் வேர்களுக்கு நீங்கள் நகரும் போதுதான் அது குணப் படுத்தப்படும். தலை குறைவாயிருக்கும் போது அதிக புண்கள் குணமாகிவிடும். தலையில்லாதபோது புண்களே இருக்காது. தலையில்லாத வாழ்க்கை வாழுங்கள். முழுமையான உயிராக செயல்படுங்கள். அனைத்தையும் ஏற்றுக் கொள்ளுங்கள்.

இருபத்து நான்கு மணி நேரங்கள் மட்டும், முயற்சி செய்து பாருங்கள். முழுமையாய் ஏற்றுக் கொள்ளல் என்ன நிகழ்ந்தாலும். யாராவது உங்களை அவமரியாதை செய்தால் ஏற்றுக் கொள்ளுங்கள். பதிலுக்கு ஒன்றும் செய்யாதீர்கள். என்ன நிகழ்கிறது என்று பாருங்கள், உடனே நீங்கள் இதுவரை உணர்ந்தேயிராத சக்தி உங்கள் மேல் பொழிவதை உணர்வீர்கள். யாராவது உங்களை அவமரியாதை செய்கிறார்கள். நீங்கள் பலவீனமாய் உணர்கிறீர்கள். தொந்தரவுக்குள்ளாகிறீர்கள். எப்படி பழி வாங்குவது என்று யோசிக்கத் தொடங்குகிறீர்கள். அந்த மனிதன் உன்னைக் கைப்பற்றி விட்டான். இப்போது நீங்கள் சுற்றிச் சுற்றி வருகிறீர்கள். நாள் கணக்காக, பல இரவுகளாக, பல மாதங்களாக, பல வருடங்களாகக் கூட உங்களால் துங்க முடியாது. உங்களுக்குக் கெட்ட கனவுகள் வரும். மக்கள் சிறிய விஷயங்களுக்காக முழுவாழ்க்கையுமே வீணடிக்கிறார்கள். மற்றவர் தங்களை அவமரியாதை செய்து விட்ட ஒரே காரணத்திற்காக.

கொஞ்சம் உங்கள் இறந்த காலத்திற்குத் திரும்பச் சென்று சிலவற்றை நினைவு படுத்திப் பாருங்கள். நீங்கள் சிறு குழந்தையாக இருந்தபோது உங்கள் ஆசிரியர் வகுப்பறையில் உங்களை முட்டாள் என்று அழைத்திருப்பார். நீங்கள் இன்னமும் அதை நினைவில் வைத்துக் கொண்டு வருத்தப் படுவீர்கள். உங்கள் தந்தை ஏதாவது சொல்லியிருப்பார். உங்கள் பெற்றோர்கள் மறந்திருப்பார்கள். ஆனால் நீங்கள் அதை நினைவில் வைத்திருப்பீர்கள். அவர்களால் அதை நினைவிற்குக் கொண்டுவர இயலாது. உங்கள் தாய் ஒரு விதமாய் உங்களைப் பாத்திருப்பார். அந்தக் காயம் இன்னும் ஆறியிருக்காது. இன்னும் அது திறந்து புதிதுபோல் இருக்கும். யாராவது அதைத் தொட்டால் நீங்கள் வெடித்து விடுவீர்கள். இந்தக் காயத்தை வளர விடாதீர்கள். இது உங்களைக் காயப்

படுத்திவிட அனுமதிக்காதீர்கள். வேர்களுக்குச் செல்லுங்கள். முழுமையுடனிருங்கள். இருபத்து நான்கு மணி நேரங்கள், இருபத்து நான்கு மணி நேரங்கள் மட்டுமே. பதிலுக்கு செய்ய முயற்சிக்காதீர்கள். தவிர்க்காதீர்கள், என்ன நிகழ்ந்தாலும்.

யாராவது உங்களை மண்ணில் தள்ளி விட்டார் களெனில், விழுங்கள். பிறகு எழுந்து வீட்டிற்குச் செல்லுங் கள். அதை முன்னிட்டு எதுவும் செய்யாதீர்கள். யாராவது உங்களைக் குட்டினால் தலையைக் குனிந்து நன்றியோடு ஏற்றுக் கொள்ளுங்கள். வீட்டிற்குச் செல்லுங்கள். எதுவும் செய்யாதீர்கள். இருபத்து நான்கு மணி நேரங்களுக்கு மட்டும். பிறகு இதற்குமுன் உணர்ந்தேயிராத ஒரு சக்தி உங்களுக்குள் ஏறுவதைப் பார்ப்பீர்கள். வேரிலிருந்து ஒரு புதிய புத்துணர்ச்சி எழும்பும். ஒருமுறை நீங்கள் தெரிந்து கொண்டால், அதைச் சுவைத்து விட்டால் உங்கள் வாழ்க்கை மாறுபடும். பிறகு நீங்கள் செய்து கொண்டிருக்கும் முட்டாள் தனத்தைப் பார்த்துச் சிரிப்பீர்கள். எல்லா வருத்தங்கள், எதிர்ப்புகள், பழிகள் என்று உங்களை நீங்களே அழித்துக் கொண்டிருந்ததைப் பார்த்துச் சிரிப்பீர்கள்.

உங்களைத் தவிர வேறு யாராலும் உங்களை அழிக்க முடியாது. உங்களைத் தவிர வேறு யாராலும் உங்களைக் காப்பாற்ற முடியாது. நீங்கள் தான் யூதாஸ் ; நீங்கள் தான் இயேசு.

இன்றைக்கு இது போதும்.

## வெற்றுப் படகு



# 7

## சுவாங்தஸூவின் இறுதிச் சடங்கு

சுவாங்தஸூ இறக்கும் தருவாயில்
அவரது சீடர்கள்
ஒரு பிருமாண்டமான இறுதிச் சடங்கிற்கு
ஏற்பாடு செய்ய ஆரம்பித்தார்கள்.

ஆனால் சுவாங்தஸூ சொன்னார் :

" எனது சவப்பெட்டிக்காக
வானத்தையும் பூமியையும் நான் பெறலாம்.
சூரியனும் சந்திரனும் தேய்ந்து
என் இருபுறங்களிலும் அடையாளங்களாகத் தொங்கட்டும்.
கிரகங்களும் நடசத்திரக் குடும்பங்களும்
ஆபரணங்களாக என்னைச் சுற்றிலும்
பிரகாசிக்கட்டும்.

எல்லா உயிரினங்களும்
துக்கம் அனுசரிப்பவர்களாக விழித்திருக்கட்டும்.
இதைவிட வேறென்ன வேண்டும் ?"

ஆனால் சீடர்கள் சொன்னார்கள் :

"காக்கைகளும் பருந்துகளும்
எங்கள் குருவை உண்டுவிடுமே என்று
பயப்படுகிறோம்."

சுவாங்தஸூ பதிலளித்தார் :

"ம், பூமிக்கு மேலே நான்
காக்கைகளாலும் பருந்துகளாலும்
உண்ணப்படுவேன்.

பூமிக்குக் கீழே
எறும்புகளாலும் புழுக்களாலும்
உண்ணப்படுவேன் இரண்டு விதத்திலும்
நான் உண்ணப்படுவேன். பிறகு ஏன்
பறவைகளை ஆதரிக்கிறீர்கள் ?"



# சுவாங்தஸூவின் இறுதிச் சடங்கு

மனம் எல்லாவற்றையும் ஒரு பிரச்சினையாக்கி விடுகிறது. இல்லாவிடில் வாழ்க்கை எளிமையானது. சாவு எளிமையானது. பிரச்சினை எதுவுமே இல்லை. ஆனால் ஒவ்வொரு கணமும் ஒரு பிரச்சினை என்றும், அதை தீர்த்தே ஆக வேண்டும் என்றும், மனம் பொய்யான தோற்றங்களை ஏற்படுத்துகிறது. எல்லாமே பிரச்சினைதான் என்ற முதல் அடியை நீங்கள் எடுத்து வைத்தவுடனேயே நீங்கள் எதையுமே தீர்த்து வைக்க முடியாது. ஏனெனில் உங்கள் முதல் அடியே முழுக்க முழுக்கத் தவறு.

மனம் உங்களுக்கு எந்த விடையையும் தர முடியாது. உங்களுக்குப் பிரச்சினைகளைத் தருகின்ற கருவி அது, ஒரு பிரச்சினைக்கு விடை கண்டு விட்டேன் என்று நீங்கள் நினைத்த போதிலும், அந்த விடையிலிருந்து ஆயிரக்கணக்கில்

புதிய பிரச்சினைகள் முளைத்துவிடும். இதைத்தான் தத்துவம் எப்போதுமே செய்து வந்திருக்கிறது. தத்துவம் என்பது மனத்தின் வேலை. மனம் எதையும் கவனித்திடும் அதே கணத்தில் ஒரு கேள்விக் குறியோடு கவனிக்கிறது. சந்தேகமான கண்களோடு எப்போதும் கவனிக்கிறது. ஆனால் மனமின்றி பார்க்கும் போது மட்டும்தான் வாழ்க்கை மிகவும் எளிமையானது. சாவு மிகவும் எளிமையானது. மனத்தை நீங்கள் கொண்டு வரும்போதே எல்லாமே சிக்கலாகி விடுகிறது. எல்லாமே குழப்பமாகி விடுகிறது. குழப்பத்தை தெளிவாக்க மனம் முயல்கிறது. ஆனால் உண்மையில் அதுதான் எல்லா குழப்பங்களுக்கும் காரணகர்த்தா. எனவே மேலும் குழப்பங்கள் ஏற்படுகின்றன. சிற்றோடை ஒன்று மலைகளில் ஓடுவதைப் போன்றது இது. சில வண்டிகள் அதன் வழியே சென்று அந்த சிற்றோடை சேறாகிவிட்டிருக்கலாம். அந்த சிற்றோடையில் குதித்து நீங்கள் சுத்தம் செய்ய முனைகிறீர்கள். நீங்கள் அதை மேலும் சேறாக்கி விடுவீர்கள். கரையில் அமர்ந்து காத்திருப்பது நல்லது. சிற்றோடையை மறுபடியும் அமைதியாக விட்டுவிடுவது நல்லது. தானே அமைதியடைய விட்டுவிடுவது நல்லது. இறந்த இலைகள் சென்று விடும், சேறு அடியில் தங்கிவிடும். ஓடை மறுபடியும் தெள்ளத் தெளிவாகிவிடும். உங்கள் உதவி தேவை இல்லை. நீங்கள் அதை மேலும் குழப்பி விடுவீர்கள்.

எனவே பிரச்சினை இருக்கிறது என்று நீங்கள் உணர்ந்தீர்கள் என்றால் உங்கள் மூக்கை தயவு செய்து அதில் நுழைக்காதீர்கள். அருகில் உட்காருங்கள். மனத்தை சிக்கிவிட அனுமதிக்காதீர்கள். மனத்தை காத்திருக்கச் சொல்லுங்கள். மனத்திற்கு காத்திருப்பது மிகவும் கடினம் தான். அது பொறுமையின்மையின் அவதாரம்.

மனத்தைக் காத்திருக்கும்படி சொன்னீர்கள் என்றால் தியானம் நிகழ்கிறது. மனத்தை காத்திருக்கும்படி தூண்டி விட

முடிந்தால் பிரார்த்தனையில் ஈடுபட உங்களால் முடியும். ஏனெனில் காத்திருத்தல் என்றால் சிந்திக்காது இருத்தல். அதாவது கரையில் சும்மா உட்கார்ந்திருத்தல், ஓடையோடு எதுவுமே செய்யாதிருத்தல் என்று பொருள். உங்களால் எதைச் செய்ய முடியும்? நீங்கள் எதைச் செய்தாலும் அது மேலும் சேறாகிவிடும். ஓடையில் நீங்கள் நுழைந்த உடனே மேலும் பிரச்சினைகள் உருவாகி விடும். எனவே காத்திருங்கள்.

தியானம் என்பது காத்திருத்தல். பிரார்த்தனை என்பது முடிவில்லா பொறுமை. உங்கள் மனத்தை உங்களுக்கு மேலும் பிரச்சினைகள் உண்டாக்க அனுமதிக்காமல் இருப்பதுதான் மதம் முழுவதும். எனவே பல விஷயங்கள், மிருங்கள் கூட அனுபவிக்கும் எளிமையான விஷயங்களை, மரங்கள் கூட அனுபவிக்கும் விஷயங்களை மனிதனால் அனுபவிக்க முடியாது. ஏனெனில் உடனே அவை பிரச்சினைகளாகி விடுகின்றன. பிரச்சினையை எப்படி உங்களால் அனுபவிக்க முடியும்?

நீங்கள் காதலிக்கிறீர்கள். உடனே மனம் சொல்கிறது, காதல் என்றால் என்ன? இது காதலா, காமமா? இது உண்மையா, பொய்யா? நான் எங்கே செல்கிறேன்? காதல் என்றென்றும் நிலைத்திருக்குமா அல்லது அது தற்காலிகமானதா?

எல்லாவற்றையுமே முதலில் தீர்மானித்து விட மனம் விரும்புகிறது. பிறகு அடியெடுத்து வைக்கிறது. மனம் இருக்கும் வரை எந்தத் தீர்மானத்தையும் எடுத்துவிட முடியாது. தீர்மானிக்க இயலாத நிலையிலேயே அது இருக்கிறது. தீர்மானிக்க இயலாத நிலைதான் அதன் இயல்பான நிலை. 'அவசரப்படாதே' என்று அது சொல்கிறது. மனம் இப்படி இதையெல்லாம் சொல்லும் போது அதுதான் புத்திசாலித் தனமாக இருக்கிறது. அதுதான் விவேகமானதாகத் தோன்று

கிறது. ஏனெனில் நீங்கள் தவறு இழைக்கலாம் என்று தோன்றுகிறது. எனவே அவசரப்படாதே, அசையாதே, அப்படியே இரு.

ஆனால் வாழ்க்கை என்பது இயக்கம். வாழ்க்கை என்பது நம்பிக்கை. காதல் நிகழ்கிறது, நீங்கள் அதனுள்ளே செல்ல வேண்டும். அது எங்கே உங்களை அழைத்துச் செல்கிறது என்பது முக்கியமல்ல. குறிக்கோள் முக்கியமான தல்ல. காதலில் உங்கள் விழிப்பு நிலையின் செயல்பாடே ஓர் அற்புதம்தான். அடுத்தவர் ஒரு பொருட்டே அல்ல. நீங்கள் நேசிப்பவர், காதலிப்பவர் முக்கியமல்ல. உங்களால் காதலிக்க முடியும். அது உங்களுக்கும் நிகழக் கூடும் என்பதுதான் முக்கியம். எந்த சந்தேகமுமின்றி எந்தக் கேள்வியுமின்றி நம்பிக்கையில் உங்கள் உயிர் மலர்ந்து விடுகிறது. இந்த மலர்தலே ஒரு நிறைவுதான்.

ஆனால் மனம் சொல்லும், "காத்திரு, யோசித்து முடிவெடுக்கிறேன். அவசரத்தில் எந்த முடிவையும் எடுத்து விடக் கூடாது," என்று. பிறகு நீங்கள் காத்திருக்கலாம். தொடர்ந்து காத்திருக்கலாம். இப்படித்தான் நீங்கள் வாழ்க்கையை வீணாக்கி விடுகிறீர்கள்.

ஒவ்வொரு கணமும் வாழ்க்கை உங்கள் கதவைத் தட்டுகிறது. ஆனால் நீங்கள் சிந்தித்துக் கொண்டிக்கிறீர்கள். வாழ்க்கையிடம் நீங்கள் சொல்கிறீர்கள் : "பொறு, நான் கதவை திறப்பேன். ஆனால் முதலில் என்னைத் தீர்மானிக்க விடு." அது எப்போதும் நிகழாது. வாழ்க்கை முழுவதும் வந்து போகும். நீங்கள் வெறுமனே இழுத்துக் கொண்டிருப்பீர்கள். சாகவும் மாட்டீர்கள். வாழவும் மாட்டீர்கள். வாழ்வு, சாவு இரண்டுமே நல்லதுதான். ஏனெனில் சாவு என்பது தனக்கே உரித்தான வாழ்வைக் கொண்டிருக்கிறது.

எனவே நினைவில் கொள்ளுங்கள். மனத்தைக் குறுக்கிட அனுமதிக்காமலிப்பதுதான் முதலில் செய்ய வேண்டியது. பிறகு மரங்களைப் போல, இன்னும் பசுமையாகவே இருக்கலாம். பிறகு நீங்கள் பறந்து கொண்டிருக்கும் பறவையைப் போலிருக்கலாம். எந்தப் பறவையாலும் நீங்கள் தொடும் உயரத்தைத் தொட முடியாது. பிறகு நீங்கள் கடலின் ஆழத்திற்கே சென்றுவிடும் மீன்களைப் போலிருக்கலாம். நீங்கள் கடலின் அடி ஆழத்திற்கே சென்றுவிடலாம். உங்களுடன் எதையுமே ஒப்பிட முடியாது. மனித விழிப்புணர்வு தான் உச்ச நிலை அதிசயம். ஆனால் நீங்கள் இழந்து விட்டீர்கள். குறைந்த நிலையை அடைந்த உயிரினங்கள் கூட அதிகம் அனுபவிக்கின்றன. ஒரு பறவை வெறும் பறவைதான். உங்களை விட மிகவும் கீழான உயிரினம். ஒரு மரமானது விழிப்புணர்வின் துவக்கத்தில் கூட இல்லை. ஆனால் அதிகம் அனுபவிக்கிறது. அதிகம் பூக்கிறது. அதைச் சுற்றிலும் மேலும் முழுமை நிகழ்ந்தவாறு இருக்கிறது. நீங்கள் ஏன் இழக்கிறீர்கள்?

உங்கள் மனம் ஒரு சுமையாகிவிட்டது. நீங்கள் அதை உபயோகிக்கவே இல்லை. நேர் எதிராக உங்களை அது உபயோகித்துக் கொள்கிறது. உங்கள் வாழ்க்கையில் உங்கள் மனம் குறுக்கிட அனுமதிக்காதீர்கள். பிறகு அங்கே ஒரு பிரவாகமிருக்கும். பிறகு நீங்கள் தடையற்றவர்கள். பிறகு நீங்கள் கண்ணாடி போன்றவர். பிறகு ஒவ்வொரு கணமுமே பேரின்பம் தான். ஏனெனில் அதைப் பற்றி நீங்கள் கவலைப்படுவதில்லை.

ஒரு நபரை மலைப்பிரதேசங்களுக்கு சென்று வரும்படி அவனது மனோதத்துவ நிபுணர் கூறினார். அவன் எப்போதுமே இதைப்பற்றி, அதைப்பற்றி குறை கூறிக் கொண்டேயிருந்தான். எப்போதும் ஏதாவது கேள்வி கேட்டவாறு இருந்தான். எதோடும் அவன் சுகமாக இருந்ததே இல்லை. இல்லத்தில் சொன்னார்கள்.

அடுத்த நாள் மனோதத்துவ நிபுணருக்கு ஒரு தந்தி வந்து சேர்ந்தது. அதில் அந்த நபர் சொல்லியிருந்தது : "நான் இங்கே சந்தோஷமாக இருக்கிறேன். ஏன்?"

ஏன் என்று கேட்காமல் சந்தோஷத்தைக் கூட உங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. எதையுமே ஏற்றுக் கொள்ள மனத்தால் முடியாது. அது முடியவே முடியாது. 'ஏன்' என்பது உடனே அங்கு வந்துவிடும். அந்த 'ஏன்' என்ற கேள்வி எல்லாவற்றையும் அழித்துவிடும். எனவே தான் எல்லா மதங்களும் நம்பிக்கையை வலியுறுத்துகின்றன. நம்பிக்கையின் அர்த்தம் இதுதான், ஏன் என்று கேட்க மனத்தை அனுமதிக்காதது.

விசுவாசம் என்பது நம்பிக்கையல்ல. ஒரு கோட்பாட்டில் நம்பிக்கை வைப்பதல்ல. விசுவாசம் என்பது வாழ்க்கையிலேயே நம்பிக்கை வைப்பது. விசுவாசம் என்பது பைபிளையோ, குரானையோ, கீதையையோ நம்புவதல்ல. விசுவாசம் என்பது நம்பிக்கையல்ல. விசுவாசம் என்பது ஒரு நம்பிக்கை. சந்தேகப்படாத நம்பிக்கை... நம்பிக்கையோடு இருப்பவர்கள் மட்டும்தான். நம்பக் கூடிய தன்மை உடையவர்களால் தான் வாழ்க்கை என்றால் என்ன, சாவு என்றால் என்ன என்று தெரிந்து கொள்ள முடியும்.

நமக்கு வாழ்க்கை என்பது ஒரு பிரச்சினை. எனவே சாவும் ஒரு பிரச்சினையாகத்தான் இருக்கும். நாம் தொடர்ந்து அதைத் தீர்க்க முயல்கிறோம். நேரத்தையும் சக்தியையும் பிரச்சினையைத் தீர்ப்பதில் செலவிடுகிறோம். அது ஏற்கெனவே தீர்க்கப்பட்டு விட்டது. அது பிரச்சினையாக இருந்ததேயில்லை. பிரச்சினையை உருவாக்கியது நீங்கள் தான். நட்சத்திரங்களைப் பாருங்கள், பிரச்சினை அங்கே

இல்லை. மரங்களைப் பாருங்கள். பிரச்சினை அங்கே இல்லை. உங்களைச் சுற்றிப் பாருங்கள்.... மனிதன் இங்கே இல்லாமல் இருந்தால் ஏற்கெனவே எல்லாமே தீர்க்கப்பட்டு விட்டிருக்கும். பிரச்சினை எங்கே இருக்கிறது? உலகை யார் படைத்தது என்று மரங்கள் கேட்பதில்லை. அவை வெறுமனே அனுபவிக்கின்றன. உலகை யார் உருவாக்கியது என்று கேட்பது எவ்வளவு முட்டாள்தனம்? யார் படைத்திருந்தாலும் என்ன மாற்றம் நிகழ்ந்து விடப்போகிறது. ஏ, பி, சி, டி ? என்ன வித்தியாசம் வந்து விடப்போகிறது? அது உருவாக்கப் பட்டிருந்தாலும் உருவாக்கப்பட்டிருக்கா விட்டாலும் என்ன வித்தியாசம் வந்து விடப் போகிறது? 'ஏ' உலகைப் படைத்திருந்தாலோ, 'பி' உலகைப் படைத்திருந்தாலோ, அல்லது யாருமே உலகைப் படைக்காதிருந்தாலோ உங்களை எப்படி அது பாதிக்கும்? நீங்கள் இதேதான், வாழ்க்கையும் இதேதான். பிறகு ஏன் தேவையற்ற, சம்பந்தமில்ல ஒரு கேள்வியைக் கேட்டு அதில் மாட்டிக் கொள்ள வேண்டும்?

நதிகள் ஓடிக் கொண்டே இருக்கின்றன. எங்கே செல்கின்றன என்று கேட்பதே இல்லை. அவை கடலை அடைகின்றன. அவை கேள்வி கேட்க ஆரம்பித்தால் அவற்றால் முடியாமல் போகாலாம். அவற்றின் சக்தி வழியிலேயே வீணாகிவிடும். எங்கே போகிறோம் என்ற கவலை அவற்றிற்கு வந்துவிடலாம். குறிக்கோள் எங்கே, நோக்கம் என்ன, பிரச்சினையோடு மிகவும் ஒன்றிப்போய் பிறகு அவை பைத்தியமாகிவிடக் கூடும். ஆனால் அவை ஓடிக் கொண்டே இருக்கின்றன. எங்கே செல்கிறோம் என்ற கவலைகள் இன்றி எப்போதுமே கடலைச் சென்று அடைகின்றன.

மரங்களும் நதிகளும் இந்த அற்புதத்தை செய்ய முடியும் என்றால், உங்களால் ஏன் முடியாது? சுவாங்தஸூவின் தத்துவம் முழுவதும், அவர் வாழ்ந்த விதமே இதுதான்.

எல்லாமே நிகழ்ந்து கொண்டிருக்கும் போது நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அது நிகழ அனுமதியுங்கள். நதிகளால் சென்றடைய முடியுமெனில், மனிதனாலும் சென்றடைய முடியும். மரங்களால் சென்றடைய முடியுமெனில், மனிதனாலும் சென்றடைய முடியும். இந்த இருப்பு முழுவதுமே இயங்கிக் கொண்டிருக்கும் போது நீங்களும் அதில் ஒரு பாகம்தான். நினைவென்னும் நீர்ச்சுழியாகி விடாதீர்கள். பிறகு சுழன்று சுழன்று, சுழன்று சுழன்று பிறகு ஓட்டம் தடைப் பட்டுவிடும். பிறகு முடிவில் கடலென்னும் அனுபவம் கிடைக்காது.

வாழ்க்கை ஒரு விடுகதையாக உங்களுக்குத் தோன்றுவது ஏனெனில் நீங்கள் மனத்தின் மூலம் பார்ப்பது தான். மனமின்றி உங்களால் பார்க்க முடிந்தால் வாழ்க்கை ஒரு புதிர். மனத்தின் மூலம் பார்த்தால் வாழ்க்கை ஏற்கெனவே இறந்து விட்டது. மனமின்றி நீங்கள் பார்த்தால் வாழ்க்கை இறப்பதே இல்லை. உயிருள்ளவற்றை மனத்தால் உணர முடியாது. இறந்து போனவற்றை பொருட்களை மட்டும்தான் மனத்தால் தொட முடியும். வாழ்க்கை அவ்வளவு நுட்பமானது, மனம் அவ்வளவு முரடானது. இந்தக் கருவி வாழ்க்கையைப் போல் அவ்வளவு நுட்பமானதல்ல. அந்தக் கருவியினால் நீங்கள் தொடும்போது அதனால் வாழ்க்கையின் துடிப்பினை உணர முடியாது. அதனால் முடியாது. துடிப்பு மிகவும் நுட்பமானது. நீங்கள் தான் அந்தத் துடிப்பே.

சுவாங்தஸூ தன் சாவுப் படுக்கையில் இருக்கிறார். சுவாங்தஸூவைப் போன்ற ஒரு மனிதர் தன் மரணப்படுக்கை யில் இருக்கும் போது சீடர்கள் முழு அமைதியில் தான் இருப்பார்கள். இந்தக் கணத்தை இழந்து விட முடியாது. ஏனெனில் சாவுதான் உச்சம். சுவாங்தஸூ இறக்கும் போது அவர் உச்ச நிலையில் இறக்கிறார். விழிப்புணர்வு முழு

நிறைவை அடைவது எப்போதாவது நிகழ்வது. சீடர்கள் அமைதியாக இருக்க வேண்டும். அவர்கள் என்ன நடக்கிறது என்று கவனிக்க வேண்டும். சுவாங்தஸூவினுள் ஆழமாக நுழைந்து அவர்கள் பார்க்க வேண்டும். மனத்தை நுழைய அனுமதிக்கக் கூடாது. முட்டாள்தனமான கேள்விகளை கேட்க ஆரம்பிக்கக் கூடாது.

ஆனால் மனம் எப்போதும் கேட்க ஆரம்பிக்கிறது. சுவாங்தஸூ உயிருடன் தான் இன்னமும் இருக்கிறார். அவர்கள் இறுதிச் சடங்கைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள். ஆனால் மனம் உயிரோடு இல்லை. அது எப்போதுமே உயிருடனில்லை. மனம் எப்போதுமே இறப்பைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறது. சீடர்களுக்கு குரு எப்போதோ இறந்துவிட்டார். எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்று இறுதிச் சடங்கைப் பற்றி அவர்கள் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இல்லவே இல்லாத ஒரு பிரச்சினையை அவர்கள் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஏனெனில் சுவாங்தஸூ இன்னும் உயிருடன் இருக்கிறார்.

நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.

மூன்று, வயதான மனிதர்கள் ஒரு பூங்காவில் உட்கார்ந்து தவிர்க்கவே முடியாத சாவைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். எழுபத்து மூன்று வயதான ஒரு கிழவர் சொன்னார் : "நான் இறக்கும் போது ஆபிரகாம் லிங்கனுடன், எல்லோராலும் நேசிக்கப்பட்ட அந்த உயர்ந்த மனிதனுடன் புதைக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறேன்."

மற்றொரு கிழவர் சொன்னார் : "ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், மாபெரும் விஞ்ஞானி, மனிதாபிமானி, அமைதியை விரும்புபவரான அவருடன் புதைக்கப்பட விரும்புகிறேன்."

பிறகு இருவரும் தொண்ணூற்று மூன்று வயதான மூன்றாவது கிழவரைப் பார்த்தனர். அவர் சொன்னார் : "நான் சோஃபியா லாரனுடன் புதைக்கப்பட விரும்புகிறேன்."

அவர்கள் இருவரும் துணுக்குற்று கோபத்துடன் கேட்டார்கள் : "ஆனால் அவள் உயிருடன் இருக்கிறாள்."

அதற்கு அந்த வயதானவர் சொன்னார் : "நானும் கூடத்தான்."

இந்த வயதானவர் அரிதானவராய் இருக்க வேண்டும். தொண்ணூற்று மூன்று வயதில் அவர் சொல்கிறார் : "நானும் கூடத்தான்," என்று. வாழ்க்கை ஏன் சாவைப் பற்றிக் கவலைப் பட வேண்டும்? வாழ்க்கை ஏன் சாவைப்பற்றி நினைக்க வேண்டும்? நீங்கள் உயிருடன் இருக்கும் போது பிரச்சினை எங்கே இருக்கிறது? ஆனால் மனம்தான் பிரச்சினையை உருவாக்குகிறது. பிறகு நீங்கள் குழம்பிப் போகிறீர்கள்.

சாக்ரடிஸ் இறக்கும் போது சுவாங்தஸுவிற்கு நடந்தது போலவே நடந்தது. சீடர்கள் இறுதிச் சடங்கைப் பற்றிக் கவலைப்பட ஆரம்பித்து விட்டனர். அவர்கள் அவரை, "நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டனர்.

அதற்கு சாக்ரடிஸ் இப்படிப் பதில் சொன்னதாகச் சொல்கிறார்கள். "என்னுடைய எதிரிகள் என்னைக் கொல்ல விஷம் தருகிறார்கள். நீங்கள் என்னைப் புதைக்க திட்டமிடுகிறீர்கள்- எனவே இதில் நண்பன் யார்? பகைவன் யார்? நீங்கள் இருவருமே என் இறப்பிலேயே குறியாயிருக் கிறீர்கள். யாருமே என் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப் படுவதாகத் தெரியவில்லை."

மனம் எப்படியோ சாவைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறது. சுவாங்தஸுவின் சீடர்கள் என்ன

செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் குருவோ இறந்து கொண்டிருந்தார். ஓர் மாபெரும் நிகழ்ச்சி அங்கே நிகழ்ந்து கொண்டிருந்தது.

அங்கே சுவாங்தஸூ ஒரு புத்தர், கடைசி உச்சியை எட்டிக் கொண்டிருந்தார். இது அரிதாக லட்சக்கணக்கான வருடங்களில் ஒரு முறையோ இரண்டு முறையோ தான் நிகழ்கிறது. சுடர் எரிந்து கொண்டிருந்தது. அவரது வாழ்க்கை முழுமையான தூய்மை நிலைக்கு வந்து விட்டிருந்தது. அங்கே அது தெய்விகமாய், மனித நிலையற்று முழுமையானதாய், பகுதிகளற்று முதலும் முடிவும் சந்திப்பதாய், எல்லா இரகசியங்களும் வெளிப் படையாய், எல்லா கதவுகளும் திறந்தனவாய், எல்லாமே மூடப்படாததாய் இருந்தது. முழுவதும் புலனுக் கெட்டாத நிலை அங்கே இருந்தது. ஆனால் சீடர்களோ இறுதிச் சடங்கைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தார்கள். கண் மூடித்தனமாய் முழுக்க முழுக்க கண்மூடித்தனமாய், நடப்பது என்னவென்று காணாதவர் களாய் இருந்தார்கள். அவர்கள் கண்கள் மூடப்பட்டிருந்தன.

ஆனால் ஏன் இது நிகழ்கிறது? சுவாங்தஸூவை இந்த சீடர்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறீர்களா? எப்படி அவர்களுக்குத் தெரியும்? சுவாங்தஸூவின் மிக உயர்ந்த உன்னத நிலையைத் தவறவிட்டவர்கள். அவர் அவர்களுடன் வேலை செய்த போது தவறவிடவில்லை என்று எப்படி நம்ப முடியும்? அவர்களை உருவாக்கிக் கொண்டிருந்த போது, அவர்களுடன் நடந்து சென்ற போது, தோட்டத்தில் ஒரு குழி வெட்டிக் கொண்டிருந்த போது, விதையை நட்ட போது, அவர்களுடன் பேசிக் கொண்டிருந்த போது, அவர்களுடன் வெறுமனே இருந்த போது தவறவிடவில்லை என்று எப்படி நம்ப முடியும்?

இந்த சுவாங்தஸூ யார் என்று அவர்களுக்குத் தெரியும் என்று எப்படி உணர முடியும்? அவரது உயர்ந்த முழுமையான நிலையைத் தவறவிட்டவர்கள், அவரை எப்போதுமே தவறவிடுவார்கள் என்று எப்படி நினைக்காமலிருக்க முடியும்? அவர்கள் தவறவிட்டிருக்க வேண்டும். அவர் பேசிக் கொண்டிருந்த போது, அவர்கள் இப்படி நினைத்துக் கொண்டிருப்பார்கள் : "இவன் எதைப்பற்றிப் பேசுகிறான்? இவன் என்ன சொல்ல வருகிறான்?"

ஞானம் பெற்ற ஒருவர் பேசும் போது அர்த்தத்தை நீங்கள் கண்டறிய வேண்டியதில்லை. அது அங்கேதான் இருக்கிறது. நீங்கள் வெறுமனே கேட்க வேண்டியது தான். அதைக் கண்டறிய வேண்டியதில்லை. அது மறைத்து வைக்கப்படவில்லை. விளக்க வேண்டிய நிலையில் எதுவும் இல்லை. அவர் எந்த கோட்பாட்டையும் சொல்லிக் கொண்டிருக்க வில்லை. அவர் சில எளிமையான உண்மைகளை உங்களுக்குத் தருகிறார். உங்கள் கண்கள் திறந்திருந்தால் உங்களால் அவற்றைப் பார்க்க முடியும், உங்கள் காதுகளால் கேட்க முடிந்தால், உங்களால் அவற்றைக் கேட்க முடியும். வேறு எதுவும் அதிகப்படியாகத் தேவையில்லை.

எனவே தான் இயேசு தொடர்ந்து சொல்கிறார், 'உங்களால் கேட்க முடிந்தால், நான் சொல்வதைக் கேளுங்கள். உங்களால் பார்க்க முடிந்தால் பாருங்கள்.' வேறெதுவும் அதிகமாக எதிர் பார்க்கவில்லை. வெறுமனே கண்களைத் திறந்திடுங்கள், காதுகளைத் திறந்திடுங்கள்.

ஹெகல், கன்ட்டைப் போன்று புத்தர், சுவாங்தஸூ, அல்லது இயேசு தத்துவ ஞானிகள் இல்லை. ஹெகலை நீங்கள்

படித்தீர்கள் என்றால் அர்த்தத்தை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். அதுமிகவும் கடினமானது. எவ்வளவு கடினமாக்க முடியுமோ, அவ்வளவு கடினமாக என்னவோ ஹெகல் மிகவும் பிரயாசைப்பட்ட மாதிரி, வார்த்தைகளோடு வார்த்தைகள் பின்னிப் பிணைந்து, எல்லாவற்றையும் ஓர் புதிர் போல செய்த மாதிரி இருக்கிறது. எனவே முதன் முதலில் நீங்கள் ஹெகலை சந்திக்கும் போது அவர் மிக உன்னதமானவராய்த் தெரிவார். மிக உயர்ந்த விஷயங்களை பேசுபவராய்த் தெரிவார். ஆனால் மேலும் நீங்கள் நுழைந்து, மேலும் நீங்கள் புரிந்து கொண்டீர்கள் என்றால், அவர் சுருங்கிக் கொண்டே போவார். நீங்கள் அவரைப் புரிந்து கொண்ட அந்த தினத்தில் அவர் ஒன்றுக்கும் உதவாதவராகி விடுவார்.

அவரை நீங்கள் புரிந்து கொள்ள முடியாது என்பதில் தான் எல்லா சூட்சுமங்களும் அடங்கி இருக்கின்றன. எனவே தான் அவர் உயர்ந்தவரென்று நீங்கள் நினைக்கிறீர்கள். உங்களால் புரிந்து கொள்ள முடியாததால் உங்கள் மனம் குழம்பி விடுகிறது. உங்களால் புரிந்து கொள்ள முடியாததால் உங்கள் மனத்தால் எதையும் கிரகிக்க முடிவதில்லை. சூட்சுமமாய், புரியாத புதிராய் உங்களுக்குத் தோன்றுகிறது. அது அப்படியில்லை, அவை வெறும் வார்த்தைகள் தாம்; அவர் ஒளிந்து கொள்ள முயற்சிக்கிறார். அவர் எதையுமே சொல்வதில்லை. ஒன்றுக்கும் உதவாத வார்த்தைகளை அவர் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

எனவே ஹெகல் போன்றவர்கள் உடனுக்குடன் பாராட்டப் படுகிறார்கள். ஆனால் நேரம் கடக்க கடக்க அவர்களுடைய பாராட்டு மறைந்துவிடுகிறது. புத்தரைப் போன்றவர்கள் உடனுக்குடன் பாராட்டப்படுவதில்லை. ஆனால் காலம் செல்லச் செல்ல அவர்களை நீங்கள் அதிகம் பாராட்டுகிறீர்கள். அவர்கள் எப்போதுமே தங்கள்

காலத்திற்கு முந்தி வந்தவர்கள், நூற்றாண்டுகள் கடக்கின்றன. பிறகு அவர்கள் உயர்ந்த நிலை வெளியே தெரிய ஆரம்பிக்கிறது. அவர்களது உயர்ந்த நிலை புரிய ஆரம்பிக்கிறது. பிறகு உங்களால் அவர்களை உணர முடியும். ஏனெனில் அவர்கள் உண்மை அவ்வளவு எளிமையானது. அங்கே எந்தக் குப்பையுமில்லை. அவசியமற்ற எதுவுமே இல்லை. நீங்கள் நினைத்தால் அவ்வளவு உண்மையானவற்றை நீங்கள் தவறவிட்டுவிட முடியும்.

நீங்கள் சுவாங்தஸூவைப் போன்றவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தால் வெறுமனே கேளுங்கள். வேறு எதுவுமே உங்களிடமிருந்து தேவையில்லை. ஆனால் ஒரு திறந்த மனப்பான்மை மட்டுமே, ஒரு வரவேற்பு மட்டுமே தேவைப்படுகிறது. எல்லாமே தெளிவாய் இருக்கிறது. ஆனால் அதை நீங்கள் குழப்பி விடக் கூடும். பிறகு உங்கள் சொந்தக் கற்பனையினாலேயே நீங்கள் குழம்பி விடக் கூடும். சுவாங்தஸூவை சீடர்கள் தவற விட்டிருக்க வேண்டும். அவரை அவர்கள் மீண்டும் தவறவிடுகிறார்கள். அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஞானம் பெற்றவன் எப்போதுமே இருப்பதைக் கவனிக்கிறான். ஒன்றும் அறியாதவன் எப்போதுமே செய்ய வேண்டியவை என்ன என்று கவனிக்கிறான். இருப்பது அவனுக்கு ஒரு கேள்வியே இல்லை.

சுவாங்தஸூ இருப்பதைக் கவனிக்கிறார். சீடர்கள் செய்வதைக் கவனிக்கிறார்கள். இறப்பு வருகிறதென்றால், என்ன செய்ய வேண்டும்? நாம் என்ன செய்ய வேண்டும்? குரு இறக்கப் போகிறார். இறுதிச் சடங்கு என்னாவது? நாம் அதைத் திட்டமிட வேண்டும்.

திட்ட மிடுவதில் நாம் தீவிரமாயிருக்கிறோம். நாம் வாழ்க்கையைத் திட்டமிடுவதன் மூலம் இயல்பான தன்மை கெட்டுவிடுகிறது. அழகு அழிந்து விடுகிறது. முழு இன்பமும் இல்லாமல் போகிறது.

நாத்திகன் ஒருவன் இறந்து கொண்டிருந்தான். சொர்க்கத்திலோ நரகத்திலோ அவனுக்கு நம்பிக்கையில்லை. ஆனால் இறப்பதற்கு முன்பு கவனமாக உடுத்திக் கொள்வது அவசியம் என்று அவன் நினைத்தான். அவன் எங்கே செல்கிறானென்று அவனுக்குத் தெரியாது. ஏனெனில் அவனுக்கு எதிலுமே நம்பிக்கையில்லை. எனினும் அவன் எங்கோ போகிறான். எனவே எங்கோ செல்வதற்கு முன் கவனமாக உடுத்திக் கொள்ள வேண்டும்.

சம்பிரதாயம், பழக்க வழக்கங்களை அவன் தீவிரமாகக் கடைப் பிடிப்பவன். எனவே ஃசூட், டை என்று எல்லா வற்றையும் கவனமாகப் பார்த்து அணிந்த பிறகு அவன் இறந்து போனான். அவனை ஆசிர்வதிக்க பாதிரியார் வந்தார். அவர் சொன்னார் : "இந்த மனிதன் எப்போதும் நம்பியதில்லை. ஆனால் எப்படி திட்டமிட்டிருக்கிறானென்று பாருங்கள். அவன் நம்பவில்லை. அவன் எங்குமே செல்ல வேண்டிய தில்லை. ஆனால் எவ்வளவு அழகாக ஆடை அணிந்து தயாராகி இருக்கிறான்!"

நீங்கள் எங்குமே செல்லப் போவதில்லை என்று நீங்கள் நினைத்தால் கூட நீங்கள் திட்டமிடுகிறீர்கள். ஏனெனில் மனம் எப்போதும் எதிர் காலத்துடன் விளையாடவே விரும்புகிறது. எதிர் காலத்திற்காகத் திட்டமிடுவது மிகவும் சந்தோஷ மானது. நிகழ் காலத்தில் வாழ்வது மிகவும் துக்ககரமானது. ஆனால் எதிர் காலத்திற்காகத் திட்டமிட ஆரம்பிக்கிறீர்கள். இந்த உலகைப் பற்றியோ அல்லது வேறு உலகைப் பற்றியோ,

ஆனால் எதிர் காலம் பற்றிதான் திட்டமிடுகிறீர்கள். மனம் திட்டமிடுவதை விரும்புகிறது. திட்டமிடுவது என்பது வெறும் கற்பனையானது. கனவு காண்பது. பகல் கனவு காண்பது.

சுவாங்தஸூவைப் போன்றவர்கள் இருப்பதைப் பற்றி கவலைப்படுபவர்கள், இருக்கப் போவதைப் பற்றியல்ல, செய்வதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. எதிர் காலத்தைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. எந்தத் திட்டமும் தேவையில்லை. இருத்தல் தன்னைத்தானே கவனித்துக் கொள்கிறது.

இயேசு தன் சீடர்களிடம் சொன்னார் : "இந்த மலர் களைப் பாருங்கள். இந்த அல்லி மலர்கள் தங்கள் மேன்மையில் அவ்வளவு அழகானவை. சாலமன் கூட அவ்வளவு அழகில்லை." ஆனால் அவை திட்டமிடுவதில்லை. எதிர் காலத்தைப் பற்றி அவை யோசிப்பதில்லை. அடுத்த கணத்தைப் பற்றி அவற்றிற்கு அக்கறையில்லை.

ஏன் அந்த அல்லி மலர்கள் இவ்வளவு அழகாக இருக்கின்றன? எதில் அவற்றின் அழகு இருக்கிறது? அது எங்கே மறைந்திருக்கிறது? அல்லி மலர்கள் இங்கே இப்போதே வாழ்கின்றன. ஏன் இந்த மனித முகம் இவ்வளவு சோகமாய் இவ்வளவு அசிங்கமாய் இருக்கிறது? ஏனெனில் அது எப்போதுமே இங்கே இப்போதே இல்லை. அது எப்போதுமே எதிர் காலத்தில் இருக்கிறது. அது ஒரு பிசாசைப் போன்றது. இங்கே இப்போதே நீங்கள் இல்லா விட்டால் உங்களால் எப்படி உண்மையாயிருக்க முடியும்? உங்களால் ஒரு பிசாசாய்த்தான் இருக்க முடியும். இறந்த காலத்தில் பிரவேசிப்பவராகவோ எதிர் காலத்தில் நுழைபவராகவோ தான் இருப்பீர்கள்.

சுவாங்தஸூ இறந்து கொண்டிருக்கிறார். சுவாங்தஸூ இறந்து கொண்டிருக்கும் போது சீடர்கள் அமைதியாக இருந்திருக்க வேண்டும். மிகவும் மரியாதையான செயலாக, மிகவும் அழகான செயலாக அதுதான் இருக்கும். குரு இறந்து கொண்டிருந்தார். அவர்கள் அவர் வாழ்க்கையைக் கவனிக்கவே இல்லை. குறைந்தபட்சம் அவரது சாவையாவது அவர்கள் கவனித்திருக்கலாம். அவரது வாழ்க்கை முழுவதும் அவர் அவர்களுடன் பேசிக் கொண்டே இருந்ததால் அவர்களால் அமைதியாக இருக்க முடியவில்லை. அவரது இறப்பின் மூலம் அவர் தனது கடைசி உபதேசத்தைச் சொல்லப் போகிறார்.

ஒரு ஞானி இறக்கும் போது நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஏனெனில் அவர் வித்தியாசமாக இறக்கிறார். அப்பாவியான மனிதன் அப்படி இறக்க முடியாது. உங்களுக்கு உங்கள் வாழ்க்கை சொந்தம், உங்கள் சாவும் உங்களுக்கு சொந்தம். உங்கள் வாழ்க்கையில் நீங்கள் முட்டாள் தனமாய் இருந்திருந்தால் உங்கள் சாவில் மட்டும் எப்படி அறிவோடு இருப்பீர்கள்? சாவு ஒரு விளைவு, முழுமையான விளைவு, தீர்மானம். உங்கள் சாவில் உங்கள் முழு வாழ்க்கையின் சாரமும் அடங்கியிருக்கிறது. எனவே ஒரு முட்டாள் மனிதன் முட்டாள் தனமாகவே இறக்கிறான்.

வாழ்க்கை தனித்துவம் வாய்ந்தது. சாவும் கூட தனித்துவம் வாய்ந்தது. உங்கள் வாழ்க்கையை வேறு யாராலும் வாழ முடியாது. உங்கள் சாவை வேறு யாராலும் தழுவ முடியாது. உங்களால் மட்டுமே முடியும். அது தனித்துவம் வாய்ந்தது. அது மறுபடியும் நிகழ்வதேயில்லை. வாழ்வில் மட்டுமல்ல சாவில் கூட முறைகள் வேறுபடலாம். சுவாங்தஸூ இறக்கும் போது ஒருவன் முழு அமைதியில் இருக்க வேண்டும். அப்போதுதான் நீங்கள் தவறவிட மாட்டீர்கள். ஏனெனில் நீங்கள் தவறவிடக் கூடும்.

வாழ்க்கை ஒரு நீண்ட உறவு. ஏழுபது எண்பது நூறு வருடங்கள் கூட இருக்கலாம். சாவு என்பது ஒரு கணத்தில் இருக்கிறது. அது ஒரு அணுத்தன்மை கொண்ட அடர்த்தி யான, அனுபவம். அது வாழ்க்கையை விட முக்கியமானது. ஏனெனில் வாழ்க்கை விரித்துப் போடப்பட்டிருக்கிறது. வாழ்க்கை எப்போதுமே சாவைப் போல வீரியமுள்ளதாக இருக்க முடியாது. வாழ்க்கை எப்போதுமே சாவைப்போல அழகானதாக இருக்க முடியாது. ஏனெனில் அது எப்போதுமே விரித்துப் போடப் பட்ட விஷயம். அது எப்போதுமே அரைகுறை.

சாவு நிகழும் போது வாழ்க்கை முழுவதுமே ஒரு கொதி நிலைக்கு வந்து விட்டிருக்கிறது. இந்த உலகிலிருந்து அடுத்த உலகிற்கு, உடலிலிருந்து உடலற்ற நிலைக்கு எல்லாமே ஆவியாகிப் போகின்றது. நிகழ்வதிலேயே அதுதான் மாபெரும் பரிமாற்றம். ஒருவர் அமைதியாக இருக்க வேண்டும். ஒருவர் மரியாதையோடு இருக்க வேண்டும். ஒருவர் சலனப் படக் கூடாது. ஏனெனில் அது ஒரு கணத்தில் நிகழ்ந்து விடும். நீங்கள் தவறவிடலாம்.

இந்த முட்டாள் சீடர்களோ இறுதிச் சடங்கைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதை ஒரு பெரிய விஷயமாக மாற்றிவிட நினைத்துக் கொண்டிருந்தார்கள். மாபெரும் விஷயம் நடந்து கொண்டிருந்தது. உன்னதமான விஷயம் நடந்து கொண்டிருந்தது. ஆனால் அவர்கள் நிகழப் போகும் வேறு எதையோ நினைத்துக் கொண்டிருந்தார்கள். மனம் எப்போதுமே காட்சிப் பொருளை நினைத்துக் கொண்டிருக்கிறது. அது காட்சிபூர்வமானது.

முல்லா நஸ்ரூதீன் இறந்துபோனார். யாரோ சென்று அவரது மனைவியிடம் விஷயத்தைச் சொன்னார்கள். அப்போது அவள் தன் மாலை நேர தேநீரை அருந்திக் கொண்டிருந்தாள். பாதி கோப்பைதான் முடிந்திருந்தது. அந்த

மனிதன் சொன்னான் : "உங்கள் கணவர் இறந்து விட்டார். ஒரு பஸ்சின் கீழ் விழுந்து விட்டார்." ஆனால் முல்லா நஸ்ரூதீன் மனைவி தொடர்ந்து தேநீர் குடித்துக் கொண்டிருந்தாள்.

அந்த மனிதன் சொன்னான் : "என்ன! நீங்கள் குடிப்பதைக் கூட நிறுத்தவில்லை! நான் சொல்வது உங்களுக்குக் கேட்கிறதா? உங்கள் கணவர் இறந்து விட்டார். ஆனால் நீங்களோ ஒரு சின்ன விஷயத்தைக் கூட சொல்லவில்லை!"

அவர் மனைவி சொன்னாள் : "நான் இந்தத் தேநீரை முடித்து விடுகிறேன். சிறுவனே, பிறகு அலறுகிறேன். கொஞ்சம் பொறுத்திரு."

மனம் காட்சிபூர்வமானது. அவள் அலறுவாள், தயார் செய்ய திட்டமிட அவளுக்குக் கொஞ்சம் அவகாசம் தாருங்கள்.

ஒரு நடிகனின் மனைவி இறந்துவிட்டாள். அவன் தன் இதயமே வெடித்து விடுவது போல் அழுது கொண்டிருந்தான். அவன் அரற்றினான். நிறைய கண்ணீர்த் துளிகள் அவன் கன்னத்தில் வழிந்து கொண்டிருந்தன.

ஒரு நண்பன் சொன்னான் : "நீ உன் மனைவியை இவ்வளவு நேசித்தாய் என்று நான் நினைத்தே பார்க்கவில்லை."

அந்த நடிகன் தன் நண்பனைப் பார்த்து சொன்னான் : "இது ஒன்றுமில்லை. என் முதல் மனைவி இறந்த போது நீ என்னைப் பார்த்திருக்க வேண்டும்."

உங்கள் வருத்தத்தை நீங்கள் காட்டும் போது கூட நீங்கள் அடுத்தவர்களைப் பார்த்து அடுத்தவர்கள் அதைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று ஆச்சரியப்படுகிறீர்கள்.

ஒரு மாபெரும் இறுதிச் சடங்கைப் பற்றி ஏன் யோசிக்கிறீர்கள்? ஏன் பிரம்மாண்டம்? சாவினைக் கூட ஒரு காட்சிப் பொருளாக நீங்கள் மாற்றிவிடுகிறீர்கள். இது நிச்சயம் மரியாதைக்குரியதா? அல்லது சாவுகூட கடைத் தெருவில் விற்கும் ஒரு கடைச்சரக்கா?

நம் குரு இறந்துவிட்டார், எனவே இங்கே ஒரு போட்டி இருக்கிறது. அவருடையதுதான் இதுவரை நடந்ததிலேயே மாபெரும் இறுதிச் சடங்கு என்று நிரூபிக்க வேண்டும். வேறு எந்த குருவிற்கும் அப்படி நடந்திருக்கக் கூடாது. வேறு எவருக்கும் இனி நடக்கவும் கூடாது. சாவில் கூட நீங்கள் அகம் பாவம் பற்றி நினைக்கிறீர்கள். ஆனால் சீடர்கள் அப்படித் தான், அவர்களால் பின்பற்றத்தான் முடியும். ஆனால் அவர் கள் உண்மையில் பின்பற்றவும் .இல்லை. ஏனெனில் அவர்கள் சுவாங்தஸுவைப் பின்பற்றி இருந்தால் ஒரு மாபெரும் இறுதிச் சடங்கைப் பற்றி கேள்வியே எழுந்திருக்காது. அந்தக் கணத்தில் அவர்கள் அடக்கத்துடன் இருந்திருப்பார்கள். ஆனால் அகந்தை எதையும் உறுதி செய்யும் தன்மை வாய்ந்தது.

உங்கள் குரு மிகவும் உயர்ந்தவர் என்று நீங்கள் சொல்லும் போதெல்லாம் உங்கள் உள்ளுக்குள் நீங்கள் பாருங்கள். நீங்கள் சொல்கிறீர்கள் : "நான் மிகவும் உயர்ந்தவன். அதனால் தான் நான் இந்த உயர்ந்த மனிதனைப் பின்பற்றுகிறேன். நான் ஒரு மாபெரும் சீடன்." பின்பற்றுபவன் ஒவ்வொருவனும் தன் குருதான் மிகச் சிறந்தவர் என்று தம்பட்டம் அடித்துக் கொள்கிறான். ஆனால் இது குருவிற்காக அல்ல. குரு சிறந்தவராயில்லாவிட்டால் நீங்கள் எப்படி சிறந்த சீடராயிருக்க முடியும்? யாராவது இது இப்படி இல்லை என்று சொன்னால், நீங்கள் துணுக்குறுகிறீர்கள். தொந்தரவிற்கு உள்ளாகிறீர்கள். நீங்கள் வாதம் செய்ய, சண்டையிட ஆரம்பித்து விடுகிறீர்கள். அகந்தையைக் கட்டிக் காப்பதே இதன் நோக்கம்.

எங்குமே அகந்தை தீர்மானிக்கிறது . அது கபடமானது. மிகவும் நுட்பமானது. சாவில் கூட அது உங்களை விட்டுவிடாது. சாவில் கூட அது அங்கேயே இருக்கும். குரு இறந்து கொண்டிருக்கிறார். சீடர்களோ இறுதிச் சடங்கைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் தங்கள் குருவைப் பின்பற்றவே இல்லை. சுவாங்தஸூவைப் போன்ற குருவின் முழு போதனைகளும் இயல்பான தன்மையைப் பற்றிதான் இருக்கிறது.

சுவாங்தஸூ
இறக்க இருக்கும் தருவாயில்
அவரது சீடர்கள்
ஒரு பிரம்மாண்டமான
இறுதிச் சடங்கிற்கு
ஏற்பாடு செய்ய ஆரம்பித்தார்கள்.

அவர் இன்னும் இறக்கவேயில்லை. அவர்கள் திட்டமிட ஆரம்பித்து விட்டார்கள். ஏனெனில் சுவாங்தஸூ வைப் பற்றி இங்கு கேள்வியில்லை. சீடர்களின் அகந்தைதான் இங்கு முக்கியம். அவருக்கு அவர்கள் ஒரு பிரம்மாண்டமான விடை கொடுக்கும் படலத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இதற்கு முன்னர் இப்படி ஒன்று நிகழவே இல்லை என்று ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

ஆனால் சுவாங்தஸூவை உங்களால் ஏமாற்ற முடியாது. அவர் இறக்கும் போது கூட உங்களை தனியே விட்டுவிட்டு செல்லமாட்டார். அவர் இறக்கும் போது கூட அவரை ஏமாற்றிவிட முடியாது. அவர் செல்லும்போது கூட அவர் தன் இதயத்தை, தன் ஞானத்தை உங்களுக்குத் தருவார். கடைசி கணத்தில் கூட அவர் என்ன தெரிந்து கொண்டார், உணர்ந்து கொண்டார் என்பதை அவர் பகிர்ந்து கொள்வார். அவரது

கடைசி கணம்கூட ஒரு பகிர்ந்து கொள்ளலாய்த்தான் இருக்கும்.

ஆனால் சுவாங்தஸூ சொன்னார் :

"எனது சவப் பெட்டிக்காக
வானத்தையும் பூமியையும் நான் பெறலாம்.
சூரியனும் சந்திரனும் தேய்ந்து என்
இரு புறங்களிலும் அடையாளங்களாகத் தொங்கட்டும்.
கிரகங்களும் நட்சத்திரக் குடும்பங்களும்
ஆபரணங்களாக என்னைச் சுற்றிலும்
பிரகாசிக்கட்டும்.
எல்லா உயிரினங்களும் துக்கம் அனுசரிப்பவர்களாக
விழித்திருக்கட்டும்."

வேறென்ன வேண்டும்? எல்லாமே எளிமையானது. எளிதாய் முழுவதுமாய் கவனிக்கப்பட்டுவிட்டது. வேறென்ன தேவை? வேறென்ன உங்களால் செய்ய முடியும்? ஒரு சுவாங்தஸூவிற்காக., ஒரு புத்தருக்காக வேறென்ன உங்களால் செய்ய முடியும்? நீங்கள் எதைச் செய்தாலும் அதில் ஒன்றுமிருக்காது. அது பிரம்மாண்டமாக இருக்காது. ஏனெனில் முழு பிரபஞ்சமே அவரை வரவேற்கத் தயாராக இருக்கிறது. வேறென்ன அதிகமாய் உங்களால் செய்துவிட முடியும்?

சுவாங்தஸூ சொன்னார் : சூரியனும் சந்திரனும், வானத்தில் பூமியிலுள்ள எல்லா உயிரினங்களும், என்னை வரவேற்கத் தயாராக இருக்கின்றன. எல்லா உயிரினங்களும் இந்த இருப்பு முழுவதும் என் இறப்பிற்காக அழும். எனவே நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் அழுபவர்களை வேலைக்கு அமர்த்த வேண்டாம்.

நீங்கள் அழுபவர்களை வேலையில் அமர்த்த முடியும். அவர்கள் கடைவீதியில் கிடைக்கிறார்கள். நீங்கள் காசு கொடுத்தால் அழும் மனிதர்களும் இருக்கிறார்கள். எப்படிப்பட்ட மனிதவர்க்கம் உருவாகிக் கொண்டிருக்கிறது? ஒரு மனைவி இறந்தால், ஒரு தாய் இறந்தால், அழுவதற்கு வேறு யாருமே இல்லை. எனவே தொழில் முறை அழுபவர் களை நீங்கள் வேலையில் அமர்த்துகிறீர்கள். பாம்பே, கல்கத்தா போன்ற பெரிய நகரங்களில் அவர்கள் கிடைப்பார் கள். அவர்கள் தங்கள் வேலையில் கனகச்சிதமாய் இருப்பார்கள். உங்களால் அவர்களோடு போட்டி போட முடியாது. ஆமாம் அவர்கள் மிகவும் திறமைசாலிகள் தாம். அவர்கள் தினமும் பயிற்சி செய்கிறார்கள். ஆனால் இதற்காக காசு கொடுக்க வேண்டும் என்பது எவ்வளவு அசிங்கமாக இருக்கிறது. முழு விஷயமும் பொய்யாகி விட்டது.

வாழ்க்கை பொய். சாவு பொய். சந்தோஷம் பொய். அழுவது கூட பொய்தான். ஆனால் இது இப்படித்தான் இருக்க வேண்டும். இதில் தர்க்கரீதியான ஒரு அர்த்தம் இருக்கிறது. ஒரு மனிதருடன் உண்மையில் சந்தோஷமாகவே நீங்கள் இல்லாதபோது, அவன் இறக்கும் போது நீங்கள் எப்படி உண்மையில் அழ முடியும்? அது சாத்திய மற்றது. உங்கள் மனைவியுடன் நீங்கள் சந்தோஷமாயில்லாதபோது, அவளுடன் ஆனந்தமாக இருந்த எந்த நினைவும் இல்லாதபோது, அவள் இறக்கும் போது உங்கள் கண்களில் எப்படி உண்மையான கண்ணீர் வர முடியும்? உங்கள் ஆழத்தில் நீங்கள் சந்தோஷப்படுவீர்கள். உங்கள் ஆழத்தில் ஒரு விடுதலையை உணர்வீர்கள். இப்போது நான் சுதந்தரமாகி விட்டேன், இப்போது நான் என் இச்சைக்கிணங்க இயங்க முடியும். மனைவி ஒரு சிறையைப் போலிருந்தாள்.

ஒரு மனிதன் இறந்து கொண்டிருந்தான். அவன் மனைவி அவனைத் தேற்றிக் கொண்டிருந்தாள் : "கவலைப் படாதே. வெகுவிரைவில் நானும் உன்னை வந்து அடைவேன்."

அந்த மனிதன் சொன்னான் : "ஆனால் எனக்கு துரோகம் செய்யாதே." அவன் பயந்திருக்க வேண்டும். கடைசி நேரத்தில் ஏன் இந்த பயம்? இந்த பயம் எப்போதுமே இருந்திருக்க வேண்டும்.

மனைவி சத்தியம் செய்தாள் : "நான் எப்போதுமே உனக்கு துரோகம் செய்ய மாட்டேன்."

எனவே அந்த மனிதன் சொன்னான் : "எனக்கு துரோகம் செய்யும் வகையில் ஒரு செயலை நீ செய்தாலும் நான் என் கல்லறையிலிருந்து திரும்பி விடுவேன். அது எனக்கு மிகவும் வலியுடன் கூடியதாக இருக்கும்."

பத்துவருடங்கள் கழித்து மனைவி இறந்தாள். சொர்க்கத்தின் வாயிலில் செயின்ட் பீட்டர் அவளைக் கேட்டார் : "நீ முதலில் யாரைப் பார்க்க வேண்டும்?"

அவள் சொன்னாள் : "என் கணவன் தான், வேறு யாரை?"

செயின் பீட்டர் கேட்டார் : "அவன் பெயர் என்ன?"

அவள் சொன்னாள் : "ஆபிரகாம்."

செயின்ட் பீட்டர் சொன்னார். "அவனைக் கண்டு பிடிப்பது மிகவும் கடினம். ஏனெனில் லட்சக்கணக்கான ஆபிரகாம்கள் இருப்பார்கள். எனவே அவனைப்பற்றி ஒரு குறிப்பு தா."

அந்த மனைவி யோசித்து விட்டு சொன்னாள் : "அவன் கடைசி மூச்சை விடும் போது சொன்னான், அவனுக்கு துரோகம் செய்யும் வகையில் நான் ஏதாவது செய்தால் அவன் தன் கல்லறையில் திரும்புவானாம்."

செயின்ட் பீட்டர் சொன்னார் : "இதற்கு மேல் சொல்லாதே. நீ குறிப்பிடுவது திரும்பும் ஆபிரகாமாகத்தான் இருக்க வேண்டும். அவன் தான் எப்போதும் தன் கல்லறையில் திரும்பியவாறே இருப்பான். பத்து வருடங்களாக அவனுக்கு ஓய்வே இல்லை. எனவே எல்லோருக்குமே அவனை நன்கு தெரியும். பிரச்சினை எதுவுமில்லை. நான் அவனை உடனே கூப்பிடுகிறேன்."

விசுவாசமில்லை, நம்பிக்கையில்லை, அன்பில்லை, சந்தோஷமில்லை. இப்படித்தான் உங்கள் உறவுகளில் நிகழ்ந் திருக்கின்றன. சாவு வரும்போது உங்களால் எப்படி அழ முடியும்? உங்கள் அழுகை பொய்யாகிவிடும். உங்கள் வாழ்க்கை பொய்யெனில் உங்கள் சாவும் பொய்யாகத் தானிருக்கும். நீங்கள் மட்டும்தான் பொய்யானவர் என்று நினைத்து விடாதீர்கள். உங்களைச் சுற்றி உங்களுக்கு உறவுடையவர்கள் அனைவருமே பொய்யானவர்கள்தாம். நாம் அப்படி ஒரு பொய்யான உலகில் வாழ்ந்து வருகிறோம். நாம் எப்படி தொடரப் போகிறோம் என்பது பிரமிப்பாய்த் தான் இருக்கிறது.

ஒரு அரசியல்வாதி வேலையில்லாமல் இருந்தான். அவன் ஒரு மாஜி மந்திரி. அவன் ஒரு வேலை தேடினான். ஏனெனில் ஒரு அலுவலகத்தில் இல்லாவிட்டால் அரசியல் வாதிகளுக்கு எப்போதுமே பிரச்சினைதான். அவர்களுக்கு அரசியலைத் தவிர வேறு எதையுமே செய்யத் தெரியாது. அவர்களுக்கு வேறு எந்தத் தகுதியும் இல்லை. சொத்தையான ஒரு வேலைக்குக் கூட சில தகுதிகள் தேவை. ஆனால் ஒரு மந்திரிக்கு எதுவுமே தேவையில்லை. ஒரு முதல் மந்திரியோ, ஒரு பிரதம மந்திரியோ எந்தக் தகுதியுமே தேவையின்றி இருக்கிறார்கள்.

எனவே இந்த மந்திரி பிரச்சினையில் இருந்தான். அவன் ஒரு சர்க்கஸ் மானேஜரைப் போய் பார்த்தான். ஏனெனில் அவன் அரசியலை ஒரு மாபெரும் சர்க்கஸாக நினைத்தான். அரசியலில் அவன் கற்றவித்தைகளை சர்க்கஸில் உபயோகிக்க நினைத்தான். எனவே அவன் சொன்னான் : "எனக்கு ஏதாவது வேலை கிடைக்குமா? நான் வேலையின்றி இருக்கிறேன். பெரும் பிரச்சினையில் இருக்கிறேன்."

மானேஜர் சொன்னார் : "நீ சரியான சமயத்தில் தான் வந்திருக்கிறாய். கரடிகளில் ஒன்று இறந்துவிட்டது. எனவே உனக்கு கரடிகளின் ஆடையைத் தருவோம். நீ எதுவுமே செய்ய வேண்டியதில்லை. நாள் முழுவதும் எதையும் செய்யாமல் உட்கார்ந்திரு. யாரும் எந்த வித்தியாசமும் கண்டு பிடிக்க மாட்டார்கள். காலையிலிருந்து மாலை வரை உட்கார்ந்திரு. கரடி இருக்கிறதென்று மக்கள் தெரிந்து கொள்ளட்டும்."

வேலை நல்லதாகத்தான் பட்டது. எனவே அந்த அரசியல்வாதி ஒப்புக் கொண்டான். அவன் கூண்டிற்குள் நுழைந்தான். தன் ஆடையை அணிந்தான். பிறகு உட்கார்ந்து கொண்டான். அவன் அங்கே உட்கார்ந்திருந்தான். பதினைந்து நிமிடங்கள் கழித்து வேறொரு கரடி அழைத்து வரப்பட்டது. அவன் பயந்து போய் கம்பிக்கருகே ஓடினான். கம்பிகளைப் பிடித்துக் கதறினான். "உதவி, என்னை இங்கிருந்து வெளியே வர உதவுங்கள்."

பிறகு ஒரு குரல் கேட்டது. அந்தக் கரடி பேசியது. அவன் சொன்னான் : "வேலையில் இல்லாத ஒரே மந்திரி நீதான் என்று நினைத்துக் கொண்டாயா? நானும் மாஜி மந்திரிதான், பயப்படாதே!"

வேரிலிருந்து முழுவதும், வாழ்க்கை முழுவதும் பொய்யாகிவிட்டது. இதில் நீங்கள் உயிர் வாழ்வதே ஒரு அதிசயம்தான். பொய்யான முகத்தோடு பேசுகிறோம். சந்தோஷம் பொய், துக்கம் பொய், இந்த நிலையில் உண்மையைக் கண்டறிய முடியும் என்று நம்புகிறீர்கள்! பொய்யான முகங்களோடு உண்மையை எப்போதும் கண்டறிய முடியாது. தன் உண்மையான முகத்தைக் கண்டறிந்த பிறகு எல்லா பொய் முகமூடிகளையும் நாம் போட்டு விட வேண்டும்.

சுவாங்தஸு சொன்னார் :

"எனது சவப் பெட்டிக்காக
வானத்தையும் பூமியையும் நான் பெறலாம்..."

எனவே நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்? அதை விடப் பெரிய சவப் பெட்டியை எப்படி உங்களால் தயார் செய்ய முடியும்? வானமும் பூமியும் என் சவப் பெட்டியாகட்டும். அவை அப்படி இருக்கும்.

சூரியனும் சந்திரனும்
என் இரு புறங்களிலும் தேய்ந்த
அடையாளங்களாகத் தொங்கட்டும்.

எனவே என்னைச் சுற்றி நீங்கள் மெழுகுவர்த்திகளை ஏற்றத் தேவையில்லை. அவை சில கணங்கள் தாம் இருக்கும். விரைவில் அவை இல்லாமல் போகும். சூரியனும் சந்திரனும் வாழ்க்கையின் அடையாளங்களாக என்னைச் சுற்றி இருக்கட்டும். அவை அப்படித்தான் இருக்கின்றன.

"கிரகங்களும் நட்சத்திரக் குடும்பங்களும்
ஆபரணங்களாக என்னைச் சுற்றிலும் பிரகாசிக்கட்டும்,.
எல்லா உயிரினங்களும்
துக்கம் அனுசரிப்பவர்களாக விழித்திருக்கட்டும்."

இதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். எல்லா உயிரினங்களும் இருக்கும். புத்தர், மஹாவீரர் வாழ்க்கையில் கூட இப்படி நிகழ்ந்ததாக சொல்லப்படுகிறது. ஆனால் யாருமே அதை நம்புவதில்லை. ஏனெனில் அதை நம்புவது கடினம். சமணர்கள் அதைப் படிக்கிறார்கள். ஆனால் அவர்கள் கூட அதை நம்புவதில்லை. புத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள் அதைப் படிக்கிறார்கள். ஆனால் சந்தேகம் மனத்தில் நுழைந்து விடுகிறது.

மஹாவீரர் இறந்த போது எல்லா உயிரினங்களும் அங்கே கூடியிருந்ததாக சொல்லப் படுகிறது. மனிதர்கள் மட்டுமல்ல, மிருகங்கள், மரங்களின் ஆவிகள், தேவதைகள், கடவுள்கள், வாழ்க்கையின் எல்லா பரிமாணங்களிலிருந்தும் எல்லா உயிரினங்களும் அங்கே கூடியிருந்தன. அது அப்படித் தான் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் உங்களுக்கு மட்டும் மஹாவீரர் தரிசனம் தரவில்லை. அவரது பெருமையினால் அவர் அடைந்த சிகரத்தினால் உயிரின் சகல பரிமாணங்களும் அவரோடு உறவு கொண்டன. மஹாவீரர் பேசும்போதும் தேவதைகள், கடவுள்கள், மிருகங்கள், பிசாசுகள், எல்லாவகை உயிரினங்களும் வந்து கேட்கும் என்று சொல்லப்படுகிறது. இது ஒரு கதையைப் போல ஒரு புதிரைப் போலத் தோன்று கிறது. ஆனால் நான் சொல்கிறேன், இது உண்மைதான். ஏனெனில் நீங்கள் தொடும் சிகரத்திற்கு ஏற்ப உங்கள் ஆன்மாவும் வளர்கிறது. வாழ்வின் பிற பரிமாணங்களும் உங்களுக்குக் கிடைத்துவிடும்.

மிக உயர்ந்த சிகரத்தை ஒருவன் அடைந்த பிறகு, சமணர்கள் சொல்கிறபடி 'அரிகந்தா' நிலையை, புத்தர்கள் சொல்கிறபடி 'அர்ஹத்' நிலையை, தாவோ சொல்கிறபடி முழுமையானதாவோ நிலையை , தாவோ நிலையடைந்த மனிதன் என்று சுவாங்தஸூ சொல்கிறபடி அடைந்து விட்டால் பிறகு இயற்கை முழுவதும் கேட்கும்.

சுவாங்தஸூ சொல்கிறார் :

“எல்லா உயிரினங்களும் துக்கம் அனுசரிப்பவர்களாக
விழித்திருக்கட்டும்.”

வேறென்ன வேண்டும்? வேறென்ன உங்களால் செய்ய முடியும்? வேறென்ன உங்களால் சேர்த்து விட முடியும்? எதையும் நீங்கள் செய்ய வேண்டியதில்லை, நீங்கள் கவலைப்பட வேண்டியதும் இல்லை.

தேவையான எல்லாமே இருக்கின்றன.
அமைதியடைந்த ஒருவரின் உணர்வு இதுதான் :
“தேவையான எல்லாமே இருக்கின்றன.”

வாழ்வு, சாவு எல்லாமே நீங்கள் எதையுமே செய்ய வேண்டியதில்லை. நீங்களின்றி எல்லாமே ஏற்கெனவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. தேவையின்றி நீங்கள் உள்ளே வருகிறீர்கள். வந்து குழப்பதை ஏற்படுத்துகிறீர்கள். பிரளயத்தை ஏற்படுத்துகிறீர்கள். நீங்கள் இல்லாமல் எல்லாமே அவை இருக்கும்படியே மிகச் சரியாக இருக்கின்றன. ஒரு ஆன்மிகவாதியின் மனோபாவம் இதுதான். அவை இருக்கும்படியே மிகச்சரியாக இருக்கின்றன. இதற்குமேல் எதுவுமே செய்ய முடியாது.

மேலை நாடுகளில் லீப்நிட்ஸ் என்பவர் சாத்தியமான எல்லா உலகங்களிலும் இதுதான் மிகச் சரியானது என்று சொல்லியிருக்கிறார். அவர் வெகுவாக விமரிசிக்கப் பட்டார். ஏனெனில் மேலை நாடுகளில் இது போன்ற விஷயங்களை நீங்கள் தீர்மானமாகச் சொல்ல முடியாது. எப்படி இந்த உலகம் மிகச் சரியான உலகமாக முடியும்? இதுதான் மிகவும் சரியில்லாததாக மிக அசிங்கமானதாக, நோய்வாய்ப் பட்டதாக இருக்கிறது. சமமின்மை, துன்பம், ஏழ்மை, நோய், சாவு, வெறுப்பு எல்லாமே இருக்கின்றன. இந்த லீப்நிட்ஸ்

சொல்கிறார் சாத்தியமான எல்லா உலகங்களிலும் இதுதான் மிகச் சரியானது என்று!

லீப்நிட்ஸ் தீவிரமாக விமரிசிக்கப்பட்டிருக்கிறார். ஆனால் சுவாங்தஸூ அவர் என்ன சொல்ல வருகிறார் என்பதைப் புரிந்து கொண்டிருப்பார். அவர் என்ன சொல்ல வருகிறார் என்று நான் புரிந்து கொள்கிறேன். லீப்நிட்ஸ் 'சாத்தியமாகக் கூடிய மிகச் சரியான உலகம் இதுதான்,' என்று சொன்னபோது அரசியல் அல்லது பொருளாதார நிலைபற்றி அவர் எதையும் சொல்லவில்லை. சமமின்மை, சமமான தன்மை, சோஷியலிஸம், கம்யூனிஸம், போர் என்று எதைப் பற்றியும் அவர் எந்தக் கருத்தையும் சொல்லவில்லை. அவரது கருத்து உணரப்படும் பொருளைப் (objective) பற்றியதல்ல. அவரது கருத்து எதுவுமற்றதைப் பற்றியதல்ல. அவரது கருத்து உள்ளார்ந்த உணர்வுகளைப் பற்றியது. அவை ஆன்மா விலிருந்தே வருகின்றன.

எல்லாமே மிகச் சரியாக இருக்கின்றன என்றால் கவலைப்படத் தேவையில்லை என்று பொருள்.

"தேவையான எல்லாமே இருக்கின்றன"

இதை மேலும் சரியானதாக மாற்ற முடியாது. கொஞ்சம் கூட மேலும் சரியாக மாற்ற முடியாது. நீங்கள் முயற்சி செய்தால் நீங்கள் மேலும் மோசமாக்கி விடலாம். ஆனால் இதைவிட மேலும் சரியாக மாற்ற முடியாது. இதைவிட மேலும் சரியாக மாற்ற முடியாது என்பதை ஒரு அறிவியல் பூர்வமான மனத்தினால் ஒப்புக் கொள்வது மிகவும் கடினம். ஏனெனில் அறிவியல் பூர்வமான மனம் யோசனையைச் சார்ந்து இருக்கிறது. எல்லாமே மேலும் சரியாகிவிடும் என்ற யோசனையைச் சார்ந்து இருக்கிறது. ஆனால் நீங்கள் என்ன செய்து விட்டீர்கள்?

அரிஸ்டாட்டில், காலம் முதல் இரண்டாயிரம் ஆண்டுகளாக உலகை ஒரு உயர்வான இடமாக மாற்ற மேலை நாடுகளில் நாம் முயற்சித்து வருகிறோம். எந்த வழியிலாவது அது உயர்வானதாகி இருக்கிறதா? மனிதன் ஒரு துளியேனும் அதிக சந்தோஷமாக இருக்கிறானா? மனிதன் ஒரு துளியேனும் அதிக ஆனந்தமாக இருக்கிறானா? இல்லவே இல்லை. விஷயங்கள் மேலும் கெட்டுவிட்டன. நோயாளிக்கு சிகிச்சை செய்யச் செய்ய அவன் சாவுக்கு அருகே வருகிறான். எதுவுமே உதவவில்லை. மனிதன் அதிக சந்தோஷமாக இல்லவே இல்லை.

சந்தோஷமாக இருப்பதற்கு மேலும் அதிகமான பொருட்களை நாம் வைத்திருக்கலாம். ஆனால் சந்தோஷமாய் இருக்கக் கூடிய இதயத்தை இழந்து விட்டோம். நீங்கள் அரண்மனைகளைப் பெற்றிருக்கலாம். ஆனால் சக்கரவர்த்தியாகக் கூடிய மனிதன் இன்னும் இங்கே இல்லை, எனவே அரண்மனைகள் கல்லறைகளாகின்றன. உங்கள் நகரங்கள் அதிக அழகானவை. அதிக பணமுடையவை. ஆனால் அவை கல்லறைகளைப் போன்றவைதாம். உயிரோடு யாருமே அங்கே வாழவில்லை. இந்த உலகை மேலும் சிறந்ததாக மாற்றும் முயற்சியில் நாம் ஒரு தவறு செய்து விட்டோம். இது மேலும் உயர்ந்ததாக இல்லை. மேலும் மோசமானதாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

திரும்பிப் பாருங்கள். மனிதன் முற்றிலும் வித்தியாச மானவனாக இருந்தான். ஏழையாக, ஆனால் பணக்காரத்தன்மையோடு இருந்தான். இது ஒரு புதிர் போலத் தோன்றலாம். அவன் ஏழையாக இருந்தான். தேவையான உணவில்லை. தேவையான உடையில்லை, தேவையான பாதுகாப்பான இடம் இல்லை. ஆனால் வாழ்க்கை

பணக்காரத் தன்மையோடு இருந்தது. அவனால் நடனமாட முடியும். அவனால் பாட முடியும்.

உங்கள் பாடலை இழந்துவிட்டோம். உங்கள் தொண்டை பல விஷயங்களால் அடைத்துக் கொண்டு விட்டது. இதயத்திலிருந்து எந்தப் பாடலுமே வர முடியாது. உங்களால் நடனமாட முடியாது. சில அசைவுகளை வேண்டுமானால் அதிக பட்சம் செய்ய முடியும். ஆனால் அந்த அசைவுகள் நடனமல்ல. ஏனெனில் நடனம் என்பது வெறும் அசைவு மட்டுமல்ல. அசைவு ஆனந்தமாக மாறும் போது அது நடனமாகிறது. அகந்தை இல்லாமல் அசைவு அவ்வளவு முழுமையானதாகும் போதும் அது நடனமாகிறது.

தியானத்திற்கான ஒரு யுக்தியாக நடனம் உலகில் வந்தது என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நடனத்தின் ஆரம்பம் நடனத்திற்காக அல்ல. ஆடுபவரை இழந்து ஆட்டம் மட்டுமே இருக்கக் கூடிய ஒரு பேரானந்த நிலையை அடையத்தான் ஏற்பட்டது. அகந்தை இல்லை, யாருமே இயக்குவிக்கவில்லை. உடல் இயல்பாக இயங்கியது.

நீங்கள் நடனமாட முடியும். ஆனால் இறந்த அசைவுகளில் மட்டும்தான். ஆனால் உங்களால் உடலை ஆட்டுவிக்க முடியும். அது ஒரு நல்ல உடற்பயிற்சியாக இருக்கலாம். ஆனால் அது பேரானந்தம் அல்ல. ஒருவரை ஒருவர் நீங்கள் கட்டிப் பிடித்தே இருக்கிறீர்கள். நீங்கள் முத்தமிட்டே இருக்கிறீர்கள். காதல் செய்வதன் எல்லா அசைவுகளையும் நீங்கள் செய்துதான் இருக்கிறீர்கள். ஆனால் காதல் அங்கு இல்லை. வெறும் அசைவுகள் தான். நீங்கள் அந்த அசைவுகளை உண்டாக்குகிறீர்கள். பிறகு கவலைப்

படுகிறீர்கள். நீங்கள் அவற்றை உருவாக்குகிறீர்கள்.. பிறகு எதுவுமே நடக்கவில்லை என்று தெரிந்து கொள்கிறீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் செய்கிறீர்கள். ஆனால் தொடர்ந்து ஒரு கவலைப்படும் உணர்வு ஒரு நிழலைப் போல் உங்களைத் தொடர்கிறது.

சாத்தியமான எல்லா உலகங்களிலும் இதுதான் மிகச் சரியானது என்று லீப்நிட்ஸ் சொல்லும் போது அவர் சுவாங்தஸூ சொல்வதைத்தான் சொல்கிறார்.

"தேவையான எல்லாமே இருக்கின்றன."

வாழ்க்கையைப் பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையே இல்லை. நீங்கள் சாவைப்பற்றியும் கவலைப்படத் தேவையே இல்லை. வாழ்வை கவனித்துக் கொள்ளும் அதே உட்பொருள் சாவையும் கவனித்துக் கொள்ளும். ஒரு பிரம்மாண்டமான இறுதிச் சடங்கைப் பற்றி நீங்கள் யோசிக்க வேண்டியதே யில்லை. எனக்கு பிறப்பைக் கொடுத்த அதே உட்பொருள் என்னை உட்கிரகித்துக் கொள்ளும் அதே உட்பொருள் போதுமானது. அதோடு வேறு எதையுமே சேர்க்க வேண்டிய அவசியமே இல்லை.

சீடர்கள் கேட்டார்கள். ஆனால் அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இல்லாவிடில் எதையும் இனி எப்போதும் சொல்ல வேண்டிய அவசியமே வந்திருக்காது. ஆனால் சீடர்கள் இன்னும் சொன்னார்கள்.

" காக்கைகளும் பருந்துகளும்
எங்கள் குருவை உண்டு விடும் என்று
பயப்படுகிறோம்."

எந்த முன்னேற்பாட்டையும் நாம் செய்யவில்லை என்றால், நாம் திட்டமிடவில்லை என்றால், காக்கைகளும் பருந்துகளும் நம் குருவை உண்டு விடும்.

சுவாங்தஸூ பதிலளித்தார் :

"ம், பூமிக்கு மேலே நான்
காக்கைகளாலும் பருந்துகளாலும்
உண்ணப்படுவேன்.
பூமிக்குக் கீழே
எறும்புகளாலும் புழுக்களாலும்
உண்ணப்படுவேன். இரண்டு விதத்திலும்
நான் உண்ணப்படுவேன். பிறகு ஏன்
பறவைகளை ஆதரிக்கிறீர்கள்?"

ஏன் எந்தத் தேர்வையும் செய்யவேண்டும்? நான் எப்படியும் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். எனவே ஏன் எந்தத் தேர்வையும் செய்ய வேண்டும்? சுவாங்தஸூ சொல்கிறார் : தேர்வுகளின்றி வாழுங்கள். தேர்வுகளின்றி இறந்திடுங்கள். ஏன் தேர்வு செய்ய வேண்டும்?

வாழ்க்கையை நீங்கள் ஆட்டுவிக்க முயல்கிறீர்கள். பிறகு சாவைக் கூட நீங்கள் ஆட்டுவிக்க முயல்கிறீர்கள். எனவே மக்கள் உயில் எழுதுகிறார்கள். நிபந்தனைகளை ஏற்படுத்துகிறார்கள். இதன் மூலம் அவர்கள் இல்லாத போது கூட அவர்களால் ஆட்டுவிக்க முடியும். இறந்து விட்டார்கள். எனினும் அவர்கள் இன்னும் ஆட்டுவிக்கிறார்கள். ஆட்டுவிப்பது அதிக சுவாரசியமானதாகப் போய் சாவுக்குப் பிறகு கூட மக்கள் ஆட்டுவித்துக் கொண்டே இருக்கிறார்கள். தந்தை இறக்கிறார். ஆனால் தன் உயிலில் இந்த தேவையைப்

பூர்த்தி செய்தால் மட்டுமே அவனுக்கு சொத்துக்கள் கிடைக்கும், இல்லாவிடில் சொத்து பொது நலத்திற்காக செலவிடப்படும் என்று சில கட்டுப்பாடுகளையும் விதிக்கிறார். ஆனால் இந்த கட்டுப்பாடுகளை நிறைவேற்றியே தீரவேண்டும். இறந்த மனிதன் இன்னமும் ஆட்டுவிக்கிறான்.

லண்டனிலுள்ள ஒரு மருத்துவமனை ட்ரஸ்டின் நிறுவனரும் தலைவருமான ஒருவர் தன் உயிலை எழுதினார். நான் இறந்த பிறகு என் உடலை அழிக்கக் கூடாது. அதை அப்படியே பாதுகாக்க வேண்டும். தலைவரின் நாற்காலியில் நான் தொடர்ந்து உட்காருவேன். அவர் இன்னும் அங்கேதான் உட்காருகிறார். ட்ரஸ்ட் நிர்வாகிகள் கூடும் போதெல்லாம் அவரது இறந்த உடல் தலைவரின் இடத்தில் உட்கார வைக்கப்பட்டது. தலைமை நாற்காலியில் இன்னும் அமர்ந்து இன்னும் ஆக்கிரமித்த வண்ணம் இருக்கிறார்.

உங்கள் வாழ்க்கை என்பது அடுத்தவரை ஆட்டுவிப்பது தான். உங்கள் சாவைக் கூட ஆட்டுவிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்கள். சுவாங்தஸூ சொல்கிறார் : "வேறு வழியில்லை, பூமியின் மேல் என் உடலை விட்டுவிட்டால். ஆம், அது உண்ணப்படும். எனவே பறவைகளையோ புழுக் களையோ ஏன் ஆதரிக்க வேண்டும்? அது நிகழ இருப்பதைப் போலவே இருக்கட்டும். உட்பொருளை தீர்மானிக்க விடுவோம்."

தீர்மானம் உங்களுக்கு அகந்தையைத் தருகிறது. நான் தீர்மானிப்பேன். எனவே உட்பொருள் தீர்மானம் செய் யட்டும்? முடிவானது தீர்மானிக்கட்டும். இந்த உடலை எப்படி நீக்கிவிடுவது என்று தீர்மானிக்கட்டும். உட்பொருள் இந்த உடலை எப்படி உருவாக்க வேண்டுமென்று நான் கேட்கப்படவில்லை. அதை எப்படி அப்புறப்படுத்துவது

என்று மட்டும் ஏன் நான் தீர்மானிக்க வேண்டும்? அது உண்ணப்படும் என்று ஏன் பயப்பட வேண்டும்? அது நல்லதுதான்.

உண்ணப்படுவோம் என்று நாம் பயப்படுகிறோம், ஏன்? இதைப் புரிந்து கொள்ள வேண்டும். உண்ணப்படுவோம் என்று ஏன் அவ்வளவு பயப்பட வேண்டும்? எல்லா வாழ்க்கையிலுமே நாம் உண்கிறோம். உண்பதன் மூலம் உயிர்களை அழிக்கிறோம். நீங்கள் எதை உண்டாலும் நீங்கள் கொல்கிறீர்கள். நீங்கள் கொல்லத்தான் வேண்டும். ஏனெனில் உயிர் உயிரைத்தான் உண்ண முடியும். வேறு வழியில்லை. எனவே எவருமே சைவமாக உண்மையில் இருக்க முடியாது. யாருமே! எல்லோருமே அசைவம் தான். ஏனெனில் நீங்கள் உண்ணும் எதுவுமே உயிர்தான். நீங்கள் பழத்தை உண் கிறீர்கள். அது உயிர்தான். நீங்கள் காய்கறிகளை உண்கிறீர்கள். காய்கறியில் உயிர் இருக்கிறது. கோதுமை, அரிசி, இவற்றை உண்கிறீர்கள். இவை மேலும் புதிய உயிர்கள் மலர்வதற்கான விதைகள். நீங்கள் சார்ந்து நிற்கும் எதுவுமே உயிரோடு இருக்கிறது.

உயிர் உயிரை உண்கிறது. எதுவுமே வேறு யாருக்கோ உணவாகத்தான் இருக்கிறது. பிறகு ஏன் உங்களை நீங்கள் பாதுகாக்க வேண்டும்? நீங்கள் உண்ணப்படாமலிக்க வேண்டும் என்று ஏன் நிச்சயம் செய்ய வேண்டும்? வெறும் முட்டாள் தனம்! உங்கள் வாழ்க்கை முழுவதும் உண்டு கொண்டே இருந்தீர்கள். இப்போது உங்களை உண்பதற்கு அதற்கு ஒரு வாய்ப்புத் தாருங்கள். வாழ்வு உங்களை உண்ண அனுமதியுங்கள்.

எனவே தான் நான் சொல்கிறேன், உடலை அப்புறப்படுத்த பார்சியினரின் முறைதான் மிகவும் அறிவியல் பூர்வமானது. இந்துக்கள் அதைக் கொளுத்தி விடுகிறார்கள்.

இது மோசமானது. ஏனெனில் நீங்கள் உணவை எரிக்கிறீர்கள். ஒவ்வொரு மரமும் தன் கனியை எரித்தால், ஒவ்வொரு மிருகமும் இறந்து அதை அடுத்த மிருகம் எரித்தால், என்ன வாகும்? அவர்கள் எல்லோரும் இந்துக்களாக இருப்பார்கள். ஆனால் யாருமே இங்கே இருக்க மாட்டார்கள். ஏன் எரிக்க வேண்டும்? நீங்கள் உண்டவாறே இருந்தீர்கள். இப்போது அதை அனுமதியுங்கள். உங்களை உண்ண வாழ்விற்கு ஒரு வாய்ப்புத் தாருங்கள், ஆனால் அதனால் சந்தோஷமாக இருங்கள். ஏனெனில் உணவு என்றால் நீங்கள் உட்கிரகிக்கப் படுகிறீர்கள் என்று அர்த்தம். அதில் எந்தத் தவறும் இல்லை. உயிர் வாழ்க்கை திரும்ப எடுத்துக் கொண்டு விட்டது. கடலில் மீண்டும் ஆறு சென்றடைந்து விட்டது என்று அதற்கு அர்த்தம்.

உட்கிரகிப்பட இதுதான் மிகச் சிறந்த வழி. உண்ணப்படுவதால் உங்களில் இருக்கும் உபயோகமான எல்லாமே எங்கோ யாரிடமோ உபயோகமாய் இருக்கிறது என்று பொருள். ஒரு மரம், ஒரு பறவை, ஒரு மிருகம், உங்கள் வாழ்வால் உயிர்த்தன்மையோடு இருக்கும். உங்கள் வாழ்வு பகிர்ந்தளிக்கப்பட்டது என்று சந்தோஷமாக இருங்கள். இதில் ஏதோ, பிரச்சினை என்று ஏன் உணர்கிறீர்கள்? முகமதியர்களும், கிறிஸ்துவர்களும் பிணங்களை சவப் பெட்டியில் அவற்றைப் பாதுகாப்பாக புதைக்கிறார்கள். இது நல்லதல்ல. இது வெறும் முட்டாள் தனம். ஏனெனில் வாழ்க்கையை நம்மால் பாதுகாக்க முடியாது. பிறகு சாவை எப்படி நாம் பாதுகாக்க முடியும்? எதையுமே நம்மால் பாதுகாக்க முடியாது. எதுவுமே பாதுகாக்கப்பட முடியாது.

வாழ்க்கை பாதுகாப்பற்றது, சாவைக் கூட பாது காப்பானதாக மாற்ற நீங்கள் முயற்சிக்கிறீர்கள். பாதுகாக்க, அழியாமலிக்க நீங்கள் நினைக்கிறீர்கள்.

பார்சிகளின் முறைதான் மிகச் சரியானது. சுவரின் மேல் உடலை வெறுமனே விட்டு விடுகிறார்கள். பிறகு கழுகளும் மற்ற பறவைகளும் வந்து அதை உண்கின்றன. எல்லோருமே, பார்சிகளே கூட பார்சிகளை எதிர்க்கிறார்கள். ஏனெனில் முழு விஷயமும் மிகவும் அசிங்கமானதாய் இருக்கிறது. அது அசிங்கமாய் இல்லை. நீங்கள் சாப்பிடும் போது அது அசிங்கமாகவா இருக்கிறது? பிறகு ஏன் ஒரு கழுகு சாப்பிடும்போது அது அழகின்றி இருக்க வேண்டும்? நீங்கள் சாப்பிடும் போது அது இரவு உணவாகிறது. கழுகு உங்களை சாப்பிடும் போது கூட அது இரவு உணவுதான். பிறரை நீங்கள் உண்டு கொண்டிருந்தீர்கள். அடுத்தவர்கள் உங்களை உண்ண அனுமதியுங்கள். உட்கிரகிக்கப்படுங்கள்.

எனவே சுவாங்தஸூ சொல்கிறார், தேர்வு எதுவும் இல்லை. இதையோ அதையோ ஏன் ஆதரிக்க வேண்டும்? வாழ்க்கை என்ன தேர்ந்தெடுக்க விரும்புகிறதோ அதையே செய்யட்டும். நான் தீர்மானிக்கப் போவதில்லை. உண்மையில் சுவாங்தஸூ தேர்வற்ற ஒரு வாழ்வை வாழ்ந்தார். எனவே தேர்வற்ற சாவை எதிர் கொள்ள அவர் தயாராக இருக்கிறார். தேர்வற்ற நிலையில் இருக்கும் போது மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். ஒரு தேர்வை நீங்கள் மேற்கொள்ளும் போது மனம் வருகிறது. மனம் தேர்ந்தெடுப்பவர். உயிர் எப்போதும் தேர்வற்ற நிலையில் இருக்கிறது, மனம் எதையாவது செய்ய விரும்புகிறது. ஆன்மா அவை நிகழ வெறுமனே அனுமதிக்கிறது. ஆன்மா அனுமதிப்பது. நீங்கள் தேர்ந்தெடுக்கா விட்டால் நீங்கள் எப்படி கஷ்டப்படுவீர்கள்? ஒரு குறிப்பிட்ட விடையை கேட்காவிட்டால் நீங்கள் எப்படிக் கவலைப்பட முடியும்? ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்கி நீங்கள் செல்லா விட்டால் நீங்கள் எப்படி பரிதாபமானவராக முடியும்? எதுவுமே உங்களை பரிதாபமானவராக்காது. உங்கள் மனம்

குறிக்கோள், தேர்வுகள், தீர்மானங்கள் வேண்டுமென கேட்கிறது. பிறகு துன்பம் உள்ளே நுழைகிறது.

தேர்வுகளின் நீங்கள் வாழ்ந்தால், வாழ்க்கையை நிகழ அனுமதித்தால், பிறகு நீங்கள் வெறும் ஒரு தோட்டமாகி விடுகிறீர்கள். வாழ்க்கை உங்களில் நிகழ்கிறது. ஆனால் நிர்வாகி நீங்களலல்ல. நீங்கள் அதை நிர்வகிக்கவில்லை, அதை கட்டுப்படுத்தவில்லை, நீங்கள் கட்டுப்படுத்துபவராய் இல்லாதபோது எல்லா சிக்கல்களும் விடுபடுகின்றன. பிறகுதான் ஓய்வு இருக்கிறது. பிறகு நீங்கள் முழுவதும் ஓய்வான நிலையில் இருக்கிறீர்கள். ஓய்வெடுப்பதுதான் முடிவானநிலை. ஆல்ஃபா மற்றும் ஓமேகா, முதலும் முடிவும். வாழ்வோ சாவோ எந்த நிலையையும் நீங்கள் சாரக் கூடாது.

இந்தக் கதையின் அர்த்தம் இதுதான். நீங்கள் எந்தத் தீர்மானத்தையும் எடுத்து! விடக் கூடாது. நீங்கள் சொல்லக் கூடாது இது தான் சரி, இது தவறு. நீங்கள் பிளவு படக் கூடாது. வாழ்க்கையை பிளவுபடாத முழுமையாக இருக்கவிடுங்கள்.

சுவாங்தஸூ சொன்னார் : நீங்கள் பிளவுபட்டால் ஒரு அங்குல பிளவு கூட, சொர்க்கமும் நரகமும் பிரிந்துவிடும். பிறகு அவற்றை ஒன்று சேர்க்கவே முடியாது.

ஓர் இளைஞனை நான் அறிவேன். அவன் என்னைத் தேடி வருவான். அவன் எப்போதுமே ஒரு விஷயம் குறித்து கவலைப்பட்டான். அவன் திருமணம் செய்து கொள்ள விரும்பினான். ஆனால் எந்தப் பெண்ணை வீட்டுக்கு அழைத்து வந்தாலும் அவன் அம்மா அவளை நிராகரித்து விட்டாள். சாத்தியமே இல்லாத ஒன்றாக அது ஆகிவிட்டது. எனவே நான் அவனிடம் சொன்னேன் : "உன் அம்மாவைப் போன்றே ஒரு பெண்ணைக் கண்டுபிடிக்க முயற்சி செய். முகம், உடல், நடக்கும்

விதம், உடைகள், ஒரு கண்ணாடி பிம்பம் போன்ற ஒரு பெண்ணை உன் அம்மாவின் பிரதிபலிப்பைக் கண்டறிய முயற்சி செய்."

அவன் தேடினான். பிறகு ஒரு வழியாக ஒரு பெண்ணை கண்டுபிடித்தான். அவன் என்னிடம் வந்து சொன்னான் : "நீங்கள் சொன்னது சரிதான். பார்த்ததும் என் அம்மாவிற்கு பிடித்துப் போனது. அவள் அப்படியே என் அம்மாவைப் போலிருந்தாள். உடுத்துவதில் மட்டுமில்லை. நடப்பது, பேசுவது, ஏன் சமைப்பதில் கூட அவள் என் அம்மாவைப் போல் தான்."

எனவே நான் கேட்டேன் : "பிறகு என்ன நடந்தது?"

அவன் சொன்னான் : "ஒன்றுமில்லை. ஏனெனில் என் தந்தை அவளை வெறுக்கிறார்."

எதிர்த்துருவங்கள். உங்கள் மனத்தின் ஒரு பாகம் ஒன்றை விரும்பினால், உடனே மனத்தின் அடுத்த பாகம் அதை வெறுப்பதை உங்களால் உணர முடியும். ஒரு விஷயத்தை நீங்கள் தேர்வு செய்தால் கொஞ்சம் திரும்பிப் பாருங்கள். வேறுபாகம், அதை வெறுக்கும் பாகம் அங்கே ஒளிந்திருக்கிறது. நீங்கள் தேர்வு செய்யும் போதெல்லாம். உலகம் மட்டும் பிளவுபடவில்லை. நீங்களும் தான் அந்தத் தேர்வினால் பிளவு பட்டு இருக்கிறீர்கள். நீங்கள் முழுமையாக இல்லை. நீங்கள் முழுமையாக இல்லாதபோது வாழ்க்கை நிகழ உங்களால் அனுமதிக்க முடியாது. எல்லா ஆசிர்வாதங் களும் வாழ்வில் ஒரு கருணையாக, ஒரு பரிசாகத்தான் வருகின்றன. முயற்சியால் எதையும் பெறுவதில்லை.

எனவே உலகிற்கு எதிராக மதத்தை தேர்ந்தெடுக் காதீர்கள். தீயதற்கு எதிராக நல்லதைத் தேர்ந்தெடுக்காதீர்கள்.

பாவத்திற்கு எதிராக புண்ணியத்தை தேர்ந்தெடுக்காதீர்கள். கெட்ட மனிதனுக்கு எதிராக நல்ல மனிதனாக இருக்க முயற்சி செய்யாதீர்கள். கடவுளுக்கும் சாத்தானுக்கும் இடையே எந்த வேற்றுமையையும் உருவாக்காதீர்கள். இதைத்தான் சுவாங்தஸூ சொல்கிறார் . அவர் சொல்கிறார். "வாழ்வா சாவா என்று தேர்ந்தெடுக்காதீர்கள். இந்த வகை சாவு அந்த வகை சாவு என்று எதையும் தேர்ந்தெடுக்காதீர்கள். தேர்ந்தெடுக்காதீர்கள். முழுமையாக இருங்கள். முழுமையாக நீங்கள்."

இருக்கும் போதெல்லாம், முழுமையுடன் ஒரு சந்திப்பு நிகழ்கிறது. ஏனெனில் இனம் இனத்தை சார்கிறது.

பல நூற்றாண்டுகளாக ஞானிகள் சொல்லி வந்திருக் கிறார்கள். மேலே இருப்பது தான் கீழே இருக்கிறது. இதில் இன்னொரு விஷயத்தை நான் சேர்க்க விரும்புகிறேன். உள்ளே இருப்பது தான் இல்லாதது. வெளியே உள்ளே முழுமையாக நீங்கள் இருக்கும் போது இல்லாத முழுமை உடனே உங்களுக்கு நிகழ்கிறது. உள்ளே நீங்கள் பிளவு பட்டால் வெளியே முழுமை பிளவுபடுகிறது.

நீங்கள் தான் முழு பிரபஞ்சமாக ஆகிறீர்கள். நீங்கள் விரிவுபடுத்தப் படுகிறீர்கள். அது நீங்கள் தான். நீங்கள் தேர்ந்தெடுக்கும் போதெல்லாம் நீங்கள் பிளவு படுவீர்கள். தேர்வு என்பது பிளவு, தேர்வு என்பது போராட்டம். இதற்காக அதன் எதிராக.

தேர்ந்தெடுக்காதீர்கள். தேர்வில்லாத ஒரு சாட்சியாக இருங்கள். பிறகு எதுவுமே குறைவதில்லை. பிறகு இந்த உயிர் வாழ்க்கை தான் சாத்தியமான மிகச் சிறந்த உயிர் வாழ்க்கை. இதைவிட அழகாக வேறு எதுவுமே இருக்க முடியாது. இதைவிட இன்பமாக வேறு எதுவும் இருக்க முடியாது. அது

அங்கேதான் இருக்கிறது. உங்களை சுற்றிலும், உங்களுக்காக காத்திருக்கிறது. நீங்கள் உணர்ந்து கொண்டபோதெல்லாம் அது உங்களுக்கு வெளிப்படும். ஆனால் மனம் தொடர்ந்து உள்ளே வேலை செய்யுமானால் பிளவுபட்டு, தேர்ந்தெடுத்து, முரண்களை உருவாக்கி, அது உங்களுக்கு நிகழாமலே போய்விடும்.

பல வாழ்க்கைகளாக நீங்கள் அதை இழந்துவிட்டீர்கள். இனியும் அதை இழக்காதீர்கள் .

இன்று இது போதும்.





சிரிப்பே சமயத்தின் சாரம்.
இறுக்கம் சமயமாகாது.
இறுக்கம் சமயமாக முடியாது.
இறுக்கம் ஆணவத்தினுடையது.
இறுக்கம் ஆணவ நோயின் பகுதி



வாழ்க்கை ஓர் இரகசியம் அன்று.
ஒவ்வொரு மரத்தின்
ஒவ்வொரு இலைமேலும்,
கடற்கரையின் ஒவ்வொரு
கூழாங்கல் மேலும்
எழுதப்பட்டிருப்பது அது.
கதிரவனின்
ஒவ்வொரு ஒளிக் கற்றையிலும்
அது இருக்கிறது.
உன் எதிர்ப்படும் எல்லாம்
வாழ்வுதான், முழு அழகோடு.





வாழ்க்கை ஒரு தண்டனை அன்று; ஒரு பரிசு.
வளரவும் பார்க்கவும், அறியவும் இருக்கவும்,
புரிந்து கொள்ளவும் கொடுக்கப்பட்ட
மாபெரு வாய்ப்பே அந்தப் பரிசு.
வாழ்வையே நான் ஆன்மிகம் என்கிறேன்.
என்னைப் பொறுத்தவரை
வாழ்வு, கடவுள் என்பன
ஒருபொருட் சொற்கள்.

இதயத்திற்குள் சென்றுவிடு.
அறிவை மற. அன்பை மையமாக்கு;
குறிக்கோளாக்கு.

ஒவ்வொரு தடங்கலும் ஒரு முன்னேற்றமாகும்.
மூளையின் ஒவ்வொரு தோல்வி வாய்ப்பும்
இதயத்தின் வெற்றி வாய்ப்பாகும்.
மூளையில் தோல்வியே
இதயத்தின் வெற்றி.





மரணம் மலராகும்.
வாழ்வு— மரம் தவிர வேறில்லை.
மரம் வாழ்வது மலருக்காகவே
மலர் மலர்வது மரத்திற்காக அன்று.

மலர் தோன்ற
மரம் மகிழும்,
ஆனந்த நடனம் ஆடும்.